கருணாநிதி துணை.

உலகமெங்கும் பரிமளஞ் செய்யப் பெற்ற

# வேதாந்தபாஸ்கரன்




நூலாசிரியர்:

## கருணையானந்த ஞானபூபதிகள்

புதுக்கியும் விளக்கியும் உள்ள




இரண்டாம் பதிப்பு

விலை ரூ 3.

(இந்நூல் பக்குவிகட்கு மாத்திரம்.)
(This book is Reserved for Competent Men only)

PRINTED BY P. R. RAMIYER & CO., MADRAS.
முகவேடு (TITLE PAGE) மாத்திரம்
"கருணாநிதி" அச்சு நிகேதனத்தில்
பதிப்பிக்கப் பெற்றது.



ஸ்ரீ கருணையானந்த ஞானபூபதிகள்.

1887ஆம்-ளூ ஏப்ரல்-மீ 18உ சோமவாரம் சனனம்.

(சர்வசித்து-ளூ சித்திரை-மீ எஉ)



ஸ்ரீ கருணையானந்த ஞானபூபதிகள்.
1887ஆம்-ளு ஏப்ரல்-மீ 18௳ சோமவாரம் சனனம்.
(சர்வசித்து-ளு சித்திரை-மீ எ௳)

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# சிறப்புப் பாயிரங்கள்.

சென்னை ஜனோபகார ஜகதசற்குரு கனம், மவுலானா, மவுலவிய்யுல் மஉனவி, சர்காஜி சையது ஷாஹ் முஹம்மது இனயத்துல்லா லெப்பை ஆலிம் சாகிபு தைக்கா கலீபத்துல் காதிறி அவர்கள் கொடுத்தருளியது.

**இந்நூலின் ஆசிரியர்:—**

பெருநாழி மாநகரில் அவதரித்து, கீழ்வேளூரில் பரிபூரண சமாதி கொண்டிலகும் புலவர்கள் நாயகம் அப்துர் றகுமான் சாகிபு ஆரிபுபில்லாஹ் அவர்கள் மாதவப் புத்திரரும், அநேக மஹரிபா நூற்களின் ஆசிரியரும், ஆரிபீனும், சாலிகீனும், கருணாநிதியுமாகிய மஹான் **முஹம்மதிபுறுஹீம்** என்னும் பிள்ளைத் திருநாமம் புனைந்த **ஸ்ரீ கருணையானந்த ஞானபூபதி** அவர்களாகவிருக்கும். இம்மஹான் முன் இயற்றியருளிய கஸானத்துல் இருபானாகிய **ஞானக்களஞ்சியம்** என்னும் கஸானாவைத்திறந்து, அதிலுள்ள பொருட்களை ஆராய்ந் துணருமிடத்து எல்லாம் மாணிக்கம், கோமேதகம், வைரம், வைடூரியம் போன்ற விலைமதித்தற் கியலாத ஞானமாணிக்கமாகவே பிரகாசித்துக்கொண் டிருக்கிறது.

அங்ஙனமே இந்த **வேதாந்த பாஸ்கரனையும்** பார்வையிட்டேன்; அப்படியே என்னுடைய உள்ளத்தைக் கவர்ந்து கொள்ளை கொண்டு விட்டது.

இந்நூலானது தலீலுக்கும் ஹதீதுக்கும் இணக்கமாக சயிக்கினையாகவும், விளக்கமாகவும், பிரத்தியட்சமாகவும் மாட்சிமை தங்கிய அநேக சுவானுபவ ஞானவசனங்களால் தொகுத்து லோகோபகாரமாக வெளியிடப் பெற்றிருக்கிறது. அவ்வசனங்களை அசையாமல் உறுதிப்படுத்தும் மேற்கோள்

களோ மிக்க அழகாகப் பிரகாசிக்கின்றன. மானிடர்களின் மனதிலுள்ள அந்தகாரப் படலத்தைப் பிளந்து, அவர்கள் கல்பு என்னும் தாமரை அரும்பை விகசிதஞ் செய்து, அவர்கள் புத்தியைப் பிரகாசிக்கச் செய்யும் அருமையான வசனங்கள் நிறைந்திருப்பதால் இந்நூலுக்கு ஷம்சுல் ஹகாயிக் ஆகிய **வேதாந்தபாஸ்கரன்** என்னும் பெயரானது மிகப் பொருத்தமானதே. கன்சுல்மக்பியா என்னும் புதையலாகிய கலிமாப் பொருளை அறிவதற்கு இந்நூலானது ஓர் சிறந்த அஞ்சனமும், ஈமான்இஸ்லாம் உடையவர்கட்கு ஓர் திருமந்திர வசனமும் ஆகும்.



இங்ஙனம்,
அல்காலி செய்யிது
ஷாஹ்
முஹம்மது
இனயத்துல்லா
காதிறி,
கானல்லாஹு
லஹு



மஹா கனம் பொருந்திய பாவா அவர்களின் திருவாக்கு உத்தரவின்படி முன்ஷி-யே, மஹ்கமயே, இனயத்து நாயபே சர்காஜீ ஜார்ஜ்டவுன் மதராஸ்,

முஹம்மது
அப்துர்றஹ்மான்
ஷரீபு
இவ்வாசகம்
வரையலானேன்.

சென்னை "லிவாவுல் ஹம்து" சங்கத்தின் பிரசிடேண்டும்
குணங்குடி மஸ்தான்சாகிபு பாடல், ஞானமணிமாலை,
பிஸ்மில்குறம் முதலான ஞானநூற்களின் உரையாசிரியருமான
பாண்டிமண்டலம்-சேவ்வல்மாநகரம்

## ஜனாப், எம். எ நெயினுன்முகம்மது பாவலர்
## அவர்களியற்றியன.

அறுசீர் விருத்தம்.

திருமணியிற் கொழித்தவொளி வானந்தப் பரஞ்சோதி
செகவான் முற்றும்
உருமணியாய்ப் பல்வேறு மக்லூக்காத் தனைத்தையுமுற்
பத்தி யாக்குங்
கருமணியாய்ப் பெருந்தலமே வியவொன்றைக் கலந்தற்குக்
கால்நூ லான
குருமணியாம் **வேதாந்த பாஸ்கரனை** யியற்றியரோ
கொடுத்தா ரம்மா. (1)

மலையிருந்த சித்தர்கணம் வாய்மலர்ந்த சாரமெலாம்
வந்து இந்நூற்
கலைமுழுதுங் கிடந்தினிக்கும் பேரின்ப மென்சொல்வேன்
காசி னிக்குள்
விலையடங்கா மாணிக்கப் புதையலிதை வெளியாக்கு
மேன்மை யாளர்
அலைகடல்சூழ் ஞாங்கரிடை யின்னவரொன் றெடுத்துரைப்பேன்
அன்பிற் கேண்மின். (2)

பொற்குலைபோல் நெற்குலைசாய்த் துக்கிடக்குந் தனிமருதப்
பூங்கா வேரி
யெக்கரையுந் தீஞ்சுவைத்தண் ணீர்பரப்புஞ் சோணாட்டு
ளிலங்கும் ஆரூர்ப்

களோ மிக்க அழகாகப் பிரகாசிக்கின்றன. மானிடர்களின் மனதிலுள்ள அந்தகாரப் படலத்தைப் பிளந்து, அவர்கள் கல்பு என்னும் தாமரை அரும்பை விகசிதஞ் செய்து, அவர்கள் புத்தியைப் பிரகாசிக்கச் செய்யும் அருமையான வசனங்கள் நிறைந்திருப்பதால் இந்நூலுக்கு ஷம்சுல் ஹகாயிக் ஆகிய **வேதாந்தபாஸ்கரன்** என்னும் பெயரானது மிகப் பொருத்தமானதே. கன்சுல்மக்பியா என்னும் புதையலாகிய கலிமாப் பொருளை அறிவதற்கு இந்நூலானது ஓர் சிறந்த அஞ்சனமும், ஈமான்இஸ்லாம் உடையவர்கட்கு ஓர் திருமந்திர வசனமும் ஆகும்.



இங்ஙனம்,
அல்காலி செய்யிது
ஷாஹ்
**முஹம்மது**
**இனயத்துல்லா**
**காதிறி,**
கானல்லாஹு
லஹு

---



மஹா கனம் பொருந்திய பாவா அவர்களின் திருவாக்கு உத்தரவின்படி முன்ஷி-யே, மஹ்கமயே, இனயத்து நாயபே சர்காஜீ ஜார்ஜ்டவுன் மதராஸ்,

முஹம்மது
அப்துர்றஹ்மான்
ஷரீபு
இவ்வாசகம்
வரையலானேன்.

சென்னை "லிவாவுல் ஹம்து" சங்கத்தின் பிரசிடெண்டும்
குணங்குடி மஸ்தான்சாகிபு பாடல், ஞானமணிமாலை,
பிஸ்மில்குறம் முதலான ஞானநூற்களின் உரையாசிரியருமான
பாண்டிமண்டலம்-செவ்வல்மாநகரம்

**ஜனுப், எம். எ நெயினுன்முகம்மது பாவலர்**
**அவர்களியற்றியன.**

அறுசீர் விருத்தம்.

திருமணியிற் கொழித்தவொளி யானந்தப் பரஞ்சோதி
செகவான் முற்றும்
உருமணியாய்ப் பல்வேறு மக்லூக்காத் தனைத்தையுமுற்
பத்தி யாக்குங்
கருமணியாய்ப் பெருந்தலமே வியவொன்றைக் கலந்தற்குக்
கால்நூ லான
குருமணியாம் வேதாந்த பாஸ்கரனை யியற்றியரோ
கொடுத்தா ரம்மா. (1)

மலையிருந்த சித்தர்கணம் வாய்மலர்ந்த சாரமெலாம்
வந்து இந்நூற்
கலைமுழுதுங் கிடந்தினிக்கும் பேரின்ப மென்சொல்வேன்
காசி னிக்குள்
விலையடங்கா மாணிக்கப் புதையலிதை வெளியாக்கு
மேன்மை யாளர்
அலைகடல்சூழ் ஞாங்கரிடை யின்னவரென் றெடுத்துரைப்பேன்
அன்பிற் கேண்மின். (2)

பொற்குலைபோல் நெற்குலைசாய்த் துக்கிடக்குந் தனிமருதப்
பூங்கா வேரி
யெக்கரையுந் தீஞ்சுவைத்தண் ணீர்பரப்புஞ் சோணாட்டு
ளிலங்கும் ஆரூர்ப்

பக்கமொளிர் விஜயபுரத் தப்தூர்றகு மான்யோகி
படைத்த புண்ய
தக்கதபோ பலனெல்லா மதலையொரு வடிவெடுத்துச்
சமைந்து வந்தோர். (3)

எத்தனையோ வாண்டுவரை சித்தலயஞ் செய்தற்கோ
ரிடம்போய் வீற்று
புத்தமுதக் காற்றையுண்டு பொறிபுல உபாதிகளைப்
போக்கி வென்று
நித்தியவாழ் வெனுஞ்சுக்கு மச்சடலத் தோடுறைந்து
நிருவி கற்ப
அத்துவித பாஸ்கரமா மானந்தக் கடலாடும்
ஆரி யானோர். (4)

இருட்டறையாம் நபுசானி யத்ததனுட் சிறையுண்ட
இளிச்ச வாயர்
குருட்டுவிழி கட்டிறந்து வான்பொருளைக் கண்டிடமேற்
கோள்பா லூட்டிக்
திரட்டியருள் மெய்ஞ்ஞானக் களஞ்சியத்தை நம்மனோர்
சென்ம முத்திக்
கருட்டுறைபோல் தந்தருள் மஹானிவரின் மகிமையென்னுல்
அரைதற் காமோ. (5)

பருதித்தே ருருளையொளி படர்ந்திமைக்கும் பாரெல்லாம்
பண்ணுந் தோத்ர
அருமையுள கஸ்தூரி வாசனைபோ லுலகமெலாம்
அடர்ந்த கீர்த்தி
பெருகியதோர் அஷ்டாங்க யோககுரு பீடத்தின்
பெருமா னெங்கள்
**கருணையானந்த பூபதி** முஹம்ம திபுருஹீம்
காமில் மாதோ. (6)

## ஸ்ரீலஸ்ரீ கருணையானந்த ஞானபூபதிகள்

மாணாக்கர்களில் ஒருவராகிய

"பாவலர் திலகம்"

பெருநாழி :

## சே. மு. அஹமதாஸ் அவர்களியற்றிய

# புகழ்மணிக்கீதம்.

ஆதாரம் வேறேதையா—என்ற மெட்டு.

**பல்லவி.**

தூங்காத மாமதியே சொன்னார் பூபதியே
தூங்காத மாமதியே

**அநுபல்லவி.**

ஓங்கார மானவாசி ஓடுமதையுள் நேசி

**சரணங்கள்.**

1. கருணையானந்த குரு காட்டிக் கொடுத்தாரருள்
சரணம் பணிந்தேனிரு தயமே நீ தனித்திரு
தரும நெறிமுறை புரியுந் தவநிலை
யறியும் பரவெளி துறவறமதுற
வாகயோக தெய் வீகனுகசை
யோக போகம தேக வாகு பெண்
ணடத்தைப் பொன் னிடத்தையற்
றிடத்தைக் கொண் டடுத்துக்கொள்
அண்டர் தொண்டுறு தொண்ட ரன்புளங்
கொண்டு கண்டவர் பெண்டை யண்டிலர்
ஆத்திரநவ சூத்திர மிகு
நேத்திரத்திடை தோத்திரம் புரி
அடக்க முடையவ ரிடத்தி லடுத்தருள்
கொடுக்கும் படிக்கு நீ நடக்கப் பணிவிடை
அஞ்சிக் கெஞ்சிப் பொஞ்சும் தஞ்சம் நெஞ்சம் பெறவே
அதிக மாதவமே சிறந்திட
அதிக காலையிலே எழுந்திரு
ஆவியது கலி மாவி லுயர் மதி
நாவிலினியுருச் சேவி யனுதினம் (தூங்காத)

2. தூங்கா திருக்கு நிதம் துணைவ ரில்லாத பதம்
ஆங்கார மற்ற விதம் அன்னமுண்ணு விரதம்
அனுதினமு மன தினி யுணவதனை
நினைப்பதை மறந்து தனிப்பதுவே யென
தாசை வாசி சன் யாசி பூசித
தாச நேசவி லாச வாசக
அறிவைக் கொண் டுருவைக் கண்
டொருமைத் தொண் டரைக் கண்டு
அந்த ரங்க விச யந் தெரிந்து மதி
மந்திரங்கள் செய தந்திரங்க ளறி
வாக்கிடும் அருள் நோக்கிடுந் துயர்
போக்கிடுங் குரு வாக்கியப் படி
அதிக மதிதவ நிதியமுது ரச
முதவு கெதியதி பதிவி தயமுற
அன்புங்கொண் டின்பந் தங் கும் பொங்கும் மதிஞானி
அருமையானந்தந் ததும்பிடு
கருணையானந்தம் பதம் பணி
ஆசன மதுற வாசன் அகமது
தாச னிதயமீ தீசனை யறிய (தூங்காத)



பண்டாரத் தேண்டாயுதா—என்ற மெட்டு

பல்லவி.

சொல்லாது சொன்னாடி சோதி
துலங்கு மென் குரு (சொல்)

அநுபல்லவி.

சொல்விற் சிறந்த சுகமே லாயிலாக
இல்லல்லாகூவென்னுஞ் சொல்லதன் சூட்சத்தை (சொ)

சரணங்கள்.

நன்மொழியுரைப்பா ரென்று நானவர்க்குச் செய்தேன்
என்ன சொல்ல வந்தாரன்று [தொண்டு
அன்னைதந்தை சுற்றத் தாரை வெறுக்கவும்
பெண்ணின்மகவாசை தன்னைத் துறக்கவும் (சொல்)

வாலிபத்தினுல் மயக்கம் வந்து பொருந்தா வியக்கம்
வாலைப் பருவம் பயக்கும்
மக்க முஹம்மதர் திக்கீருரைத்து
வழக்கப் படுத்தென்று சற்குரு வென்னிடம் (சொல்)

காமில் கருணையானந்தம் காட்சியே பரமானந்தம்
நேமனமுடையோர் சொந்தம்
நேசன் அகமது தாசனுக்கன்புடன்
பேசற்கரிய தோர் வாசிப்பழக்கத்தை (சொல்)



திருவள்ளுவநாயனுர் புராணம், பழநிப்பிள்ளைத் தமிழ் முதலிய நூற்களின் ஆசிரியராகிய சென்னை

## மகா-ா-ஸ்ரீ முனிசாமி பிள்ளை யவர்கள் கூறியன.

### வெண்பா.

ஊனக் களஞ்சியத்தை யோட்டி யுடற்பாங்கின்
ஞானக் களஞ்சியத்தை நன்கீந்த—மோனக்
கருணையா னந்தப்பேர் கற்பகத்தை நாளும்
கருணையாய் நெஞ்சே கருது.

### அறுசீர் விருத்தம்.

தன்னிலைமை யுணர்ந்தவரே சாற்றுவரென் பார்பெரியார் தகுதி யாய
நன்னிலைமை யடைந்தவரே நவில்வரெனப் பலர்புகல்வார் நன்றாய் கற்றோர்
அன்னிலைமை காட்டுவதற் கரிதென்பார் பல்லாற்றும் அதனைக் காண்டல்
இன்னிலைமை யுடையாரிப் படியுரைக்கின் மற்றோரியார் இசைப்ப ரம்மா. (1)

மறையிருந்த பெருங்கருணைப் பிழம்பாகி மன்பதைக்கோர் மணிய தான
நறையிருந்த வழியொளிரும் அல்லாகுத் தாலாவின் நடுஞ்சீர் காட்சித்

அறையிருந்த படியடைந்து பஃறலையு மவன்பெருமைச்
சொல்லி யாங்குத்
தறையிருந்தார்க் குயிர்த்துணையா நபிகண்பெங் கருணை
தன்னை யோர்ந்து. (2)

பண்காட்டு மிறைவன்றகு லுல்லாவின் பதகமலம்
பரிவிற் காட்டி
எண்காட்டு முரீதுகட்கிங் கிகபரசா தனங்காட்டி
இன்ப மாருந்
தண்காட்டுங் கருணைமலி முகையதீ னுண்டகைசெ
தன்னுட் பூப்ப
கண்காட்டும் வேதாந்தக் கடல்குடித்துப் புடவிமயல்
கனவைக் காட்டி. (3)

கற்றவருங் களிதுளும்பக் கடவுணிலை தனையோர்ந்து
கருத்தன் பூரும்
பற்றவரு மேமாப்பப் பல்லவருங் காஞ்சிரமேற்
பணித்துப் போற்ற
நற்றவரு நன்னூனன் னூலிதெனக் கொண்டாட
நவைதீர் வைப்பின்
புற்றவருங் கூட்டுணமா வேதாந்த பாஸ்கரனை
யுதவி செய்தே. (4)

சுதியமரும் வேதாந்த துரியநிலை தனையடைந்த
துரியா தீத
மதியமரும் சற்குருவா மப்துர்றகுமா னொலியின்
மதலை யாகித்
ததியமருஞ் செய்குமுகம் மதுஇபுரு கீமென்னுந்
தயாள நாம
நிதியமரும் கருணையா னந்தமஹா ஞானியென
நிலவுங் கோவே. (5)




# அவதாரிகை.

நெடிய கடல்சூழ்ந்த இந்நிலவுலகின் கண், "எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதான், இயாதினும் அரிதரிது காண்" என்னும் தாயுமானப் பெருமான் அமுத வாக்கியத்திற் கிலக்காக விளங்கும் அளவிறந்த ஆன்மகோடிகளுட் கிடைத்தற் கரிதாகிய இம்மானிட யாக்கையே ஒப்பிகந்து சாலவுஞ் சிறந்தது.

அத்தகைய அருமையான இந்தச் சரீரம் அவரவர்கட்குக் கிடைக்கப் பெற்றிருந்தும், ஓர் வீரன், பகைவர்கள் சரீரத்தைத் துணிப்பதற்காகத் தன் கையில் தாங்கிய வாளாயுதத்தால் தன்னுடலையே துணித்துக் கொள்ள முயல்வதைப்போல, அநித்தியமான ஈடணைத் திரயங்களையே பொருளாகப் பெரும்பாலும் கருதுகின்றார்களே யன்றி,

சிவஞானவள்ளல்.

உலக நெருப்பைக் கடந்தொழியா ஞான வுததி மடுப்பேனோ!
இலகு குடும்பத் துயர்நீங்கி யெந்நாள் துறவி யாவேனோ!
திலக மறையின் பொருளிதெனத் தேற்றுங் குரவற் காண்பேனோ!
கலக வுடலப் பிணிதணிந்து கடவுள் தனையான் காண்பேனோ!

என்னுங் கருத்திற்கு நிகராக, நான் யார்? நான் உலகத்திற் பிறக்க வேண்டிய காரணமென்ன? எனக்கு இந்தச் சரீரம் எதற்காகக் கிடைத்தது? இந்த துக்க சம்சார சாகரம் வந்ததேன்? இராட்டினத்தின் சுழலைப்போல் நீங்காத சனன மரணங்கள் வரவேண்டியது யாது காரணம்? அவற்றைத் தவிர்ப்பதற்கு என்ன உபாயஞ் செய்தல் வேண்டும்? ஞானாசிரியரை எவ்வாறு நாம் அடைவது?

என இடையருத ஆன்ம விசாரம் தலைப்பட்டு, தனக்கு அந்நிய மான புறக் கருமங்களைத் தணந்து, தனது எதார்த்த சொரூ பத்தை அனவரதமும் நோக்காமல் நோக்கி, நித்தியானந்த - சைதன்ய - விதேக கைவல்யத்தை நாம் எப்போது சேர்வோ மெனக் கருதுபவர்கள் கோடியில் ஒருவராவது இக்காலத்தில் இருக்கின்றார்களெனக் காணுவது மிகவும் அருமையாக இருக் கின்றது.

சிவஞானவள்ளல்.

மருவிய வுடல்வெ றுப்பும் வையக வெறுப்பும் வந்தால்
இருவினை யொப்பு மங்க னெய்திடும் எய்துங் காலை
கருமல பாக முண்டாம் பாகத்தாற் கடிதிற் சேரும்
திருவருட் சத்தி பாதஞ் செறிந்திடுங் குருவு மன்றே

என மேற்கூறிய *இருவினை யொப்பு †மலபரிபாக ‡சத்திநிபாதம் உண்டாகும்படி, எல்லாம் வல்ல சித்தர்களாகிய சுப்பிரமணியர்— அகஸ்தியர்—திருமூலர்—சட்டமுனி—நந்தீசர்—உரோமர்—போகர்—திரு வள்ளுவர் முதலிய நவகோடி சித்தர் குழாங்களும்; மணிவாசகர்— பட்டினத்தடிகள்—சிவஞானவள்ளல்—தாயுமானவர்—குணங்குடி மஸ் தான் சாகிபு—தற்கரைப் பீர்முகம்மது சாகிபு—வடலூர் இராமலிங்க வள்ளல் — துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் — சாந்தலிங்க

* இருவினை யொப்பு:—நல்வினையிலும் தீவினையிலும் விருப்பு வெறுப்பின்றிக் காண்டல்.

† மலபரிபாகம்:—மலம் என்பது ஆணவமலம். பரி என் பது உபசருக்கும் (மாறுதல்). பாகம் என்பது திரிபு, கெடுதல். அதாவது:—முத்திவிக்கினமாகிய அறியாமை—ஐயம்—திரிபு என் னும் மூன்றனுள் ஒன்றாகிய வேறுபாடு கெடுதல்.

‡ சத்திநிபாதம்:—சத்தி=சிவசத்தி, நி=நீங்குதல், பாதம் =பதிதல். அதாவது:—மனம் நீங்கிய வழி சிவசத்தி பதிதல். சத்திநிபாதர்கள் என்பவர்—மனத்தை யடக்கிக் கடவுளை வழி படுபவர். அவர்கள் நான்குவகைத்தாய மாணவர்கள். இவர்களின் முழு விபரம் சீடரியல் அத்தியாயத்திற் பார்த்துணர்க.

சுவாமிகள்—குமாரதேவர் முதலிய பேரின்ப மகான்களும் சிவ காருணியம் பாவித்து, உலோகோபகாரமாக, ஏனையோர்களும் சாயுச்சிய பதவி அடையும்பொருட்டு, மொழிக்கு மொழி தித்திக்கும் மதுர மொழுகிய அழகிய அனேக திருப்பாசுரத் தொகுதிகளைத் திருவாய் மலர்ந்தருளி வெளியிட்டிருக்கின்றார்கள்.

அத்தகைய சிறந்த சாத்திரங்களை வாங்கி வாசிப்பவர்களோ, இக்காலத்தில் மிக அருமையாகச் சிற்சிலர்களே காணப்படுகின்றனர். அங்ஙனம் வாங்கி வாசிப்பினும் எம்போலியர்கட்கு அந்நூற்களின் ஆழ்ந்த கருத்துக்கள் செவ்வனே விளங்குவதில்லை. அக்குறையை நீக்கக் கருதி, இக்காலத்தில் வேதாந்த—சித்தாந்த சாத்திரங்களை வசன ரூபமாக வெளியிட்டிருப்பவர்களோ; அவர்களால் எழுதிய சாத்திரங்களைப் பார்ப்போர், பிறர் உதவியின்றித் தெரிந்து கொள்ளாத விதமாயும்; நிகண்டு - அகராதி முதலிய இலக்கிய நூற்களைத் தேடிப் பார்த்துணரும் விதமாயும்; தாம் கற்ற கல்விப் பாண்டித்துவத்தைப் பிறருக்குத் தெரிவிக்கக் கருதியோ! அல்லது அவர்கட்கு இயற்கையாயுள்ள தமிழ்ப் பாஷா லட்சணமோ! கற்கண்டு என்னும் பதத்திற்கு, கன்னற்கட்டி எனவும், நேற்று என்பதற்கு—நெருநல் எனவும், தாமரை என்பதற்கு இண்டை-குசேசயம் - சதபத்திரி-சூது - பற்பம் எனவும், பொன் என்பதற்கு—அரி—அத்தம் — இரணியம்—தேசிகம்—ஆடகம் எனவும், எஞ்ஞான்று-நிற்புழி-வந்துழி-அண்மை-சேய்மை என்னும் இவை போன்ற கர்னகடூரமான பதப் பிரயோகங்களைச் சாத்திரம் முழுவதும் சரமாரியாக உபயோகித்து வரைந்து வெளியிட்டிருக்கின்றார்கள். அத்தகைய நூற்கள், மிகுந்த இலக்கிய-இலக்கணப் பயிற்சியுள்ளவர்கட்கன்றி, எம்போன்ற சாமானியர்கட்கு நன்கு விளங்குவது அசாத்தியம்.

இது காரணத்தை யுத்தேசித்து, பெரும்பாலும் கடின சந்திகளும்-கடின வாக்கியங்களும் வராமல், சாமானிய கல்வி யறிவுடைய ஆண்-பெண் இருபாலரும் எளிதில் உணருமாறு, வசன ரூபமாக ஞான நூல் எழுதி வெளியிடவேண்டும் என்னும் அவாவானது சிறிது காலத்திற்கு முன் எனக்கேற்பட்டிருந்ததனாலும்;

புண்ணிய நூற்கள் இயற்றி வெளியிடுவது, பிரதமமான * எழு வகைத் தருமங்களில் முதன்மையானதென்று வில்லிபுத்தூர் ஆழ்வார் இயற்றிய பாரதப் பாயிரத்தில் :—

தேடினுர் யாவ ரேகொல்! எழுவகை யானுஞ் சீர்த்தி
நீடினுர் அவரே யென்பர் நீணிலத் துயர்ந்த மாந்தர்
பாடினுர் யாவர்! யாவர் பாடுவித் தார்கொல்! என்று
நாடினுர் தெளியும் வண்ணம் நவையற நவில லுற்றேன்

என்று பாடியிருக்கின்றனர்.

தாயுமானவள்ளல் திருப்பாடற் றிரட்டில் :—

கன்னலமு தெனவுமுக் கனியெனவும் வாயூறு
கண்டெனவும் அடியெடுத்துக்
கடவுளர்கள் தந்தல அமுதமுது பேய்போற்
கருத்திலெழு கின்றதெல்லாம்
என்னதறி யாமையறி வென்னுமிரு பகுதியா
லீட்டுதமி ழென்றமிழினுக்
கின்னல்பக ராதுலகம் ஆருமை மேலிட்
டிருத்தலால் இத்தமிழையே
சொன்னவ னியாவனவன் முத்திசித் திகளெலாந்
தோய்ந்தநெறி யேபடித்தீர்
சொல்லுமென அவர்நீங்கள் சொன்னஅவை யிற்சிறிது
தோய்ந்தகுண சாந்தனெனவே
மின்னல்பெற வேசொல்ல அச்சொல்கேட் டடிமைமனம்
விகசிப்ப தெந்தநாளோ ?

என்று திருவாய் மலர்ந்தருளி யிருக்கின்றனர்.

* எழுவகைத் தருமங்களாவன :—பிரபந்த நிருமாணம்-தடாகப் பிரதிட்டை-அக்கிரகாரப் பிரதிட்டை-தேவாலயப் பிரதிட்டை-நந்தவனப் பிரதிட்டை-சத்திரப் பிரதிட்டை-தன நிக்ஷேபம் என்பனவாம். இவற்றை வடநூலார் சப்த சந்தானம் என்பர். அவற்றுள், பிரபந்த நிருமாணம் என்பது நூலியற்றுதல். எழுவகையான மேலான தருமங்களில், சாத்திரப் பிரதிட்டையே முதன்மை

யானது. ஏனெனில், காசி இராமேச்சுரம் முதலான தலங்கள் விசேடமானவை யென்று நூற்களில் எழுதி வைக்காவிட்டால், அவ்வூர்களுக்கு யார்தான் போவர்? அன்றியும் கடவுள் இருக்கிறார்—இல்லை யென்கிற ஆஸ்திக-நாஸ்திகமும், கடவுளை வணங்குகிற விதமும், பெரியோர்களும், அவரவர்கள் அநுட்டிக்கின்ற சரியை-கிரியை-யோக ஞானங்களின் இரகசியமும், பாவ - புண்ணியமும், இன்னும் இகபர முதலான சகல விஷயங்களும், நமக்கு விளங்கும்படி நமது முன்னோர்கள் நூல்செய்து வைக்காவிட்டால்; நமக்கும் அந்தகருக்கும் என்ன வித்தியாசம்? ஆகையால், சாத்திரப் பிரதிட்டையானது, எல்லாத் தருமங்களிலும் தலைமை பூண்டுளது என்பதைத் தருமசீலர்கள் அறியாமலோ; மறந்துவிட்டோ; சத்திரம்-கோவில்-மடம் முதலானவைகளை மட்டிலுங் கட்டி, அவற்றிற்கு மூலதனம் வைக்காததால்; அக்கட்டிடங்களில் கழுதை-நாய்—நரி முதலானவைகள் வந்து அடைவதற்கு ஏதுவாக்குகின்றனர்.

திருக்குற்றால புராணம்.

இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும் வானிரவி
யெழுந்தா லன்றிக்
கருதுநிலம் பல்பொருளுங் காண்டலரி தாமுலகிற்
கண்போல் யாரும்
பெருகியசெல் வமுமறிவும் பெற்றாலு நூற்கேள்வி
பெறுவார்க் கன்றித்
திருவளர்புண் ணியபாவ மிம்மைமறு மையும்வீடுந்
தெரியா வன்றே.

திருக்குறள்.

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

பிரபுலிங்கலீலை.

கன்றிய வைரிகள் காதுங் காதையும்
வன்றுயர் மதனநோய் வளர்க்கு மாற்றமும்
புன்றொழி லினர்வரும் பொழுது போக்கலும்

என்று சொல்லா நின்ற, யுத்த சரித்திரங்களும், மதனாகமங்களும், கட்டுக்கதை (Novels) களும் இக்காலத்தில் எளிய தமிழ் நடையிலேயே எழுதப் பெற்றிருப்பதால், அவ்வித நூற்களை வாங்கி வாசிப்பவரும் வெள்ளிடை மலைபோல் நன்குணரும்படி, இனிய செந்தமிழ் நடையில் ஒரு வேதாந்த நூலைத் தாங்கள் எழுதி வெளியிடத்தான் வேண்டுமெனப் பல அன்பர்கள் சதா என்னைக் கேட்டுக்கொண்டு வந்ததனாலும்; அன்பர்கள் வாக்கியத்தை மறுக்க முடியாததனாலும்; என் சிற்றறிவிற் கெட்டிய அளவில், இந்நூலையெழுதி, பக்குவர்களின் மனமாயை யென்னும் அந்தகாரத்தை நீக்குவதனாலும்; பக்குவர்களின் இருதய தாமரையினது அரும்பை விகசிதம் செய்வதனாலும்; இந்நூலுக்கு ஞான சூரியன் என்னும் பொருள் வாய்ந்த வேதாந்த பாஸ்கரன் என்கிற நாமகரணஞ் சூட்டி வெளியிடலானேன்.

"வேதாந்த பாஸ்கரன்" என்பதில், வேதாந்தம் என்றால் வேதத்தின் அந்தமெனப் பொருளாகின்றது. அந்தமென்பது ஆதியின் எதிர் மறையாவது பற்றி, அந்த மென்பது ஒன்றிருந்தால் ஆதி என்பது ஒன்றிருத்தல் வேண்டுமல்லவா? ஆகலின், வேதத்தின் அந்தம் என்பது, பொருளாயுள்ளவை பொருளாக விளங்குவதும்; வேதத்தின் ஆதி யென்பது, பொருளல்லாதவை பொருளாக விளங்குவதுமாம்.

இவற்றுள், பொருளென்பவை, சத்-சித்-ஆனந்தமயமாயுள்ள அகம் பொருளும், பொருளல்லாதவை, அசத்து சகதுக்க மயமாயுள்ள சீவேச்சுர சகத்துக்களுமாம்.

அகம் – பொருளென்பது :—காரியத்துக்குக் காரணமாகிய அதிட்டானமாகவும், சீவேசுர சகத்துக்கள் ஆரோபிதமாகவும் ஆகின்றது.

இனி "பாஸ்கரன்" என்பது சூரியன் என்று பொருளாம். முகாரவிந்தத்தினிடத்துப் பிரகாசம் பொருந்திய இரண்டு நேத்திரங்கள் இருப்பினும், சூரியப் பிரபையின் ஒத்தாசையின்றி உலகத்தையும், உலகத்திலுள்ள பொருட்களையும் காணுதற்கியலாதது போல, நமது பாஸ்கரனுகிய சூரியனின் ஒத்தாசையின்றி வேதாந்தத்தையும், வேதாந்தத்தின் நுண்பொருள்களையும் காண வியலாவென்பது கருத்து.

ஞான பூபதீயம்.

தேனெனத் தமிழ்சொல் கருணையானந்த
    தேசிக வுட்சிதா காய
ஞானசூ ரியன்வந் துதித்தொளி விரிப்ப
    நானிலத் துதித்தமா னிடர்கள்
நானெனு மகந்தைக் காரிருட் படல
    நலிந்தவ ருளமலர் விரியச்
சோனைபோ லருள்செய் சுயம்பிர காசச்
    சோதியைப் போதெலாந் தொழுவாம்.

இந்நூலை எழுதியதற்குக் காரணம் இரண்டு. அவை :—

தாயுமானவள்ளல்.

... ... தண்டமி ழலங்கல்
தொடுக்கின்றோர்களைச் சோதியாதது பரஞ்சோதி, எனவும் ;

வில்லிபுத்தூரார் பாரதம்

முன்னுமாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னுமாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்
மன்னுமாதவன் சரிதமு மிடையிடை வழங்கும்
என்னுமாசையா லியானுமீ தியம்புதற் கிசைந்தேன்

எனவும் கூறியது போல, மகான்களது அருமையான பாசுரங்களென்னும் புட்பங்களை, ஏக காலத்தில் ஒரே நூலில் தொடுத்துப் பார்த்து ஆனந்திக்க வேண்டு மென்கின்ற அவாவானது ஒன்று : நமக்குத் தெரிந்தவைகளை வெளியிட்டால் அதைக் கண்டு நமக்கு

மேல் தெரிந்தவர்கள் நம்மைத் திருத்தி நீட்சணியமுறச் செய்வார்கள் என்பது மற்றொன்று.

இந்நூலில் கூறப்பெற்ற கருத்துக்கள் சர்வ சமயங்கட்கும், சகல ஞானுகமங்களின் கருத்துகட்கும் முற்றிலும் பொருத்தமாகவேயிருக்கும். சிற்சில கருத்துக்கள் சில ஆகமபுராண இதிகாசங்கட்கு முரணுகக் காணப்பெறின் மிகையாகாவாம். அஃதே பெரியோர்கள் கருத்தாதலால் யானும் அவ்வாறு வெளியிடலானேன்.

பல சாஸ்திரங்களையும் ஐயந் திரிபறக் கற்றுணர்ந்த பெரியோர்களாகிய கல்விமான்கள்.

கைவல்லிய நவநீநம்.

பொய்யை மெய்யென்ற மூடர்புண் ணியரென்று
புராணங்கூப் பிடுமானல்
மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள்
விதித்தசாத் திரமுண்டோ?

மகாராசா துறவு.

பொய்யை மெய்யென் றறிந்து போத மின்மை யாலே
மெய்யைப் பொய்யென் றெண்ணி மெலிந்தே யுழல்வ ருலகர்
பொய்யைப் பொய்யென் றறிந்து போத குருவி னருளின்
மெய்யை மெய்யென் றறிந்தே மெலிவு தீர்வ ருயர்ந்தோர்

என்னும் அமிர்த வாசகங்களை யுணர்ந்து ஒப்புக்கொண்டிருப்பார்களாதலால், அங்ஙனமே எனது வாசகத்தையும் மிகையெனக் கருதமாட்டார்கள்.

இந்நூலை, இதனினும் மிக்க தெளிவாயும் நன்ருயும் எழுதலாம் என்பது கல்விமான்களின் அபிப்பிராயமாயினும், அஃது என் சிற்றறிவிற்கியலாமையால்,

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினற் போலுமே
கல்லாதான் கற்ற கவி

என்னும் வெண்பாவிற் கிலக்காகவும், காவேரி முதலிய நதிகட்கு முன்னே சிறிய வாய்க்கால்களும் ஓடிக்கொண்டிருப்பது போலவும் இந்நூலை வரையலானேன். அறிவிற் சிறந்த நல்லோர் பிறர் குற்றத்தை ஆராயமாட்டார். அறிவில்லாத சாமானியர்கட்குப் பிறர் குற்றத்தை யறியச் சக்தியில்லை. என் போன்ற கல்வி யறிவுடையவர்கள் பிழை கூறமாட்டார்கள். அதனால் இந்நூல் கம்பீரத்துடன் முன்னேற்றமடையும் என்பது கருத்து.

இந்நூலிற் பிரயோகிக்கப் பெற்ற வாக்கியங்கள், தமிழ்ப்பாஷா லட்சணப் போக்கின் உருவழகுக்கு விகற்பமாயிருப்பின் அவற்றையும்; ஆங்காங்கு காணப் பெறும் பிழைகளையும்; அவற்றின் திருத்தங்களையும் கற்றுணர்ந்த விவேகிகள் தயை கூர்ந்து எமக்கறிவிப்பாராயின், அது பொருத்தமாய்த் தோன்றுமாயின், மகிழ்வோடேற்று மறுபதிப்பில் திருத்தி யச்சிடப் பெறும்.

இந்நூலை வாசிக்கும் அன்பர்கள், அன்னப்பட்சியானது பாலிற் கலந்த நீரைப் பிரித்து விட்டுப் பாலை மாத்திரம் பருகுவது போலவும்; பூவோடு சேர்ந்த வாழை நாரையும் அங்கிகரிப்பது போலவும்; அத்துவிதச் செல்வர்களாகிய மகான்களின் எண்ணிறந்த திருப்பாசுரங்களுக்கிடையே, எனது புன்மொழியும் செறிந்திருப்பதால், அந்த விசேடத்திற்காகவாவது, இந்நூலை அங்கிகரித்துக் குற்றத்தை நீக்கிக் குணத்தைக்கொள்வார்கள் எனப் பிரார்த்திக்கின்றனம்.

பிங்கள ஞு
ஆவணி மீ

இங்ஙனம்:

நூலாசிரியர்.

ஹூ

கருணையானந்த ஞான பூபதிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# வேதாந்த பாஸ்கரன்.

## சிறப்புப் பாயிரம்.

ஆன்ம சொரூப வணக்கம்.

வெண்பா.

*வேதமறை நாலுணரா மெய்ப் பொருளா மெய்ஞ்ஞான*
*பாதமறை வேதாந்த பாஸ்கரனைப்—பூதலமே*
*லார்த்தருளு மாறறைய வன்னையெள வென்னைக்கண்*
*பார்த்தருளு மான்மசொரூ பம்.*

பிரணவ (கலிமா)த்துதீ.

*முத்திதரு மத்துவித மோனநிலை தானுணரப்*
*பத்திதரும் வேதாந்த பாஸ்கரனை—வித்தகமாய்ச்*
*சாதப் பிரணவமேற் சாற்றத் துணைகலிமாச்*
*சாதப் பிரணவமே தான்.*

மகான்கள் பொதுவணக்கம்.

*தாண்டற் கரியபவ சாகரத்தைப் பேரன்பாந்*
*தாண்டற் பஃறிகொடு தாண்டியசீ—ராண்டகைசேர்*
*சித்தரடி யார்குழுபொற் சேவடியை யாவலுறப்*
*பத்தியுடன் புத்தியுள்வைப் பாம்.*

மகா குருப்பிதா வணக்கம்.

அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம்.

கத்துதிரைச் சலதிசூழ் புடவியிடைப் பலதவங்கள்
கருதி யாற்றிப்
பத்தியுட னடியேனைப் புத்திரனு கப்பயந்து
பலநூல் போதித்
தத்துவித வித்தையெனக் கறிவித்தந் நிலையிற்று
னழுந்தி மாத
வத்திரஞ்சேர் அப்துர்றகு மானெனுமெய்ஞ் ஞானிபதம்
வணங்கி வாழ்வாம்.

இதுவுமது.

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

முத்தமிழ்வா ரிதிமடுத்த முகிலே வேத
முடிவேசின் மயவடிவே முனமோர் நாளிற்
சித்துருவைத் தத்துவமாய்க் காட்டி நாயேன்
றிகைக்கும்வண முருக்கரந்த தேவே யோக
சித்தர்களும் பெறற்கரிய பதத்தில் வாழும்
செல்வமே புலவர்கள் நாயகப்பேர் சேர்ந்த
அத்துவிதப் பெருஞ்சோதி மலையே ஞான
அப்துர்றகு மானெலியே அகண்ட வாழ்வே.

தற் சிறப்புப் பாயிரம்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

தத்துவஞா னேதயமாம் வேதாந்த பாஸ்காவா
சகத்தண் ணனம்
பத்தியுளோர் பிணிநீக்கித் தமிழுலகம் பரிமளிக்கப்
பண்ணின் னல்
முத்தமிழ்வா ரிதிமடுத்து நாற்கவிமா மழைபொழிந்த
முகிலென் றுய்ந்த
வித்துவசி காமணிகள் புகழ் கருணை யானந்த
விமலன் றனே.

அவையடக்கம்.

நத்தையிடை முத்துதித்தால் நல்லரச ரெள்ளாமற்
சித்தமகிழ்ந் தேமுடியிற் சேர்ப்பதுபோற்—சத்துகடா
னென்றமிழை யெஞ்ஞான்று மெள்ளுவரோ புன்றமிழென்
றின்றமிழென் றன்புறுவா ரே.

இந்நூலுக்கு "வேதாந்த பாஸ்கரன்"
என்னும் பெயர் வந்ததற்குக் காரணமிஃதெனல்

போதாந்த காரமிலார் புத்தியை மறைத்திருக்குந்
தீதாந்த காரமெலாந் தீர்ப்பதனுல்—வேதாந்த
பாஸ்கரனென் றிந்நூற்குப் பான்மையபி தானமுற்ற
தாஸ்தியிது பக்குவருக் காம்.

இந்நூற் பெருமையிஃதெனல்.

எந்நூலு மிந்நூலுக் கீடல்ல வென்றுரைப்பார்
பன்னூலு நன்குணர்ந்த பாவலர்க—ணன்னூலாம்
வேதாந்த பாஸ்கரனை மிக்குணர்ந்தால் வேறில்லை
நாதாந்தம் வேதமொரு நால்.

இந்நூற் பய னித்தன்மைத் தெனல்.

மாயை யிருளில் வழிதெரியா மற்றிகைத்தாற்
றூயவொளி காட்டியதர் தோற்றிவிக்கு—நேயமுடன்
பார்த்தவர்க்கு வேதாந்த பாஸ்கரனைப் பாரார்க்கோர்
மாத்திரையும் ஞானமுண்டா மா.

இந்நூல் செனன மரணங்களைத் தவிர்க்கு மெனல்.

பிறப்பகற்று மத்துவிதப் பேரின்ப நல்கு
மிறப்பகற்றும் வேந்தருங் கண்டேத்துஞ்—சிறப்புவிதிச்
சாந்தமுறும் வேதாந்த பாஸ்கரனைத் தான்பார்த்துக்
கூர்ந்துளத்தே தேர்ந்தறிவார்க் கு.

இந்நூலைக் கற்றுணர்ந்து அதன்படி நடப்பவர்க் கூழின்றெனல்.

பொய்ம்மையறுங் காமத்தைப் போக்குவிக்கு மெய்ஞ்ஞான
மெய்ம்மைவரு நல்லறிவு மேற்கொள்ளு—தெய்வமறை
வேதமெலாம் போற்றுமிந்த வேதாந்த பாஸ்கரனை
யோதிநடப் பார்க்கினியே தூழ்.

இந்நூலை மன வொருமையுடன் வாசித்து
அதன்படி நடப்பவர்கள், முன் யோகம் பயின்று
தாம்விட்ட குறையை முடிக்க வந்தவர்களே யன்றிச் சாதாரண
மனிதரன்றெனல்.

கைக்குளின்பந் தாரபொய்யாங் காமநூற் கத்தைவிட்டு
மெய்க்குளின்பந் தாரவிந்நூல் வேதாந்தத்—திற்கருத்தை
வாதித்தி டாதகற்றி வாசிப்போர் யோகமுனஞ்
சாதித்து விட்டவர்க டான்.

பல சாத்திரங்களை ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தவர்களும்
இந்நூலை வாசிப்பதால் ஞான வைராக்கிய மேன்மேலும்
உடையவர்களாவாரெனல்.

பாரநூற் கற்றவரும் பார்த்துணரில் ஞானமகா
வீரவயி ராக்கியத்தை மேற்கொண்டு—காருணிய
வித்தாய் விளங்குமிந்த வேதாந்த பாஸ்கரனைச்
சத்தாய் விளங்கிடுவர் தான்.

இந்நூலைக் கருதாதவர்கள் பிரயோசனமடைய மாட்டாரெனல்.

பூதலத்தா ரோதுகின்ற புன்னெறியாஞ் சாத்திரங்கள்
வாதமிட்டுத் தர்க்கித்து வாய்வீணு—வோதுவிக்கும்
வேதியர்கள் காதலுறும் வேதாந்த பாஸ்கரனை
யோதுவதால் மோனம்வரு மோர்.

இந்நூல் பல நூல்கட்கும் ஒப்பற்ற மாணிக்கக் கிரீடமாமெனல்.

சாற்றரிய மோனநிலை சாதித்தார் சொல்லியபன்
னூற்றலைமேல் ரத்தினத்தா னுட்பமுற—வாற்றிமிக
வைத்தமுடி வேதாந்த பாஸ்கரனை மானிலத்தி
லொத்தவொரு நூலுமுள தோ.

இந்நூல் அஞ்ஞானிகட்கும் ஆன்ம ஞானமடைந்த
மெய்ஞ்ஞானிகட்குஞ் சமர்ப்பித்ததன்று:
நான் எப்பொழுது அத்துவித மடைவேன் என்று
சதா ஆன்மவிசாரஞ் செய்யப்பட்ட
பரிபக்குவர்க்கா மெனல்.

*அங்கணங்தே ருற்றெளியா தாதலினல் ஞானமிலார்க்
கிங்குரைத்த தன்றிந்நூ லேதமறப்—பங்கயஞ்சேர்
தெண்ணீரிற் கென்னபயன் சில்லமதால் ஞானியர்க்கென்
றெண்ணியான் செய்த துவு மில்.

இதுவுமது.

நிம்பங்கா யாக நினைப்பா ரபக்குவர்கள்
சம்பவமும் வீவுந் தவிர்ப்பிக்க—நம்பியிறை
பக்கவிலே செல்லுமதி பக்குவர்க்கு முக்கனியுஞ்
சர்க்கரையு மாகுமிந்நூ ருன்.

---

*சேருனது தேற்ருங் கொட்டையினல் தெளியமாட்டாதது போல; அஞ்ஞானமயமா யிருக்கின்றவர்கள் தெளியமாட்டார்கள். ஆகையால், இந்நூலினது சாராம்சத்தை யறிவதற்கு அவர்களும் அதிகாரியல்லர்.

தெளிந்த நீரைத் தெளிவிக்க, தேற்ருங் கொட்டை வேண்டுவதில்லாதது போல; சின்மாத்திரமாய் விளங்குகின்றவர்களுக்கு இந்நூல் அவசியம் வேண்டியதில்லை. ஆகையால், இந்நூலுக்கு அவர்களும் அதிகாரியல்லர்.

கலங்கலான நீருக்குத் தேற்ருங்கொட்டை அவசியம் வேண்டுவதுபோல; அஞ்ஞானுந்தமும்—ஞானேதயமும் உண்டாயிருக்கின்ற சாதன சதுட்டயமுள்ள முமூட்சுப் பரிபக்குவத்தையுடையவர்களே இந்நூற்கு அதிகாரி யாவார்கள் என்பது கருத்து.

இந்நூலை நிந்திப்பவர்கள் ஞானமடைய மாட்டாரெனல்.

பெரியவர்கள் தன்மயமாய்ப் பேணுபெரு மைக்குரித்தாய்
விரியுமனச் சிறியவர்கள் மேவொண்ணு—அருமையுள
வேதாந்த பாஸ்கரனை வீணர்பலர் தம்மனம்போல்
வாதாடில் ஞானம்வரு மா?

காணுமல் வேணதெல்லாங் கத்தலாங் கற்றோர்முன்
கோணுமல் வாய்திறக்கக் கூடாதென்—றுணவமில்
யிக்கோர்கள் சொன்ன விபரமறி யாதுளறு
மக்களுக்கும் ஞானம்வரு மா?

தமதாசிரியர் அனுக்கிரகித்த பேருதவிக்குக் கைம்மாறு
வேறின்றென வியந்து துதித்தல்.

கைத்தலத்து நெல்லியெனக் கண்டிடுவான் பக்குவர்க்குப்
பத்திதரும் வேதாந்த பாஸ்கரனை—யொத்துரைக்கக்
கைம்மாறு காணேன்மெய்க் கல்வியரு டேசிகர்க்கு
மைவானுக் காருதவு வார்!

நூல் செய்த காலம் இஃதெனல்.

உலகுநவில் சகனுண்டோ ராயிரத்தெண் ணூற்றுமுப்பத்
தொன்பா னுக
நிலவியபிங் களவாண்டிற் சிம்மரவி மீதச்ச
நிகேத னத்திற்
பலகலையுந் துருவியுளஞ் சலியாமற் பக்குவர்க்காய்ப்
பதிப்பித் தானு
லலகில்புகழ் வேதாந்த பாஸ்கரனை முற்பதிப்பா
யவனி மீதே.

# வேதாந்த பாஸ்கரன்

## இரண்டாம் பதிப்புரை.

---

அன்புடையீர்!

நந்தமிழுலகத்தவர், கட்டுக் கதைகளும்-காமாதுரமான விடயங்களும் நிறைந்துள்ள நாவல்களை ஆவலுடன் வாங்கி வாசித்து, அவைகளை வாசிக்குஞ் சமயம் ஏற்படும் அற்பமகிழ்ச்சியை மட்டும் அடைந்துழலும் இக்காலத்தில், அவ்வித வீண் காலப் போக்குகளை யகற்றி, வேதாந்த விஷயமான சத் பொருள்களை மாந்தர்க் குணர்த்தி, அதன் மூலமாக அவர்களை நன்மார்க்கத்திற் றிருப்பவேண்டும் என்கிற பேரவா எமக்குண்டானதின்பேரில், சொற்ப கல்வி யறிவுடையோரும் எளிதில் வாசித்துணரும்படியாகத் தெள்ளிய நடையில் வேதாந்த பாஸ்கரன் என்னும் இந்நூலை யியற்றி சென்ற கி. பி. 1918—வருஷத்தில் வெளியிட்டோம். அதை வாங்கி வாசித்த சிறந்த கல்விமான்கள், சாதாரண கல்வி யறிவுடையோர், ஜட்ஜுகள், உயர்தர உத்தியோகஸ்தர்கள், ஜமீன் தார்கள், வேதாந்திகள், துறவோர், இல்லறத்தார், பெரியார், சிறியார் முதலிய பல்லோரும் சிறப்பாகக் கொண்டாடி, அவரவர்களும் நற்சாட்சிப் பத்திரங்களும்—புகழுரைகளும் அனுப்பி யிருப்பதுந் தவிர, நேரிற் கண்ட பலரும் எமக்கு உற்சாகத்தைக் கொடுக்கும் படியான இனிய வார்த்தைகளால் மதித்துப் பேசியுமுள்ளார்கள்.

இவ்வித பல அறிஞர்களின் நன்மொழிகளால், இன்னும் அதிக உற்சாகங் கொண்டு ஞானக் களஞ்சியம்—யோக ரகசியம் முதலிய நூற்களையும் எழுதியுள்ளோம். இந்நூலின் முதற் பதிப்பானது, வெகு துரிதத்திலேயே செலவாகி விட்டது. அந்நூலைக் கண்ட பல அன்பர்கள் வேதாந்த பாஸ்கரன் 2 - புத்தகம் தேவை;

வேதாந்த பாஸ்கரன் 5-புத்தகம் தேவை ; முன்பணம் அனுப்பவா? வி.பி.யில் அனுப்புகிறீர்களா? என்று தபால் மூலமாகவும், நேரிலும் கேட்டுக் கேட்டு அலுத்துப் போனார்கள். அதை மறுபடியும் அச்சிடுவதற்கு வேண்டிய பணமும், மனதைச் செலவழிக்கச் சாவகாசமும் ஏற்படாததால், இதுகாறும் வெளியிட முடியாமல் இப்போது வெளியிட நேர்ந்தது.

ஆனால், முதற் பதிப்பில் அடங்கிய பொருள்கள் விரிவின்றிச் சுருக்கமா யிருந்ததனால், சிலருக்கு அவைகளிற் காணும் நுண்பொருள்கள் விளங்காவென்னுங் கருத்துக் கொண்டு, இன்னும் பல விஷயங்களையுஞ் சேர்த்து, இப்பதிப்பை வெளியிட்டிருக்கிறோம். முதற் பதிப்பிற் கண்ட மறைப் பொருள்கள், இப்பதிப்பிற் கூடியவரையில் தெளிவாகவும், வெளிப்படையாகவும் விளக்கப் பெற்றிருக்கின்றன.

இதை வாசிப்போர், வேதாந்த பாஸ்கரன் என்னுங் கற்பக விருட்சத்தினின்றும், சரியை—கிரியை—யோகம்—ஞானம் ஆகிய மாதுரியமான கனிகள் கிடைக்கப் பெற்று, அவைகளின் சாரமாகிய பேரின்பத்தை யடைந்ததாக எமக்குத் தெரிந்தால், இந்நூல்களை இயற்றி வெளியிட்டதனால் உண்டாகிய பிரயாசைக்குத் தகுந்த கைம்மாறு கிடைத்து விட்டதாக நினைத்து மகிழ்வடைவோம். இப்பதிப்புப் புத்தகங்கள் முழுவதும் செலவாகி, பதிப்பு அதிகமாகிக் கொண்டே வர, சில பதிப்பு வரையிலும் புதிய விளக்கங்களையும், புதிய அப்பியாசங்களையும் எழுதி வருவோம். அவ்வாறு நமக்கு உற்சாகம் உண்டாகும்படி, நந்தமிழுலகத்தவர்கள் இந்நூலையும், ஞானக் களஞ்சியம்—யோக ரகசியம் முதலான நூற்களையும் வாசித்து இன்பம் அடைவார்களாக!

விஜயபுரம்
விபவஸ
ஆனிமீ

இங்ஙனம் :
**நூலாசிரியர்.**

இறைவன் துணே.

வண்டுவாஞ்சேரி வித்துவானும், கன்னற்கிளேயுமாகிய

## திருவாளர் கோ. நாராயணசாமி நாயுடு

அவர்களா லியற்றப் பெற்ற

# சாற்றுக் கவிகள்.



அறுசீர் விருத்தம்.

உலகியலும் பொருண்முடிவும் ஒருங்குணர்ந்த மறிவலியும்
ஒருத்தார்க் கெல்லா
நலமுஞற்றும் பெருங்குணனு *முயல்லாம னிறைவாழ்வி
ஞெலங் நாளுஞ்
சலனமெனக் கொண்டமனத் துறவுமுதிர்ந் தொருவகையிற்
சார்ந்தா ரூர்வாழ்
பலகலேயுந் தேர்கருணே யானந்த ஞானபூ
பதிக ளாரே; (க)

†எட்டிவரும் வயதளவில் விட்டகுறை யெனஞான
மெளிதில் வாய்ந்து
விட்டவரும் வியந்துரைக்கும் வேதாந்த விழுப்பொருளே
‡விளங்கக் கண்டு

(க) *முயலாம னிறைவாழ்வில்=(ஈட்டு) முயற்சியின்றித் தெய்வத் திருவருளாற் ருனேவந் தெய்திய வாழ்க்கைப் பேறு என்க.

(உ) †எட்டிவரும்=எட்டு இவரும் எனப் பிரித்து, எட்டு என்னும் எண்ணுக விளங்குமெனப் பொருள் கொள்க. ‡விளங்க= தனக்குத் தானே புலனுக.

§சுட்டறநின் றிவ்வுலகிற் றொடர்வதினி நிகழ்வதெதுந்
தோன்றா ராகிக்
கட்டழிவார்க் குதவுதலிவ் வுடம்பெடுத்த தன்பயனுக்
கருத்துள் வைத்தே ; (உ)

பெரும்பயனைக் கடிந்துலவி வருமாயைப் படலமெலாம்
பிளந்து மாறி
வரும்பிறவிக் கடல்கடந்து ஞானநெறி காண்பதற்கோர்
வங்க மாகக்
கரும்பனைய சுவைமலிந்த மிகவெளிய வுரைநடையிற்
காண்பா ரெல்லாம்
விரும்புமுறை யறிந்தெழுதி வேதாந்த பாஸ்கரனூல்
வெளியிட் டாரால். (௩)

எத்திசையு மெவ்வெவரு மெம்மதமுஞ் சம்மதமுற்
றிருத்த லா*லுற்
பத்தியிலாண் மகற்கல்லாற் பெண்மகட்கு மெய்ஞ்ஞானம்
பகர்த லானற்
சித்திதரு மூவன்புஞ் சீவகா ருண்ணியமுந்
திகழு மாற்றால்
வித்தகத்தின் விளைநிலனும் வேதாந்த பாஸ்கரனை
வியவா ரியாரே ? (௪)

---

§சுட்டு அற நின்று=எல்லாம் ' தான்'' ஆதல்பற்றி அவனிவ னென்னும்) சுட்டு ஒழியத் (தன்னிலை யறிய) நின்று என்க.

(௪) *உற்பத்தியில்=துவக்கத்தில், பிறப் பொழிதற் பொருட்டென்பது மிழுக்காகாது. உன் பத்தியில்=தியானிக் கின்ற பத்தி நிகழ்ச்சியில், தன் வினையாக்கி உருபு மயக்கமாக தியானிக்கின்ற பத்தியோடு என்பதுஞ் சாலும்.

நொந்துழலுங் குவலயத்தோ ருய்ந்திடுவான் கனிந்திறைவ
'னுவலு ¶மாசி

பந்தமற வுயர்கருணை யானந்த ஞானபூ
பதிக ணெஞ்சில்
வந்திருந்திந் நிலந்தோன்றி வேதாந்த பாஸ்கரப்பேர்
வகித்தெல் லோர்க்குஞ்
சிந்தைதரு மஞ்ஞானத் திமிரமகற் றிடுவதெனத்
திகழ்வ தாமால். (ரு)



(ரு) ¶மாசி, ஆசி யென்று திருத்துக.

உ

# ஸ்ரீலஸ்ரீ கருணையானந்த ஞானபூபதிகள்

மாணாக்கர்களி லொருவராகிய

"பாவலர் திலகம்"

பெருநாழி:

செ. மு. அஹமது தாஸ் அவர்களியற்றிய

# குருமணிமாலை.

பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்.

தருமகுண மருவுதிரு அருளினுரு வழகுநிலை
தங்குமெய்ஞ் ஞானகுருநீர்
சமரசசன் மார்க்கநெறி தன்னிற் றிளைத்தறந்
தனையே புரிந்துஅன்போ
டிருமவுன வசமனது நினைவுநிலை நிற்கநீ
ளீடுறப் பழகிநன்றாய்
என்னையுந் தன்னையுந் தலைவனை யறிந்துபே
ரின்பத் திருந்துஞான
மருமமறி யென்றதை மறந்துசிற் றின்பமட
மாதர்மய லானஎந்தன்
மாயநோ யறவொரு மருந்தருள விதுசமயம்
வாருமறி யாதியான்செய்
கருமமற வருள்செய்திரு வாரூரில் வளர்தேவ
கற்பகத் தருநீழலே
கண்ணின்மணி யேசெய்ய விண்ணின்மணி யேதுய்ய
கருணையா னந்தமணியே. (1)

பெற்றசே யெனவெனை யணைத்தருள் சுரந்தினிய
பேரின்ப வமுதுதந்த
பேசரிய மவுனசற் குருநாத னேஞான
பிடகமே தேவரீர்பாற்
கற்றதன் படிநிற்க வொட்டாத பெண்மயக்
கந்தனை நினைந்துபூமி
கதியென்று பொருள்தேடும் வகையிலே மதிசென்று
காலங் கடந்துவீணா

யிற்றதே யென்செய்கே னென்வினைக் கெவர்வந்து
எதிர்நிற்ப ரும்மையன்றி
என்றுமென் றனைவிடா தண்ணலுன் றனைவிடே
னிதுசாத முலகாசைய
கற்றவரு பானுவே ஆரூரில் வளருமெய்க்
கருணையுப சாந்தமுகிலே
கண்ணின்மணி யேசெய்ய விண்ணின்மணி யேதுய்ய
கருணையா னந்தமணியே. (2)

ஒன்றுமே இன்னதென் றறியாத போதெனக்
குற்றதுணை யாகவந்துன்
னுள்ளன்பி னுள்ளதையெ னுள்ளத்தி னுட்கலந்
தொருமொழியி னுல்மவுனமாய்
நன்றுவீ தென்றுகலி மாவெனுந் தேனையென்
நாவிற் புகட்டமகிழ்வாய்
நானுண்டு நாயினும் நட்புண்டு அடியனின்
நாட்டமேற் கொண்டுமனதில்
என்றுமுமை மறவாம லன்புட னிருக்குமிவ்
வேழையை மறந்துவிட்டு
எழில்மிகுந் திலகுதிரு வாரூ ரிடஞ்சென்
றிருக்கிறீ ரென்னினுந்தாய்
கன்றுக் கிரங்கியமு தூட்டவரு மானினுங்
கருணையென வோடிவருவீர்
கண்ணின்மணி யேசெய்ய விண்ணின்மணி யேதுய்ய
கருணையா னந்தமணியே. (3)

மற்கடம் போலுமது அடிபிடிக் காமல்மட
மாதரடி யைப்பிடித்தம்
மங்கையர்கள் சிற்றின்ப கலவியே பேரின்ப
வாழ்வென விருந்துமுமது
சொற்படி நடந்துசுக நற்றவம் புரியாத
சோதனையி தேதுவினையோ
தொட்டகுறை விட்டகுறை கிட்டுமோ கிட்டாதோ
சொல்லுமுறை நல்லகுருவே
கற்பகத் தருவான அத்தனே யெனையீன்ற
கற்பூர தீபமணியே
கதியெனக் குனையன்றி வேறொருவ ரிலையியான்
கழறுவது கேட்கவிலையோ

கற்றறிவு ளாரூரி லேதங்கு தங்கமே
கருணைபுரி ஞானமதியே
கண்ணின்மணி யேசெய்ய விண்ணின்மணி யேதுய்ய
கருணையா னந்தமணியே. (4)

ஆசைமணி யேயெனது பாசமணி யேமௌன
அட்சரம தானம்மணியே
அன்புமணி யேயெனது அன்பிற் சுரந்துவரும்
அறிவிலறி வானமணியே
ஓசைமணி யேநாத ராஜமணி யேவேத
ஓங்கார யோகமணியே
ஒருமைமணி யேஞான அருமைமணி யேதொண்ட
ருளமமர்ந் தொளிருமணியே
மாசைமணி யேமதுர மானமணி யேதிவ்ய
வசனசா துரியமணியே
வள்ளல்மணி யேகல்வி லுள்ளமணி யேதுறவு
வைராக்ய சிங்கமணியே
காசின்மணி யானதிரு வாரூ ரமர்ந்தமணி
கவலையற வந்தமணியே
கண்ணின்மணி யேசெய்ய விண்ணின்மணி யேதுய்ய
கருணையா னந்தமணியே. (5)

இனவருற வற்றுநா னுமதினவ ருறவுற்று
இருவினைக ளற்றுவருசிற்
றின்பமற் றின்பத்தி லின்பமே பேரின்ப
மென்னுநின் றன்புமாறு
மனநிலையி னுறுதிநெறி இடையறு துருகியருள்
வருகவந் துபதேசநீ
மறைவிலா தோதுசற் குருநாத மூர்த்தமே
மதியென விளங்குஞான
தனவந்த னேசீல தருமசிந் தனையுள்ள
தயவாளனே தமியனேன்
தந்தைதா யேவடியர் சிந்தையிற் குடிகொண்ட
சாத்வீக சன்மார்க்கமே
கனகமா டங்களூறை யாரூரில் வளருநறை
கமழ்குங்கு மத்தாரனே
கண்ணின்மணி யேசெய்ய விண்ணின்மணி யேதுய்ய
கருணையா னந்தமணியே. (6)

இப்படிப் புலம்புவதுமேன்—(என்ற மெட்டு)

பல்லவி

என்னனுதா பத்தைச் சொல்லடி —இன்று
எந்தன் கருணையானந்த மந்திரக் குருவினிடம் (என்)

சரணநு பல்லவி

இன்னின்ன படிகளென்று எம்பெருமா னிடஞ்சென்று
அன்னமேன னுன்னிடத்தில் சொன்னதை மறந்திடாமல் (என்)
ஆசையற்றிருக்க உப தேசந்தந்தென் தனைவிட்டு
யாருக்குவந்த விருந்தென் றேரிட்டுப் பாராதிருக்கார் (என்)
நாயகன்மீ தன்புகொண்ட நங்கைபோ லவர்க்குத்தொண்டு
நம்பிச்செய்ய அன்புவைத்த எம்பெருமா னிடஞ்சென்று (என்)
சொன்னதி லன்புபெருத்து அன்னஞ் சிறுகச்சிறுத்து
தூக்கமணு காதுகண்ணில் ஏக்கமுற் றிருக்கேனென்று (என்)
அண்டுவ தடியார்நேசன் தொண்ட னகமதுதாசன்
அஞ்சி யஞ்சலிபுரிந்து கெஞ்சிக்கெஞ்சி சொன்னேனென்று (என்)

---

தோனித்திடு சங்கந் துலங்தும்—(என்ற மெட்டு)

பல்லவி

தனித்திரு நெஞ்சே தவஞ் செய்யலாம்
தயங்கா தியங்கும் மயங்கா செகதலமதில் (த)

சரணநு பல்லவி

அனித்தியப் பூலோகம் அதிலென்னமா மோகம்
ஆனல்நாள் வீணுய்நம் வாணுள் குறைந்திடுமுனம் (த)
இல்லறத்தின் சிரம்மம் இல்லாதவன் பிரம்மம்
என்றேமுன் பண்டோர்சொல் கொண்டே குருவருளூற (த)
ஞானப் பிரகாசம் நாத னுபதேசம்
நம்பும்பே ரின்பம்மெய் யன்பும் அருளூறும்படி (த)
கருதுமெய் யன்பர்திரு கருணையா னந்தகுரு
காவல்கொண் டேவல்செய் தாவல் புரிந்தனுதினம் (த)
அன்பர்களின் நேசன் அகம துறைதாசன்
அஞ்சாத நெஞ்சேயென் எஞ்சா ணருளூறும்படி (த)

சற்குரு சகாயம்.

# பொருள் அட்டவணை.

## பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 32 | 4 | செய | செயல் |
| 43 | 6 | கிரயத்துக்துக் | கிரையத்துக்குக் |
| 44 | 13 | வல்லளாகிய | வள்ளலாகிய |
| 46 | 15 | சொல்கேன் | சொல்லுகேன் |
| 89 | 1 | நிழற்போற் | நிழல்போற் |
| 113 | 7 | கோனுமாகி | கோனுமாய் |
| 112 | 15 | மலங்கித் | மலங்கிக் |
| 121 | 6 | இயற்கை | இயற்பகை |
| 223 | 18 | அவைகளை | இவைகளை |
| 234 | 31 | அவற்றைச் | அவற்றைக் |
| 404 | 5 | கவலைவுற் | கவலையுற் |
| 424 | 19 | ருகோடி | ஒருகோடி |

இந்தத் திருத்தங்களைத் தவிர வேறு புதிய திருத்தங்களிருந்தால் அவைகளை அன்பர்கள் திருத்தி வாசித்துக் கொள்ளும்படியாகக் கோருகின்றனம்.

ஆசிரியர்.

கருணாநிதி துணை.

ஸ்ரீ கருணையானந்த ஞானபூபதிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# வேதாந்த பாஸ்கரன்.

## முதலாவது அத்தியாயம்.

### கடவுளியல்.

விருத்தம்.

திருவாய்த் திருவின் றிருவுருவாய்த்
தெளிவா யொளிவாய்த் திகழமுதாய்
அருவா யுருவா யருவுருவாய்
அங்கிங் கென்னு தமர்ந்தவருட்
டருவாய்ச் சமய கோடிகட்கோர்
தாயாய் மிளிருந் தனிமுதலாய்க்
கருவாய் வாராக் கண்மணியாய்க்
கலந்த கடவு ளியல்பகர்வாம்.

கடவுள் மகிமை.

கடவுள் என்பவர்; அகண்டாகண்டன், அடிகள், அமலன், அருட் குடையோன், அருளாழி, அரூபி, அனந்த லோசனன், அநாதி, ஆதி, இறையோன், உள் வழி கடந்தோன், ஏகன், கருணாலயன், கருணாநிதி, சுயம்பு, சோதி, தற்பரன், நித்தன், நிமலன், நிரஞ்சனன், நிரந்தரன்,

நிரம்பரன், நிராமயன், நிருமலன், பரஞ்சோதி, பரப்பிரமம், பராபரம், பூரணன், விமலன், வேதாந்தன் முதலான அனந்தகோடி நாமங்கள் புனைந்திலகுபவர்.

அத்தகைய மாட்சிமை தங்கிய கடவுள் என்னும் வாக்கியமானது, கட+உள் எனவும், கடவு+உள் எனவும் இருவிதமாகப் பிரிக்கப்பெறுகிறது.

கட+உள் என்று பிரிக்கும்போது, கட என்னும் பகுதியும், உள் என்னும் விகுதியும் புணர்ந்து, விக்குள்-செய்யுள் என்றாற்போல, கடத்தல் என்னும் பொருளைத் தந்து தொழிற் பெயராய் நின்றது. இது ஆகு பெயராய் எல்லாவற்றையுங் கடந்து நிற்கும் கடவுளுக்கு ஆயிற்று. உள்+கட என்று மொழிகளை முன் பின்னாக மாற்றி உள்ளிடத்தைக் கடத்தல் என்னும் பொருளுட்டுங்கால், உள் என்பது, உள்ளிடம்-உட்புறம் என்பதாகவும், கட என்பது கடத்தல் என்பதாகவும் பொருள் ஏற்படுகிறது.

கடவு+உள் என்று பிரிக்குங்கால், கடவு என்பது வழி என்பதாகவும், உள் என்பது விகுதியாகவும், கடவுதல் என்னுங்கால், தல் என்னும் தொழிற் பெயர் விகுதியேற்று, ஏவுதல்-செலுத்துதல்-தகுதியாதல் - பிரயோகித்தல் என்று ஏற்படும் பல பொருட்களில், செலுத்துதல் என்னும் பொருளால், உலகத்தில் யாவையும் இயக்குகின்ற கடவுள் என்பதாகவும் பொருள் ஏற்படுகிறது. ஆகையால், கடவுள் என்னும் வாக்கியத்திற்கு, உள்ளிடங்களையும்-உட்புறங்களையும், உள் வழிகளையுங் கடந்தவர் என்றும், இருதய வழியையுடையவர் என்றும் வியாக்கியானமாவதுடன், இன்னுஞ் சிற்சில சூக்குமமான அனுபவ சித்தாந்தங்களை யுணர்த்தும் பொருள்களையும் ஆசிரயித்துக் கொண்டிலகுகிறது.

கடவுள் என்றால் நம்மால் காணப்பெற்ற யாவையும் கடந்தவர் என்று பொருள் தருவதால், இவ்வுலகத்திலுள்ள எவ்வித வரம்பையும், எத்தகைய சுபாவத்தையும் கடந்தவராய்; எவ்வித எல்லைக்கும் உட்படாதவராய்; மட்டு திட்டங்களுக் கடங்காதவராய்; எல்லாமாய், அல்லவுமாய், எங்கும் நிறைந்து, அவர் சுபாவங்களையும் - செயல்களையும் மனிதர்கள் தங்கள் புத்தியால் தீர்மானித்து விடாதபடி ஆச்சரியமா யிலகுகிறார் என்று பொருளாகின்றது.

## கடவுள் நம்மால் அறியக்கூடியவரா ? அறியமுடியாதவரா ?

நம்மால் காணப்பெற்ற இவ்வளவையுங் கடந்தவர் கடவுள். இவ்வுலகத்தைக் கடந்தவர் என்றதனால், இவ்வுலகத்துக்கும் அவருக்கும் சம்பந்தம் இல்லையோ? என்றால் அவருடைய சம்பந்தம் இல்லாத ஒரு அணுவாவது இங்கே கிடையாது. பின்னை, உலகத்தைக் கடந்தவர் என்றதன் கருத்துத்தான் என்னவென்றால், உலகம் என்பது நாமும், நம்மால் அறியப்படும் பொருள்களுமல்லவா? அதாவது, சித்தும்-சடமும் உலகம் என்று சொல்லப்பெறும். இந்த சித்து-சடம் என்னும் இரண்டையும் படைத்தவரை நாம் என்னவென்று சொல்லலாம்! இந்த இரண்டுக்குள்ளும் உயர்ந்தது சித்து என்கிறோம். நாம் கண்ட பொருள்களுக்குள் உயர்ந்த ஒரு பொருளின் இனத்தைச் சேர்ந்தவர் என்றுதான் நம்மால் எண்ணமுடியுமே யொழிய, அதை யன்றி வேறாக எண்ண நமது அறிவு சத்தியற்றதாகின்றதல்லவா? ஆகவே நம்மைப் படைத்தவர் நமது சத்திக்கு மேம்பட்ட நிலையை யுடையவர். நமது சத்தியால் அவரை அறிந்து சொல்வதற்கு அவர் அடங்குபவரல்லர். அவ்வறிவைக் கடந்தவர் என்பதற்காகவே அவர், எல்லாவற்றையுங்

கடந்தவர் என்று சொல்லப்பெற்றது. அதனாலேயே அவருக்கு கடவுள் என்று பெயர் அமைக்கப் பெற்றிருக்கிறது.

அந்தக் கடவுள் நம்மால் ஒரு வகையிலும் அறியப் படாதவரா என்றால், அப்படி முழுவதும் அறியப்படாதவரல்லர். நம்மால் ஒருவாறு அறியப்பட்டிருக்கிறார். அவ்வளவாவது அவர் அருள் செய்திருப்பதே நமக்குப் போதுமானது. அவருடைய எந்த மகிமைகளைத் தெரிந்து கொள்வதனாலே நமக்கு துன்ப நிவர்த்தி யுண்டாகுமோ, அந்த மகிமைகளை அவர் நமக்குத் தெரிவிக்கிறார். நமது நிலைமைக்கு, அதாவது நம்முடைய குறைகளை நீக்கிக்கொள்வதற்கு எவ்வளவு அறிவு அந்தக் கடவுள் விஷயமாக நமக்கு வேண்டுமோ அதற்குமேல் ஒரு அணுவைக்கூட நமக்கு அவர் அறிவிக்க நியாயம் இல்லை. ஆகையால் அந்தக் கடவுள் நமக்கு வேண்டிய அளவு அறியக்கூடியவர். நமக்குள் அகப்பட்டவர். எவ்வளவு கரையற்ற மகிமை யுடையவரானாலும் நம்மால் அறியப்பெற்ற ஒரு கரையை யுடையவரே.

நம்மால் கடவுள் விஷயத்தில் தெரிந்துகொள்ளப் பெற்ற கரை என்னவென்றால், அவர் சத்-சித் - ஆனந்தம் என்னும் இலக்கணத்தை யுடையவர் என்பதே. சத் என்றால் அழிவற்றது, எக்காலத்தும் உள்ளது என்பது பொருள். ஒரு காலத்தில் அவர் இல்லாமற்போவது உண்டானால், அவரை அழித்தவர் யார்? அவரைப் படைத்தவர் யார்? என்ற கேள்வி வரும். ஆகவே, அழியக்கூடிய எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாய், அழியாதவன் ஒருவன் வேண்டுமாதலால், அந்த அழியாமை யுடையவரே கடவுள். அந்த அழியாமையே சத் என்று சொல்லப்படும். இனி, சித் என்பது என்னவென்றால், அறிவுள்ளது என்னும் பொருளையுடையது. இங்கே அறிவு என்பது தடையற்ற அறிவு. நம்மறிவு போல் தடுமாற்றமுடையதன்று. அவ்

வறிவால் செய்யப்பெற்ற காரியங்களில் ஒழுங்கீனம்-தவறு தல் என்பவற்றின் கலப்பு இல்லை. அறிவு என்பது அது தான். நம்முடைய அறிவோ! அவரால் தூண்டப்பெற வேண்டியதாயும், அவ்வாறு தூண்டப் பெறுதவரையில் ஒழுங்கீனமும், தவறுதலும் உடையதாயுமிருக்கும். "உங்கள் அறிவு ஒழுங்கீனமும், தவறுதலும் உடையது" என்று பல தடவை அவர் நமக்குப் புத்தி கற்பிக்கிறார். "இவ்வளவு பெரிய ஆலமரத்திற்கு இவ்வளவு சிறிய பழத்தை என் படைத்தார்?" என்று குற்றங்கூறிய நாஸ்திகனுக்கு புத்தி கற்பித்த கதையைப் பலரும் கேட்டிருக்கலாம். ஒரு சடப் பொருள் ஒழுங்கான நிலைமையில்வந்து பயன்பெற வேண்டு மானால், அதற்குமுன் ஒரு சித் இருந்தல்லவோ அதனைச் செய்யவேண்டும்? தடையற்ற அறிவால் ஆகக்கூடிய ஒரு வேலை, அறிவேயற்ற சடப்பொருளால் ஆகுமா? அல்லது தடையுள்ள நம்முடைய அறிவால்தான் ஆகுமா? ஒரு போதும் ஆகாது. ஆகையால், அந்தக் கடவுள் சித் என்றும் சொல்லப்பெறுகிறார். இனி, ஆனந்தம் என்பது என்ன? தனக்கு மற்றொன்று வேண்டும் என்கிற ஆசை அற்ற நிலைமை. அது எப்போதும் நிறைந்த சாந்தமாயிருக்கிறது. அதற்கு ஒன்று வேண்டும் என்று வந்துவிட்டால், நம்மிலும் கட வுள் பெரியவர் என்பது எப்படி? அவரால் நாம் இன்பம் அடைவது எப்படி? அவருடைய குறைகளை நிரப்புதற்கு, வேறொருவர் அல்லவோ ஆளாகவேண்டும்? அப்படிப்பட்ட வராக அவரை யார் சொல்லுவார்? தனக்குத் தன்னிலையி லேயே திருப்தியுள்ள அந்த நிலையே ஆனந்தமாம். ஆகவே, அவர் ஆனந்தம் என்றும் சொல்லப்பெறுகிறார். இம்மூன் றும் சத்-சித்-ஆனந்தம். ஒன்றை விட்டு ஒன்று பிரிந்தால், ஒன்றும் நிலைக்காமற்போய்விடும். ஆதலால், அவர் சச்சிதா னந்தரூபி யென்று நம்மால் அறியப்பெற்றிருக்கிறார்.

எவன் துரியநிலையைப் பெற்ருனே, எல்லாப் பொருள் களையும் ஒன்ருகப் பார்த்தானே, அவனே அக்கடவுளின் சச்சிதானந்த நிலையை உள்ளபடி யறிந்தவன், உணர்ந்த வன். அக்கடவுளிடம் எப்படி ஒற்றுமை பெற்றிருக்கிரு னென்பது வாய்ப்பேச்சால் சொல்லக்கூடியதும் அன்று. காதுகளால் கேட்கக்கூடியதும் அன்று. உணர்ச்சியால் உணரத்தக்கதேயாம். ஆனல் அவ்வுணர்ச்சியை ஒருவன் பெறுதற்கு வழிகள் உண்டு. அவ்வழிகளைச் சொல்லலாம்: கேட்கலாம்: சொல்வதைக் கேட்டு நடந்தால் உணரலாம். அவ்வாறு நம்மால் உணரக் கூடியவரே கடவுள். அவருக் குப் பெயரில்லை: நாம்வைத்த பெயர்தான். அவருக்கு வடிவம் இல்லை: நாம்வைத்த வடிவந்தான். அதில் குற்றம் என்ன? எந்தப் பெயர் அவர் பெயரல்ல? எந்த வடிவம் அவர் வடிவமல்ல? அவர் இல்லாத சத்தமும், அவர் இல் லாத வடிவமும் ஏது? ஆகையால் அவர் உண்மையை நீ தெரிந்துகொள்வதற்கு முன், உனக்கு இஷ்டமான ஒரு பெயரை அவருக்கு நீ வைத்துக்கொண்டு, அவரைப்பற்றி ஞாபகப்படுத்தலாம். உனக்கு இஷ்டமான ஒரு சூக்கும வடிவத்தை நீ வைத்துக்கொண்டு அவரைப்பற்றி ஞாபகப் படுத்தலாம். ஆனல், எக்காலத்தும் அந்த வடிவை ஒரே படித்தாய் பாவிக்காமல், ஒவ்வொன்ருக விடுத்து வடிவமற்ற மேல்நிலைக்கு வந்து சேரவேண்டு மென்பது பெரியார் கருத்து.

திருவருட்பா.

பெருகியபே ரருளுடையார் அம்பலத்தே நடிக்கும்
பெருந்தகையென் கணவர்திருப் பேர்புகலென் கின்ருய்
அருகர்புத்த ராதியென்பேன் அயனென்பேன் நாரா
யணனென்பேன் அரனென்பேன் ஆதிசிவ னென்பேன்

பருகுசதா சிவனென்பேன் சத்திசிவ னென்பேன்
பரமமென்பேன் பிரமமென்பேன் பரப்பிரம மென்பேன்
துருவசுத்தப் பிரமமென்பேன் துரியநிறை வென்பேன்
சுத்தசிவ னென்பனிவை சித்துவிளை யாட்டே. (1)

சிற்சபையில் நடிக்கின்ற நாயகனுர் தமக்குச்
சேர்ந்தபுறச் சமயப்பேர் பொருந்துவதோ வென்ருய்
பிற்சமயத் தார்பெயரும் அவர்பெயரே கண்டாய் [தோ
பித்தரென்றே பெயர்படைத்தார்க் கெப்பெயரோர்வ் வா
அச்சமயத் தேவர்மட்டோ நின்பெயரென் பெயரும்
அவர்பெயரே யெவ்வுயிரின் பெயருமவர் பெயரே
சிற்சபையி லென்கணவர் செய்யுமொரு ஞானத்
திருக்கூத்துக் கண்டளவே தெளியுமிது தோழி. (2)

## கடவுள் ஒருவரா? பலரா?

பல வளஞ்செறிந்த நிலமகள் தமக்கு இலகியவுடையாம் அலைகடலானது ஒன்ருயிருந்தும், பற்பல வென்று பொருள் தோன்றும்படி இந்துமகா சமுத்திரம்-அராபிக் கடல்-வங்காளக் குடாக்கடல் முதலிய பல பெயரிட்டு வழங்கப்பெறுகின்றது. பொன்னுனது ஒரே உலோகமாயிருந்தும், கம்மியர்கள் கைத்தொழிலினுல் காப்பு-தண்டை-கொலுசு-பாடகம் முதலிய நானுவித நாமரூபங்களமைந்த ஆபரணமாக விளங்குகின்றது. மண் ஒரே தன்மையாக இருந்தும் குயவர்கள் தொழிலினுல் பானை-சட்டி-குடம்-தொட்டி முதலான பல பெயரிட்டு வழங்குகின்றது. அது போல், முழுமுதற் கடவுளானவர் ஒருவராயிருந்தும், சமய கோடிகளால் தத்தம் சமயத்திற்கிசைந்த வெவ்வேறு நாமங்களிட்டு வழங்கப் பெறுகின்ருர். ஆயினும் கடவுள் ஒருவரேயன்றிப் பலரல்லர்.

### தாயுமான வள்ளல்.

அங்கிங் கெனாதபடி யெங்கும்பிர காசமா
யானந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினில்
தட்டாம னின்றதெது சமயகோ டிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ளதெதுமேல்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்ததது வே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ்சலி செய்குவாம்.

### சிவவாக்கியம்.

எங்கள்தேவ ருங்கள்தேவ ரென்றிரண்டு தேவரோ?
அங்குமிங்கு மாயிரண்டு ஆதிமூர்த்தி யொன்றலோ?
இங்குமங்கு மாய்நிறைந்த ஏகமூர்த்தி ரண்டென
வங்கவாஞ் சொன்னபேர்கள் வாய்புழுத்து மாள்வரே.

### திருவருட்பா.

எய்வகைசார் மதங்களிலே பொய்வகைச்சாத் திரங்கள்
எடுத்துரைத்தே எமதுதெய்வம்! எமதுதெய்வ!! மென்று
கைவகையே கதறுகின்றீர் தெய்வம்ஒன்றென் றறியீர்
கரிபிடித்துக் கலகமிட்ட பெரியரினும் பெரியீர்.

ஒரு நகரத்தை நோக்கிப் பிரயாணிகள், பல திசைகளி லிருந்து பல பாதைவழியாக வந்தாலும், முடிவில் அவர்

கள் எல்லோரும் ஒரே பட்டினத்தை அடைகின்றார்கள். காவேரி முதலிய நதிகள், அநேக பிரிவாய்ப் பற்பல திசையை நோக்கிச் சென்றாலும், அவையனைத்தும் முடிவில் சமுத்திரத்தையே சேர்கின்றன. ஒரு மனிதனை வெவ்வேறு முறைமையால், தந்தை யென்றும், மாமன் என்றும், மைத்துனன் என்றும், அண்ணன் என்றும், தம்பி என்றும் பலபேர் பலவிதமான பெயரிட்டழைத்தாலும், அவையெல்லாம் அம்மனிதன் ஒருவனையே குறிக்கப்படுகின்றன. அது போல் இவ்வுலகத்திலுள்ள சமயகோடிகள், தம்தெய்வம், எம்தெய்வம் என்று அதே வேலையாகப் பிரசங்க மேடைகளிலும், தெருக்களிலும், சந்து - பொந்துகளிலும் நின்று கொண்டு, பேரோலமிட்டு வாதம்புரிந்து தத்தம் சமயநூல் விதிவிலக்குப்படி வெவ்வேறு கடவுளாகப் பாவித்து வணங்கினாலும் அவ்வணக்கமெல்லாம் ஒரே கடவுளைச் சார்ந்த வணக்கமே யன்றிப் பல வணக்கமாகாது.

பாஸ்கர சேதுபதி அவர்கள் காலத்தில் சில புறமதத்தினர்கள் இராமநாதபுரத்தில் வந்து இந்து மதத்தைப் பற்றி வாய்க்கு வந்தபடி நிந்தித்துப் பிரசங்கம் செய்தார்கள். அந்தப் பிரசங்கத்தைக் கேட்ட சில இந்துக்கள் மனம் சகித்தற்கியலாதாகி, சேதுபதி அவர்களிடம் சென்று அரசே! நமது நகரத்தில் சில புற சமயிகள்வந்து நமது சமயத்தைப்பற்றி மிக்க தூடணமாகப் பிரசங்கமாரி பொழிகிறார்கள். அதை எங்களால் சகிக்கமுடியவில்லை, தங்கள் உத்தரவில்லாமல் யாதொரு காரியமும் செய்யக்கூடாதென்று சமுகத்தில் முறையிடலானோம் என்று விசனத்துடன் கூறினார்கள். அதற்கு சேதுபதியவர்கள், அன்பர்காள்! நீங்கள் எவ்விதக் கலகமும் செய்யாமல் என்னிடம் வந்து கூறியதற்காக மிக்க சந்தோஷம். அதற்காகக் கவலைப் படவேண்டாம். இதோ நான்வந்து விசாரிக்கிறேன் என்று

கூறி அங்ஙனமே சென்று பிரசங்கிகளை நோக்கி ஐயா! நான் ஒரு கேள்வி கேட்கிறேன். அதற்கு நீங்கள் விடை கூற லாமா? என்றனர். பிரசங்கிகள் ஆஹா! குசாலாய்க் கேளுங்கள், நாங்கள் தங்களுக்குத் திருத்திகாமான பதில் சொல்கிறோம் என்று கர்வத்துடன் சிரக்கம்பம் காக்கம்பம் செய்து பதில் சொன்னார்கள். அதற்கு சேதுபதி யவர்கள் பிரசங்கிகளை நோக்கி ஐயா!

கற்புடைய மாதர்களை விபசாரிகள் நிந்திப்பார்களா?
விபசாரிகளைக் கற்புடைய மாதர்கள் நிந்திப்பார்களா?

என்றனர். அதைக்கேட்ட அநிகப் பிரசங்கிகள் தங்கள் குற்றமாகிய பிதற்றலையுணர்ந்து கலியாண சபையிலிருக் கிற புதுப் பெண்ணைப்போல் நாணமுற்றுத் தலைகவிழ்ந்து மௌனமாய் நின்றார்கள். கல்விக் களஞ்சியமும், கருணைக்கு உறைவிடமுமாகிய சேதுபதியவர்கள், பிரசங்கிகள் நாணத் தைப் போக்கக்கருதி, அவர்களை நோக்கி, எனது அருமைச் சகோதரர்களாகிய ஐயா! நீங்கள், உங்கள் சமயாசாரங் களைப்பற்றி எவ்வளவு விசேடமாகப் புகழ்ந்து பேசவேண்டு மானாலும் புகழ்ந்து பேசுங்கள். அதற்கு எங்களால் செய் யக்கூடிய ஒத்தாசையிருந்தாற் செய்கிறோம். அதைவிட்டு ஒருவரையொருவர் இகழ்ந்து பேசுவதனால் வீண்கலகமுண் டாகி நமக்கிடையிலுள்ள சகோதரத்துவம் விலகிவிடுமே யன்றி நன்மைபயக்காது என்று பற்பல இதவசனங்களைக் கூறிப் புத்தி போதித்து அவர்கள் இனிமேல் பிறரை இகழ்ந்துரைப்பதிலிருந்து விலகி இன்பவசனமிர்தங்களைப் பிறர் செவிவாயிலூட்டும் தன்மைபெறச் செய்தனராம்.

ஆகையால் தத்தம் மதாசாரத்திற் கிசைந்தவாறு கடவுளுடைய கல்யாண குணங்களைப் பற்றிச் சிறப்பித்துக் கூறித் துதித்துவணங்கி அவாது திருவடிக் கமலங்களுக்

11-வது பக்கம் 3-வது வரிக்குப்பின் இதைச் சேர்த்து வாசிக்கவும்.

## FALSE GODS NOT TO BE ABUSED.

அன்றியும், நாம் ஒருவரை நிந்தித்தால் அந்த எதிரொலி (Echo) ஆனது நம்மையே திரும்பி நிந்திக்கின்றது. நாம் ஒருவரை வந்தித்தால் அந்த சக்தியானது திரும்பி நம்மையே வந்திக்கின்றது. அதாவது நாம் தூசித்தால் பிறர் நம்மைத் தூசிக்கிறார்கள். நாம் பூசித்தால் பிறர் நம்மைப் பூசிக்கிறார்கள். இதை நாம் பிரத்தியட்சமாக அநேக சந்தர்ப்பங்களில் காண்கிறோம். இதுபோலவே நாம் ஒரு சாதியையாவது, ஒரு மதத்தை யாவது, ஒரு தெய்வத்தையாவது தூசிப்போமானால், தூசிக்கப்பட்டதற் குடையவர்கள் அதையே நமக்கு திரும்ப அளிப்பார்கள். ஆதலால், நாம் எதையும் இகழ்வதிலிருந்து வெகு தூரம் விலகிவிடவேண்டும்.

நபிகள் பெருமான் முகம்மது முஸ்தபா (சல்) அவர்கள், விக்கிரக நிக்கிரகஞ்செய்து, இஸ்லாமியமதத்தை சீர்திருத்தஞ்செய்த ஆரம்பத்தில், நாயகம் அவர்கள் சிறிய பிதாவாகிய அபூத்தாலிபு அவர்கள் மவுத்துஹாலி ராகி (மரணவஸ்தை நெருங்கி) யிருக்கும்போது, குறைஷிகள் கூட்டம் கூடி ஆலோசித்து, "முஹம்மது" நமது சுவாமிகளை தூசித்துக்கொண்டே வருகிறார். அபூத்தாலிபுடைய சந்தர்ப்பமும் மரணவஸ்தையை நெருங்கி யிருக்கிறது. இவர் இறந்த பிறகு முகம்மதை எதாவது செய்தால், "சிற்றப்பாயிருக்கிற வரையில் பயந்துகொண்டிருந்தார்கள். அவர் இறந்த பின் ஏதேதோ கிளர்ச்சி செய்கிறார்கள்" என்று அறபிகள் நிந்திப்பார்கள். அவர் சீவனோடிருக்கும்போதே முஹம்மதை விலக்கிவைக்கும்படி சொல் வோம் என்று, அபூஜகில் முதலான தலைவர்கள் யோசித்து அபூத்தாலி பிடம் வந்து, "நீங்கள் எங்களுக்கு முதியவர்களாகவும், நாயகமாகவும் இருக்கிறீர்கள். உங்கள் மகனாகிய முகம்மது என்பவர் எங்களையும், எங்கள் தெய்வங்களையும் பழித்துக்கொண்டு வருகிறார். இது முதல் எங்கள் சுவாமியை அவர் தூசிக்காமலும், அவர் விஷயத்தில் நாங்கள் தலையிடா மலும் இருக்கும்படி எதாவது தாங்கள் ஏற்பாடு செய்யாவிட்டால் விபரீத மாக முடியும்போலிருக்கிறது" என்று விண்ணப்பித்தார்கள்.

அபூத்தாலிபவர்கள், நாயகம் முகம்மது (சல்) அவர்களை விளித்து, மகனே! "இதோ நிற்கிற இவர்கள் உமது இனத்தார். நீர் அவர்களை யும், அவர்கள் தெய்வங்களையும் தூசிக்கிறீராம். இனிநீர் அவர்கள் விஷ யத்தில் தலையிடாமலிருந்தால், அவர்கள் உமது விஷயத்திலும், உமது நாயன் விஷயத்திலும் தலையிடாமலிருப்பதாகச் சொல்கிறார்கள். அதுவும் நியாயமாகத்தான் தெரிகிறது. அதை நீர் ஒப்புக்கொள்ளலாம்" என்ற னர். அதற்கு நாயகம் அவர்கள், அபூஜகில் முதலிய தலைவர்களை நோக்கி "நான் உங்கள் சொல்லைக் கேட்பதாயிருந்தால், நீங்கள் எனக்கொரு வாக்குத்தத்தம் கொடுக்கிறீர்களா"? என்னலும், அவர்கள் "ஒரு வாக்குத்தத்தமல்ல, பத்து வாக்குத்தத்தம் வேண்டுமென்றாலும் கொடுக் கிறோம்" என்றனர். அப்படி நீங்கள் செய்வதாயிருந்தால் அறபிகளெல்

லாம் உங்கள் வசமாவதுமன்றி, அஜமி (பிறதேசத்தார்) களும்உங்கள் சொற்கேட்டு நடப்பார்கள் என்று நாயகமவர்கள் கூற, அதைக்கேட்ட எல்லோரும் சரி அப்படியே! என்று ஒப்புக்கொண்டு, அஃதென்ன விஷயம் என்று ஆவலோடு அபூஜகில் முதலான தலைவர்கள் கேட்டார்கள்

"லா இலாஹ இல்லல்லாகு" لا إله إلا الله

என்று சொல்லுஙகள். அதுதான் வாக்குத்தத்தம் என்று நாயகம் அவர்கள் சொல்ல, அதை குறைஷிகள் அங்கீகரிக்கவில்லை. அபூத்தாலிபு அவர்கள், நாயகம் அவர்களை நோக்கி, "மகனே! " இவர்கள் அதைச்சொல்ல சம்மதிப்பார்களா? சம்மதிக்கமாட்டார்கள். இஃதல்லாத வேறொன்றை சொல்லும்படி அவர்களுக்குச் சொல்லும்" என்றனர். அதற்கு நபிகள் பெருமான் " இவர்கள் சூரியர், சந்திரர்களாகிய கிரகங்களைக் கொண்டு வந்து எனது இரண்டு கரங்களில் வைத்தாலும் நான் "லா இலாஹ இல்லல்லாஹு" என்னும் மகா மந்திர வாக்கியத்தைத் தவிர, அஃதல்லாததை அல்லாவின் ஆணை ஒருபோதும் சொல்லமாட்டேன்" என்றூர்கள்,

அதைச் செவிமடுத்த குறைஷிகள் சினங்கொண்டு, " நீர் எங்கள் சுவாமிகளை தூசிப்பதிலிருந்து விலகினல் ஆச்சுது. இல்லாவிட்டால் உம்மையும், எங்கள் சுவாமிகளை நிந்திக்கும்படி உம்மைத் தூண்டினவனையும் இலேசில் விடமாட்டோம். நாங்களும் தூசிப்போம்" என்று ஆரவாரித்தார்கள். அதை யுணர்ந்த நபிகள் பெருமானவர்களும் அது விஷயத்தில் பின்னிடாமல் தலையிட்டு கிளர்ச்சிசெய்ய முயற்சிக்கும் தருவாயில், வஹி (தேவ வசனம்) வந்ததாவது, (சபப்)

வலாத சுப்புல்லதீன யத்ஊன மின்தூ னில்லாஹி ولا تسبوا الذين يدعون من دون الله

ஓ மூமினுனவர்களே! காபிரீன்கள் பொய்யான விக்கிரகங்களை கடவுளென்று வணங்குகிருர்கள். அந்த விக்கிரகங்களை நீங்கள் நிந்திக்க வேண்டாம்.

பயசுப்புல்லாஹா அத்வன் பி கைரி இல்மின் فيسبوا الله عدوا بغير علم

(அப்படி நிந்தித்தால்) அவர்கள் அறியாமையால் உங்கள் மெய்யான கடவுளை அளவுகடந்து நிந்திப்பார்கள்.

And do not abuse those whom they call upon besides Allah, lest exceeding the limits they should abuse Allah out of ignorance. (Qur-an Part VII, CH. VI Section 13.)

என்று கூறப்பெற்றிருக்கிறது. ஆதலால் ஒரு மதத்தை, அல்லது ஒரு மனிதரைப் புகழ மனமிணங்காவிடினும் இகழக்கூடாதென்பது இதன் மூலமாகவும் நன்குணரப்பெற்றும்.

காளாக வேண்டுமேயன்றி, உன்தெய்வம்—என் தெய்வம் என்னும் தெய்வபேதமாகிய அனந்த தெய்வக் கலகம் ஏற்படும்படி நிந்தித்தல் கூடாவாம்.

திருக்குறள்.

இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்திற்
பட்டுருவுங் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்.

திருமந்திரம்.

கத்துங் கழுதைகள் போலுங் கலதிகள்
சுத்த சிவனெங்குந் தோய்வுற்று நிற்கின்றான்
குற்றந் தெரியாதார் குணங்கொண்டு கோதாட்டார்
பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே.

தாயுமானவர்.

சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி யருவுருவத்
தன்மை நாமம்
ஏதுமின்றி எப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின்
றியக்கஞ் செய்யுஞ்
சோதியைமாத் தூவெளியை மனதவிழ நிறைவான
துரிய வாழ்வைத்
தீதில்பர மாம்பொருளைத் திருவருளே நினைவாகச்
சிந்தை செய்வாம்.

மாறுபடு தர்க்கந் தொடுக்கவறி வார்சாண்
வயிற்றின் பொருட்டதாக
மண்டலமும் விண்டலமு மொன்றாகி மனதழல
மாலாகி நிற்கவறிவார்

வேறுபடு வேடங்கள் கொள்ளவறி வாரொன்றை
மெணமெணென் றகம்வேறதாம்
வித்தையறி வாரெமைப் போலவே சந்தைபோன்
மெய்ந்நூல் விரிக்கவறிவார்

சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்கவறிவார்
திரமென்று தந்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடு மூளறவறிவார்

* ஆறுசம யங்கடோறும் வேறுவே றுகிவிளை
யாடுமுனை யாவரறிவார்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே.

ஆதி, அந்தம், அழிவு அற்றவராய் எக்காலத்திலும் சாசுவதமாயிருப்பவர் கடவுள் ஒருவரே. தாய் தந்தையரால் பிறவி கொள்ளாமலும், வேறெந்த வஸ்துவினாலும் சிருஷ்டிக்கப் படாமலும், தன்னந்தனியாய் இன்பதுன்பமற்றவராய் இருக்கப்பட்ட அபூர்வ வஸ்துவும் அவரே. ஆண், பெண், அலி என்னும் உருவு கொள்ளாதவரும், ஊர்,

---

* சமயம் 6 :—வைரவம் - வாமம்-காளாமுகம்-மாவிரதம்-பாசுபதம்-சைவம். அன்றியும், புறச்சமயமாவன :—உலகாயுதம் - புத்தம்-சமணம் - மீமாஞ்சை-பாஞ்சராத்திரம்-பாட்டாச்சாரியம். இது சைவர் கொள்கை.

சமயம் 6 :—சைவம்-வைணவம் - சாத்தம்-சௌரம் - காணபத்தியம்-கௌமாரம் இவை வைதிகமதம் என்பர்.

சமயம் 6:—கபிலமதம்-கணாதமதம்-பதஞ்சலிமதம்-அட்சபாதமதம்-வியாசமதம்-சைமினிமதம்-இவை வேதாந்த மதம் என்பர்.

சமயம் 6 :—பௌத்தம்—சைனம்—பைரவம்—காளாமுகம்-உலோகாயுதம்-சூனியவாதம் இவை புறச்சமய மென்பர் வைதிகர்.

பெயர் அற்றவரும், உறவற்றவரும், அரூபமுள்ளவரும், அண்டகோடிகளனைத்தையும் சாட்டையில்லாப் பம்பரம் போல் ஆட்டுவிப்பவருமாகிய அற்புதாகரர் அவரே. அவர் இராசாதிராசர், மாயாதிகாரர், பராரூநாதர், நானுவினோதர், சர்வாதிகாரர், சர்வோத்தமநீதர் என்னும் இத்தகைய அளவிடக்கூடாத அனந்தகோடி வல்லபமுடையவர். அவருக்கு ஒப்பாரும், மிக்காரும் ஒருவருமேயில்லர். அவ்வாறான மகாமகத்துவமும், உன்னதமும், மகிமையும் பொருந்திய கர்த்தாவானவர் நம்மீது வைத்துள்ள அன்பைச் சிறிது கவனிப்போம்.

தாயுமான வள்ளல்.

ஐவகை யெனும்பூத மாதியை வகுத்ததனு
ளசரசர பேதமான
யாவையும் வகுத்துநல் லறிவையும் வகுத்துமறை
யாதிநூ லையும்வகுத்துச்
சைவமுத லாமளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்தமோன
சமரசம் வகுத்த ... ... ...

பரப்பிரம்ம சோதி சொரூபக் கடவுளானவர் சகல சீவான்மாக்களிலும் உன்னதமான மானிட வகுப்பில் நம்மைப் பிறப்பித்து, இன்றியமையாத பிரயோசனங்களைத் தரக்கூடிய கைகால் முதலிய சகல அவயவங்களையும் கொடுத்து, பகுத்தறியும்படி புத்தியையுங் கொடுத்து, நாம் சௌக்கியமாகவும், சந்தோஷமாகவும் இருக்கும்படி பெண்டு பிள்ளைகளைக் கொடுத்து, நமக்கு வேண்டிய ஆகார-வாகனாதிகளுக்காகப் பல தானியவகைகள், புல் - பூண்டு, ஆடு, மாடு, குதிரை, யானை, ஒட்டகம் முதலிய சகல சீவராசிகளையும் உற்பத்தியாக்கிக் கொடுத்திருக்கிறார். நாம் அவரை நினைக்கா

விடினும், நம்மை அவர் ஒரு கணப்போதேனும் மறக்கிற தில்லை. நாம் அவரைப் பார்க்காவிட்டாலும், அவர் நம்மைச் சதா பார்த்துக் கொண்டே யிருக்கிறார். அவருடைய கருத்தை நாமறியக் கூடாவிடினும், நம்முடைய கருத்தை அவர் அறிந்து கொண்டே இருக்கிறார். நாம் வேலைசெய்து அலுத்துத் தூங்கினாலும், அவர் நமக்காகச் செய்துவரும் எண்ணிறந்த வேலைகளினால் அலுப்படையாமல் விழித் திருந்து நம்மைப் பாதுகாத்து வருகின்றார். இரவும்-பகலும் நமக்காக ஏராளமான வேலைகள் செய்து வருகிறார். அவர் எவருடைய ஒத்தாசைக்கும் எதிர்ப்பார்ப்பவரல்லர். ஆனால் நாம் அனைவரும் அவருடைய உதவிக்கே எதிர் பார்க்கின் றோம்.

### பட்டினத்தடிகள்.

பொன்னாற்பிர யோசனம் பொன்படைத் தோர்க்குண்டு
பொன்படைத்தோன்
தன்னாற்பிர யோசனம் பொன்னுக்கங் கேதுண்டத்
தன்மையைப்போல்
உன்னாற்பிர யோசனம் வேணதெல் லாமுண்
டுனைப்பணியும்
என்னாற்பிர யோசனம் ஏதுண்டு காளத்தி
யீச்சுரனே.

### கடவுள் தொழில்.

கடிகாரம், மணி—நிமிடம்—விநாடி—தேதி காட்டுவதும், எச்சரிக்கை மணி (Alarm) அடிப்பதும்; பலவித வாத்தி யங்கள் வாசிப்பதும்; இன்னும் அனேக ஆச்சரியங்களைச் செய்வதும்; ரெயில்வே இஞ்சின் வண்டிகள், மாடு-குதிரை யில்லாமல், நீராவி பலத்தினால் பல்லாயிர மணங்கு பாரத்தை வெயிலென்றும்-மழையென்றும்-இருளென்றும் நோக்காமல்

ஒரே நாளில் பல நூறு மைல் தூரம் சுலபமாகவே கொண்டு போய்ச் சேர்ப்பதும்; இவ்வாறே நீராவி மரக்கலங்கள் செல்வதும்; பயாஸ்கோப் (Cinema) நகரும் காட்சிப் படங்கள், உலகத்தின் பல பாகத்தில் நிகழ்ந்த சம்பவங்களை பிரத்தியட்சமாகவே செய்து காண்பிப்பதும்; இன்னும் ஆகாய விமான முதலான பல இயந்திரங்கள் ஆச்சரிய மடையத்தக்க விதமாக வேலை செய்வதும் இக்காலத்தில் நாம் நிதரிசனமாகக் காண்கிறோம். இவைகளை ஒரு மதிவல்லோன் (Engineer) இருந்து செய்திருப்பான் என்பது நமக்கு விளங்குகின்றது. அன்றியும்,

கதவு-நிலை-சன்னல் முதலியவைகளை ஒரு தச்சு வேலைக்காரன் இருந்து செய்திருப்பானே யன்றி, அவைகள் தானாகவே அந்தந்த ரூபங்களை அமைந்திருக்கமாட்டா தென்பதும் புலப்படுகிறது. அதுபோல் யானை முதல் எறும்பீறாக * எழுவகைத் தோற்றத்திலுண்டான † எண்பத்து நான்கு லட்சம் சீவாசிகளையும், கடல்-மலை முதலியவைகளையும், தத்தம் நிலை வழுவாது நடக்கும் தேவ கடிகாரமாகிய சந்திர - சூரியாதி கிரகங்களையும் ‡ சிருட்டி-திதி-சங்காரம்-திரோபவம்-அனுக்கிரகம் என்னும் பஞ்ச கிருத்தியங்

---

* எழுவகைத் தோற்றம் :—தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்.

† 84 லட்சம் சீவாசிகளாவன :—தேவர் (மலாயிக்கத்துகள்)-14 லட்சம், மக்கள்-9 லட்சம், விலங்கு-10 லட்சம், புள் 10-லட்சம், ஊர்வன-11 லட்சம், நீர்வாழ்வன-10 லட்சம், தாவரம்-20 லட்சம்.

‡ சிருட்டி-படைத்தல், திதி-காத்தல், சங்காரம்-அழித்தல், திரோபவம்-மறைத்தல், அநுக்கிரகம்-அருளல்.

இப்பஞ்ச கிருத்தியங்கள், பெத்தத்தில் நிகழும் பஞ்ச கிருத்தியங்களென்றும், முத்தியில் நிகழும் பஞ்சகிருத்தியங்களென்றும்

களைச் செய்யும் கடவுள் என்னும் ஒரு தேவ தச்சன் இருந்து செய்திருக்க வேண்டுமேயன்றி, அவைகள் இயற்கையாகவே அமைந்திருக்க மாட்டாது. ஆகையால் கடவுள் இல்லை யென்னும் நாஸ்திகம் நிராகரிக்கப்பட்டு ஆஸ்திகம் நிலை நிறுத்தப்பெற்றது.

---

இருவகை, அவற்றுள், பெத்தத்தில் நிகழும் பஞ்சகிருத்தியங்கள், இந்திரியங்களில் வருவனவென்றும், கரணத்தில் வருவனவென்றும், இருபாகுபடும்.

இந்திரியக் கிருத்தியங்களாவன :—ஓர் இந்தியத்தில் ஆன்மா பிரவேசித்தல் சிருட்டி, அவ்விந்தியத்திலிருந்து ஒரு விடயத்தைப் பற்றி அனுபவித்தல் திதி, அவ்விடயத்தின் மயமாக இரண்டற அழுந்துதல் சங்காரம், அதில் இதம்பிறத்தல் திரோபவம், அதனைத் தெளிந்துகோடல் அநுக்கிரகம்.

கரண கிருத்தியங்களாவன :—மனதினால் ஒருபொருளை நினைத்தல் சிருட்டி, அப்பொருளிற் பிரியம் பிறத்தல் திதி, அஃது எப்போது வருமெனத் திகைத்துநிற்றல் சங்காரம், அப்பொருளின் மயங்குதல் திரோபவம், அதனைத் தெளிந்துகோடல் அநுக்கிரகம்.

முத்தி கிருத்தியங்களாவன :— முத்தியில் அருள்வடிவமாதல் சிருட்டி. ஆனந்தப்பேறு பெறுதல் திதி. அதில் அதீதப்படல் சங்காரம். ஞாதுரு ஞான ஞேயமாகிய திருக்குதிரிசிய விவேகமென்னும் மூன்றும் தோன்றாதிருத்தல் திரோபவம். இந்த நான்கு கிருத்தியங்களும் எக்காலமும் விளங்குதல் அநுக்கிரகம்.

அன்றியும், 36 கருவிகளோடும் ஆன்மா தேகபோகங்களை யறிந்து நிற்றலால், சாக்கிரத்தைச் சிருட்டியெனவும்; இச்சாக்கிரத்திற் புசித்த வாசனை சொப்பனத்தும் அறிந்து நிற்றலால் திதி யெனவும்; இச்சொப்பனம்போற் சிறிது நிழலெழத்தோன்றி மறைதலால் சுழுத்தியைச் சங்காரமெனவும்; பிராணவாயு இயக்கமின்றி ஒன்றுந் தோன்றாதிருத்தலால் துரியத்தைத் திரோபவமெனவும்; அதீதமானது கருவிகள் ஏதுமின்றி ஆணவவிருளா யிருந்ததாயினும், அதன் நிமித்தமாய் மாயையில் தநுவாதிகொடுத்தல், இருவினையொப்பு வருவித்தல், ஆசாரிய மூர்த்தமாய் வந்து உபதேசித்தல் முதலிய அநுக்கிரகம் பெறுதலால், இவ்வதீதத்தை அநுக்கிரக மெனவும் கூறுவதுண்டு.

## கடவுள் வல்லபம்.

கடவுளுடைய வல்லபத்தை பிரசங்கிப்பதற்கு எவரால் முடியும்? ஏகாண்டமான பூமியைப்படைத்து, யாதொரு தூலமுமில்லாமல் வானத்தை அதற்கு மேற்குடையாகக் கவித்து, சந்திர சூரியாதிகளேயும் வகுத்து, அகண்ட சமுத்திரங்களே அணையில்லாமல் அடக்கி; தானியம், புல், பூண்டு முதலியவைகளின் விளைவுக்காகவும், மனிதர், ஆடு, மாடு முதலிய சீவராசிகளின் உபயோகத்திற்காகவும், ஆறு, குளம், ஏரி முதலியவைகளிற் சலமுண்டாக்கி; காலக் கிரமப்படி, மழை, பனி வெய்யில் முதலியவை பெய்யவும் காயவுஞ்செய்து; மனிதர் முதலிய சர்வ சீவான்மாக்களேயும் ஏனைய சராசரங்களேபுஞ் சிருஷ்டித்து; அவர்களே இரட்சித்து அழித்து விடுதலாகிய இத்தனே விஞேத அற்புதச் செய்கைகளும் அவர் செயலே. சடப்பொருள்கள் அவற்றிற்குரிய செயலேச் செய்வதும், சித்துப் பொருளாகிய உயிர்களுள் அவற்றிற்குரிய செயலேச் செய்வதும் கடவுள் செயலே.

அவையவை தாமே தம்தம் தொழிலேச் செய்கின்றன. அவரால் என்பது எதற்காக எனில்: சடப்பொருள்களேப் பற்றிப் பின்பு பேசுவோம்: சித்துப் பொருளாகிய நம் செயல் யார்செயல் என்று பார்ப்போம். எந்த மனிதனும், தான் நல்ல நிலேயிலே இருக்கவேண்டும் என்று கருதுகிருன். அதற்கென்று சில தொழில்களேச் செய்கிருன். ஆயினும், அத்தொழில்களின் பயனெல்லாம் ஒரே தன்மையை யுடையனவா யிருக்கவில்லே. எல்லோருடைய நோக்கமும் தொழிலும் ஒன்ருயிருக்க, என் அதன்பயன் வேறுபடுகின்றன? அங்கு, கடவுள் தம்செயல் என்ற அறிவை நமக்கு அளிக்கிருர். அவர் செயலன்றி, இவன் செயல் என்பது

உண்மையாயின், எல்லாரும் ஒரே நிலையில் இருக்கவேண்டும். நிலைமையில் வேறுபாடு காணப்பட நியாயம் இல்லை. எவர்தான், தாம் முன்னுக்கு வருவதில் ஆசையில்லாதவர். பிறர் விஷயத்தில், அவர்களுடைய நோக்கங்கள் எப்படியிருந்தாலும், தம் விஷயத்தில் அவர்களுடைய நோக்கம் வஞ்சனையற்ற நோக்கமே. ஆகவே, ஒரே நோக்கமுடைய சீவர்களுடைய நிலையில் வேறுபாடு காணப்படுவதால், எல்லாம் கடவுள் செயலே.

எல்லா சீவர்களுடைய நோக்கமும் ஒன்றுதான். ஆயினும், அவரவர் முயற்சி வேறுபாட்டினலே நிலைமை வேறுபாடு உண்டானது என்றால், முயற்சி என்பது என்ன? அந்த சீவர்களின் உள்ளத்தில் தோன்றும் கற்பனைதானே! அந்தக் கற்பனைகளுக்கு மூலமாகிய நோக்கம் ஒன்றாயிருந்தும், முயற்சியாகிய கற்பனை வேறுபடுவானேன்? அங்கும், கடவுள் தம்செயல் என்பதனைக் காட்டுகின்றார். ஒரே நோக்கமாயினும், அவரவர் சத்திக்குத் தக்கபடி முயற்சியெடுத்துக் கொள்ளுகிறார்கள் என்றால், சத்தி என்பது எதனால் வந்தது? அவரவர் உடம்பு, மனம் இவற்றைப் பற்றியதுதானே. உடம்புக்கும் வேறாயுள்ள பலவகைப் பொருள்களினாலும், இவன் சத்திகளுக்கு ஏற்றக்குறைவு உண்டாவதும் உண்டு. இவற்றையெல்லாம் கவனித்து, ஒருவன் முயற்சிசெய்ய வேண்டியதுதான். ஆனாலும், இவன் எவ்வளவு சிறந்த முயற்சியை, தான் செய்தால் தனக்கு நலம் என்று எண்ணுகிறானோ, அவ்வளவு சிறந்த முயற்சிக்கு உரியதாக, தன்னுடைய மனம்-உடம்பு முதலியவைகளையும் அவற்றின் சத்திகளையும் வேறுபடுத்திக்கொள்ள இவனுக்குச் சத்தியில்லை அல்லவா? நாளடைவில் தன்மனம்-உடம்பு முதலியவற்றைச் செவ்வைப்படுத்திக் கொள்ளுகிறான் என்றால், ஏன்? இவன் எண்ணிய பொழுதே செவ்வைப்படுத்

திக்கொள்ள முடியாமையால்தான். அங்கும் இவனுடைய முடியாமை வெளிப்படுகிறதன்றோ ?

இங்ஙனம், சீவர்களால் தாம் எண்ணியபடி முடியாமை நன்மைக்கோ ? தீமைக்கோ ? என்றால் நன்மைக்குத்தான். ஏன் ? பெரும்பாலாரும் சுயநயம் உள்ளவர்களே. சுய நயம் உள்ளவர்கள், தாம்கருதிய பதவிக்கு வந்துவிட்டால், உலகத்துக்கு நன்மையோ ? தீமையோ ? ஆராய்க ! இனி, சுயநயம் இல்லாதவர்கள் காரியங்களாவது பலிக்கக்கூடாதா? என்றால், சுயநயம் இல்லாதவர்போல் வெளியில் தோன்றினும், அவர்களுக்குள்ளும் வேறுபாடு இருக்கிறது. அந்த வேறுபாடு, அவரவர் அகந்தையால் உண்டாவது. அங்கே, நாம் என்ற எண்ணம், அதாவது :—சுயநயம் அற்றதனாலே, மற்றோரினும் நாம் சிறந்தவர் என்ற எண்ணம் உண்டாயிருப்பின், அங்கும், கடவுள், அவர் காரியம் கைகூடாததாக்கி, "மற்றவரைப் போலவே நீயும் ஒருவன், உன்னை நான் நடத்துகிறேன்" என்று தம்மை வெளிப்படுத்துகிறார். சுயநயம் அற்று, அதோடு நாம் என்ற அகம்பாவமும் அற்றவர் எவரோ ! அவரே கடவுளின் பிரதிநிதி. அவரிடத்து கடவுள் எப்பொழுதும் விளங்கிக்கொண் டிருப்பதினாலே, அதாவது :—அவரிடம் "நாம்" என்ற அகந்தை உண்டாகிக் கடவுளை மறைக்காததினாலே, அவர் எண்ணுகிற எண்ணங்கள் பலிக்கின்றன. அவரே "சத்திய சங்கற்பர்" என்று கூறப்பெறுவர். அவரிடம் விளங்குவது கடவுளின் நேர் ஒளி. அங்கு இருளில்லை. அவரே கடவுளின் செயலை வஞ்சக மற்றறிந்தவர். அவரிடமிருந்து கடவுள் தமது சிருட்டியின் நோக்கத்தை நிறைவேற்றுகிறார்.

"நாம்" என்ற எண்ணம் அற்ற சத்திய சங்கற்பர் ஒருவராவது இல்லையா ? ஏன் உலகம் சர்வ நன்மையையும்

அடைந்திருக்கக் கூடாது? என்றால், இதில் ஒரு நுட்பம் இருக்கிறது. "கடவுள் செயல்" என்று அறிந்த மகான்கள் அவர் செயல் என்பதைப் பிறருக்கு அறிவிப்பதில் நோக்கமுடையாராகின்றனர். இவ்வாறு, "கடவுள் செயல்—தம் செயலல்ல" என்று உணர்வதைக் காட்டிலும் வேறே நன்மை உலகத்தாருக்கு இல்லை. இவ்வாறு உணர்வதிலே எல்லா நன்மைகளும் அடங்கியிருக்கின்றன. ஆதலால், அவர்களுடைய நோக்கமெல்லாம் தாங்கள் உணர்ந்த கடவுளையும் அவர் செயலையும் மற்றவர்களுக்குப் போதிப்பது தான். அவ்வாறு போதிப்பதிலும், "இப்பொழுதே நீங்கள் கடவுளை உணர்ந்து விடுங்கள்" என்று போதிப்பதில்லை. தாங்கள் நடந்துவந்த நல்வழிகளை விளக்குவார்கள். அதில் சனங்களை நடக்கும்படித் தூண்டுவார்கள். அவ்வளவேயொழிய "இப்பொழுதே நீங்கள் முத்தியில் இருங்கள்" என்று சொல்லார். ஏன்? சீவர்களால் அங்ஙனம் நடக்க முடியாது. கடவுளை நோக்கி, "இப்பொழுதே இவர்களை முத்தியில் வையும்" என்றும் சொல்லார். என்? அகம்பாவமில்லை. கடவுளானவர் அவர் செயலைச் செய்கிறார்: நாம் என்ன ஏவுகிறது என்று தோன்றும். ஆகவே, தம் கடமையைத் தாம் செய்வதே தவிர, பயனைக் கற்பிக்கமாட்டார். அதற்கு அதிகாரி, கடவுளேயென்று அவர்கள் அறிவார்கள். ஆகையால், உலகில் நடப்பதைத் தாம் பார்ப்பதும், தம் கடமையைத் தாம் செய்வதும் தவிர, தாமாய்த் தனி உலகம்படைக்க அவர்கள் சங்கற்பிக்கமாட்டார்கள். ஏன்? அதுவும் ஒரு அகம்பாவம். சிருட்டி, அதன் கிரமத்தை அனுசரித்தே யிருக்கும். எது எது எப்படி நடக்கவேண்டுமோ அப்படி நடக்கிறது.

தம் செயலுக்கு மிஞ்சி ஒன்றிருக்கிறதை உணர்ந்தவர், எப்படி ஒன்றை இப்படித்தான் ஆகவேண்டுமென்று

எண்ணுவார்கள்? எண்ண மாட்டார்கள். தம் கடமை என்று எதையும் செய்வார்கள். "பலனை உத்தேசிக்காமல் கருமம்செய்" என்றே வேதம் சொல்லுகிறது. எப்போதும் கோபமே கூடாது: சாந்தமா யிருக்கவேண்டு மென்று எண்ணிக்கொண்டிருக்கும் ஒருவனுக்கு, ஒருசமயம் அவனை யறியாமலே கோபம் வந்துவிடுதல் போல, இந்த சத்திய சங்கற்பர்களுக்கும் ஒரு சமயம், உலகில் நடக்கும் அநியாயம் பொறுக்கமுடியாமல், "கடவுளே! இப்படியானால் நல்லதே" என்ற எண்ணம் வந்துவிடும்: அப்பொழுது அப்படியே நடக்கும். அதுதான் உலகத்தில் நடக்கும் அருமையான காரியங்களுக்கு வேர். அப்படி நல்லவர் மனது, தன்னை மீறி ஒரு பலனை இச்சிக்க வந்துவிடும் காலம், உலகத்தில் பெரிய மாறுதலை உண்டாக்குகிறது. இது உலக நீதியாயிருக்கிறது. இதையார் மாற்றுகிறது?

இப்பொழுது எது நடக்கிறதோ அது ஒரு நியாயத்தில் அகப்பட்டதுதான். அதுதான் நியாயம். எது எது எப்படி யிருக்கிறதோ, அது அது அவர் செயல்தான். உள்ளபடி நோக்கினால், "திருடுகிறவனைத் திருடத் தூண்டுகிறதும் அது" என்று எண்ணுவதிலும் குற்றத்தைக் காணோம். ஏன்? "திருடுகிறவனைத் தகுந்தபடி சிட்சிக்கத் தூண்டுவதும் அது" என்று தகுந்த சிட்சை செய்யலாம். இவ்வாறின்றி, திருடன்மீது நாம் பகை பாராட்டலாகாது. இதுவே, "கடவுள் செயல்" என்று அறிந்ததின் பயன். திருடன்மீது பகை யில்லாவிட்டாலும், அவன் திருட்டுக்கும் நமக்கும் பகை உண்டு என்பதும், கடவுள் செயல் என்று அறிந்ததின் பயனே. ஏனெனில், அந்தத் திருடனுக்கும் அந்தத் திருட்டுக்குமே பகையுண்டு. எப்படி அறிகிறோமென்றால், அந்தத் திருடன் வீட்டில் ஒருவன் திருடும்போது, அவன் சும்மா யிருக்கிறானா? இல்லை. ஆகை

யால், தீமை கூடாது என்பதையும், நன்மை கூடும் என்பதையும் உணராதவர் யார்? ஆதலின், கடவுள்செயல் என்ற எண்ணம்வந்தால் உலகத்தின் கடமைகள் ஒழுங்காய் நடக்கும்: இதைத் தவிர, வேறு நமக்கு ஒன்றும் தெரியாது: தெரிந்ததைத்தான் சொல்லலாம்: தெரியாததைக் குறித்து கவலை வேண்டாம்.

கடவுளால் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் ஞானத்தின் பயன்களில், கடவுள்செயல் என்று அறிவதும் ஒன்று. கடவுளை, நீர் ஏன் இப்படிச் செய்கிறீர்'' என்று கேட்க நமக்கு வாயில்லை. இஃது எந்த மதத்திலும் உண்டு. நம் செயல், நாம் எண்ணியபடி பலிப்பதில்லாததினாலே, அதாவது :—நம்முடைய வல்லமை பரிபூரணமா யிராததினாலே, நாம் "கடவுள் செயல்'' என்று சொல்லாமல் முடியாது. நமக்குள்ளதுதான் சடப்பொருள்களுக்கும். சடப்பொருளை விட நம்முடைய நியாயம், ஒன்றும் உயர்ந்துவிட இல்லை. எல்லாம் ஒன்றுதான். "கடவுள்செயல் என்பதை யொருவன் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், தன் சத்திக்குறைவை அவன் ஒப்புக்கொள்ளுகிறான். அதுவே கடவுள்செயல்'' என்பது பெரியோர் அபிப்பிராயம்.

ஆகையால் தோத்திரத்திற்கும் வணக்கத்திற்கும் பாத்தியப்பட்டவர் அவரைத் தவிர வேறொருவருமே யில்லை. நாம் இரகசியமாகவும் வெளிப்படையாகவும் செய்துவரும் ஒவ்வொரு செய்கையும், பேசிவரும் ஒவ்வொரு வார்த்தையும் அவர் கவனத்திற்குத் தப்புவதேயில்லை. ஆகையினால் நம்முடைய செய்கைகள் அனைத்திற்கும் அவரே சாட்சியாக இருக்கின்றார். அவருடைய அற்புதச் செயல்களுக்கு இணையாக வேறொன்றுமேயில்லை. இத்தகைய அற்புதக் குணங்கள் அமைந்த பேரின்பக்கடலைச் சதா நமது மன

வாயாற் பருகி அவரைத் தொழுது வரவேண்டியது நமது சகல முக்கிய கடமைகளிலும் மிக முக்கியமான கடமையன்றோ?

கடவுள் சர்வ *சராசரப் பொருள்களிலும் அங்கு இங்கு என்று சுட்டிச் சொல்லாத விதமாய் எங்கும், பூவில் வாசமும், எள்ளில் எண்ணெயும், பாலில் நெய்யும், உடலில் உயிரும், ஆகாயத்தில் வாயுவும், மண்ணில் சலமும், தாய் வயிற்றில் சிசுவும், நீரில் உப்பும், எப்படி அபேதமாய்க் காணப்படுகிறதோ, அப்படியே (சர்வேந்தரியாமியாதலால்) நிர்விகற்பமாய் வியாபித்திருக்கின்றார்.

### தாயுமான வள்ளல்.

(1) அத்துவித வத்துவைச் சொப்ரகா சத்தனியை
அருமறைகண் முரசறையவே
அறிவினுக் கறிவாகி யானந்த மயமான
ஆதியை யநாதியேக
தத்துவ சொரூபத்தை மதசம்ம தம்பெறாச்
சாலம்ப ரகிதமான
சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப
சாந்தபத வியோமநிலையை
நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ் சப்பொருளை
நிர்விஷய சுத்தமான
நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராமயத்தைச்
சித்தமறி யாதபடி சித்தத்தி னின்றிலகு
திவ்யதே சோமயத்தைச்
சிற்பரவெ ளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை யஞ்சலிசெய்வாம்.

---

* சரம்-இயங்குவது, அசரம்-இயக்கமின்றி நிற்பது, சரம்-அசரம் என்பது, சராசரம் என்றாயிற்று.

(2) நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடரா யெல்லாம்
வைத்திருந்த தாரகமா யானந்த மயமாகி
மனவாக் கெட்டாச் [யைச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளி
சிந்தை செய்வாம்.

கண்ணுக்குச் சூரியன் என்னும் விண்மணியைப் பார்ப்பது கடினமாக இருப்பதுபோல், நித்திய வஸ்துவாகிய கடவுளைநோக்கும்விதமும் மனிதர்கட்கு அருமையாக இருக்கின்றது. சூரியன் (பகல் 15-நாழிகை நேரத்தில்) ஆகாய வுச்சியிலிருக்கும்போது, படிகத்தில் வர்ணம் பற்ருமல், ஒரு பக்கம் சாய்ந்தவுடன் அந்தப் படிகத்தில் பஞ்சவர்ணங்களும் தோன்றும். அதுபோல், கடவுளானவர் மனிதர்களிடத்தில் பஞ்சேந்திரியச் சேட்டையுள்ளவரையில் காட்சி கொடுக்காமல், ஞாதுரு ஞான ஞேயத்தைப்பற்றற நீக்கிப் பேச்சை யொழித்த சிவராச யோகிகளுக்கே தோன்றுவர். இது பற்றியே "பேசிடா திருப்பீராகில் ஈசன்வந்து பேசுமே" என்றனர் ஆன்ருேர்.

நேத்திரமானது, சூரியனின் பிரகாசத்தினுல், தோற்றப்படும் பதார்த்தங்களைப் பார்ப்பதேயன்றி, சூரியனைப் பார்ப்பதில்லை. அதுபோல் மனிதர்கள், கடவுளால் சிருட்டிக்கப்பட்ட ஈடணைத் திரயங்களை விரும்புகின்ருர்களேயன்றி, இத்தகைய திருவிளையாடல் செய்தவர் யாவர்? அவர் எங்கே யிருக்கிருர்? அவரை எவ்விதமாய்க் காணலாம்? என்று ஆலோசிப்பது பெரும்பாலுமில்லை.

## தாயுமான வள்ளல்.

குன்ருத மூவுருவா யருவாய் ஞானக்
கொழுந்தாகி அறுசமயக் கூத்து மாடி
நின்ருயே மாயையெனுந் திரையை நீக்கி
நின்னையா ரறியவல்லார் நினைப்போர் நெஞ்சம்
மன்ருக இன்பக்கூத் தாட வல்ல
மருந்தேஎன் கண்ணேமா மணியே நால்வர்க்
கன்ருலின் கீழிருந்து மோன ஞானம்
அமைத்தசின்முத் திரைக்கடலே அமர ரேறே.

சூரியன் ஒன்ருக இருந்தும், ஒவ்வொரு வீட்டிலும் வைத்திருக்கிற தண்ணீர்க் குடங்கள்தோறும், தடாகங்கள் முதலியவைகளிலும் பிரதிபலித்துக் காண்கின்றது. அது போல் கடவுள் ஒருவராயிருந்தும் சர்வ மதங்கள்தோறும் அந்தந்த மதத்திற்கு இயைந்த பெயருடன் விளங்குகின்ருர். இந்த வுண்மையை அறியாமல் சனங்கள் சண்டையிட்டுக்கொள்வது அறியாமையே.

## சிவஞான வள்ளல்.

அதிதிதன்மைந்த ரலமருகாலைப் பிரமகீதையைப் பேசினனெவனே
சிதாகாயத்திற் றிருவுருத்தாங்கி மறலியைமுனிந்த வரதனெவனே
வரன்முறையுலகம் வயின்வயினுதிக்க நான்முகத்திருந்து நான்மறை
[யுரைத்தன்
றுபநிடதத்தி லொளித்தவனெவனே அவனேபிரம மென்றறி
[மன்னே !

கல்லாலின் கீழ்க்கடவுளாகிப் பொல்லாஞானம் புரிந்தவனெவனே
மால்வரைவில்லாய்வலியவர்புரங்கணீறெழவொருக்குநின்றமூவரைச்
சேவடிநீழலிற் சேர்த்தவனெவனே காலனைமாட்டிக் கவின்சிறு
[பாலன்
மரணந்தவிர்ப்பான் வந்தவனெவனே அவனேபிரம மென்றறி
[மன்னே !

## பகவற்கீதை.

சந்திரனன் நாண்மீனிற் சாமநான் நான்மறையில்
இந்திரனன் தேவர்களில் இந்திரியங் களில்மனநான்
எந்திரமா முருவுகளிற் சேதனநா னுருத்திரரின்
மந்திரமாஞ் சங்கரனன் இயக்கரில்வைச் சிரவணனன்.

## நெஞ்சறி விளக்கம்.

பசும்பொன்னி னுமமொன்றிற் பணிதிவே ருனற்போலே
விசும்பெலாங் கலந்தசோதி வெவ்வேறு தெய்வமாகி
உசும்பிசீ வாத்துமாக்க ளுடல்பல வானதன்மை
கசிந்துகண் டுருகிநாக லிங்கரைக் காண்பாய்நெஞ்சே.

## தாயுமான வள்ளல்.

தெருளாகி மருளாகி யுழலுவன மாய்மனஞ்
சேர்ந்துவளர் சித்தாகியச்
சித்தெலாஞ் சூழ்ந்தசிவ சித்தாய் விசித்ரமாய்த்
திரமாகி நானுவிதப்
பொருளாகி யப்பொருளை யறிபொறியு மாகியைம்
புலனுமா யைம்பூதமாய்ப்
புறமுமா யகமுமாய்த் தூரஞ் சமீபமாய்ப்
போக்கொடு வரத்துமாகி
இருளாகி யொளியாகி நன்மைதீ மையுமாகி
யின்ருகி நாளையாகி
என்றுமா யொன்றுமாய்ப் பலவுமா யாவுமா
யிவையல்ல வாயநின்னை
அருளாகி நின்றவர்க ளறிவதல் லாலொருவ
ரறிவதற் கெளிதாகுமோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்தமான பரமே.

## கடவுளுக்கு யார்மீது பட்சம் ?

ஒரு கிருகத்தனுக்கு நான்கு புத்திரர்கள் இருக்கிறார்களென்று எண்ணிக்கொள்வோம். அப்புத்திரர்களுள் ஒருவன் கலெக்டர் உத்தியோகஞ் செய்து, குடும்பத்தைப் பாது காக்கிறான். மற்றொருவன் ஜட்கா வண்டி ஓட்டுகிறான். மற்றொருவன் பிதுரார்ச்சிதமான திரவியங்களை கள், கஞ்சா, கூத்தி முதலியவைகளுக்காக வீண் செலவு செய்கிறான். மற்றொருவன் யாதொரு தொழிலும் புரியாமல் சோம்பேறியாக இருக்கிறான். இந்நான்கு புத்திரர்களுள் எந்தப் பிள்ளை மீது அந்தத் தகப்பனுக்கு அதிகப் பிரியமிருக்கும் ? புகழும் பெருமையும் வரும்படியுமுள்ள கலெக்டர் உத்தியோகஞ் செய்யும் புத்திரன்மீதன்றோ ? அதுபோல் கடவுளுக்கு உலகத்திலுள்ள சருவ சிவராசிகளின் மீதும் பட்சம் ஏற்பட்டிருப்பினும் தன்னை யறிந்து வணங்கும் மனிதன் எவனோ அவன்மீதல்லவா அதிகப் பட்சமிருக்கும்.

இந்திராணி, காமதேனு, கற்பகவிருக்ஷம் நீங்கலாக, எதைக் கேட்டாலும் தருகிறேனென்று தேவேந்திரன் முசுகுந்த சக்கரவர்த்திக்குச் சொல்ல, நம்மை மறந்து சொன்னபடியால் நீ நீசனாகக் கடவதென்று தியாகேசர் தேவேந்திரனைச் சபிக்க, தேவேந்திரன் பயந்து வணங்கி, "உம்மைப் பூசிக்க அருள்புரிய வேண்டும்" எனப் பிரார்த்திக்க, அதற்குத் தியாகேசர், நீ நீசத்துவத்தை யடைந்திருப்பதால் நேரில் பூசிக்கலாகாது. கண்ணாடியில் பூசிக்கலாமென்றனர். அவனே யானையேறு பெரும்பறையனென்று திருவாரூரில் திருவிழாக்காலங்களில் வெள்ளைக்குடை பிடித்துக்கொண்டு சுவாமிக்கு முன்பு செல்வதை இன்றும் பிரத்தியட்சமாகக் காணலாம். நிறைபணி காலத்தில் திருவாரூரில் கோவில் முழுவதும் கண்ணாடி வைத்திருப்பதற்குக் காரண

மும் இதுவே. ஆகையால் எந்தக் காரியத்தைச் செய்தாலும் எதைப் புசித்தாலும் 'அறனை மறவேல்' என்ற பழமொழிப் படி கடவுளையே முதன்மையாகக்கொண்டு செய்தல்வேண் டும். இதுபற்றியே இஸ்லாமியர்கள், ஒருவன் ஒரு முக்கிய காரியத்தைப் பற்றிக் கேட்டால் அதற்கு 'சரி' சொல்வதற்கு பதிலாக, "இன்ஷா அல்லா," அதாவது 'கடவுள் போது மானவர்' என்கிறார்கள். ஒன்றைப் புசிக்கும்போது, "பிஸ் மில்லா ஹி" என்று கடவுள் நாமத்தைத் தியானித்த பின் னரே புசிக்க ஆரம்பிக்கிறார்கள்.

பிரபுலிங்கலீலை.

குடிப்பனவிழுங்குவ கூரெயிற்றினற்
கடிப்பனநக்குவ அனைத்துங்கைம்மலர்
அடுத்துளசிவன்றனக் கற்பித்துண்பவன்
விடுத்தவன்மேல்வரும் வினைகள்யாவுமே.

கடவுளானவர், தமது திருவருட் கிருபையால், மூலப் பிரகிருதியில் அழுந்திக் கட்டுப்பட்ட ஆன்மாவுக்குக் கர சரணாதி அவயவங்களைக் கொடுத்துப் பிறப்பித்துப் பரிபால னஞ்செய்து, பரமான்மாவாகிய தமக்கும், சீவான்மாவாகிய மானிடர்க்கும் உள்ள தாரதம்மியங்களை வேதாகமங்களின் மூலமாக விளக்கி, ரெயில்வே இஞ்சின் பல வண்டித்தொடர் களையும், நீராவிமரக்கலம் அநேக படகுகளையும் அவ்வவை சேரவேண்டிய இடங்களுக்குச் சுலபமாகவே யிழுத்துச் செல்வதுபோல், தம்மை ஆசிரயித்து வழிபட்டுய்ய அறி யாத ஆன்மகோடிகளை நல்வழிக்கு இழுத்து ஆளாக்கிக் "குளவியானது புழுவை தன் உருவாக்குவதுபோல்" தமது பரமான்ம சோதி சொரூபத்தை மருவப்பண்ணி, அவர் களைப் பிரம்ம சொரூபம் அடையச்செய்து, பிரதி யுப காரத்தை யெதிர்பாராத மேகம் மழையை வருஷிப்பது

போல், சிவர்களிடத்தில் எவ்விதக் கைம்மாறையும் விரும்பாமல் மகோபகாரம் புரிந்திருக்கின்றனர்; புரிந்தும் வருகின்றனர். அத்தகைய பெருமானை, "வான்செய்த நன்றிக்கு வையகம் என் செய்யும்? அதை மறந்திடாதே" என்றபடி எப்பொழுதும் மறவாமல் தியானிக்க வேண்டுவது மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரின் முக்கிய கடமையாகும்.

## கடவுள் சகாயம்.

ஓர் ஊரில் தெய்வ சகாயன் என்றும் இராச சகாயன் என்றும் இரண்டு பேர் இருந்தார்கள். அவர்களில் தெய்வ சகாயன் என்பவன் எப்பொழுதும், தெய்வசகாயம்! தெய்வ சகாயம்!! என்று சொல்வதே வேலையாக இருந்தான். இராச சகாயனோ அரசன் வெளியில் வருகின்ற மார்க்கத்திலிருந்து கொண்டு, இராசசகாயம்! இராசசகாயம்!! என்று சொல்வதே வேலையாக இருந்தான். இராசசகாயன் பல நாளும் தம்மைத் துதிப்பதை அவ்வூர் அரசன் தெரிந்து அவன் வறுமையைக் களைய எண்ணி, ஒரு பரங்கிக்காயைக் குடைந்து, அது நிரம்பப் பவுன் நாணயத்தைக் கொட்டி மூடி, பரங்கிக்காய் போலவே அவனுக்குப் பரிசளித்தான். அதை இராச சகாயன் வாங்கி மனம் புழுங்கி, இவ்வரசன் ஏதாவது பணங்காசைக் கொடுத்து நமது கலியை நீக்காமல் ஒரு பரங்கிக்காயைக் கொடுத்தானே; இதை வீட்டுக்குக் கொண்டுபோனால் அரிசி முதலானவை எப்படி வாங்க முடியும்? என்றெண்ணி, அக்காயை ஒரு கடைக்காரனிடம் கொடுத்து, அரிசி, புளி, உப்பு வாங்கிக்கொண்டு மனவருத்தத்துடன் வீடு போய்ச் சேர்ந்தான். அன்று தெய்வசகாயன், தன் வீட்டுக்குச் சில அடியார்கள் வந்ததைக்கண்டு, அவர்களுக்கு அமுது செய்விக்க நினைந்து, அந்தக் கடைக்காரனிடம் அரிசி, காய்கறி வாங்கும்போது அந்தப் பரங்கிக்

காயையும் விலைக்கு வாங்கிப்போய், அக்காயைக் கறிசமைக்க உடைத்துப் பார்க்கையில் அளவிறந்த பொற்காசுகள் நிரம்ப இருக்கக் கண்டு எடுத்துத் தனிகனாகி அனேக புண்ணிய காரியங்களைச் செய்யலானான்.

சில காலத்திற்குமுன் யான் சஞ்சார சமாதியில் நிகழும் போது "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்ற எனது நம்பிக்கையின் அனுபவத்தை நிதரிசனமாக வுணரும் பொருட்டு கையில் பணம் காசு வைத்துக்கொள்ளாமல் முன் சென்றிராத திருநெல்லிக்காவல் என்னும் ஊருக்குப் போயிருந்தேன். அப்போது நண் பகலாகவும் சித்திரை மாதத்து வெய்யிற்காலமாகவு மிருந்தபடியால் தாகம் அதிகமாயிருந்தது. இரயில்வே ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் காப்பி கிளப் இருப்பது தெரியுமானாலும், கையில் பணம் இல்லாததனால் அந்தக் கிளப்புக்குப் போக இஷ்டமில்லை. பின்னர் அந்தக் கிளப்புக்குப் போய்ப் பார்ப்போம் எனச் சென்று காப்பி இருக்கிறதா? என்று கேட்டேன். அதற் கந்த கிளப் ஐயர், காபி இருக்கிறது, அல்வா இருக்கிறது, உப்புமா இருக்கிறது, வாருங்கள் என்றனர். பணமில்லாத தனால் அவ்விடத்தை விட்டு நீங்கி புள்ளமங்கலம் என்கிற ஊரை நோக்கிச் சென்று கொண்டிருந்தேன். அப்போது திருவாரூர் இசைவேளாள குலத்தவராகிய தவில் இராமையா என்பவர் எனக்கு எதிர்முகமாக வந்து கொண்டிருந்தார். அவரைக் கண்டவுடன் கடவுள் செயலை அறிவதற்காக அவரைப் பாராததுபோல் சற்று விலகிச் சென்றேன். அவர் சென்ற பாதையை விட்டு விலகி என் முன்பாக வந்து, சுவாமி! எவ்விடத்திற்குப் போகிறது? என்றார். நான் அவருக்கு முகம் கொடுத்துப் பேசாமல் சென்றேன். அவர் பின்னரும் என்னைத் தொடர்ந்து வந்து எதிரில் நின்று கொண்டு, சுவாமி எவ்விடத்திற்குப் போகிறது? என்றனர்.

'புள்ளமங்கலம் போகிறேன்' என்று சொல்லிவிட்டு நடந்தேன். அவர் பின்னரும் என் முன்பாக வந்து, சுவாமி! இதோ தெரிகிற கிளப்பு வரையில் வந்து கொஞ்சம் தாகத்துக்குச் சாப்பிட்டு விட்டுச் செல்லுங்கள்! என்று கட்டாயப் படுத்தி அழைத்துப்போய் காபி, அல்வா, முதலானவைகள் வாங்கிக் கொடுத்ததுமன்றி, 2 நாள் வரையில் திருநெல்லிக் காவலில் தங்கும்படி செய்து உபசரித்து அனுப்பினர்.

கி. பி. 1918-ம் வருடம் பேரளத்துக்கடுத்த திருமீயச்சூர் பிரம்ம வித்தியா அச்சுக்கூடத்தில், இந்த வேதாந்த பாஸ்கரனை முதற் பதிப்பாக அச்சிடுகின்ற காலத்தில் சில நாள் அவ்வூரில் தங்கும்படி நேர்ந்தது. அவ்வூர் சிறிய குக்கிராமமா யிருந்தபடியால், பேரளம் சென்றாலொழிய சாப்பிடுவதற்கு வசதியில்லாம லிருந்தது. அதனால் சிற்சில வேளைகளில் சாப்பிடாமலிருந்து விடுவது முண்டு. இதை யுணர்ந்த ஷை அச்சியந்திரசாலை சொந்தக்காராகிய தொண்ட மண்டலம். A. இரத்தினசபாபதி முதலியா ரவர்கள் என்னை அழைத்துப் போய் அனேக தடவை அமு தருத்திய மிருக்கிறார்கள். அதன்பின் முதலியாரவர்களுக்குத் தொந்தரவு கொடுக்கக்கூடாதென்று சாப்பாட்டு நேரத்தில் நான் வெளியில் சென்றுவிடுவதுண்டு. அதை யுணர்ந்து ஷை அச்சுக்கூடத்து வேலைக்காரிலொருவர் ஒரு வீட்டில் நான்குவேளை அன்னம் போடும்படியாகவும் அதற்கு ஒரு ரூபா தருவதாகவும் திட்டப்படுத்த நான்குவேளை சாப்பிட்டேன். மறுநாட் காலையில் கீழ்வேளுருக்கு வர வேண்டுமென்று எனது பிதா அவர்கள் நிருபம் எழுதியிருந்தார்கள். ஆனால் சாப்பிட்டதற்குப் பணம் கொடுக்காமல் போகக்கூடாதே, இரயிலுக்கும் பணமில்லையே என்று ஆலோசித்தவனாக காலையில் வெளிக்குப்போய் ஒரு செடி மறைவில் உட்கார்ந்தேன். அந்தச் செடியின்கீழ் சாப்பிட்ட

தற்கும், இரயிலுக்கும் வேண்டிய பணம் கணக்காக இருக்க, அதை எடுத்துச் செலவு செய்துகொண்டேன். இவ்வாறு "என் செயலாவ தியாதொன்றுமில்லை. எல்லாம் உன் செய" என்று உணரப்பெற்ற காலமுதல் நடந்த அற்புதங்களுக்கோ கணக்கில்லை. இதனுல் கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்பது பிரத்தியட்சமாக விளங்குகின்றதல்லவா?

சூரியகிரணமும், காற்றும் சஞ்சரிக்காத இடங்களிருப்பினும் இருக்கலாம். கடவுளின் வியாபகத்திற்கு அன்னியமோ ஒன்றுமேயில்லை. இதுபற்றியே "அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி" என்றனர் தாயுமானவள்ளல்.

கடவுள், கண்ணின்றிக் காண்பவர், காதின்றிக் கேட்பவர். அவர் காணுத காட்சியும், கேளாத கேள்வியும், அவர் அறியாத விஷயமும் இல்லவே இல்லை. அதுபற்றி, அவர் ஆணையைமீறிக் குற்றஞ்செய்வதும், அவரை அறியாமற் செய்து விட்டோமென்று நினைப்பதும், அவரை வணங்காதிருப்பதும் பெரும் பிழை. ஆகையால் ஒவ்வொருவரும் விரைந்து கடவுளை வணங்கவேண்டுவது அத்தியாவசியம்.

---

## இரண்டாவது அத்தியாயம்.



### கடவுள் வணக்கம்.

விருத்தம்.

புடவியிற் பலவாஞ் சமயிகள் தத்தம்
புந்தியிற் கேற்பநங் கடவுள்
அடிகளைச் சகுண மாயுநிர்க் குணமா
யுந் துதிப் பார்களா கலினல்
மடமைசேர் வணக்க மாசெலாம் வெருட்டி
மாண்புடன் றன்னிலை காண்பான்
கடவுளை வணங்கும் விதத்தையும் விதத்தின்
கருத்தையும் பொருத்தமாய்க் கவல்வாம்.

### வணக்கத்தின் ஒழுங்குகள்.

கடவுளை வணங்கவேண்டிய விதமானது பெரும்பாலும் ஆறங்கங்களை யுடைத்தாயிருக்கிறது. அவையாவன :—

(1) பிரபஞ்ச பராக்குகள் தன்னிடம் வாராதபடி தடுத்து நீக்கி கடவுளைப்பற்றிய ஆழ்ந்த சிந்தனையில் இருதயம் நிலைபெற்றிருத்தல். (2) கடவுளிடத்தில் இன்னதைப்பற்றி இன்னவிதமாக மனுச்செய்து கொள்கிறோம். நாம் துதிக்கிற பாக்கள், மந்திரங் (அதுக்காறு)கள் முதலானவைகளின் கருத்து இன்னதென்று அறிந்து துதித்தல். (3) கடவுளின் மகா வல்லபமும், நம்முடைய வல்லமைக்குறைவாகிய தாழ்மையும் இத்தன்மைத்தென வுணர்தல் (4) கடவுள் இல்லாத இடமோ இல்லை. அவர் எங்கும் இருக்கிறார். ஆகையால் நாம் அவர் சமுகத்திலே தான் நிற்கிறோம், என்கிற அச்சமுடைத்தா யிருத்தல். (5) சருவதயாபரக்கருணை

யங்கடலாகிய கடவுளின் தனிப்பெருங் கருணையின்மீது உறுதியுடைத்தாயிருத்தல், (6) இன்னின்ன விதத்தில் இன்னின்னுரைவிட நாம் குற்றங் குறைகள் பொருந்தியுள்ளோம். ஆகையால் நாமும் ஒரு மனிதன் தானு ? வென்று தன்னை நிந்தித்துப் பணிதலான வணக்கம் உடைத்தாயிருத்தல் என்பவைகளாம். அவைகளின் முழு விபரமாவன :—

நாம் கடவுளை வணங்கும்போது அவர்மீது அன்புடைத்தா யிருத்தலையன்றி எனைய பராக்குகள் நம்மிடம் வராமலகற்றி வணக்கத்தில் சிந்தனையும், செய்கையும், வாசகமுமாகிய மூன்றும் ஒன்றுபட வேண்டும்.

கடவுளானவர் நமது இருதய சிதா காயத்திலிருக்கிறார். அவருடைய ஆசனமாகிய நமது இருதயத்திலிருந்துண்டாகும் உதிப்புகள், எண்ணங்கள் யாவையும் அவர் அறியாததன்று. அவரை வணங்குவதும், நினைப்பதும், தோத்திரம் செய்வதும், கெஞ்சுகிறதும், என்னுடைய குற்றங்களைப் பொறுத்து எனக்கு நன்னெறி இன்னதென்று காண்பித்தருள், இன்னதைக் கொடு, இன்னதைச் செய்யென்று கேட்பதும் நமது இருதயத்தின் செய்கைகளே. அத்தகைய மனோ வாக்குக் காயங்கள் ஒன்ருகாமல் வெவ்வேருயிருந்து வணங்கும் வணக்கமானது கடவுள் ஏற்றுக் கொள்ளத் தக்கதன்று.

பட்டினத்தடிகள்.

கையொன்று செய்ய விழியொன்று நாடக்
கருத்தொன் றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப்
புலால்கமழும்

மெய்யொன்று சார செவியொன்று கேட்க
விரும்புமியான்
செய்கின்ற பூசையெவ் வாறுகொள் வாய்வினை
தீர்த்தவனே.

இன்னவிதமாகக் கடவுளை வணங்கவேண்டும், இன்ன விதமாகக் கடவுளை யறியவேண்டும் என்பதில் அனுபவ சாலிகளான மெய்ஞ்ஞானிகள் (ஆரிபீன்கள், அவுலியாக்கள், குத்துபுமார்கள்) வணக்கத்திற்கு ஏகாக்கிர சித்தத்தையே பிரதானமாக கொண்டுள்ளார்கள். இதனாலேயே

" ஒருமையுட னினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர் தம் உறவு வேண்டும்!'

என்றனர் இராமலிங்கப் பெருமான்.

வணங்கும்போது நமது மனதை உலகப் பராக்குகளில் அது போகும் போக்கில் விட்டுவிடக் கூடாது. நமது இருதயமானது அவ்வாறு போகாதபடி அடக்கியாள முயல வேண்டும். இதனாலேயே "மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்" என்று நீதிநூற் கூறுகிறது.

கடவுளை வணங்கும்போது நமது இருதயமானது பரிசுத்தமாகவும், குளிர்ச்சியாகவும் உலகப் பராக்குகளில் சிக்காததாகவும் வைத்துக்கொள்ளல் வேண்டும். கடவுளை வணங்கும்போது இரண்டு காரியங்கள் வணக்கத்திற்கு இடையூறாக ஏற்படுகின்றன. அவற்றுள் அகத்தில் ஏற்படுகின்ற தடையொன்று, புறத்தில் ஏற்படுவது மற்றொன்று.

அகத்தடையாவன :—கடவுளை வணங்கிக்கொண்டிருக்கும்போது, அதற்குத் தடையான பல சிந்தனைகள் நமது இருதயத்திலிருந்து உதயமாகி மனதைக் கலக்கப்படுத்திவிடும். இது பின்வரும் அட்டாங்கயோக அத்தியாயத்திற் கூறப்பெற்ற உழல் நிலையின் அறிகுறியாம். இந்த உழல்

நிலையை நீக்குவது பிரபஞ்ச பாசக் குடையவர்களுக்கு மகா சிரமசாத்தியம். நமது இருதயத்தில் உலக ஆசையானது முளைத்து வேரூன்றி விட்டால், அதைப் பிடுங்கி யெறிய உடனே முயலவேண்டும். அல்லது நம்முடைய இருதயத்தை ஏதோ ஒன்று பற்றிக்கொண் டிருப்பதாகத் தெரிகிறதே! அஃதென்ன? நமது சிந்தையை ஏதோ ஒன்று கலக்கிக்கொண் டிருப்பதாகத் தெரிகிறதே! அஃதென்ன? என்று ஆராய்ச்சி செய்து அவைகளையகற்றி, வணக்கத்தில் ஆழ்ந்து விடவேண்டும். இம்மைக்கும் மறுமைக்கும் மத்தியப் பிரதேசமாகிய மரணவஸ்தை (சக்கறாத்து) வருவது நிச்சயம். அங்ஙனமிருந்தும், பிரபஞ்ச விவகாரமானது சாசுவத மோட்சத்தைக் கொடுப்பதுபோல் நமது மனதை மருளும்படிச் செய்து விடுகிறது. அதைத் துச்சமாக மதிக்கும் பாக்கியம் நமக்கு வந்துவிட்டால் நாமே செயசீலர்கள். நமக்கிணை ஒருவருமேயிலர். நம்மை யடிமையாக்கி யிருக்கிற பிரபஞ்சத்தை நாம் அடிமையாக்கிவிட்டு, நமது இருதயத்தைக் கடவுளுக்குச் சொந்தமாக அர்ப்பணஞ் செய்து விடுவோமானால், அப்போது மனச்சாந்தமும் பொறுமையும் உடையவர்களாகி ஆனந்த வாழ்க்கை பெற்றுய்வோம்.

புறத்தடையாவன :—காதிற் கேட்கிற பல சத்தங்களும், கண்ணுக்குத் தோற்றமாகிற பல பொருள்களுமாம். ஆதலால் வணக்கத்திற்காக நிசத்தமான விடத்தில் எவ்வித பொருட்களுமில்லாத ஒரு சிறிய அறையைத் தேர்ந்து கொள்ளல் வேண்டும்.

கல்விக் கடலாகிய இமாம் கஸ்ஸாலி றஹ்மக்குல்லா அவர்கள் கூறியிருப்பதாவது :—

உலக ஆசையில் சிக்கியவன், வணக்கத்தில் கடவுளுடைய பேரின்பத்தை யனுபவிக்கவே மாட்டான். தொழு

கையின் பலன் கிடைக்காதவர்களுக்கு நற்குணங்களும், நன்னடக்கைகளும் ஏற்படமாட்டா என்பதேயாம்.

சிலர் கூறுவதாவது: உலக இச்சையை விடுவதும், மறுமையின் கருத்தை அதிகரிக்கச் செய்வதும் பெரியோர்களுக்குத்தான் முடியும். நம்மால் முடியுமா? என்கின்றனர். பெரியோர்கள், ஒரு பணப்புதையலைக் கண்டெடுத்தால் சாமானியன் அதில் பங்குபோட ஆசைப்படமாட்டானா? ஆசைப்படுவான். அற்பமான பொருட் புதையலுக்கே ஆசைப்படும்போது, அருட்புதையலில் பங்குபோட ஆசிக்காமல், அது நம்முடையதல்லவென்று ஒதுங்குவதும் அறியாமையே.

2. இஸ்லாமியர்கள் அறபிப்பாஷையை தேவபாஷையென்றும், "குர் ஆனை" தேவ வசனமென்றும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இதனாலேயே இஸ்லாமியர்கள் வணக்கத்திற்குரிய செப தப மந்திரம் முதலானவைகளைப் பெரும்பாலும் அறபிப் பாஷையிலேயே ஓதுகிறார்கள். இந்துக்களிற் பலர் அவ்வாறே சமஸ்கிருத பாஷையில் ஓதுகிறார்கள்.

நாம் கடவுளை வணங்கும்போது அவரிடத்திற் செய்துகொள்ளும் மனுவாகிய சொற்களை இன்னதென்று நன்றாக நாம் விளங்கி யிருத்தல்வேண்டும். சொல்லும் சொல்லின் பொருள் இன்னதென்று புலப்படாமல் சொல்லுகின்ற சொற்களும் ஓதுகின்ற மந்திரங் (அதுக்காறு) களும், தான் பேசுவதின் கருத்து விளங்காமற் பேசுகின்ற கிளி, மைனா போன்ற பட்சிகள் பேசுவதையும், கிறாமபோன் பெட்டி பாடுவதையும், போதை—தூக்கக் கலக்கமுடையவன் பேசுவதையும் நிகர்க்கும். நாம் ஓதுவதின் பொருள் இன்னதென்றறிந்துகொள்ள, அந்தந்த பாஷையை நன்கு கற்றிருத்தல்

வேண்டியது அத்தியாவசியம். அந்தந்த பாஷைகளை யறிவதற்கு சக்தி யில்லாதவர்கள், அவரவர்கள் ஓதுகிற செபதபங்கள் வரையிலாவது இன்னது பொருள் என்று விளங்கியிருத்தல் நலம். சில குரு (கத்தீபு) மார்கள் அறபியில் ஓதும் சூறுக்களுக்கும், துஆ முதலானவைகளுக்கும் பொருள் விளங்காதவர்களா யிருந்தும் இமாமத்துச் செய்கிறார்கள். இமாமுக்கு, தான் சொல்லுகிற தின்னதென்றும், தாம் கேட்கிற துஆ இன்னதென்றும் விளங்காமலும், மஉமூம்களுக்கும் ஒன்றும் விளங்காமலும், அறபிப் பாஷையிற் சில வசனங்களைச் சொல்லித் துதிப்பதால், அந்தந்தத் தொழுகையானது எவ்விதங் கைகூடுமென்பதும்; இங்ஙனமே ஹிந்துக்களிற் சிலர் தங்கள் செபதபங்களை சமஸ்கிருத பாஷையில் ஓதி, அதன் பொருள் விளங்காமல் அர்ச்சனை புரிவதனால், அவர்கள் பூசைகள் எவ்வாறு கைகூடும் என்பதும் விளங்கவில்லை.

சொற்களின் பொருள்கள் தெரிந்திருப்பது மல்லாமல், அந்தப் பொருளின் கருத்து இருதயத்தைப்பற்றி யிழுத்தல்வேண்டும். நாமொரு மனிதனை நல்லவனென்று சொன்னால், அவனுடைய நன்மைகளை நினைத்து நல்லவனென்று சொல்வோம். ஒரு மனிதனைப் பராக்கிரமசாலி யென்று சொன்னால், அவனுடைய வீரப் பிரதாபங்களைக் கருத்திலமைத்து பராக்கிரமசாலி யென்று புகழ்வோம். அது போலவே நாம், கடவுள் மனிதன் புத்தியினால் அறியக்கூடாத பெரியவர் (அல்லாகு அக்பர்) என்று துதிக்கும் பொழுது, கடவுளுடைய வல்லபத்தையும் மகத்துவத்தையும் நினைத்து கடவுள் பெரியவரென்று புகழவேண்டும். அல்ஹம்துலில்லா = புகழெல்லாம் அல்லாவுக்கென்று மொழியும்போது, அவனுடைய கிருபா கடாட்சத்தை நினைத்து அல்ஹம்து லில்லா வென்று துதி கூறவேண்டும்.

என் பாவத்தைப் பொருத்தருளென்று சொல்லும்பொழுது, நமது பாவத்தை நினைந்து நினைந்து கெஞ்சி, ஆண்டவனே! என் பாவத்தைப் பொறுத்தருளென்று அச்சத்துடனும் சரீர நடுக்கத்துடனும் மன்னிப்புக் கேட்கவேண்டும். இவ் விதமாக இருதயமும் நாவுஞ் சேர்ந்து ஓதுவதுதான் வழக்கம். பொருள் விளங்கிய குருமார்களிற் சிலர் கவனக் குறைவாய் ஓதுவதாக அவர்கள் ஓதுவதிலிருந்து விளங்குகின்றது. துஆ ஓதும்போது சிலர் ஒருமணி நேரத்தில் நூறு (100) மைல் ஓடுகின்ற மோட்டார்காரின் விசையாய், ஓதுவதைக் கேட்டிருக்கிறேன். அப்படி யோதுவதனால் அவர்களோதுகின்ற சொல்லின் பொருள், கருத்து முதலானவைகள் இருதயத்தில் பிரசன்ன மாவதற்கிடமில்லை.

கருணையங் கடலாகிய இமாம் கஸ்ஸாலி றஹ்மதுல்லா அவர்கள் கூறியிருப்பதாவது :—தொழுகையிலோதும் ஓதல்களின் பொருள் ஹாஸிருவதுமட்டும் போதாது. அவைகளின் கருத்து ஹாஸிருக வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். பொருளிலும் அதன் கருத்திலும் கவனக் குறைவா யிருப்பதற்கு அத்தாட்சியாவது :—துஆக்களோதும்போது, ஓதுகிறவர்கள் மூச்சுவிடுவதற்கு நிறுத்தியவுடனே, கேட்பவர்கள் பொருளை நோக்காமல் ஆமீன்! ஆமீன்!! என்று கூறிவிடுகிறார்கள். துவாவில் நான் பாவத்தில் மூழ்கியிருக்கிறேன், அல்லது இபுலீஸ் என்னை மருட்டி வருகிறானென்பது போன்ற வசனங்கள் வரும்போது மூச்சு விட முடியாமல் ஓதுகிறவர்கள் நிறுத்தினால், அதைக் கேட்பவர்களெல்லாம் ஆமீன்! ஆமீன்!! என்று சொல்லி விடுகிறார்கள். அப்படி ஆமீன் கூறுவதனால், தாங்கள் பாவத்தில் மூழ்கவேண்டுமென்றும், தங்களை இபுலீஸ் மருட்ட வேண்டு மென்றும் துவா கேட்டுக்கொண்டது போலாகிறது. சில குருமார்கள் தாங்கள் ஓதுவதின் பொருள்

இன்னதென்று அவர்களுக்கும் விளங்காமல் நிறுத்தும் இடந்தவறி நிறுத்திவிடுகிறார்கள். இச்சம்பவங்கள் நிகழ்வதற்குக் காரணம், பொருள் விளங்காததேயாம். அன்றியும் மூச்சை நிறுத்தியவுடன், ஆமீன்! ஆமீன்!! என்று சொல்லவேண்டும் என்பதை ஒரு பாடமாக ஒப்புக்கொண்டிருக்கிறார்களேயன்றி, இன்ன விடத்திலேதான், ஆமீன் கூறவேண்டுமென்று இடத்தைத் தெரிந்துகொள்ளாதவர்களா யிருப்பது விசனிக்கத் தக்கதேயாம்.

(3) கடவுளானவர், சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் பஞ்ச கிருத்தியங்களை நடத்தும் தொழிலையுடையவராகவும்; எங்கும் நிறைந்தவராகவும்; அண்டபிண்ட சராசரங்களில் நடக்கும் ஒவ்வோர் காரியங்களையும் தெரிந்து கொள்பவராகவும்; இன்னும் பற்பல அதியற்புதச் செய்கைகளை யுடையவராகவும் இருக்கிறார். நாமோ, அவருடைய சூக்குமக் கயிற்றினால் ஆட்டுவிக்கப் பெறுகிற பதுமைபோல் இருக்கிறோம். ஆகையால், அவரின்றி நம்முடைய செயலென, ஓர் அணுவையேனும் அசைக்க வல்லமையற்றவர்களாக இருக்கிறோம் என்று; அவருடைய பெருமையையும் நம்முடைய சிறுமையையும்; அதாவது, அவருடைய பேரறிவையும், பெருதொழிலையும், நம்முடைய சிற்றறிவையும், சிறு தொழிலையும் நினைந்து நினைந்து; தான் என்னும் அந்தக்கரண அகம்பாவத்தை (நபுசை) யொழித்து, நம்செயல் என்பது ஓர் எட்டுணையுமின்றி அனவரதமும் அவருடைய பாத கமலங்களைச் சிந்தித்து வந்தித்தல்.

(4) கடவுளுடைய மகிமை, தத்துவம் முதலானவைகளை மனதில் அமைத்து, அவரது தெய்வீகத் திருச் சன்னிதானத்தில் இருக்கிறோமென்ற அச்சமானது, நமது இரு

தயத்தைக் கவர்ச்சிசெய்து; சரீரத்தில் விதிர் விதிர்ப்புண்டாகும்படி செய்தல். அன்றியும் கடவுள் இல்லாத இடமும், அவரால் பார்க்காத ஒரு கருமமும் இல்லவே இல்லையென்ற நம்பிக்கை ஏற்படுதல்.

குர் ஆனில், "இன்னல்லாஹ கான அலைக்கும் றஹீபா" என்று கூறப் பெற்றிருக்கிறது. இதன் பொருளாவது:— கடவுளானவர் நம்மீது ஆராய்தல் உடையவராயிருக்கிறார் என்பதே யாம். இதனால் கடவுளை நாம் காணாதிருந்தாலும், அவர் நம்மைப் பார்த்துக்கொண்டே யிருக்கிறார் என்பது விளங்குகிறது. ஆகையால் நம்மை ஒருவரும் பார்க்கவில்லையென்று அநேகம் பேர்கள் பற்பல துர்க்கிருத்தியங்களைப் புரிகிறார்கள்.

ஒரு குருவுக்கு அனேக சீடர்கள் இருந்தனர். அவர்களில் ஒரு வாலிபனிடத்தில்மட்டும் அவர் மிக்க அன்பு பாலித்து வந்தனர். அதை யுணர்ந்த ஏனைய சீடர்கள் குருவை நோக்கி, நாதா! தங்கள் ஊழியர்களாகிய அடியேங்கள், நீண்டகாலமாகத் தொண்டுபுரிந்து வந்திருக்க, இப்போது சமீப காலத்தில் தங்களை வந்தடுத்த ஒரு சிறுவனிடத்தில் மாத்திரம் மிக்க அன்புகூர்ந் திருத்தல் யாது காரணம் பற்றியோ வென்பது எங்களுக்கு விளங்குமாறு திருவாய் மலர்ந்தருளல் வேண்டுமென்றனர். அதற்கு, குருவானவர் அவர்களை நோக்கி, "மைந்தர்காள்! உங்களுக்கு அதை நிரூபித்துக் காட்டுகிறேன்" என்று கூறி, எல்லா மாணவரிடத்தும் ஒவ்வொரு மாங்கனியைக் கொடுத்து, "இதை ஒருவரும் பார்க்காதவிடத்தில் கொண்டு போய்ப் புசித்துவிட்டு வாருங்கள்" என்றனர். அங்ஙனமே, எல்லா மாணவர்களும் தனித்தனியே சென்று, வாலிபன் தவிர மற்றவர்கள் தாங்கள் கொண்டுபோன பழத்தைப்

புசித்துவிட்டு வெறுங்கையோடு திரும்பி வந்தனர். வாலி பன் மாத்திரம் தான் கொண்டுபோன பழத்தைப் புசிக்கா மல் கொண்டுவந்தான்.

குரு, வாலிபனை நோக்கி, "மைந்த! யாம் கொடுத்த பழத்தை ஒவ்வொருவரும் புசித்துவிட்டு வந்திருக்க, நீ மாத்திரம் புசிக்காமல் திருப்பிக்கொணர்ந்த காரணமென்னை? என்னலும் அவ்விளவல், பெருமானே! நான் ஒருவரும் பார்க்காதவிடத்தைத் தேடித் தேடி யலைந்தேன்: அவ்வித மான தலத்தை நான் காணமுடியவில்லை. நான் எங்கு சென்றாலும் அனந்தலோசனனாகிய கடவுள் என்னைப் பார்த்தவண்ணமாகவே இருக்கிறார். அது காரணம் பற்றியே, நான் கொண்டுபோன பழத்தைப் புசிக்காமல் திரும்பினேன் என்று பணிவோடு சொன்னான். அதைக் கேட்ட ஏனைய சீடர்கள் தங்களுடைய அறியாமைக்காக வருந்தி, வாலிபனுடைய புத்திகோசரத்திற்கு மகிழ்ந்து, குருவை நோக்கி, நாதா! கடவுளானவர் எங்கும் பார்த்துக் கொண்டிருக்கிறார் என்பதை முன்னரே உணராத எங்களை மன்னித்தருளல் வேண்டுமெனப் பிரார்த்தித்துப் பணிந் தார்கள்.

சுலைகா நாயகி அவர்கள், தமது தலைவராகிய யூசுபு அலைகிஸ்ஸலாம் அவர்களைத் தம்முடன் இணங்கும்படி அழைத்த காலத்தில் முதலில் எழுந்து, தமக்குத் தெய்வ மாக வைத்துக்கொண்டிருந்த விக்கிரகத்தின் முகத்தை மூடினார். அப்போது யூசுபு அலைகிஸ்ஸலாம் அவர்கள், நீ ஒரு கல்லுக்கு வெட்கப்படும்போது, ஏழு வானங்களையும் பூமியையும் படைத்த கடவுள் பார்த்துக் கொண்டிருக்க, நான் அவருக்கு வெட்கப்பட மாட்டேனோ? என்றார்கள்.

அப்துல்லா கிபுனு தீனார் றலியல்லாகு அன்கு அவர்கள் சொல்லுகிறதாவது:—உமர் றலியல்லாகு அன்கு அவர்கள்

மக்கத்துக்குப் போகையில் வழியில் நானும் அவர்களோடு இருந்தேன். ஓரிடத்தில் இறங்கி யிருந்தோம். ஆடு மேய்க்கும் ஓர் அடிமையானவன், மலையிலிருந்து ஆடுகளைக் கீழே ஓட்டிக்கொண்டு வந்தான். உமர் றலியல்லாகு அன்கு அவர்கள், அவனைக் கூப்பிட்டு, "எனக்கு ஓர் ஆட்டைக் கிரயத்துக்குக் கொடு" என்று கேட்டார்கள். அதற்கு அவன், "ஆடுகள் எனக்குச் சொந்தமல்ல. நான் ஓர் எஜமானனுக்கு அடிமையா யிருக்கிறேன்" என்றான். அப்போது அவர்கள், "ஒரு ஆட்டை ஓநாய் கொண்டுபோய் விட்டது என்று நீ உன் எஜமானனுக்குச் சொல்: அது அவனுக்குத் தெரியாது" என்றார்கள். அதற்கு அவன், "என் எஜமானனுக்குத் தெரியாமற் போனாலும், கடைசியாகக் கடவுளு (அல்லாகுத்த ஆலாவு) க்குத் தெரியுமே!" என்றான். இதைக் கேட்ட உமர் றலியல்லாகு அன்கு அவர்கள் அழுதுவிட்டார்கள். பின்பு அந்த எஜமானனை வரவழைத்து, அவனிடம் அந்த அடிமையைக் கிரயத்துக்கு வாங்கி, அவனை உரிமையாக்கினார்கள். பின்பு அவனை நோக்கி, "நீ சொன்ன இந்த வார்த்தையானது இவ்வுலகத்தில் உன்னை உரிமை செய்தது: இதுபோல் அவ்வுலகத்திலும் உரிமையாக்கும் என்று சொன்னார்கள்" என்பதே.

இம்மகிதலத்தில் ஒரு அரசன் எதிரில் நிற்கும்பொழுது எவ்வளவு அச்சமுண்டாகிறது. யாவையும் உண்டாக்கிய வல்லமையுடைய இறைவன் சமுகத்தில் நிற்கிறோம் என்ற எண்ணம் இருதயத்தில் இருந்தால் அச்சம் உண்டாகாதிருக்கக் கூடுமா? கல்வி அதிகமாக அதிகமாக அச்சமும் அதிகமாகும். கடவுளைப்பற்றிய அச்சத்தைக் குறித்து, இமாம் கஸ்ஸாலி றகுமகுல்லா அவர்கள் சொல்லுவதாவது :— சகல பாக்கியங்களிலும் சிறப்பு வாய்ந்தது கடவுளின் தரிசனமும், அவருடன் ஐக்கியம் ஆதலுமாம். அதற்குதவி

யான சில சாதனங்கள் சிறந்ததாயிருப்பினும் அது கடவுள் தரிசனத்தைக் கொடுக்காது என்பதே.

இம்மையிலேயே கடவுளை விசுவாசித்து அவரைப் பற்றிய தியானாதிகள் புரிந்துவந்தாலன்றி, அவர்மீது விசுவாசமுண்டாவதற்கிடமில்லை. இம்மையில் கடவுளைத் தரிசிக்காதவன் மறுமையிலும் அவரைத் தரிசிக்கமாட்டான் என்பது வேதத்தின் முடிவு. ஆகையால் கடவுளை வணங்க வேண்டியதற்கு அச்சமானது அத்தியாவசியமா யிருக்கிறது.

(5) கடவுள் கிருபையின்மீது நமக்கு நம்பிக்கை ஏற்பட்டு, அவர் நமது பிழைகளைப் பொறுத்து இரட்சிக்கிறவரென்றும், கருணை மூர்த்தியென்றும், அடியார்களுக்கு வரையாது கொடுக்கும் வல்லளாகிய கருணாநிதியென்றும், தெரிந்து அவரால் கிடைக்கும் பெரும்பேற்றை ஆசித்தவனாயிருத்தல்.

(6) நமது குறைகளையும் சிற்றறிவையும் சிறு தொழிலையும், பாவக்கிருத்திய முதலானவைகளையும் சிந்தித்து, அகம்பாவமற்ற மனத்தாழ்மையோடு கடவுளை வணங்குதல்.

மேற்கூறிய ஆறு காரியங்களும் கடவுள் வணக்கத்திற்கு அவசியமாகின்றன. ஏனென்றால் கடவுள், பகிரங்கமான செய்கைகளை அதிகமாகப் பார்க்கிறவரல்லர். ஒருவன் இருதயம் எவ்வாறிருக்கிறதென்று ஆராய்ச்சி செய்கிறவரேயாம். நமது இருதயத்தில், மேற் கூறப்பெற்ற நற்குணங்கள் உண்டாகுமாறு அப்பியாசப்படுத்தி, அந்த அப்பியாசத்திற் குதவியாக உலக மருட்டுதல்களை விட்டு நீங்கி நியமமாக நடந்து ஆண்டவனுடைய திருவருட்குப் பாத்திரமாகி இணையில்லாத பேரின்பப் பெருவாழ்வாகிய

ஆனந்த சாகரத்தில் திளைப்பதுவே மனிதரரக அவதரித்த தின் பிரயோசனம். அவ்வாறின்றி உலக காரியத்திலேயே பொழுது போக்குகிறவர்கள் கோசர கிருமியின் கதியையே அடைவார்கள்.

கடவுள் வணக்கமே மோட்ச வீட்டின் திறவுகோல்; பாவக் கடலைக் கடக்கும் மரக்கலம்; அஞ்ஞான இருளைத் தவிர்க்கும் மெய்ஞ்ஞான சூரியோதயம்; ஆபத்காயம் என் பதை மறவாமல் நினைந்து, தினந்தோறும் நாம் படுக்கையை விட்டு எழுந்தவுடன் கடவுளைத் தொழுதல்வேண்டும். இது பற்றியே இஸ்லாமியர்கள் அதிகாலையிலேயே (பஜர்) தொழுது முடிக்கின்றனர். வைதிகமுடைய ஏனையவர் களும் அவ்வாறே புரிகின்றனர். காலை நேரத்தில் மனமும் நாடிகளும் தெளிவாகவும் பரிசுத்தமாகவும் இருக்கும். அதனுல் மறந்துபோன விஷயங்கள் காலைவேளையில் ஞாப கத்திற்கு வருவதை ஒவ்வொருவரும் தத்தம் அனுபவத்தில் அறியலாம். ஆனுல் இரவில் முன்னதாகவே அதாவது சுமார் 9 அல்லது 10-மணிக்குள் நித்திரை செய்ய ஆரம்பித் தால் அதிகாலையில் எழுந்துவிடலாம்.

தொழும்போது நமது மனத்தை இதர விஷயத்தில் செலுத்தாமல், ஏகாக்கிரச்சித்தமாகக் கடவுள் ஒருவரையே சிந்தித்து, இதற்குமுன் அறிந்தும் அறியாமலும் நாம் செய்த பாவங்களை மன்னிக்க வேண்டுமென்றும், இனி மேல் அப்படிப் பாவஞ் செய்யாமலிருக்கும் வண்ணம் தம்மைக் காத்து நல்லறிவைக் கொடுக்கவேண்டுமென்றும், அன்பும் அச்சமும் பொருந்தி தாழ்மையோடு அவரைப் பிரார்த்திக்கவேண்டுமே யன்றி, சோம்பலினுல் வணங்காம லிருந்துவிடக்கூடாது. சிலர் அவரை வணங்குவதற்குச் சரியானபடி கற்கவில்லையென்று அசட்டை செய்கிறுர்கள்.

சரியானபடி கற்றுக்கொள்ளும் வரையிலும் அவரவர்க்குத் தெரிந்தபடி,

"எப்பரி சாயினும் ஈசனைப் போற்றுமின் !
அப்பரி சீசன் அருள்புரி வானே"

என்ற திருமந்திரக் கருத்தின்படி எவ்விதமாகவேனும் வணங்கவேண்டுமேயன்றி காலாதீதமாய் ஆலசியமாக இருந்துவிடக்கூடாது. கல்லாதவர்களே அவ்வாறு வணங்க வேண்டுமென்ற நியமமிருக்க நன்கு கற்றவர்கள் கடவுளை வணங்காதிருப்பின், அவர்களைப்போல் கற்றறிமூடர்கள் உலகத்தில் வேறில்லவேயில்லை. இக் கற்றறிமூடர்களினும், கல்லாதவர்கள் பல்லாயிரமடங்கு சிறந்தவர்களாம்.

தாயுமான வள்ளல்

கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்
கற்றுமறி வில்லாத என்
கன்மத்தை என்சொல்கேன் மதியையென் சொல்கேன்

திருக்குறள்

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்று டொழாஅ ரெனின்

எனக் கூறிய கருத்தும் அதுவே.

ஒரு காரியத்தைப் புதிதாகச்செய்ய ஆரம்பிக்கும் போதும் கடவுளைப் பிரார்த்திப்பதால் பலவித நன்மைகளும் எடுத்த காரியத்தைச் சுலபமாகவும், நன்றுகவும், இனிது செய்து முடிக்கும் வன்மையும் உண்டாகும். "அவனருள் அற்றுல் அனைவரும் அற்றுர், அவனருள் உற்றுல் அனைவரும் உற்றுர்" என்னும் பழமொழியின்படி நமக்குப் பலருடைய உதவியும் கிடைக்கும்.

## கடவுளைத் தொழுதலும்—காலையில் எழுதலும்

கடவுளைத் தொழுவதற்கு ஒருகாலம் தக்கதென்பதும் ஒருகாலம் தகாததென்பதும் இல்லவேயில்லை. ஆயினும் மேற்கூறியபடி சூரியோதயத்தில் நித்திரை நீங்கி யெழுகையில் மனம் நிர்மலமாக தெளிவு பெற்றிருப்பது யாவருக்கும் சுபாவமாகையால், அருணோதய காலமே அதற்குச் சிறந்ததாக இருக்கின்றது. சிலர் வைதிகமும் வேதாந்தமும் 60, 70 வயதுக்குமேல் அனுட்டிக்க வேண்டியதேயன்றி இளமையில் அனுட்டிக்க வேண்டுவதில்லை யென்று அறியாமையால் எண்ணுகிறார்கள். அந்த முதுமைப் பருவம் வருமளவும் உயிரோடிருப்பது நிச்சயமில்லை என்பதை அறியார்கள் போலும்!

### திருக்குறள்

நெருந லுளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

### தாயுமான வள்ளல்

இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
றெண்ணவோ திடமில்லையே.

ஆகையால் இளமையாகிய இந்தப் பருவமே சிறந்த பருவமென் றெண்ணி அவரை வணங்கவேண்டும்.

காலையில் தொழுவதுபோலவே மாலையிலும், படுக்கும் போதும், ஏனைய சமயங்களினும் அவரைப் பிரார்த்தித்து வணங்கவேண்டும். இவ்வாறு செய்து வருவோமாயின், நாம் எல்லா நன்மைகளும் பெற்றுய்வது திண்ணம்! திண்ணம்!!

இமாம் ஹஸ்ஸாலி றஹ்மக்குல்லா அவர்கள் கூறியிருப்பதாவது: — நித்திரையானது, இபாதத்துகளில்

சேர்ந்ததாக இராமற்போனாலும், அதில் அதபுகளும் சுன்னத்துகளும் காணப்பட்டால்; அப்போது அது இபாதத்துகளின் தொழுகையிற் சேர்ந்ததாகும். நித்திரையில் சுன்னத்தாகிறது, கிபுலாவின் பக்கம் முகமாக்கிப் படுப்பதும்; கபுரில் மய்யித்தைப் படுக்கவைப்பதுபோல், முதலில் வலது பாரிசத்தின்மேல் ஒருக்கணித்துப் படுப்பதுமாயிருக்கும். நித்திரையை மவுத்துடைய தங்கையென்றும், விழிப்பை ஹஷ்ருக்கு ஒப்பாகவும் எண்ணவேண்டும். நித்திரையின்போது பிடித்துக்கொள்ளப்பட் டிருந்த அந்த ரூஹை மீண்டும் இவனுக்குக் கொடுக்காமல் இருக்கவுங் கூடும். ஆதலால், இவன் ஆகிரத்துடைய காரியத்தைச் செய்து முடித்தவன்போல் ஆகக்கடவன். அஃதெவ்வாறெனில்:—

ஒலுசெய்து படுப்பான். தவுபாச் செய்வான். விழித்தேனுகில், இனி பாவஞ் செய்யமாட்டேனென்று வைராக்கியம் பூணுவான். வசிய்யத்து எழுதி தலைமாட்டில் வைப்பான். பெருமிதமாய்த் தூங்கமாட்டான். நித்திரை அதிகரிக்காமல் இருக்கும்வண்ணம் மிருதுவான விரிப்பில் படுக்கமாட்டான். ஏனென்றால், நித்திரையில் ஆயுள் வீணாய்க் கழிகின்றது. இரவும் பகலும் சேர்த்து எட்டுமணி நேரத்திற்குமேல் அதிகமாய்த் தூங்கமாட்டான். அதாவது, இருபத்து நாலு (24) மணி நேரத்தில் மூன்றிலொரு பங்காகின்றது. இவ்விதம் நடந்துகொண்டால் அறுபது 60 வருஷம் சீவித்திருப்பானுகில் அதில் இருபது (20) வருடம் நித்திரையில் வீண்போயிருக்கும். இதற்குமேல் அதிகமாய் ஆயுளைப் பழுதாக்கல் கூடாது. இரவின் தொழுகைக்காக எழுந்திருக்கும் பொருட்டு அல்லது சுபுஹுக்கு இருட்டோடே எழுந்திருக்கும் பொருட்டு, ஒலுவுக்காகத் தன் கையினுல் தண்ணீரையும் மிஸ்வாக்கையும் சித்தப்படுத்திக் கொள்

## 1-வது மானத தீட்சை.

குளத்துக்குள்ளிருக்கும் ஆமை, கரைக்கு வெளியிலுள்ள முட்டைகளை நினைத்து நினைத்து குஞ்சுகளாக மாற்றுவது போல், குருபிரான் சேய்மையிலுள்ள சீடனைச் சிந்தித்து ஞானோதயம் பெறும்படி செய்தல்.



73ஆம் பக்கம் காண்க.

வான். இரவில் விழித்தெழும்ப, அல்லது சுபுஹில் இநட்டோடே விழித்தெழும்ப மனதில் நாட்டம் செய்து கொள்வான். இப்படி நாட்டம் செய்துகொண்டால், நித்திரை மேலீட்டினால் விழிக்கக்கூடாமற் போனாலும் நன்மையுண்டாகும்.

நித்திரையிலிருந்து விழித்து, பாதிராத்திரிக்குப்பின் தொழுவதானது தஹஜ்ஜத் தொழுகையாம். பிற்பாதியிரவில் இரண்டு றக்அத்துத் தொழுகிறதானது, மற்றுமுண்டான அநேகம் தொழுகைகளைக் காட்டிலும் மிகுந்த சிறப்புடையது. இதற்குக் காரணம் யாதெனில்? இந்த நேரத்தில் கல்பு சுததமாயும், துன்யாவுடைய பராக்குகள் ஒன்றுமில்லாமலும் இருக்கும். இந்த நேரத்தில் வானத்திலிருந்து றஹ்மத்துடைய வாசல்கள் திறக்கப்படுகின்றன. இராத் தொழுகைகளின் வரிசையில் வந்திருக்கிற ஹதீதுகள் அனந்தம் உண்டு. அவைகளை இஹ்யாவில் நாம் பயான் செய்திருக்கிறோம். ஆகையால் இரவின் நேரங்களை வீணில் கழிக்காமல் இருக்கவேண்டும் என்பதுதான்.

"வைகறைத் துயிலெழு" என்று ஔவை கூறிய நீதிச் சொல்லின்படியே நாம் தினந்தோறும் உதயகாலத்தில் படுக்கையைவிட்டு எழும்படி அப்பியாசம் பண்ணவேண்டும். ஏனெனில், நேரஞ்சென்று எழுந்தால் அன்றெல்லாம் நமது உடம்பு சோம்பலாக இருக்கும். அன்றியும், புத்தி கூர்மையும், படிக்க மன விருப்பமும் இரா. பசியும் நன்றாக உண்டாகா. நாம் சோம்பலை யுடையவர்களாயிருந்தால் எந்த வேலையையும் நன்றாகவும், விரைவாகவும் செய்து முடிக்குஞ் சக்தி உண்டாகாது. ஒரு நாளிற் செய்யும் வேலையை ஒன்பது நாளிற் செய்யவேண்டிவரும்.

4

புத்தி கூர்மையில்லாவிட்டால், எதையும் திறமாகச் செய்வதற்கு நமக்கு நல்ல யுத்தி தோன்றாது. இந்தச் சோம்பலும் மந்த புத்தியும் நம்மிடத்தில் இருக்குமளவும் எவ்வித முயற்சியையும் செய்யமுடியாது. முயல ஆரம்பஞ் செய்தாலும் நாளைக்குச் செய்வோமென்று எண்ணிக் காலத்தை வீணிலே கழித்துவிடுவதன்றியும், மனத்தில் தரிக்கவுமாட்டாது. இப்படி இளமைப்பருவமெல்லாங் கழிந்துவிட்டால் பின்பு முதிர்ந்த வயதில் நாம் மிகுந்த மூடர்களாகி யாதொருவேலையுஞ் செய்யச் சத்தியில்லாதவர்களா யிருப்போம். பசியில்லாமலிருந்தால் நம்முடைய நாவிற்கு உணவு ருசியாக இராது. உணவு ருசியா யிராவிட்டால், நாம் அதனை அளவிற் குறைத்து உண்ணும்படி நேரிடும். இப்படிச் சிலநாள் வரைக்கும் அசனத்தை குறைத்துக் கொண்டே வந்தால், நமக்கு பசிதீபனம் அடங்கிப்போவதல்லாமலும், தேகத்தில் இரத்தங் குறையும். அதனால் கை கால் முதலாகிய அவயவங்களுக்கு வலி குறைந்து விடும்.

## திருக்குறள்.

நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்.

இதன் கருத்து தாமதமும், மறதியும், சோம்பலும், தூக்கமும் கெடுவாரேறு மரக்கலம் என்பதாம்.

நாம் வைகறையில் எழுந்திருக்க வேண்டுமென்று விரும்பினால், இரவில் சரியாக ஒன்பது அல்லது பத்து மணிக்குப் படுத்துக்கொள்ள வேண்டும். அதனால் கண்களுக்குச் சௌக்கிய முண்டாகும். நாம் பத்துமணிக்குப் படுத்துக்கொண்டால், நித்திரை வர பத்தரை அல்லது பதினொருமணியாகும். அந்தப் பத்தரை அல்லது பதினொரு

மணி முதல் காலையில் நான்குமணி வரைக்கும் நித்திரை செய்தால், அந்தக் காலம் நம்முடைய சரீர சௌக்கியத்திற்குப் போதுமானதா யிருக்கும். வைத்திய சாஸ்திரிகளும் அந்தக்காலம் போதுமானதென்றும், அதற்குமேல் நித்திரைசெய்தல் வியாதியை விளைக்குமென்றும் சொல்லுகிறார்கள். அன்றியும், இரவு பத்துமணிக்கும், பன்னிரண்டு மணிக்கும் இடையில் நமது சரீரத்தில் வியர்வையுண்டாகி, நாம் சாப்பிட்ட ஆகாரத்தைச் சீரணிக்கச் செய்கிறது. அக்காலத்தில், நாடகம் பார்த்தல் முதலிய பிரபஞ்ச விவகாரத்தினால் விழித்திருப்பின், வியர்வை உண்டாவதில்லை. அதனால் சாப்பிட்ட ஆகாரம் சரிவர சீரணிக்காமல், பலவித வியாதிகள் ஏற்பட்டு, சுக்கு, சிற்றரத்தை தேடவும்; வைத்தியர்களுக்குப் பாதகாணிக்கை வைக்கவும் நேரிடுகிறது. காலையில் நான்குமணிக்கு எழுந்திருப்பது முதலில் வருத்தமாயிருக்கும் ஆயினும் அவ்வாறு எழுந்துகொள்ளப் பழகிவிட்டால், அது பின்பு நமக்குச் சகல நன்மைகளையும் உண்டாக்கும்.

நாம் முதலில் காலையில் எழுந்திருக்க வேண்டுமென்று உறுதி செய்துகொண்டால், படுக்கைக்குப் போகும்போது நம்முடைய தாய், தகப்பன், சகோதரன், சகோதரி முதலானவர்களுக்காவது, அல்லது கடவுள் கிருபையால் நமக்கு ஒரு வேலைக்காரனிருந்தால் அவனுக்காவது, காலையில் நான்குமணி சமீபித்தவுடனே நம்மை எழுப்பும்படி சொல்லிவைக்க வேண்டும். அப்படி எழுப்பும்போது, இரண்டு மூன்று நாளளவும் அவ்வேளையில் நமக்கு மனவருத்த முண்டாகும். அந்த வருத்தத்தினால் அவர்கள்மேல் நாம் சிற்றங்கொள்ளலாகாது. நாம் அப்படிச் செய்தால் அவர்கள் அப்பால் நம்மை எழுப்ப விரும்பார்கள். அல்லது (அலாரம் டயம்பீஸ்) எச்சரிக்கைக் கடிகா

ாத்தை தலைமாட்டின் சமீபத்தில் வைத்தாவது நம்மை நாமே எழுப்பிக்கொள்ளல் வேண்டும். எழுந்தவுடனே மறுபடியும் சற்று படுத்துக்கொள்ள மனவிருப்பம் உண்டாகும். அப்படிச் செய்யாமல் படுக்கையைவிட்டு எழுந்தவுடனே சீக்கிரத்தில் அப்புறம் போகவேண்டும். இப்படி இரண்டு மூன்று நாளைக்கு எழுந்தால், பின்பு அந்த வேளைக்கு, ஒருவருடைய ஒத்தாசையும் இல்லாமல். நாமே எழுந்துகொள்ளும் வழக்கம் உண்டாகும்.

இப்படிப் படுக்கையைவிட்டுக் காலையில் நான்கு மணிக்கு எழுந்தால் நாள்தோறும் பதினெட்டுமணி அவகாசம் நமக்கு இருக்கும். அப்படிச் செய்யாமல், இரவில் எட்டுமணிக்குப் படுத்துக்கொண்டு காலையில் எட்டுமணிக்கு எழுந்திருப்போருடைய வழக்கத்தை நாமும் அனுசரித்து வந்தால், கடவுள் இந்த உலகத்தில் வாசஞ்செய்யும்படி நமக்குக் கொடுத்திருக்கும் நாட்களிற் பாதிநாள் நித்திரையிற் கழிந்துபோகும். மற்றப் பாதிகாலத்திலும் நோய், குழந்தைப்பருவம், முதுமைப்பருவம் முதலானவைகளாற் கழியும் நாட்கள்போக, மிகவுங் கொஞ்சகாலந்தான் நமக்கு மீதியாகக் கிடைக்கும். அந்தக் கொஞ்சகாலமும் அதிசீக்கிரத்திற் கழிந்துபோகும். கடைசியிற் போனகாலத்தைக் குறித்து நாம் வியசனப்படலாகும். அந்த வியசனம் அதை மீட்டுக்கொடுக்க மாட்டாது. அநேக மனிதர்கள் தங்கள் அந்தியகாலத்தில் தமது நாட்களெல்லாம் வீணாகக் கழிந்தனவே என்று வியசனப் படுகிறார்கள். அதனாற் பயன் ஒன்றுமில்லை. உங்களுடைய சென்ற காலமாகிய இளமையை நினைத்து யோசித்துப் பாருங்கள். அந்தக்காலம் திரும்பவும் வருமா ?

மனிதற்கு வயது நூறல்ல தில்லை
ஐம்ப திரவி லகலுந் துயிலினால்

ஒட்டிய விளமையா லோரைந்து நீங்கும்
எழுபது போகநீக் கிருப்பன முப்பதே.

அவற்றள்,

இன்புறு நாளுஞ் சிலவே யாதாஅன்று
துன்புறு நாளுஞ் சிலவே யாதலால்
நன்றே செய்யவும் வேண்டு நன்றும்
இன்றே செய்யவும் வேண்டு மின்றும்
இன்னே செய்யவும் வேண்டு மின்னும்
நாளை நாளை யென்பீ ராகில்
எப்போ தாயினுங் கூற்றுவன் வருவான்.

ஆதலால் நாம் முன்னமே சாக்கிரதைப்பட்டு, தினந்தோறும் காலையில் எழுந்து காலத்தை வீணுகக் கழிக்காமல் நல்ல விஷயத்தில் உபயோகித்தால், நம்முடைய முடிவு காலத்தில் நாம் வியசனப்பட இடமிராது. அதிகாலையில் விழிப்பதைக் குறித்து மகாசித்தராகிய தேரையரும் அடியில் வருமாறு கூறியிருக்கின்றனர்.

புத்தி யதற்குப் பொருந்து தெளிவளிக்கும்
சுத்த நரம்பதினற் றூய்மையுறும் —பித்தொழியும்
தாலவழி வாதபித்தந் தத்தநிலை மன்னுமதி
காலைவிழிப் பின்குணத்தைக் காண்.

நித்திரையானது அவரவர் தேகக் கூறுபாட்டினுக்கே இயையுமெனினும், சராசரி ஏழுமணி நேரமே தூக்கத்தின் கண் செலவிடப்படல் வேண்டும். ஆகவே வைகறைத்துயில் எழவேண்டுவது பெற்றும். விடியற்காலையில் 5-மணி சுமாருக்கு எவரும் எழுதல் வேண்டும். எழுந்ததும் சிறிது நேரம் இஷ்டதெய்வ முழுமுதற் கடவுளாகிய ஏக நாயகனைப் போற்றித் துதித்த பின்புதான் காலைக்கடன்களைச் செய்ய முற்படவேண்டும். விடியற்காலையில் துயில் நீத்ததும் மனங் களங்கமற் றிருக்குமாதலின் மாணவர் தத்தம்

பாடங்களைப் படிப்பதில் அக்காலை தம் கவனத்தைச் செலுத்துவராயின் யாவும் மனதிற்படிய இன்புறுவர். அந்த ணுேத்தமர் இக்காலத்தை வேதாத்தியயனத்தில் செலவிடுவர். தபோதனர்கள் இராக்காலம் முழுவதையும் அவக்காலமாக்காமல் தவக்காலமாக ஆக்கி பேரின்புறுவர். அன்றியும், விடியற்காலமே தேகாப்பியாசத்திற்கும் சிறந்த காலம். ஆகவே யாவரும் தேகாப்பியாசம் செய்யின் நலமுறலாம். *தேகாப்பியாசம் செய்யாவிடின், சில மைல்கள் தூரம் நடப்பதால் எய்தக்கூடிய அளவிறந்த நன்மை வரையற் பாலதன்று. இது அவரவர் அனுபவத்தில் அறியத் தக்கதே.

"வைகறைத் துயிலெழு" என்பது பெரியோர் கட்டளையாவதன்றி, அஃதே கடவுளின் ஆணையும் ஆகும். வைகறை யென்பது நமது தமிழ் இலக்கணங்களில் பகுக்கப்பட்ட † பெரும்பொழுது, சிறுபொழுது எனும் இருவகைத்துள், பின்னையதாகிய சிறுபொழுது ஆறனுள், வைகறையாகிய 4-மணிக்குப் பின்னும் 6—மணிக்கு முன்னுமுள்ள விடியற்காலமே யாம்.

> காலை வெம்பகல் கதிரவன் குடதிசை கரக்கும்
> மாலை யாமம்வை சறையெலாம் ... ...

எனும் ஆன்றோர் வாக்கும் நோக்கத்தக்கது. துயிலெழு என்பது அக்காலத்திலேயே நித்திரை தெளிந்து எழுந்திரு என்று பொருள்.

---

* தேகப் பயிற்சியின் விவரம்—நமது யோக ரகசியத்தில் காண்க.

† பொழுது :—மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு என அறுவகையாகும். இவை—அத்தமய காலமுதல் ஒவ்வொன்றுக்கும் பப்பத்து நாழிகையாக முறையே கொள்வர். இவை—சிறுபொழுதாம். அன்றி கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் ஆறனும் பெரும்பொழுதாம்.

அக்காலம் நம்மனோர்க்கு பகற்போதெல்லாம் பற்பல முயற்சியில் ஈடுபட்டு அலைந்து திரிந்துவரும் சோர்வினை யொழிப்ப இரவு 10 - நாழிகைக்குமேல் நித்திரை போய் பொறிபுலன்களெல்லாம் சாந்தியடைந்து, களைப்பொழிந்து, மனந்தெளிந்து, சத்துவகுண விருத்தியுடன் நித்திரை தெளிந்து விழித்தெழுந்து கடவுளைத் தியானம் செய்தற்கு ஏற்ற காலம். அக்காலத்தையே விடியற்காலம், பிராத காலம், உஷத்காலம், வைகறை என்றும், அதுவே மேலான அறிவை விளக்கவல்லது , சத்துவ குணத்தை விருத்தி செய்வதும் என்றும் ஆன்றோர் பலருங் கூறுவர்.

மேலும், இரவில் துயின்றபோது நமது சீவன் இருதயத் தானத்தில் மூன்று தத்துவங்களுடன் அடங்கிக் கிடந்து, மீட்டும் விழித்தபோது முப்பத்தாறு தத்துவங்களுடன் லலாடம், அதாவது புருவமத்தியில் வந்து தொழிற் படுகின்றது. அறிவு சத்துவ மயமாக விளங்கினாலல்லது உண்மையை யறிதல் இயலாது. இயலாதபோது கடவுளைப் பற்றியாவது, உலகத்தைப் பற்றியாவது, நம்மைபபற்றி யாவது உள்ளபடியே தெரிந்துகொள்ள இடர்ப்படும். மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவரும் உலகு, உயிர், தலைவன் எனும் மூன்றின் தன்மையை உண்மை முகத்தால் அறிதல் அவசியமானது. அறிதற்கு நுண்ணிய அறிவும் வேண்டற் பாலது. அதுவுங் கல்வியால் விளங்கி உண்மையை யறிதற்குத் தக்க காலம் வைகறையே. இதுபற்றியே காலஞ் செய்வது கோலஞ் செய்யாது என்ற முதுமொழியும் எழுந்தது. என்றால், நமக்கு வேண்டும் நன்மைகளெல்லாம் காலத்தினாற் பெறலாம். அன்றி, கோலம், அதாவது நம்மை அழகுபெற அலங்கரித்துக் கொள்வதாற் பெற வியலாது என்பதேயாம்.

வானம்பாடி, காகம் முதலிய பட்சிகளும், வீட்டிலுள்ள சேவல், கோழி முதலானவைகளும், இரவில் முன்னேரத்திலேயே நித்திரைக்கு ஆரம்பித்து, காலையில் முன்னதாகவே எழுந்துவிடுகின்றன. அவற்றுள் சேவலானது ஒவ்வொரு சாமத்திற்கும் சப்தித்துக்கொண்டே வந்து, கடைசி சாமத்தில் நம்மையெல்லாம் எழுந்திருங்களென்று சொல்லும் பாவனைபோல் சப்திக்கின்றன. இதனாலேதான் சேவலுக்கு 'ஞானி' என்று ஒரு பெயரும் வந்திருக்கிறது. மூன்றாவது சாமத்தின் முடிவில், வானம்பாடி, காக்கை முதலிய பட்சிகளும், நரி முதலிய மிருகங்களும் சப்திக்கிறதை நாம் பிரத்தியட்சமாய்க் காண்கிறோம். சிற்றறிவுடைய மிருகம், பட்சி முதலானவைகள், ஒரு வரம்பிற்குட்பட்டு, இவ்விதம் நடந்து வரும்போது, ஆறறிவுடைய மனிதர்கள் காலவரைக் குட்படாமல் பொழுதுவிடிந்தும், நித்திரா தேவிக்கு அடிமை சாதனம் எழுதிக்கொடுத்துவிட்டு, தூக்கத்தையே ஊக்கமாகக் கைக்கொண்டு ஏக்கமுறுகிறவர்களுக்கு மோக்கம் என்பதுமுண்டா? இதுபற்றியே ஆங்கிலத்தில்,

Early to bed and early to rise
Makes a man healthy, wealthy and wise.
Lie with the lamb, and rise with the lark.

என்று நீதிமொழிகளும் போதிக்கின்றன.

விடியற்காலத்தில் படுக்கையைவிட்டு எழ மனமில்லாதோர் எய்தும் கேடுகள் பல. வேலைகளைச் சுறுசுறுப்பாய்ச் செய்தற்குரிய அருமையான காலம் வீணே கழிந்தொழிவதுந் தவிர, மல மூத்திராதிகள் பிரியவேண்டிய சமயமான அக்காலத்தில் படுத்துறங்குவதால், அவைகளுந் தடைப்பட்

டுப் பல கொடிய நோய்களையும் அடையவேண்டியது நேரிடு கின்றது.

தேரையர்.

திண்ண மிரண்டுள்ளே சிக்க வடக்காமல்
பெண்ணின்பால் ஒன்றைப் பெருக்காம-லுண்ணுங்கால்
நீர்கருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி உண்பவர்தம்
பேருரைக்கிற் போமே பிணி.

ஆகையால் மலமூத்திராதிகளை யடக்காமல் விடியற்காலத்தில் கண்விழித்துச் செய்யவேண்டிய கருமங்களைக்குறித்து,

ஆசாரக்கோவை.

"வைகறை யாமந் துயிலெழுந்து தான்செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து—வாய்வதில்
தந்தையுந் தாயுந் தொழுதெழுக வென்பதே
முந்தையோர் கண்ட முறை"

என ஓலமிட்டுக் கூறுகின்றது. மற்றும் நித்திரை சரிவரப் பிடிக்காது அலக்கணெய்துவோரும், அதிகாலையில் விழித் தெழும் வழக்கத்தை மேற்கொள்ளின் சுகமான அனந்தல் பெற றின்புறுவர். அன்றி, சாராயம், பூராணுதிலேகியம் இவற்றை உண்டு செயற்கை நித்திரையை வருவித்துக் கொள்ளுவோர் கட்டாயம் பெரிதுந் துன்புறுவர். எவ் விடத்தும், எக்காலத்தும் இயற்கையான கண்படலே நன்மை பயப்பதாம் என்பதை எவரும் செவ்விதின் உணரவேண்டும். "பொழுதொடு படுத்துறங்கிப் பொழுதொடு எழுவதால் ஆரோக்கியமும், ஐசுவரியமும், மனத்தெளிவும் உண்டா கும்" என்ற ஆங்கிலப் பழமொழியையும் உதாரணமாக மேலே கூறியிருக்கின்றனம். அன்றியும், இம்முறையாக அனந்தலாடலால் பகற் காலத்தில் தொழில் செய்திளைத்த

கருவிகள் யாவும் தத்தம் களையொழிந்து சுகமுறுவதுந் தவிர, புலன்வழிச்சென்று அலைபட்ட மனமும், சரீரமும் செபமையை அடைகின்றது. ஆனல், பகற்காலத்தில் நித்திரை செய்தல் கூடவே கூடாது. யூனனி வைத்திய சிரேஷ்டரும். உலகத்திலுள்ள ஒவ்வொரு வஸ்துவும் நான் இன்னதற்காவேன்! இன்னதற்காவேன்!! என்று வலியக் கூறும் படிக்கான தெய்வீகம் வாய்ந்தவருமாகிய லுக்மான் ஹக்கீம் அவர்கள் கூறியிருப்பதாவது :—பகற்காலத்தில் நித்திரை செய்பவர்களும், தைலம் தேய்த்து முழுகிய பின் உபவாசமிருப்பவர்களும் உயிர் தரித்திருப்பது மிக ஆச்சரியமே! என்பதாம். சோம்பேறிகளும், சில தனவந்தர்களும் பகல் நித்திரையை பெரிய சுகமென்று கருதி, அதை ஒரு வழக்கமாய்க் கைக்கொண்டுள்ளார்கள். இதனல் வருங்கெடுதிகள் அளவிடற் பாலனவன்றும்.

குர் ஆனில் இராக்காலத்தை உங்கள் சவுக்கியத்தின் பொருட்டு நாம் படைத்தோம். அதைத் தபோதனர்கள் பங்குபோட்டுக்கொண்டு, இராக்காலம் இன்னும் நீடித்திருக்கக்கூடாதாவென்று மனவருத்தமுற்று தவம்புரிகிறார்கள் என்று கூறப்பெற்றிருக்கின்றது. ஆனல் அந்த இராக்காலத்தை காமுகர்கள் மதன லீலைக்காகவும், கள்வர்கள் திருடுவதற்காகவும், கயவர்களும், சில தனவந்தர்களும் சீட்டு விளையாடல் (Playing Cards) சோழி, சதுரங்கம் முதலிய சூதாடல், நாடகம் பார்த்தல் ஆகிய வீண்காரியங்களுக்காகவும் செலவழித்து, இன்னும் இராக்காலம் நீடித்திருக்கக்கூடாதா? வென்று கவலைப்படுகிறார்கள். சூது, சதுரங்க முதலானவைகளை விரும்பி விளையாடும் வீணர்கள், நளன்-பஞ்சபாண்டவர்கள் முதலானவர்கள் சரிதங்களைக் கேட்டறியார்கள் போலும்.

---

## மூன்றாவது அத்தியாயம்.

---

### ஆசிரியரியல்.

#### விருத்தம்.

பக்குவர் கட்கு ஞானப் பரம்பொரு டருது மென்ற
பொய்க்குரு மார்கள் சூழ்ச்சிப் போதனு முறையும் ஆன்ம
மெய்க்குரு மூர்த்தி சீடன் விரிமன வழுக்கை நீக்கிக்
கைக்குளா மலக மென்னக் காட்டலு முறைசெய் வாமால்.

ஆசிரியர் மதாச்சாரியர், காரியக்குரு, காரணக்குரு என மூவகை யாவர்.

#### மதாச்சாரியர்.

மதாச்சாரியர் தமக்கு வரும்படிக்குண்டான அநுட்டானங்களைச் சீடர்கள் அநுசரிக்கும்படிக் கட்டளையிட்டு, வீணான பற்பல கருமங்களை அவசியம் செய்துதான் தீர வேண்டுமென்று போதிப்பார்கள். அப்படி நடந்து கொள்வதால், மரணமானபின் இந்திரலோகம், பிரமலோகம் முதலியவைகள் கிடைக்குமென்றும், தேவ மகளிர்களாகிய அரம்பையர்களுடன் சுகித்து, பலகோடி வருடங்களையும் ஒரு நாளாகக் கழிக்கும் தேவ வருடங்களாக சதாகாலமும் சுவர்க்காதி போகத்துடன் வாழலாமென்றும் ஆசை வார்த்தை சொல்லி, தனக்கு வேண்டிய பொருளைப் பகற் கொள்ளைக்காரர்கள் போல் அபகரித்து, தான் கெட்டுப்போவதுமன்றி, தன்னைப் பின்பற்றியவர்களையும் கெடுத்து, அவர்களாற் புகழப்பட்டு வாழ்வார்கள். அத்தகைய ஆசிரியர்கள் வேடதாரிகளே யன்றி உண்மையான சற்குருவாவார்களா?

சுவர்க்க லோகத்தில் தெய்வரம்பையர் (கூறுல்ஹீன்) கள் முதலான் போக-போக்கியங்கள் இருப்பதாக ஆண் பால்களுக்கு ஆசை வார்த்தை கூறும் மதாச்சாரியர்கள் அங்ஙனமே பெண்பால்களுக்கு யார் இருப்பதாக ஆசை வார்த்தை கூறுவார்களோ! தெரியவில்லை.

## குசேலோபாக்கியானம்.

ஓங்குபெரு ஞானியர்போற் பேசுவா ரவருண்மை
வேடம் போலப்
பாங்குபெற வுடற்புனைவார் சற்கருமஞ் செய்வார்தம்
பக்க மேகி
நீங்குகவென் றெழிப்பாரிந் நிலைமேலாம் பிரமத்தி
நிலையே யென்பார்
ஈங்கிவர்கள் தாங்கெடுவ தன்றிமற்றோ ரையுங்கெடுக்கு
மெண்ணம் பூண்டோர்.

## காரியக் குரு.

காரியக் குருவானவர் ஆரம்பத்திற் சகல பற்றும் அற்றவர் போற் பேசி, நட்பு முற்றியபின், தம்பி! நீ நல்ல பிள்ளையா யிருக்கின்றாய்! இந்தத் தொழிலை உனக்குத் தான் காட்டிவைக்க வேண்டுமென்று பரிந்து சொல்லி, முக்கோணம், நாற்கோணம், அறுகோணம் இனவகைளைக் கீறி, அதில் நசி, மசி, சிவயவசி இதுபோன்ற அட்சரங்களை அடைத்து, அதை அவன் கையில் கொடுத்து, இதைப் பத்திரமாய் வைத்துக்கொள்! பிறருக்குக் காட்டாதே! இதனால் சர்வ தொழில்களும் சித்தியாகும். ஆனால் தட்சணை கொடுக்கா விட்டால் சித்திக்காது எனக்கூறிப் பணம் பறிப்பார்கள். மனிதரிடத்திற் பேசும்போது இவர், அவர் என்று சொல்வதற்குப் பதிலாய் இது, அது என்று அஃறிணையாகப்

பேசிக்கொள்வார்கள். இதுமட்டு மல்ல: இன்னும் அள விறந்த பலவித சாலங்களெல்லாம் செய்து பொருள் கவா ருயலுவார்கள்.

குசேலோபாக்கியானம்.

(1) பொன்முதல பொருளிடத்து மிச்சையற்ருர் போற்றுறவு
பூண்டு பின்னர்
வன்மைசெறி மனத்தபக்கு வர்க்குபதே சமுாவிற்றி
வருவ தெல்லாம்
நன்மைதரு முன்னேரெண் காருெழுகப் பள்ளேயென
நயந்தோ ராயன்
புன்மையறப் பற்றியஃ துடனழிந்தா னென்றகதை
போலு மாதோ.

(2) மிக்கவறி வுடையாரைப் போன்றுமுடற் பற்றனைத்தும்
விடுத்தார் போன்றும்
தக்கவழக் கிடத்தினுயர் திணைவினையஃ றிணைவினையாச்
சமையச் சொற்றும்
தொக்கபடர்க் கைப்பெயர்முன் னிலைப்பெயராக் கிடவுரைத்
சூழ்வ தெல்லாம் [துஞ்
பக்குவமின் மடவோரை மயக்கியவர் கைப்பொருளைப்
பறித்தற் கன்றே?

வேலை செய்து கூலி வாங்கிக்கொள்ளும் கூலி வேலைக் காரர்களைப்போலவும், ஒரு பொருளை வாங்கிக்கொண்டு மற் ருெரு பொருளைப் பண்டமாற்ருக விற்கும் வணிகர்களைப் போலவும், பிறர்க்குக் கிரியைகளைச் செய்து காட்டியும், உப தேசங்களைக் கூறியும், அவர் கையிலுள்ள பொருளை அப கரிக்கும் எண்ணமுள்ள குருவென்னும் பெயர் தாங்கிய சால வேடிக்கைக்காரர்களை, சற்குருவென்று மாணக்கர்கள் எண்ணக்கூடாது. அத்தகைய முழுமாயப் பைத்தியம்

பிடித்து வெறி கொண்டு முதிர்ந்த ஆசிரிய ரல்லாதவர் ஒரு போது கூறியதை ஒருபோது கூறுமல் (பேய் பிடித்தவனைப் போல்) வாயில் வந்தபடி பிதற்றி அபக்குவர்களுக்குக் கூறும் உபதேசமானது, எத்தன்மைத்தெனில், காடியானது தனது பல குட்டிகளோடும் ஆற்று வெள்ளத்தில் தவறி விழுந்து போகும்போது, அவ்வாற்றங் கரையின்கண் நின்ற ஓர் இடையன், அவைகளை ஆடு என்று நினைந்து, அவ்வெள்ளத்திற் குதித்துப் பிடித்திழுக்க, அக்காடிகள் இவனைத் தெப்பமென்று பற்றிப் பிடித்திழுக்க, காடிகளும் இடையனும் வெள்ளத்தில் அமிழ்ந்து இறந்ததாகச் சொல்லப் பெறும் கதையை நிகர்க்கும்.

இடையன் காடியை ஆடென்றும், காடி இடையனை நதி கடக்கும் புணையென்றும் எண்ணியதுபோல்; அபக்குவனைப் பக்குவனென்றும், அநுசாரியனை ஆசிரியனென்றும் இருவரும் மாறுபாடாக எண்ணிப் பிரயோசனம் ஒன்றும் அடையார்கள்.

ஆடானது, பிரயோசனமான கரும்பைத் தின்னுமல், பிரயோசனமற்ற அதன் இலையை மட்டும் தின்று, சுவையைத் தான் அறிந்தது போல், தனது குட்டிகளுக்கும் காட்டும். யானையானது, அவ்விலையைத் தின்னுமல், மதுரம் ததும்பிய கரும்பைத் தின்று, அந்தச் சுவையைத் தானும் அறிந்து, தனது குட்டிக்கும் காட்டும். அதுபோல் கிரியா குருவானவர், மந்திர-தந்திர கலைகளை ஆராய்ந்து, அவற்றுட்கூறும் சரிதாதிகளை அநுட்டித்து, அதனுல் வரும் விடயானந்தத்தைத் தானும் அநுபவித்து, தன்னையடைந்த சீடனுக்கும் அவ்வுபதேசத்தையே உபதேசிப்பார். ஞானகுருவானவர், மேற்கூறிய மந்திர தந்திரகலைகளை விலக்கி, உபதேச கலையை ஆராய்ந்துணர்ந்து, அதனுட் கூறிய ஞானனந்தத்தைத்

தானும் அநுபவித்து, தன்னை யடைந்த சற்சீடர்களாகிய டக்குவர்களுக்கும் அவ்வநுபவத்தை யுணருமாறு செய்வார்.

சாதகன் உபதேசம்.

ஒருவன் வியாபாரஞ் செய்து பெருத்த இலாபமடைய எண்ணங்கொண்டு, ஒரு தனவந்தரிடம் சென்று சில பொருளைப் பெற்று, அதைக்கொண்டு வியாபாரம் செய்து வருகையில், ஒரு சிநேகிதன் வந்து, நண்பரே! நானொரு வியாபாரஞ் செய்ய உத்தேசித்திருக்கிறேன்; அதற்கு நீர் தயைசெய்து சில பொருள் கொடுமென்று கெஞ்சிக் கேட்டுக்கொள்ள, அவன் கெஞ்சினதற்காக மனமிரங்கி தன்னிடத்திலுள்ள சில பொருளை அவனுக்குக் கொடுத்தான். அந்த சொற்ப பொருளை வாங்கிக்கொண்டுபோய் வியாபாரஞ் செய்ததில், அதிக இலாபங் கிடைக்காததினாலும், பல செலவுகள் ஏற்பட்டதினாலும், பொருள் வாங்கிப்போனவன் வியாபாரஞ் செய்வதை விட்டுவிட்டான். அந்தப் பணங் கொடுத்தவனுக்கும் வியாபாரங் கெட்டு நஷ்டமடைந்தான். இதனால் பொருள் கொடுத்தவனுக்கும், வாங்கினவனுக்கும் சுகமில்லாமற்போன கதையைப்போல், ஆரம்ப அப்பியாசியாகிய சாதகன் மற்றொருவனுக் குபதேசஞ் செய்வதினால், உபதேசம் பெற்றவனும் ஒரு பிரயோசனமும் அடையாமல், உபதேசஞ் செய்தவனும் தனக்குக் கைகூடிவந்த தவத்தை இழந்து, வாலறுந்த நரியைப்போலாவான். இம்மாதிரி சில சீடர்கள் செய்து தமது தவப் பிரயோசனத்தை யிழந்துவிட்டதை நான் நேரிற் கண்டுணர்ந்துள்ளேன்.

சாத்தியன் உபதேசம்.

ஒரு எளியவன் பெருத்த தனவந்தரிடஞ் சென்று, திரண்ட பொருளைப்பெற்று, அதைக்கொண்டு வியாபாரஞ்

செய்து, அதிக இலாபத்தை யடைந்தா னென்பதைப் போல், முக்தி விருப்பமுள்ளவன் ஞானனந்த கைவல்ய மடைந்த பேராசிரியரிடஞ் சென்று ஆன்மலாப மடைய முயலவேண்டும்.

ஆகையால் ஞானனந்த முதிர்ச்சியடைந்த சாத்தியன் உபதேசங் கூறவேண்டுமே யன்றி, சொற்ப அருட் சம்பாதனையையுடைய அப்பியாசியாகிய சாதகன் உபதேசங் கூறுவது மிகையாகும். அன்றியும், சாதகனிடத்தில் உபதேசங் கேட்பது எத்தன்மைத்தெனின், தான் முன் செல்லாத ஓர் ஊருக்குச் செல்லுங்கால், முன் சென்றறியாத ஒருவனை வழி கேட்டலைந்தது போலாகும். அநுபவ மில்லாதவர்களிடத்தில் உபதேசம் கேட்பது, குமரியைக் குமரி கூடி அநுபவித்த இன்பத்தை யொக்குமென்று சிவஞானவள்ளல் கூறியிருக்கின்றனர். இதைப்பற்றி ஒரு சிறிய கதையுண்டு. அஃதாவது :—

திருவாரூரில் அழகில் மன்மதனுக்குமேல் முருகக்கடவுளென்று சொல்லும் விதமாகவும், ஆடையாபரண அலங்கிருதனாகவும், எழுத்துவாசனை இன்னதென்றேயறியாத நிரட்சரா குச்சியாகவும் ஒரு பிராமண வாலிபன் இருந்தான். அவன் பெயர் அழகு சுந்தரம்.

ஒருநாள் அந்நகரத்து இரண்டாவது கிளாஸ் சப்மாஜிஸ்ட்ரேட் நரசிம்ம அய்யங்கார் என்பவர், கச்சேரியிலிருந்து வீட்டுக்குத் திரும்பும்போது, கமலாலயக் குளக்கரையின் வடபால் மந்தமாருதத்திற்காக உலாவிக் கொண்டிருந்த அழகு சுந்தரத்தை கண்டதும், உடனே வண்டியை நிறுத்தும்படி செய்து பின்வருமாறு யோசிக்கலாயினர்.

இத்தகைய வனப்பிற் சிறந்த புருடனும் இந்நிலவுலகில் இருக்கின்றனே? இவ்வளவு இலட்சணங்களை ஒருவ

## 2-ஆவது பரிச தீட்சை.

பட்சிகள் முட்டைகளை வயிற்ருேடு அணைத்து குஞ்சுகளாக மாற்றுவதுபோல், குருபிரான் சீடரைக் கட்டித் தழுவி ஞானேதயமாகும்படிச் செய்தல்.

(73-ஆம் பக்கம் காண்க).



பரிசதீட்சையிலொன்ருகிய திருவடித் தீட்சை.

81-ஆம் பக்கம் காண்க.

னுக்கு அமைக்க அந்தப் பிரமதேவன், எவ்வளவு சிற்ப சாத்திரங்களைக் கற்றுக் கைதேர்ந்திருக்க வேண்டும்? அவனுடைய புத்தியே புத்தி! இவ்வழகு ஒரு மடவரலுக்கு அமைந்திருந்தால், இவ்வுலகத்து ஆடவர்கள் என்ன பாடு படுவார்கள். ஆயினும் இவ்விளவலைக்கண்ட ஒவ்வொரு மகளிரும் தத்தம் நிலைகுலைவார் என்பதற்கு ஐயமேயின்று. இந்தச் சிங்கார புருடனையன்றோ, நமது புத்திரி சானகிக்கு நாயகனாக வரிக்கவேண்டும். அவ்வாறு முற்றுப்பெறின், நமது சானகியின் பாக்கியமே பெரும்பாக்கியம்! எனப் பலவாறு தனக்குள்ளே மகிழ்ந்து, தனது சேவகன் மூலமாய் அவர் இன்னார்! இன்னவிடத்தில் இருப்பவர்! எனத் தெரிந்து கொண்டார்.

சிலநாட்கள் சென்றபின், சில முதியோர்கள் மூலமாக அழகு சுந்தரத்திற்குத் தனது புத்திரியைப் பாணிக்கிரகணம் செய்து கொடுப்பதாகவும், சகல செலவும் தானே செய்து கொள்வதாகவும், வரதட்சணை ஐயாயிரம் (5000) ரூபாய் எனவும் தீர்மானித்து, ஒரு சுபதினத்தில் விவாகச் சடங்கை நிறைவேற்றினர். மணமகன் மணமகளுடன் வெகுகாலம் மாதுலன் வீட்டிலேயே வசித்து வந்தனன். ஆனால், அவ்வளவுகாலம் வரையில் ஒரு புத்தகத்தைப் படிக்கவாவது, எதாவதொன்றை யெழுதவாவது ஒருவருங் காணாததால், இவன் கல்விமானா? அல்லது முட்டாளா? என்கிற சந்தேகம் பிறந்துவிட்டது. அதைத் தனது புத்திரி சானகியின் மூலமாய் நிவர்த்திபண்ணிக்கொள்ளப் பலவாய் முயன்றும் (அழகுசுந்தரம் நிரட்சரகுச்சியெனினும் சாமர்த்தியவான் ஆதலால்) உண்மை விளங்காமற் போய்விட்டது. அதன்மேல், சில கல்விமான்களை அனுப்பி, தனது மருமகனுடைய கல்வித்திறமை இத்தன்மையதென அறிந்து வாருங்கள் எனப்பணித்தனர். அவ்வாறே, கல்விமான்கள்

சென்று அழகுசுந்தரத்தைக் கண்டு, வெகுநேரம் வரையில் உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டு, அதன்பின் சில சந்தேகங்களைத் தங்களிடம் நிவர்த்திபண்ண வந்தோம் என்றனர்.

அழகுசுந்தரம் அவர்களை நோக்கி, அப்படியா! நிரம்பச் சந்தோஷம் ஆனால் நீங்கள் தெரிந்தவர்களா? தெரியாதவர்களா? என்று கேட்க, அதற்குக் கல்விமான்கள் (நாம் அவரிடம் கேட்டுக்கொள்வதாகச் சொல்லியதால்) நாங்கள் தெரியாதவர்கள்தான் என்று சொன்னார்கள். அதற்கு அழகுசுந்தரம் ஒரு சிறிய கதை சொல்லுகிறேன் கேளுங்கள் என்று சொல்லுகிறான்.

ஒரு மந்திரவாதி ஆற்றுவெள்ளத்தில் மிதந்து குற்றுயிரோடு போகும்போது, நமக்குத் தெரிந்த மந்திரங்களெல்லாம் நம்மோடு அநியாயமாய்ப் போகின்றனவே! இவற்றை யாருக்காவது சொல்லிவைத்தாலும் பிரயோசனமாகுமே! என்றெண்ணி, அவ்வாற்றங்கரையில் ஆடு மேய்த்துக்கொண்டிருந்த ஓர் இடையனைக்கண்டு, என்னைக் காப்பாற்றினால் உனக்கொரு பெரிய உபகாரம் செய்கிறேன்! என்று சத்தமிட்டான். அதை அவ்விடையன் கேட்டுத் தனது காத்திருந்த ஆடுமேய்க்கும் நீண்ட மூங்கிற்கோலை அவனுக்கு நீட்டினான். அதை மந்திரவாதி பிடித்துக்கொண்டு கேட்கிறான்.

ஓ! கோனாரே! நீர் படித்திருக்கிறீரா? என்றான். அதற்கு இடையன், படிப்பு என்றால் பலம் என்ன விலை? அதை எங்கே வாங்குகிறது? என்றான். அதைக் கேட்ட மந்திரவாதி, இவனோடு மாரடித்துக் கற்றுக்கொடுக்க முடியாமல், நமது வாக்குப் பொய்யாய்ப் போவதினும், சத்தியத்தைக் காப்பாற்றிக்கொண்டு இவ்வாற்றில் இறந்து

போவதே மேலானதென்று கோலைக் கைவிட்டு வெள்ளத் தோடுபோய் இறந்தான் என ஆன்றோர்கள் கூறுவது கர்னபரம்பரை. ஆதலின் தெரியாதவர்களாகிய உங்களுக்குச் சந்தேகம் நிவர்த்திபண்ண முடியாதென்று சொல்லி எழுந்து வீட்டுக்குள் போய்விட்டான்.

மறுநாள் அந்தக் கல்விமான்கள் ஒன்று சேர்ந்து, இன்றைக்கு நாம் தெரிந்தவர்கள் என்று சொல்வோம் எனத் தீர்மானித்துப்போய் அழகுசுந்தரத்தைக் கண்டு, நாங்கள் தெரிந்தவர்கள்தான் என்றார்கள். அதற்கு அழகுசுந்தரம், தெரிந்தவர்களுக்கு ஏன் சந்தேகம் வரும்? என்று எழுந்து வீட்டுக்குள் போய்விட்டான்.

மறுநாள் சிலர் தெரிந்தவர்களென்றும், சிலர் தெரியாதவர்களென்றும் இரு பகுதியாக ஏற்படுத்திக்கொண்டு சென்று கேட்டார்கள். அதற்கு, தெரியாதவர்களுக்குத் தெரிந்தவர்கள் சொல்லுங்கள் என்று சொல்லி, அழகு சுந்தரம் எழுந்து வீட்டுக்குள் போய்விட்டான்.

அதனால் கல்விமான்கள், அவனுடைய உண்மையைக் கண்டுபிடிக்க முடியாமற் போய்விட்டது. அழகுசுந்தரம் படிக்காதவனா யிருந்ததனாலல்லவா சாமர்த்தியமாக ஏதோ ஒன்றைச் சொல்லிவிட்டுப் போய்விட்டான். படித்தவனாக இருந்தால் அந்தக் கல்விமான்களிடம் கலந்துபேசி யிருப்பானல்லவா? அதுபோல் ஞானமில்லாத வேடதாரிகளின் ஆடம்பரத்தைக் கண்டு மயங்கி உபதேசம் கேட்டால், அவர்களுக்கு ஒன்றுந் தெரியாததால், ஏதாவது சமயத்திற் கேற்றபடி வாய்க்கு வந்ததை உளறிவிட்டுப் பணம் பறித்துக்கொண்டு போவார்களேயன்றி, பலனுண்டாகத் தக்க விஷயங்கள் அவரிடத்தில் ஒன்றுமிராது.

மெய்ஞ்ஞான அனுபவஞ் சிறிது மில்லாதவர்கள், ஆசிரிய வேடம்பூண்டு, மாணவர்கட்கு உபதேசிக்கத் தொடங்கி அதனால் யாதொரு பிரயோசனமு மில்லாமற் போவது எதுபோலெனில், நிதம்பமில்லாத யுவதிப்பெண் தன் சரீரத்தை அழகிய ஆடையாபரணதிகளால் அலங் கரித்து, நாயகன் புணரவருங்கால் வருந்துதல்போலாம்.

மகாராசா துறவு.

வேதவா கமசாத் திரபுரா ணங்கள்
விளங்கவே கற்றுணர்ந் தவற்றைக்
தீதற வெவர்க்குந் தெளிவுற வோதிச்
செப்பிய வந்நெறி யதனிற்
சாதக மிலாத குருவினை யொருவன்
தானடைந் தானந்தம் வினவல்
ஏதமாங் கழுதை தனைக்குங்கு மத்தி
னியல்புகேட் டிடுதல்போன் மென்றே.

சாந்தகுண மில்லாத ஆசானும், அறிவற்ற சீடனுஞ் சேர்ந்து வேதங்களினது முடிவை ஆராயத் தொடங்குவ தானது குருடனுக்குக் குருடன் வழிகாட்டிப் போய் இரண்டுபேரும் ஒரு படுகுழியில் வீழ்ந்ததுபோலாகும்.

சிவஞானவள்ளல்.

நிதம்பமில்லாப் பெண்ணும் நிகழலியுங் கூடி
இதம்பெற்ற வின்பசுக மேய்க்கும்—சிதம்பெற்ற
நற்குண்மி லாசானும் ஞானமில்லாச் சீடனுமாய்த்
தொக்கிவரு மின்ப சுகம்.

பரிசுத்தமான படிகக் கண்ணாடியானது உச்சிக்கால சூரியனைச் சந்தித்தால், கண்ணாடியில் பிரதிபலிக்கும் ஒளி யானது கண்ணாடிக்குள் ஒடுங்கிவிடும். அதுபோல் கடவுளை ஐயந்திரிபறத் தரிசித்த மெய்யடியார்கள் தமக்குள் கண்ட

காணாத காட்சியை யெல்லாம் தமக்குள் அடக்கிக் கொள்வதேயன்றி பிறருக்குப் பிரசங்கிப்பதில்லை.

ஒரே கருப்பங்கழியில் அடிக்கரும்பிலுள்ள மதுரமான சுவை நுனிக்கரும்பி லிருக்காது. அதுபோல் காரணக் குருமூர்த்தியால் உபதேசிக்கப்படும் சிவயோக நெறியைக் காரியக் குருக்களால் காட்டமுடியாது. மேகத்தால் உலகத்திற்கு அளவிறந்த நன்மைகள் உண்டாகியும் உலகத்தால் மேகத்திற்குப் பிரதிப் பிரயோசன மில்லாததுபோலும், பொன் வைத்திருப்பவனுக்கு அதனால் அனேக பிரயோசனங்களுண்டெனினும் அதை வைத்திருக்கும் மனிதனால் அந்த பொன்னுக்கு அணுவளவும் பிரயோசனமில்லாதது போலும் குருவை வழிபடுபவனுக்கு அவர் கருணையால் கிடைத்தற்கரிதாகிய பரம இலாபத்தை யடைகிறான். வழிபடுபவனால் குருவுக்குப் பிரதி பிரயோசனம், சீடனுடைய நன்மார்க்கத்தைக் கண்டு ஆனந்திப்பதைத் தவிர வேறு கிடையாது.

சூரியோதயமில்லாமல் ஏனைய சுடர்களில் பூமியில் இருள் நீங்காது. அதுபோல், சகலமு முணர்ந்த மெய்ஞ் ஞானியாலன்றி ஏனைய குருமார்களால் ஒருவனுக்கு அஞ்ஞானம் நீங்காது.

மோரிலே நீரைவிட்டால் முறிந்திடுங் கொள்கைபோலக்
காரிய குருவைவிட்டுக் காரண குருவைக்கண்டு
சீரிய சாலுநீர்போற் சேர்ந்திரு வருமொன்றாகி
ஆரிய னைகநாத ரடிபணிந் தேத்துநெஞ்சே.

ஒரு குருவுக்கு நான்கு சீடர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் குருவுக்குச் சமையல் பண்ணுவான், ஒருவன் வேட்டிதோய்த்துக் காயப்போட்டுக் கட்டிக்கொள்ளக் கொண்டுவந்து கொடுப்பான், ஒருவன் பூசைக்குப் புட்

பம் கொண்டுவருதல், சந்தனம் அரைத்தல் முதலிய வேலைகளைச் செய்வான், ஒருவன் கை கால் பிடிப்பான்.

இப்படி அவர்கள் பணிவிடை செய்துகொண்டு வருகையில், ஒருநாள் குருவின் வஸ்திரம் கொஞ்சம் கிழிந்து போயிற்று. அவர் சீடர்களை அழைத்து, இதற்கு என்ன செய்யலாம்? என்று கேட்டார். சீடர்கள், ஒரு ஊசி கொடுத்தால் நாங்கள் தைத்துப்போடுகிறோம் என்றார்கள். குரு, ஊசி எங்கே கிடைக்கும்? என்றார். சீடர்கள், உத்தரவு கொடுத்தால் நாங்கள் சந்தைக்குப்போய் வாங்கிவருகிறோம் என்றார்கள். குரு, தாம் வெகுநாளாய்ச் சேர்த்து வைத்திருந்த ஒரு ரூபாயை எடுத்துக் கொடுத்து, ஊசி வாங்கிக்கொண்டு வாருங்கள் என்றார்.

அந்த ரூபாயை வாங்கிக்கொண்டு நால்வரும் சந்தைக்குப் போய், ஊசிக்காகக் கடைகடையாய்ச் சுற்றுகையில் ஒரு மோசக்காரன் அவர்களைத் தன் வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய், ஒரு ஊசியைக்கொடுத்து அவர்கள் கொண்டுவந்த ரூபாயை வாங்கிக்கொண்டு அனுப்பி விட்டான்.

நால்வரும் ஊசியைப் பெற்றுக்கொண்டு ஒரு இடத்தில் உட்கார்ந்து யோசனை செய்தார்கள். நமது குரு ஒரு ஊசி வாங்கிக்கொண்டு வரும்படி நம் நால்வரையும் அனுப்பினார். நம்மில் ஒருவன் மாத்திரம் இதைக் கொண்டுபோய் கொடுத்தால் அவர் கோபிப்பார் என்று நிச்சயித்து, அங்கே கிடந்த ஒரு பனைமரத்தில் ஊசியைச் சொருகி, நாலுபேருமாய் மரத்தைத் தோளில் தூக்கிக்கொண்டு வழியில் வெகு வருத்தப்பட்டுக் குருவினிடத்திற்குப் போய், ஓ பரம குருவே! தாங்கள் சொன்னபடியே இதோ ஊசி வாங்கிக்கொண்டு வந்திருக்கிறோம் என்று பனைமரத்தைத் தொப்பென்று

போட்டார்கள். உடனே பக்கத்திலிருந்தவர்கள் எல்லோரும் குலுங்க நகைத்தார்கள். பிறகு அந்த மாத்தில் சொருகியிருந்த ஊசியைத் தேடிப் பார்த்தபொழுது அகப்படவேயில்லை.

ஆகையால், அறிவீனர்களாகிய சீடர்களும் அறிவற்ற குருவும் சேர்ந்து, ஞானத்தை ஆராயத் தொடங்குவதால் எவ்விதப் பிரயோசனத்தையும் அடையமாட்டார்கள்.

## காரணகுரு.

காரண குருவானவர் இவ்வுலகத்திற் காணப்பெற்றவையெல்லாம் அழியப்பெற்றவை யென்றும், தான் வேறு-கடவுள் வேறுய்ப் பாவித்து வழிபடுந் தவமானது கைகூடாதென்றும், தனது எதார்த்த சொரூபத்தையே ஈசனுகப் பாவிக்கவேண்டுமென்றும் நிராசையாய் உபதேசிப்பார்கள்.

சற் சீடர்களுக்கு உபதேசம் செய்பத் தகுந்த ஞாஞசிரியர் மாசில்லாத மனமுடையவராயிருக்கவேண்டும். மனம் களங்காகிதமாகாத வரையில், அவரால் போதிக்கப்படும் உபதேசத்தால் ஞாஞேயமாவது துர்லபம். ஏன்! அவருடைய சிவகாந்த சக்தி (Power) களங்கமாக யிருந்தால் சீடனுக்கு நன்மை யுண்டாகாது. ஞாஞசிரியர் சீடனுடைய பந்தபாசங்களை விமோசனஞ் செய்யுமாறு பண்ணும் தீட்சைகள், மானததீட்சை, பரிசதீட்சை நயனதீட்சை, வாசகதீட்சை, ஆகம (நூல்) தீட்சை, யோகதீட்சை என ஆறு வகைப்படும். அன்றியும் யாக சம்பந்தமான *ஔத்திரி முதலிய பலவகைத் தீட்சைகளும் உண்டு.

---

* இந்த அறுவகைத் தீட்சைகளே யன்றி, யாக சம்பந்தமான ஔத்திரி முதலிய அனேக வகைத் தீட்சைகளும் இருக்கின்றன.

ஔத்திரி தீட்சையானது :—ஞான தீட்சை-கிரியா தீட்சையென இருவகைப்படும். மனத்தாற் செய்யப் பெறுவது ஞான

அறுவகைத் தீட்சைகள்.

(1) மானச தீட்சை—ஆமையைப் போல் பாவனை புரிதல்.

(2) பரிச தீட்சை—கோழியைப் போல் பரிசித்தல்.

(3) நயன தீட்சை—மீனைப் போல் நோக்குதல்.

(4) வாசக தீட்சை—அட்சரங்களினால் உபதேசித்தல்.

(5) ஆகம தீட்சை—நூற் பொருளைப் போதித்தல்.

(6) யோக தீட்சை—யோக மார்க்கத்தாற் சீடனது இருதயத்திற் சென்று அனுக்கிரகித்தல்.

---

தீட்சை. குண்டமண்டலாதிகளிட்டுச் செய்வது கிரியாதீட்சை. கிரியா தீட்சையானது :—நிர்ப்பீசம் எனவும், சபீசம் எனவும் இருவகையாகும்.

பாலர்-விருத்தர்-மாதர்-வியாதியத்தர்-அறிவிலிகள்-பலபோக விருப்புடையவர்கள். இவர்கட்குச் செய்யத்தக்கது நிர்ப்பீசதீட்சையாம். இதற்கு நிரதிகாரை யென்றும், விருத்தர் முதலிய பக்குவர்களுக்குச் செய்வது சத்திய நிருவாணம் என்றும்; வாலீசர் என்னும் இளைஞர் (அறிவிலிகள்) முதலிய மந்த பக்குவர்க்குச் செய்வது அசத்திய நிருவாணம் என்றும் பெயர்.

பிரமசரிய விரதம் அனுட்டித்து, இயம-நியமாதியுடையார்களுக்குச் செய்யும் தீட்சை சபீசம் என்று சொல்லப்பெறும். இந்த தீட்சைக்கு அதிகாரை யென்று பெயர். இந்தச் சபீசதீட்சையானது, சிவதான்மிணி-உலோகதான்மிணி யென இருவகையாகும்.

பதப் பிராப்தியாகிய புவனங்களில் சேர்க்குந் தீட்சைக்கு உலோகதான்மிணி யென்றும், மோட்சத்தை அடைவிக்கும் தீட்சைக்கு சிவதான்மிணி யென்றும் பெயர்.

இன்னும் கிரியாவதி-ஞானவதி யென்னும் தீட்சைகளும் உண்டு. அவற்றை விரிக்கிற் பெருகுமென நிறுத்தலாயினம்.

ஒழிவிலொடுக்கம்.

தேட்டந் திரண்ட திருமேனி யுட்புறம்பாய்க்
காட்டு மளவே கரை புரண்டு—கேட்ட
வதிபக் குவத்தார்க் ககம் புறமென் றூறு
விதிவைத்த தீக்கையா மெண்.

இவற்றுள் நயனம், மானதம், யோகம் என்னும் மூன்றும் அகத்தீட்சைகள். பரிசம், வாசகம், ஆகமம் என்னும் மூன்றும் புறத்தீட்சைகள். இந்தத் தீட்சைகள் ஒவ்வொன்றினாலும் குருநாதனுடைய சிவகாந்த சத்தியால் சீடர்களுடைய ஆன்ம சத்தி தூண்டப் பெறுகிறது.

மானத தீட்சை.

ஆமையானது கரைக்குப் புறம்பாக ஓரிடத்தில் முட்டை யிட்டு, தான் குளத்து நீரிற்குள்ளிருந்து கொண்டே முட்டைகளின் மீது ஞாபகத்தைச் செலுத்திக்கொண்டிருக்க, முட்டைகள் ஆமையின் வடிவத்தை யடைகின்றன. அது போல், குருவானவர் சீடனுக்குப் பரிபாகம் உண்டாக வேண்டுமென்று தமது திருவுளத்தில் அருளுருவாய்ப் பாவித்து நினைக்க நினைக்கச் சீடனுடைய ஆன்ம சத்தி தூண்டப் பெறுகிறது.

பரிச தீட்சை.

கோழியானது முட்டையிட்டு, அவைகளைத் தன் வயிற்றோடு அணைத்துக்கொண்டிருக்க வெப்பம் அதிகரித்துக் குஞ்சுகளாகின்றன. ஏனைய பட்சிகளும் அவ்வாறே செய்கின்றன. அதுபோல், குருவானவர் சீடனது தேக பந்தம் அகலுமாறு கர சாணுதிகளால் அவனைத் தடவி அனுக்கிரகிக்க வேண்டும். அப்படிச் செய்வதனால் குருவிடத்திலுள்ள சிவகாந்த சத்தி (Power) யானது அவர்

விரல்களின் வழியாகவும், ஏனைய நரம்புகளின் வழியாகவும் இறங்கி, சீடனுடைய சரீரத்தின் நரம்புகளின் வழியாகச் சென்று அவனுடைய தேக பந்தமான சகல குற்றங்களையும் நீக்கி, ஆன்ம ஞான உணர்ச்சியைத் தூண்டி அவனது சரீரமும், இருதயமுங் குளிரும்படி புளகாங்கிதம் வரச் செய்கின்றது. இது காரணத்தாலேயே சிரசில் கையை வைத்தும், மார்போடணைத்தும் பெரியோர்கள் ஆசீர்வதிக்கின்றனர்.

நபிகள்பெருமான் செய்யிதுல் ஹறமைன், ஷபீகுல் முதுனபீன், அகுமது முகம்மது முஸ்தபா றசூல் சல்லல்லாகு அலைகிவசல்லம் அவர்களுக்கு வயது முப்பத்தெட்டு பூரணமான பின்னர், ஆதிநாயகன் திருவுளக் குறிப்பின்படி ஒரு பிரகாசமானது அவர்கள் கட்புலனுக்குத் தோற்றமாவதும், ஊன்றிப்பார்த்தால் மறைவதுமா யிருந்தது. இராக்காலத்திலும், பகற் காலத்திலும் ஆகாய முதலான சகல திசைகளிலுமிருந்து தொனிகள் பிறந்து கொண்டிருந்தன. அத்தொனி பிறர்களுக்குக் கேட்காது; நாதமுங் குறையாது; ஒரு சொரூபமுந் தோன்றாது. அதனால் நாயகம் அவர்களுக்கு ஆனந்தமும், பயங்கரமும், ஆச்சரியமும் மாறிமாறி நிகழ்ந்தன.

சீறுப்புராணம்.

புள்ளிவண் டரிட்ட முண்டிசை பயிலும்
பொழிறிகழ் மக்கமா புரத்திற்
றெள்ளிய குறைஷிக் குலத்தினி லுதித்த
செம்மலுக் குறைந்தபே ராண்டு
விள்ளருங் கணக்கா றுறிரண் டதன்மேல்
மேலவன் றிருவுளப் படியால்
வெள்ளிடை யதனிற் சிறிதொளி திரண்டு
விழித்திடில் விழிக்கெதிர் தோன்றும். (2)

தெரிந்திடு மொளியைத் தம்மிரு விழியாற்
றெரிதர நோக்குவர் காணு
திருந்திடும் பின்னுந் தோற்றிடு மிதனை
யெவரொடும் விரித்தெடுத் துரையார
பொருந்துளக் களிப்பு மச்சமும் பிறப்பப்
புந்தியிற் றேர்குவர் பொருவாக்
கருந்தலைக் கவைநா வரவுடல் தடிந்த
கவின்கர தலமுகம் மதுவே. (3)

இவ்வாறு சின்னாட்கள் சென்ற பின்னர் தங்கள் அன்பிற்கிசைந்த கதீஜாநாயகி அவர்களோடும் மற்றெவர்களோடும் பொருந்தி உறவாடாமல்,

பட்டினத்தடிகள்.

சினந்தனையற்றுப் பிரியமுந்தானற்றுச் செய்கையற்று
நினைந்ததுமற்று நினையாமையுமற்று நிர்ச்சிந்தனாய்த்
தனந்தனியேயிருந் தானந்தநித்திரை தங்குகின்ற
அனந்தலி லென்றிருப் பேன் ... ...

தாயுமான வள்ளல்.

கனியேனும் வறியசெங் காயேனும் உதிர்சருகு
கந்தமூ லங்களேனும்
கனல்வாதை வந்தெய்தின் அள்ளிப் புசித்துநான்
கண்மூடி மௌனியாகித்
தனியே யிருப்பதற் கெண்ணினேன் ... ...

என்று கூறியதற் கிணங்க, நபிகணாயகம் அவர்கள் தன்னந்தனியே யிருப்பதற்கெண்ணி, எந்த மலைகளிலும் போய் ஏகமாய் வசிப்பார்கள். குளிர்ச்சி பொருந்திய ஹிறு மலையில் இரண்டு நாள்—நான்கு நாள் ஏகமாய்த் தங்கியிருந்து கதீஜா நாயகம் அவர்கள் இருக்கும் வீட்டிற்கு வருவார்கள். இவ்வாறான நாட்களில் இளமயிலாகிய கதீஜா

நாயகி அவர்கள் தங்களுடன்வர, அந்த ஹிறுமலையிற் சென்று தங்கியிருக்கையில், ஆகாயத்தையளாவிய அந்த மலையும், பாதாளத்தைக் காட்டும் பள்ளத்தாக்குகளும், குறவர் மருளும் குன்றுகளும்—குகைகளும், செழித்தோங்கிய நானுவித மரங்களும், தழைத்தடர்ந்த செடிகளும், சுனைத் தண்ணீர்பாயும் ஒலிகளும், ஆறோடைகளும் திகழ்வதையும், சிங்கம், புலி, காடியாதிய கொடிய விலங்கினங்கள் சஞ்சரிப்பதையும், மான்-ஆடு-மாடு ஆதிய சாதுப் பிராணிகள் பசும் புற்களை மேய்ந்து திரிவதையும், பாம்பு, தேள், நண்டுத்தெறுக்கால் முதலான விட செந்துக்கள் ஊர்ந்து ஓடுவதையும் கதீஜாநாயகம் அவர்கள் கண்டுபயப்படாமல் நபிகணயகம் அவர்களோடிருக்கும் தன்மையால் ஆனந்தத்துடனேயே இருந்தார்கள்.

மூல பிதாவாகிய நபி ஆதம் அலைகிஸ்ஸலாம் அவர்கள் மனிதவடிவமாய் இப்பூமியில் அவதரித்த ஆறுயிரத்து நூற்று இருப்த்து மூன்று (6123)-வது வருடத்தில், நபிநாயகம் (சல்) அவர்களுக்கு வயது நாற்பதில், றபீயுல் அவ்வல்மாதம் பந்தாந்தேதி திங்கட்கிழமை இரவில், ஹிறு மலையில் ஏகமாக வீற்றிருக்கும் நாயகம் அவர்கள் எதிரில் சிபுறீல் அலைகிஸ்ஸலாம் (தேவதூதர்) அவர்கள் பிரசன்னமாகி, ஆதிநாயகன் சலாமும் சொல்லி, நவரத்தின கசித மயமான ஒரு வஸ்திரத்தைக் கையில் எடுத்து, நாயகம் அவர்கள் வதனத்தைநோக்கி லாயிலாக இல்லல்லாகு முகம்மதுர் றசூலுல்லாஹி என்னும் கலிமா மகாமந்திரத்தைச் சொல்லி, அவர்கள் வலக்கரத்தில் வைத்து, நாயகமே! தங்களுக்கு அல்லாகுத்தாலா இன்று நபி யென்னும் பட்டத்தைத் திருவுளமகிழ்ந்து அருளி யிருக்கின்றான். ஆதலால் வேதத்தை ஓதுங்கள்! என்று சொன்னார்கள்.

சீறுப்புராணம்.

துய்யவ னருளால் ஆதமா மனுவாய்த் தோன்றிய அவனியின்வருடம்
ஐயமி லாறு யிரத்தினி லொருநூற் றிருபது மூன்றினில் அழகா
வையக மதிக்கும் முகம்மதின் வயது நாற்பதில் றபீயுல் அவ்வலினில்
எய்திய எட்டாந் தேதியிற் சனியின் இரவினில் ஹிறுமலையிடத்தில்

நித்தில நிறைத்த விருசிறை யொழுங்கு நீணிலாக் கதிர்கள்விட்
[டொழுக
வித்துரு மத்தாள் சிறந்தணிதிகழ வில்லுமிழ் கரங்கிடந் திலங்கப்
பத்திவிட் டெறிக்குஞ் செம்மணியிருகட் பார்வையிற் கருணைவீற்
றிருக்கச்
சித்திரவடிவைச் சுருக்கிமானுடர்போற் ஜிபுறயீ லவ்விடத் தடைந்
தார். (12)

வேறு.

வரிசைநேர் றபீவு லவ்வல் மாதமீ ரைந்து நாளிற்
றெரிதர விளங்குந் திங்கள் இரவினிற் சிறப்புமிக்கோன்
அருளினில் ஜிபுறயீல்வந் தருவரை யிடத்தின் வைகும்
குரிசில்தன் கமலச் செங்கண் குளிர்தர வெதிர்ந்து நின்றார். ()

நானிலம் பரப்புஞ் சோதி நாயகக் கடவுள் தம்மை
வானகத் திருந்த சோதி வந்துசந் தித்த தேபோற்
கானமர் துண்டச் செங்கட் கலைநிலாத் திகழும் யாக்கை
ஈனமில் ஜிபுற யீல்வந் திறையவன் சலாமுஞ் சொன்னார்.(17)

நாயகம் அவர்கள், சிபுறீல் அலைகிஸ்ஸலாம் அவர்களை நோக்கி "குரிசிலே! நான் ஓர் எழுத்தையும் அறியமாட்டேன்; வேதத்தையும் ஓதினவனல்லேன்" என்றார்கள். சிபுறீல் அலைகிஸ்ஸலாம் நாயகம் அவர்களை இறுகக் கட்டியணைத்து "ஓதுங்கள்" என்றார்கள். அப்போதும் "யான் யாதொன்றையும் அறியேன்" என்றார்கள். பின்னும் அதிகமாகக் கட்டியணைத்து ஓதுங்கள்! என்னலும்; "நான்

வேதத்தைக் கண்ணுற் பார்த்ததும், காதினுற் கேட்டது மில்லையே" என்றார்கள்.

சீருப்புராணம்.

எதிரிருந் தாசர் பின்னு மிடருறத் தழுவி நோக்கி
மதியினு மிலங்குஞ் சோதி முகம்மதே யோது மென்னப்
புதுமையி னரிய பேறே புவியிடத் தரிய வேதம்
கதிபெறக் கண்டுங் கேட்டுங் கற்றறிந் திலன்யான் என்றார்.

அதன்மேல் இருதோட்களும் நெருங்கவும், சரீரம் தளரும்படியாகவும் இருகக் கட்டியணைத்து, ஓதுங்கள்! என்று சொன்னர்கள். (*) நெருங்கக் கட்டியணைத்தபின் நாயகம் அவர்களுக்கு வேதத்தின் உணர்வு உதயமாகிப் பெருகி, நான் ஓதவேண்டியது யாது? எனவும், இக்றவ் என்னும் சூறத்திலிருந்து, நான்கு ஆயத்து மாலம்யகுலம் என்பது வரையில் ஓதும்படிக் கூறினர்கள்.

சீருப்புராணம்.

கேட்டுவா னவர்கோ மானுங் கிளரொளி வனப்பு வாய்ந்த
தோட்டுணை நெருங்க வுள்ளந் துனிவர வுடலஞ் சோரப்
பூட்டிய கரங்கள் சேப்பப் புல்லிநந் நபியை நோக்கி
மீட்டுமெய்ம் மறைநூன் மாற்றம் விரித்தெடுத் தியம்பு மென்றார்()

நெருக்கிவிட் டதற்பின் வேத நெறிநபி யுள்ளத் துள்ளே
திருக்கிளர் புவியில் விண்ணோர் தெளிதரு மறிவு முன்னூல்
இருக்கினில் அறிவுந் தோன்றி யிடனறப் பெருகி நல்லோர்
உருக்கொளு மரசை நோக்கி யோதவேண் டுவதே தென்றார். (26)

---

(*) இவ்வாறு நெருங்கக்கட்டி அணைத்தவுடன் பாவ விமோசனமாகி, ஞானேதயம் உண்டாவதற்குப் பரிச தீட்சை என்று பெயர்.

மிக்குயர் மறையின் வள்ளல் விளம்பவிண் ணவர்கள் கோமான்
இக்றவு வெனும்சூ றத்தி லிருந்தூா லாயத் தின்ப
மெய்க்குற மாலம் யேனல மெனுமட்டும் விளம்பு வீரென்
ளுெக்கலி லுயிரின் மிக்கா யுறுநபிக் குணர்த்தி ஞால். (27)

நபிகள்நாயகம் அவர்கள், அட்சரந் தப்பாமலும், வார்த்தைகளின் ஒழுங்கு குறையாமலும், இராகத்தின் இனிய தொனியால் பட்ட மரங்கள் தளிர்க்கும்படியாகவும் ஜிபுறீல் அலைகிஸ்ஸலாம் அவர்கள் இருதய கமலம் குளிரும் வண்ணம், பதவுரை, கருத்துரை, விசேடவுரை முதலிய சகல விபரங்களையும் மனதிற்பதித்து,

(" இக்றவ் பிஸ்மிறப்பிக்கல்லதீ ஹலக், ஹலக்கல் இன் சான மின் அலக், இக்றவ் வறப்புக்கல் அக்றமுல்லதீ, அல்லம பில்க்கலமி, அல்லமல் இன்சான மாலம்யஃலம்") என்று திருவாய்மலர்ந்து ஓதினார்கள்.

நாயகம் அவர்கள் பழம்பாடத்தைத் திரும்ப ஓதுவது போலும், கடன்மடை திறந்தாற்போலும் ஓதுவதை ஜிபுறீல் அலைகிஸ்ஸலாம் அவர்கள் கேட்டு உள்ளமகிழ்ந்து விண்ணுலகம் போய்ச்சேர்ந்தார்கள். அதன்பின் நாயகம் அவர்கள் அச்சமுற்று, ஹிறாமலையை நீங்கி அவ்விரவில் தனிமையாகக் கதீஜாநாயகம் அவர்கள் வீட்டிற்குவந்து, சரீர நடுக்கத்தோடு சுரமும் குளிருந்தோன்ற மெலிந்து, மனப் பயங்காத்துடன் கதீஜாநாயகம் அவர்களைக் கூப்பிட்டு " எனது இருதயம் தேர்ச்சியடையாமல் சரீரம் திடுக்கம் அடைந்திருக்கின்றது. அத்துன்பம் இன்னதென்று யானறிகிலேன். என்மீது ஒரு வஸ்திரத்தைக் கொண்டு "போர்த்துங்கள், போர்த்துங்கள்" என்று துரிதமாகச் சொன்னார்கள்.

சீறாப்புராணம்.

நடுக்க முற்றுமெய்ச் சுரத்தொடுங் குளிர்தர நலிந்து
மிடுக்க கன்றிடப் பயத்தொடு மரிவையை விளித்துத்
திடுக்க முற்றது துகில்கொடு பொதிமனந் தெளியா
திடுக்கண் யாதென வறிகில னென்றனர் இறசூல். (33)

தலைவர் கூறிய மொழிசெவி புகவுடல் தயங்கி
நிலைகு லைந்தெழுந் தயர்வொரு நெட்டுயிர்ப் பெறிந்து
பலம லர்த்தொடை செறிந்தபஞ் சணைமிசை படுத்திச்
சலவை கொண்டுறப் போர்த்தரு கிருந்தனர் தையல். (34)

புறுக்கானுல் அலீம் 29-வது ஜுஸ் 7-வது சூறு (யாஅய்யுஹல் முஸம்மிலு) என்னும் சூறுவானது நபிகள் நாயகம் அவர்கள் கதீஜாநாயகி அவர்களிடம் வந்து, தன் மீது வஸ்திரத்தால் போர்த்துங்கள் என்று திருவாய்மலர்ந்த கருத்தையே குறிப்பிடுகின்றது. இதன் வியாக்கியானத்தை தப்ஸீர் ஜலாலைனிலும், ஸஹீஹ் புகாரியிலும் விபரமாகக் கூறப்பெற்றுள்ளது.

கதீஜாநாயகம், நபி முகம்மது சல்லல்லாகு அலைகிவசல்லம் அவர்கள் நிலைமையைக் கண்டு சரீரந்தளர்ந்து, நிலைகுலைந்து வருந்தி, அவர்களை பஞ்சணையிற் படுக்கும்படி செய்து, வஸ்திரத்தினால் போர்த்து அருகிலிருந்து நாயகமே! தாங்கள் இவ்வாறு முகவாட்டத்துடன் கருத்தழிந்து வந்ததற்குக் காரணம்யாது? என்னலும், ஹிறாமலையில் நடந்தவற்றை ஆதியோடந்தமாய்க் கூறக்கேட்டு, ஆராய்ந்து எல்லாம் நன்மைதான் என்று துணிந்து, நாயகம் அவர்களுக்குத் தேறுதல் சொல்லிக்கொண்டிருந்தார்கள்; பொழுதும் விடிந்தது.

கதீஜாநாயகம் அவர்கள் உறக்கத் என்னும் கலாவல்லவரை அழைத்துவரச்செய்து, நபிநாயகம் அவர்கள் மூல

# 3-ஆவது நயனதீட்சை.



சினைவரால் மீன் தனது கருவைத் தண்ணீரிற் பீச்சிவிட்டு, அந்தக் கருவானது தன் வடிவத்தையடையவேண்டுமென்ற சிந்தனையுடன் தனது கண்களினுற் கூர்மையாக நோக்க-நோக்க சினையானது மீன்குஞ்சுகளாக ஆவதுபோல், ஞானசிரியர் தமது சற்சீடனை எதிரிலிருக்கும்படி செய்து அவனுக்கு ஞானேதயம் உண்டாக வேண்டுமென்ற சிந்தனையுடன் சீடனைத் தமது கண்களினுற் கூர்மையாக நோக்க நோக்க சீடனுக்கு ஞானேதயமும் நயனத்திடையில் பிரகாசமும் உண்டாகுதல்

83-ஆம் பக்கம் பார்க்க.



மாகவே ஹிருமலையில் நடந்த வர்த்தமானங்களைத் தெரிந்து கொள்ளும்படி சொன்னார்கள். இது பரிசதிட்சையின் சம்பந்தமானது.

அன்றியும், பரிசதிட்சையில் திருவடித்திட்சை யென்பதும் முக்கியமானதாம்.

திருநாவலூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிதம்பரத்தில் நடராசப் பெருமானைத் தரிசிக்கவேண்டுமென்னும் பேராசையோடு புறப்பட்டுத் திருவதிகை யென்னுந் தலத்துக்குச் சமீபத்திற்போய், திருநாவுக்கரசு சுவாமிகள் உழவாரத்தால் கைத்தொண்டு செய்த இத்தலத்தை நான் மிதிக்க அஞ்சுகின்றேனென்று அதற்குட் செல்லாமல் அருகிலிருந்த சித்தவட மடத்தில் எழுந்தருளி, அன்றிரவு திருவதிகை வீரட்டானத்தில் வீற்றிருக்கும் சிவபிரான் திருவடிகளைத் தியானஞ்செய்துகொண்டு நித்திரை செய்யும்போது, வீரட்டானேச்சுரர் ஓர் விருத்தப் பிராமண வடிவத்துடன் அம்மடத்தில் நுழைந்து, சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிரசின்மேல் தமது திருவடியை வைத்தருளித் துயில்பவர்போலிருந்தனர். அப்பொழுது சுந்தரமூர்த்தி சுவாமிகள் விழித்துக்கொண்டு 'ஐயரே! என் உம்முடைய பாதத்தை என் சிரசின்மேல் வைத்தீர்! என்ன, ஐயர்! என் வயோதிகத்தால் திசைதெரியாது அப்படிச் செய்தேன் என்றார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அதற்கு ஒத்துக்கொண்டு, தம்முடைய சிரசை வேறொருதிசையில் வைத்து நித்திரை செய்தனர். சிவபெருமான் அங்குஞ் சென்று, சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய சிரசில் தம்முடைய பாதத்தை நீட்ட, சுந்தரமூர்த்தி சுவாமிகள், 'என் சிரசிற் பலமுறை காலைவைத்த நீர்யார்? என்ன, 'நீ என்னை அறியாயா? என்று உரைத்து மறைந்தருளினர். அதுகண்டு சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம்முடைய சிரசில் பாதத்தை

வைத்தவர் சிவபெருமான் என்றறிந்து "அடியேன் செருக்கினுல் சுவாமியென்று அறியாமையால் என் செய்தேன்" என்று வருந்தி, வீரட்டானேச்சுரரை, தம்மானையறியாத சாதியாருளரோ' என்னுந் திருப்பதிகம் பாடித் துதித்து அங்கிருந்து புறப்பட்டுச் சிதம்பரத்திற்குச் சென்று சபாநாதரைத் தரிசித்தனராம்.

சோணசைலமாலை.

மாங்குயில் மிழற்றும் நாவலூர்ப் புலவன்
மறுப்பவும் முடிமிசை யிருத்தும்
பூங்கழ லடியேன் றலைமிசை யிருத்தப்
புகலினு மென்கொனீ யிரங்காய்.

இந்தத் திருவடித் தீட்சையின் மகத்துவத்திற்காகவே, எண்ணிறந்த மகான்கள் தமது சிரசினுல் கடவுளுடைய * பாதங்களை வணங்குவதாகவும், தம்முடைய சிரசில் கடவுளுடைய பாதங்களை வைக்கவேண்டு மென்பதாகவும் பேரோலமிட்டு பிரார்த்திக்கிறுர்கள்.

ஒழிவிலொடுக்கம்.

வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன்
வள்ளல் மலர்த்தாடலைமேல் வைத்துரைத்தான்.

குணங்குடி வள்ளல்.

வணங்கிய தவத்தி ஞேர்க்கருள் புரிய
வள்ளலாய் வந்தமா தவத்தோன்
குணங்குடி வாழும் முகியித்தீ ஞமென்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம்.
நடனமிடு பாதார விந்தமென் சென்னியுற
நாட்செல்லு மோசொல்லுமே!

* கடவுளுடைய பாதங்கள் எத்தன்மைத்தாய தென்பதை நமது ஞானக்களஞ்சியம் ஆன்மஞான அத்தியாயத்திற் காண்க.

தாயுமான வள்ளல்.

அடியெடுத்து முடியிலின்னும் வைக்க வேண்டும்
அடிமுடியொன் றில்லாத அகண்ட வாழ்வே.

அன்பருக் கன்பான மெய்யன்—ஐயன்
ஆனந்த மோனன் அருட்குரு நாதன்
தன்பாதஞ் சென்னியில் வைத்தான்—என்னைத்
தானறிந் தேன்மனந் தானிறந் தேனே.

நலமேது மறியாத என்னைச்—சுத்த
நாதாந்த மோனமா நாட்டந்தந் தேசஞ்
சலமேது மில்லாம லெல்லாம்—வல்லான்
றுளாலென் றலைமீது தாக்கினான் தோழி (சங்கர.)

பரிச தீட்சையானது, கை, கால், மார்பு, தோள் முதலான தானங்களிற் செய்வதைப் பார்க்கிலும் சிரசில் செய்வதே மேலானது. எனென்றால் "எண்சாணுடம்பிற் சிரசே பிரதானம்" என்பதனாலும், இந்திரியங்களுக்கு உணர்ச்சியைத்தரும் மூளையானது சிரசிலேயே யிருப்பதனாலும், பெரியோர்களுடைய சீவகாந்த சத்தியானது அவர்களுடைய விரலின் வழியாகச் செல்வதால் அந்த சத்தியை உடனே மூளை கிரகித்து சரீரத்தில் ஒருவித நல்லுணர்ச்சியை யுண்டுபண்ணுகிறது. இதுபற்றியே கருணையுள்ள அனேக மகான்கள் சிரசைத்தொட்டு ஆசீர்வதிக்கிறார்கள் என்பதைப் பிரத்தியட்சமாகப் பார்க்கிறோம்.

நயன தீட்சை.

விரால் முதலிய சில மீன்கள் தமது கருவைத் தண்ணீரிற் பீச்சிவிட்டு, அவை தன் வடிவத்தை யடைய வேண்டுமெனக் கூர்மையாகப் பார்த்தவுடன், சினையானது மீன் குஞ்சுகளாக மாறுகின்றன. அதுபோல் குருவானவர்

சீடனது அஞ்ஞானம் நீங்குதற்பொருட்டு கருணைப் பார்வை கொண்டு கடாட்சித்து அனுக்கிரகிக்கவேண்டும்.

இரசமானது செம்பினது களிம்பை யகற்றுவதுபோல் மேற்கூறிய அறுவகைத் தீட்சைகளினாலும், ஆணவமலம், மாயாமலம், கன்மமலம் என்னும் மும்மலாதிகளையும், தற்போதத்தையும் நீக்கி, "சுடர் விளக்காயினும் தூண்டுகோல் வேண்டும்" என்பதற்கிணங்க தமது அருட்சத்தியிற் சிறிது உதவி, சீடனிடத்திலுள்ள இயற்கையான சத்தியைத் தூண்டி உபகாரம் புரியவேண்டும். பழுக்காத வாழைக் காய்கள் புகை மூட்டத்தால் நன்றாய்ப் பழுப்பதுபோல், அபக்குவர்களும் ஆசிரியரது திரு நோக்கத்தால் பக்குவி யாகி விடுவார்கள். இதற்குத் திருஷ்டாந்தமாவன :—

அல்லமாப் பிரபு என்னும் சிறந்த ஞானாசிரியர், தூல சரீரமாகிய இவ்வுடம்பை மருந்தாதிகளாற் காயசித்தி பண்ணிச் செருக்கடைந்து சைலமலையாகிய பருப்பத மலையில் வாசஞ்செய்து கொண்டிருந்த கோரக்க முனிவருக்கு, அவர் செருக்கடங்கும் வண்ணம் சூக்குமசரீரத்தின் உயர் நிலையைக்காட்டி, அன்னவருக்குப் பிரம்ம நிட்டையை உபதேசஞ் செய்துவிட்டு, அந்த மலைக்கு அப்பால் யானை, புலி, காடி முதலான கொடிய மிருகங்கள் வசிக்கும் ஒரு பெரிய வனத்திற்குட் செல்லும்போது, கொலைத் தொழிலையே சீவனமாகக் கொண்ட ஒரு வேடன், நாணேற்றிய வில்லில் அம்பு பூட்டியபடியே பிறர் கண்டு பயங்கரமுண்டாகும் வண்ணம் வந்து தோன்றினான்.

அல்லம தேவர், கண்ணிடத் தப்பிய வேடராய திண்ணனார் என்னும் கண்ணப்ப நாயனாரைப்போன்ற பத்திமான்களுக்கு உபதேசித்து இன்பமடையச் செய்தல் கீர்த்தியன்று, கொலைபாதகனாகிய இந்த வேடனைத் திருத்து

வதுதான் கீர்த்தியென்று நினைந்து மனமிரங்கி, அவன்மீது கிருபாநோக்கம் பாலித்தனர். உடனே வேடுவன், தன் சுபாவம் நீங்கி அதி தீவிர பக்குவம் அடைந்து, வில்லையும் அம்பையும் எறிந்துவிட்டு, சுவாமி! அடியேன் உய்வதற்கு வேண்டிய மார்க்கங்களைப் போதித்தருளல் வேண்டுமென அடியற்ற மரம்போல் விழுந்து அட்டாங்கமாக வணங்கினான்.

அல்லமதேவர், வேடனை நோக்கி அன்பனே! நீ அறிவென்னும் வேலாயுதத்தால் ஐம்புலன்களென்னும் மான் கூட்டங்களை அருள் என்னும் வலையைவிட்டுத் தப்பாதபடி எறிகுவையாகில், உனக்குத் துன்பமில்லை. அன்றியும், நீ வில்லைவளைத்து, அம்பைத்தொடுத்து மிருகங்களை எய்வது போல், அறிவை வில்லாகவும், மனதை அம்பாகவும் என்னைக் குறிவைத்து எய்வையாகில், உன்னைத் தேவர்களும் பணிவார்கள் என்று உபதேசம் செய்தருளினர். மேற்கூறிய இரண்டு அற்புதங்களும் முறையே பரிச-நயன தீட்சைகளால் நிகழ்ந்தவையென்று உணரப்பெற்றும்.

வாசக தீட்சை.

குரு மூர்த்தியைத் தெரிசிப்பதால் ஏற்படும் நன்மையைப்போல், குருபிரானது வாசகத்தை நேரில் சிரவணஞ் செய்வதாலும் ஆனந்தம் உண்டாகும். சற்குரு மூர்த்தியினது சரீரத்தினருகில் எவ்வளவுக் கெவ்வளவு நெருங்கியிருக்கிறோமோ அதற்குத் தக்கவாறு நன்மை ஏற்படுவது போல், அடிக்கடி நல்லோர்கள் குணங்களைப் பற்றியும், தத்துவஞான நெறிகளைப்பற்றியும் புகழ்ந்து பேசுகையில் நமக்கொருவிதமான உற்சாகம் செனித்து, நாமும் அவ்விதமான நன்மைகளை யடையவேண்டுமென்று கிளர்ச்சி பெறுகிறோம்.

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவு நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று.

குரு மூர்த்தியானவர் சீடனுடைய பரிபக்குவத்திற்குத் தக்கவாறு தமது சிவகாந்த சக்தியை அட்சாங்களிற் செலுத்தி அதனல் சீடனுக்கு ஒருவித உணர்ச்சியுண்டாகும்படிச் செய்வர். அன்றியும் குருநாதனுடைய சன்னிதானத்திலிருந்து அவருடைய வாக்கியாமிர்தத்தை மடுத்துக்கொண்டிருந்தால் அவருடைய சக்தியானது சீடனுக்கு வந்து சேருகின்றது. குரு சன்னிதானத்தில் சதாகாலமும் இருக்கச் சாத்தியப்படாத சீடர்கள் வாரத்திற்கு ஒரு முறையாவது, பட்சத்திற்கு ஒரு முறையாவது குரு மூர்த்தியைச் சந்தித்து அவர் வசனத்தைக் கேட்கவேண்டியது மிக அவசியம். சுருக்கமாகச் சொல்லுமிடத்தில் சீடர்கள் எவ்வளவுக்கு எவ்வளவு அன்புடன் வந்து தெரிசிக்கிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு சிற்சுகோதயம் பிறக்கும். இதுபோலவே வாசத்தலமும் நெருங்கி யிருத்தல்வேண்டும். அதாவது குருபிரான் இருக்குமிடத்திலிருந்து 10-மைல் தூரத்திலிருப்பவனுக்கு உள்ள சுகானந்தம், 20-மைல் தூரத்திலிருப்பவனுக்கு உண்டாகாது. ஏனென்றால், மனே சக்தி செல்வதற்கு நேரெஞ் செல்லும் என்பதே அதன் முடிவு. ஆனல், "குருடன் தூங்கினலும் விழித்துக்கொண்டிருந்தாலும் ஒன்றுதான்" என்னும் பழமொழிபோல், குருபிரானை அன்புடன் சிந்திக்காத சீடன் சமீபத்திலிருந்தாலும் தூரத்திலிருந்தாலும் காரியமில்லை.

## ஆகம தீட்சை.

குருமார்கள் தத்தம் யோக ஞானனுபவங்களுக்குத் தக்கவாறு வேதாந்த சித்தாந்தங்களாகிய ஞானகம

மெய்ந்நூற்களிலுள்ள பொருள்களை, சீடனுடைய அறிவுக்குத் தக்கவாறு அவனுடைய மனமாசு தீர்ந்து ஆன்மஞான வுணர்ச்சி தோன்றும்படி போதித்தல்.

யோக தீட்சை.

இந்தத் தீட்சையானது சீடனுடைய இருதய கமலத்தில் சற்குருவானவர் யோகமார்க்கத்தால், சூக்கும—காரண சரீரமெடுத்துச் சென்று அனுக்கிரகித்தல். இந்தச் சூக்கும—காரண சரீரம் எடுக்கும் அப்பியாசமானது நமது ஞானக் களஞ்சியம், சாயா தத்துவ ஞான அத்தியாயத்தில் விபரமாகக் கூறப்பெற்றுளது. ஆகையால் இங்கு விவரிக்கவில்லை.

குரு மூர்த்தியானவர் சீடனது பரிபாக பக்குவத்தை யறிந்து, முற்கூறியுள்ள அறுவகைத் தீட்சைகளையும் கிருபையுடன் செய்தாலன்றி சீடன் ஈடேற முடியாது. இதற்காகத்தான் குருபரன்மீது மாறாத விசுவாசம் வைத்திருக்க வேண்டுமென பன்னூற்களும் ஓலமிட்டுக்கொண்டிருக்கின்றன. சீடன் வணங்கிப் புகழ்வதால் குருவுக்குப் புகழ் ஏற்படும் என்பதற்காக ஆன்றோர்கள் நூலெழுதி வைக்கவில்லை. குருவை அதிகமாக வணங்கி விசுவாசித்தால், அவர், சீடன்மீது கருணை பாலித்துக்கொண்டிருப்பார். அதனால் சீடன் உய்வதற்கு ஏது வுண்டாகுமென்றே எழுதி வைத்திருக்கிறார்கள்.

சிவஞான வள்ளல்.

சிவத்துவ மசிசிவோக மத்துமி சிவோகமத்தி
நவத்துதி வாக்கியத்தை நவையறு சீடற்கோதி
யவற்றுறு பொருளைத்தேற்றி யாங்கவன் கிலேசம்போக்கிப்
பவத்துயர் நசித்தான்றன்னைப் பரமவா சிரியனென்ப.

ஞானசிரியர் சீடனிடத்தில் எவ்வித பிரயோசனத்தையுங் கருதாமல் நிராசையாய்ப் போதிக்கவேண்டும். சீட

னுடைய உடல் - பொருள் - ஆவி மூன்றும் ஆசிரியருக்குச் சொந்தமாயினும், அவற்றாற் செய்யப்படுந் தொழிலைச் சீடனுடைய மனதைச் சோதிக்கும்பொருட்டு (அவசியமானால்) செய்யவேண்டுமேயன்றி, சொந்தப் பிரயோசனத்திற்காக நடத்தப்படாது. புகழுக்காகவோ! பணத்திற்காகவோ! உபதேசிக்காமல், கிருபாநோக்கம் ஒன்றினாலேயே உபதேசிக்கவேண்டும். பக்குவமில்லாத மாணவர்கட்கு உபதேசிப்பின் ஞானம் பிரகாசியாது.

## ஞானவாசிட்டம்.

காதல்செறி பொல்லாமா ணாக்க னுக்குக்
கற்பித்த வுபதேசங் கருநாய்த் தோலுண்
மேதகுபா லெனவசுத்த மேவு மென்று
மிகுகாதி சேய்பலவும் விளம்பக் கேட்டு.

சுருதியின் முடிவைத் தெற்றெனவுணர்ந்து மனமாசு நீங்கி, காமக்குரோதாதிகளைவென்று நிர்ச்சலனமா யிருப்பவர் எவரோ? அவரே! தன்னையும், தலைவனாகிய கடவுளையும் நன்கறிந்தவர். அவரே மாணாக்கனுக்குப் பரம கருணாநிதியாகிய கடவுளின் சொரூபத்தைக் காட்டவல்லவர். மேற்கூறி வந்த குணங்குறிகள் ஆசிரியரிடத்தில் உளவாயின், அவரால் சீடனுக்கு யாதோர் அபாயகாமுமில்லை. அவ்வாறின்றிப் பஞ்சேந்திரியங்களை அலையவிட்ட ஆசிரியரிடம் உபதேசம் பெறுவதில் நன்மையுண்டாகா விட்டாலும் தீமையுண்டாவது திண்ணம்.

ஒரு குருவிடத்தில் தீட்சை பெற்று அவர் உபதேசித்தபடி அனுட்டித்துப் பார்க்கும்போது, அந்த அப்பியாசத்து (மக்காமு)க்குரிய விஷயங்களில் அவர் உதவிசெய்கிறாரா! இல்லையா! என்று கவனித்தல் வேண்டும். உதவி செய்யுந் தன்மை அவரிடத்தில்லாதிருந்தால், வேறொரு

சற்குருவை (காமிலான ஷெய்கை)த் தேடி நிழற்போற் றொடர்ந்து கொள்ளல்வேண்டும். ஆனல் குரு சொன்ன படி சீடன் நடக்காமல் மற்றொரு குருவை நாடுவதானது சீடனது குற்றமே யாம். சில குருமார்கள் அற்புதங் காட்டுகிற தன்மையினுல் சற்குருவாகி விடமாட்டார்கள். சில பிரபுக்கள் பணத்தை அனுவசியமாகச் செலவிட்டு, இடம்பம் காட்டாததுபோல், அனேக மகான்கள், தாங்கள் அரும்பாடுபட்டுத் தேடிய அருட் செல்வத்தை அற்புதங்க ளென்னும் வீண் செலவு செய்யமாட்டார்கள். அதனுல் அவர்களை மகானல்லவென்று அறியாத்தனமாய்க் கருதி விடக்கூடாது.

குறளி வித்தைக்காரர்களைப் போல் சனங்களை மருட் டுவதற்காக தண்ணீரில் மிதந்தும், சாஸ்தியாகச் சாப்பிட் டும், சில அற்புதங்களைக் காட்டி விடுவதால் இவர் பெரிய மகான் என்று எண்ணிவிடவுங் கூடாது. இந்த அறியாத் தனந்தான் உலகத்தில் குடிகொண்டிருக்கிறது.

செய்யிதிஞ அபாயசீதுல் பிஸ்தாமி றலியல்லாகு அன்கு அவர்களிடம் ஒருவர் சென்று, இன்னுர் தண்ணீரில் நடக் கிருர், ஆகாயத்தில் பறக்கிருர், தொலை தூரம் ஒரு விநாடி யில் செல்லுகிருர் என்று சொன்னுர். அதற்கு, அவரைப் பார்க்கிலும் மீன் நன்ருக நடக்கும், பறவை நன்ருகப் பறக்கும், காற்று அதிசீக்கிரம் செல்லும் என்று கூறினுர்க ளாம். ஆகையால் முத்தி விருப்பமுள்ளவர்கள் அற்புதங் களைச் செய்ய நாடமாட்டார்கள்.

இடைக்காடர்.

நாய்போற் பொறிகளை நாஞ விதம்விட்டோர்<br>
பேயரென் றூதுகுழல்—கோனே<br>
பேயரென் றூதுகுழல்.

திருமந்திரம்.

குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்
மூரளும் பழங்குழி வீழ்வரா முன்பின்
குருடரு வீழ்வரா முன்பின் னறவே
குருடரும் வீழ்வார் குருடரோ டாகியே.

நிறைந்த ஞானனந்தத்தில் அழுந்தியவர்கள், மது வுண்ட வண்டைப்போல் பதைப்பற்றும், வெண்கலம் சப்திப்பதுபோல் பிதற்றிக் கொண்டுமிராமல், தங்கக் கலத்தைப்போல் நிசப்தமுடன் மவுனவிரதம் பூண்டிருப்பார்கள்.

ஆகையால் சகல ஆசைகளையும் அகத்தில் அடக்கிக் கொண்டு, புறத்திற் பற்றற்றவர்போல் நடிக்கும் ஆசாட பூதிகளாகிய வேடதாரிகள், பேதைச் சனங்களை மயக்கும் பொருட்டுப் படாடோபமாய், சாமியார், மஸ்தான் என்று வாய்ப்பறை யடித்துக் கொண்டு, தண்டு - கமண்டல தாரியாய் ஊர் ஊராய்த் திரிந்து, எளியவர்கள் பாவமெல்லாம் கைக்கொள்பவர்களிடத்தில் தீட்சை பெறக் கூடாதென்பது இதன் மூலமாய் வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றதல்லவா?

யோகஞான அப்பியாசமில்லாதவர்கள் தமக்கு வேண்டிய சில சாஸ்திரங்களை மனனம் பண்ணிக் கொள்வதால் எவ்விதச் சித்தியும் உண்டாகாது.

சடை முடித்தவன், தலைமொட்டை யானவன், தண்டு கமண்டலந் தாங்கியவன், காஷாய வஸ்திரம் தரித்தவன், சரீரமெங்கும் விபூதி யணிந்தவன், நாராயணவசனன், சிவசிவ வசனன், பாகிய (வெளிப்)பூசை அதாவது பூசைப் பெட்டகந் தாங்கியவன், துவாதச புண்டரம் உடையவன், உருத்திராக்கம், துளசி காஷ்டம் முதலியவற்றின் மாலைகளால் அலங்கரிக்கப் பெற்றவன் என்னும் இந்தக் கிரியை

யுடையவர்கள் அப்பியாசமில்லாத வாக்குச் சூரர்கள். இவர்கள் எப்படிச் சித்தி அடைவார்கள் என்று தத்தாத்திரயராலும்,

ஏகதண்ட திரிதண்டாதிகளாலும் சடை, பஸ்மம் (விபூதி) முதலியவற்றாலும், மொட்டை யடித்துக் கொள்ளுதல், நிர்வாணியாய்த் திரிதல், கௌபீனதாரியாய்த் திரிதல், காஷாயம் தரித்தல், சந்தை யுடுத்தல், உன் மத்தமாய்த் திரிதல் முதலியவற்றாலும் சித்தியுண்டாவதில்லை. அது நிரந்தர அப்பியாசத்தாலேயே உண்டாகுமென்று வாமதேவ மகேசுர சம்வாதமாகிய யோகாப்பியாசத்திலும் சொல்லப்பட் டிருக்கின்றது.

தூணங்குடி வள்ளல்.

வேஷந் தனைப்போட்டு மெய்மயக்கும் பொய்க்குருவைக்
காசாய் மதியேன்நான் கண்ணே! றகுமானே!

விஞ்ஞானசாரம்.

விடயமீதி லுபாதியும் மேவும் உயிர்மேல் நனியருளும்
அடையும் ஆசான் மேல்அன்பும் அந்தப்பிரம ஞானமுமே
தடையேயின்றி யிவைநான்கோர் தனுவா யுடையோர் தமைஞானம்
உடையோ ரென்பர் அயலாரை உரைப்பார்சோர ஞானியென்றே.

நெஞ்சறி விளக்கம்.

வேடத்தைத் தரித்தா லென்ன வெண்பொடி யணிந்தா லென்ன
நாடொத்து வாழ்ந்தா லென்ன நதிதலங் கண்டா லென்ன
தேடொத்த நாகை நாதர் சீரடி சிந்தை தேர்ந்தே
ஓடத்தா மரையின் பூப்போ லுயர்த்திடும் பெரியோர் நெஞ்சே.

சள்ளிடு சுணங்கன் போலச் சாத்திரம் படித்தா லென்ன
வெள்ளிய துகிலைக் காவி வேட்டியாய்த் தரித்தா லென்ன
உள்ளிருந் தாட்டுவிக்கு மொருவனை யுருகித் தேடித்
தெள்ளிய நாகை நாதர் செயல்காணு மாந்தர் நெஞ்சே.

கஞ்சா, கள், சாராயம், அபின், முதலான லாகிரி வஸ்துக்களைப் புசிக்கக்கூடாது என்று குணங்குடியார், பத்திரகிரியார் முதலிய எல்லா மகான்களும் பிரத்தியட்சமாகச் சொல்லி யிருக்க, சில பரதேசிகள், அதற்கு மாறாக எங்களுக்கு மேல் கீழ் இல்லை, எல்லாம் ஒன்றுதான், நாங்கள் எதை வேண்டுமென்றாலும் அருந்தலாம். ஆகையால், சீடா! ஒருபலம் கஞ்சா இலை வாங்கி வா! ஒரு தோலா அபின் வாங்கி வா! ஒரு புட்டி கள் வாங்கி வா! 4—திராம் சாராயம் வாங்கிவா! ஒரு சீசா சீர்மைப் பிராந்தி வாங்கிவா! என்று சொல்ல, அதைச் சில பேதை மாணவர்கள் கேட்டு அங்ஙனமே வாங்கிவந்து கொடுக்க, அவர்கள் அவைகளைக் பருகுகின்றனர். அத்தகைய மேல்கீழில்லாத பரதேசிகள், சில மகான்களைப் போல் வீரம், பூரமாகிய பாஷாணந்திகளையும் கற்கண்டைப் புசிப்பதுபோல் புசிக்கவேண்டும். விஷம் முதலிய உபாதிகள் ஏற்படக்கூடாது. அங்ஙனமாயின் அவர்கள் எதையும் புசிக்கலாம்.

ஞானவெட்டி.

1 மண்டலத்தில் குருக்களென்று பேரும் பெற்று
மகத்தான தாளிதமு மணிந்து கொண்டு
குண்டலங்கள் செவியிலிட்டு குல்லாச் சாத்திக்
கோகரணங் கெசகரணம் இரண்டுங் கற்றுத்
தெண்டிரையிற் பலவிதமாய்ப் பொய்கள் சொல்லிச்
சீடருக்கு முபதேசந் தெரியச் சொல்வார்
ஒன்றுமில்லை யவர்கள் கையில் வித்தையாச்சு
உள்ளவர்த்த மானமிதை யுரைசெய் வேனே.

2 உற்றுநின்ற சாத்திரத்தைப் பார்த்துப் பார்த்து
ஊணுகிடை யாமலுந்தான் புறட்டிப் பேசிப்
பத்தரென்றுங் குருக்களென்றும் வகுத்துச் சொல்வார்
பரகதியுந் தருவமென்று பணம் பறிப்பார்

வித்துநின்ற விடங்காணர் வேருங் காணர்
விளங்குபரந் துலங்குகின்ற வீடுங் காணர்
எத்தவமுந் தருவமென்று உலகஞ் சுற்றி
எளியோர்கள் பாவமெல்லா மினிக்கொள் வாரே.

ஞானமதியுள்ளான்.

வாசியிலே தினம்வாழ்ந்தோ மென்றே சொல்லி
வையகத் தோரை மயக்கித் தியக்கியே
தேசியி லேறும் வகையறி யாமலே
சீடர்க் குபதேசம் செய்தவன் பேயன் (நானடா)

பாலிலே தண்ணீரைக் கலந்து அன்னப்பட்சியின் முன்னே வைத்தால், நீரைப் பிரித்துவிட்டுப் பாலை மாத்திரம் பருகிவிடும். அதுபோற் சற்சீடனிடத்திற் சிற்சில குற்றங்கள் காணப்பெறினும், அவைகளைத் தமது கருணையால் விலக்கிக் குணத்தைப் பாராட்டி, சற்குரு மூர்த்தியானவர் கிடைத்தற்கரிய தத்துவஞானோபதேசம் செய்ய வேண்டும்.

திருமந்திரம்.

கருத்த விரும்பே கனகம தானல்
மறித்திரும் பாகா வகையது போலக்
குறித்தவப் போதே குருவருள் பெற்றுன்
மறித்துப் பிறவியில் வந்தணு கானே.

பொன்னரிக்குங் கம்மியன் கம்மாளர்களிடத்தி லுள்ள பொன்கலந்த மண்ணை வாங்கித் தனக்குப் பிரயோசனமான பொன்னை மட்டிலும் அரித்துக் கொள்ளுவான். அது போல், சற் சீடனனவன், கால வேறுபாட்டால் அஞ்ஞானிகளுடன் கலந்து வாழ்ந்தாலும், அவனை அந்தக் கூட்டத்திலிருந்து விலக்கி அருமையான சகச நிஷ்டையை ஞானசிரியர் உபதேசிக்க வேண்டும்.

விஷந் தீண்டியவனை மந்திர சத்தியாலும், ஔடதப் பிரயோகத்தாலும் தெளிவிப்பார்கள். அதுபோல், பிறவித் துன்பமென்னும் சுழலில் அகப்பட்ட நன் மாணவனை மெய் கண்ட தபோதனர்கள் சிந்தனையாலும், திருநோக்கத்தாலும், அஸ்தமஸ்தக சையோகத்தாலும், தனது திருவடிப் பரிசத்தி னாலும் மெய்ஞ்ஞானி யாக்கிவிடுவார்கள்.

ஒழிவிலொடுக்கம்.

பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்தும் மலமாயைக்
கருமத்தை யெல்லாங் கழற்றிச்—சரிதாதி
வாதனையாம் போத மயக்கத்தை வாக்காலே
போதை செய்து போக்கிவிடப் போம்.

திருவிளையாடற் புராணம்.

பார்த்த பார்வையால் இரும்புண்ட நீரெனப் பருகும்
தீர்த்தந் தன்னையும் குருமொழி செய்ததும் தம்மைப்
போர்த்த பாசமும் தம்மையு மறந்து மெய்ப்போத
மூர்த்தியா யொன்றும் அறிந்திலர் வாதவூர் முனிவர்.

இந்தப் பூமியினிடத்தில் ஒருவனுடைய வியாதியை நிச்சயம் பண்ணி, இத்தனை நாளைக்குப் பிறகு தான் இவனுக்கு ஔடதங் கொடுக்கவேண்டுமென்று வைத்தியர்களால் நியமிக்கப் பெற்றாலும், ஒவ்வோர் அசாத்தியமான வியாதி யுடையவனுக்குப் பிணி சம்பவித்த அந்த நிமிடமே (*) பூபதி முதலிய அரிய ஔடதங்களைக் கொடுத்து அவ

* பூபதி செந்தூரத்தின் முறை:—பதங்க வெள்ளை, லோக வெள்ளை, காந்த வெள்ளை, நாக வெள்ளை, செம்பு வெள்ளை, வகைக்கு களஞ்சு 2 இவைகளை ஒரு சாமம் காமப் பால் விட்டரைக் கவும். அதன் பின் வயிரம், பவளம், முத்து, புட்பராகம், மரகதம், மாணிக்கம் வகைக்கு களஞ்சு $\frac{1}{2}$, கெந்தகம் களஞ்சு 4, முப்பூ

னுயிரை உடனே திருப்ப முயல்வார்கள். அதுபோல், சாதன சதுட்டயமே ஓர் வடிவெடுத்து வந்தது போன்ற தீவிரதர பக்குவனுக்கு ஓராண்டேனுஞ் சோதனை புரிந்து, அதன்மேல் ஞானுசிரியர் அநுக்கிரகம் பண்ணவேண்டு மென்று சாத்திரங்கள் முறையிட்டிருப்பினும், ஒவ்வோர் அதிதீவிரதர பக்குவனுக்கு அந்தச்சணமே (அல்லமதேவர் அக்கமாதேவிக்கு உபதேசம் செய்ததுபோல்) உபதேசிக்க வேண்டும்.

பாதாதிகேச பரியந்தம் அக்கினி பற்றிக்கொண்டவனுக்கு மடுவில் வீழ்ந்து மூழ்கினுலன்றி, கொஞ்ச சலத்திற் பிரவேசித்தால் அந்த அக்கினியின் வெப்பந்தணியாது. அதுபோல் பிரபஞ்ச மாயையென்னும் கொடிய வேங்கைக்குப் பயந்து சரணுகதியடைந்த சீடனுக்கு, அவனை விழுங்கி மேவிடத் தகுந்த அகண்டாகார ஞானநெறியைச் சற்குருவானவர் உடனே அநுக்கிரகஞ் செய்யவேண்டும்.

---

களஞ்சு 4, இரசம் களஞ்சு 8, தாளகம், மனேசிலை, வெள்ளைப் பாஷாணம், துத்தம், துரிசு, நவச்சாரம், சீனுக்காரம், வீரம், பூரம் வகைக்கு களஞ்சு 1, இவைகளைப் பொற்றலைக்கையான் சாற்ருல் 1 சாமம் அரைத்து அமுரியில் சுருக்குக் கொடுத்து எடுத்து பழச் சாற்ருல் 1 சாமம் அரைத்து வில்லை செய்து ரவியில் காயவைத்தெடுத்துப் புதுக் கலசத்திற்குள் வைத்து வலுவாய் மூடி 7 சீலை மண் வலுவாய்ச் செய்து 50 எருவில் புடம்போடப் புகையாமற் கட்டி நீறும். புடம் ஆறினபின் எடுத்துப் பார்க்கச் செந்தூரம் அருணேதயம்போல் சிவந்திருக்கும். செந்தூரத்தின் எடைக்குப் பாதி சாதிலிங்கஞ் சேர்த்து முலைப்பால் விட்டரைத்து விரல் நீளம் கம்பிபோல் செய்து உலர்த்தி வைத்துக்கொண்டு குரு பாதத்தை வணங்கி அனுப்பானத்தில் அரிசி எடை கொடுத்தால் இறந்தவனுக்கும் தாது உண்டாகும் என்பர் ஆன்ருேர்.

கைவல்ய நவநீதம்.

அடங்கிய விருத்தியானென் றறிந்தபின் செறிந்தமண்ணின்
குடம்பையுட் புழுமுன்னூதுங் குளவியின் கொள்கைபோலத்
தொடங்கிய குருவுமான்ம சொரூபமே மருவவேண்டி
உடம்பினுட் சீவனைப்பார்த் துபதேச மோதுவாரே.

தாலத்தில் மரங்கள்காட்டித் தனிப்பிறை காட்டுவார்போல்
ஆலத்தி னுடுக்கள்காட்டி யருந்ததி காட்டுவார்போல்
தூலத்தை முன்புகாட்டிச் சூக்கும சொரூபமான
மூலத்தைப் பின்புகாட்ட முனிவரர் தொடங்கினரே.

ஞான பூபதிகள்.

முத்திசெல வழிகாட்டித் தந்திரமா யோர்மொழியை
மொழிந்து நாளுங்
கொத்துகின்ற பெண்ணரவின் மயல்விலக மௌன வித்தைக்
கொடுத்த ஞான
அத்துவிதத் தெருண்மணியை அப்துர்றகு மானெனுவியை
அடங்கா வின்பச்
சித்துருவாய் நின்றிலகுங் குருமணியின் பதகமலஞ்
சிரமேற் கொள்வாம்.

---

## நான்காவது அத்தியாயம்.

---

### சீடரியல்.

அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம்.

மாணவர்க ளுத்தமமத் திமவதம னெனுஞ்சீட
வகுப்பு மூன்றிற்
காணுமந்த மந்ததரந் தீவிரந்தீ விரதரமாய்க்
கவலா னின்ற
பூணுமருட் சத்தினிபா தர்களெனு நால்வர்களும்
பொருந்து மாண்பை
யாணர்பெற வுபமான வுபமேய முடன்றெளிவா
யறைகு வாமால்.

சீடன், மாணாக்கன் என்பன ஒருபொருட் பலபெயர்.

மாணாக்கர்கள் :—உத்தம மாணாக்கர், மத்திம மாணாக்கர். அதம மாணாக்கர் என மூவகையாவர்.

உத்தம மாணாக்கன் :—இவனே முதன் மாணாக்கன். இவன் அன்னப் பட்சியையும், பசுவையும், சிப்பியையும், கொக்கையும், இரும்பு நீரையும், மின்னலிற் பொருள் பார்ப்போனையும் நிகர்த்தவன்.

அன்னப்பட்சியானது, பாலுடன்கலந்த நீரைப் பிரித்துவிட்டுப் பாலைமாத்திரம் பருகும். அதுபோல், ஆசிரியரிடத்திலுள்ள தீக்குணம், தீச்செய்கைகளைப்பற்றி இகழாமல், நற்குண, நற்செய்கைகளுக்காக மட்டும் புகழ்வான். அன்றியும், அவர் வாக்கியத்திலுள்ள சரிதாதிகளை நீக்கி, ஞானமொழியை மட்டும் எடுத்துக்கொள்வான்.

7

பசுவானது, அதிகமான புல்லுள்ள விடத்தைக் கண்டால் வயிறு நிரம்ப மேய்ந்து, பின்பு ஓரிடத்தில் படுத்துக் கொண்டு சிறிது சிறிதாக வாயில் வருவித்து மென்று தின்று சீரணப்படுத்தும். அதுபோல், ஞானசிரியரிடத்திற் கேட்ட உபதேசத்தை ஓர் ஏகாந்தமான விடத்திலிருந்து சிந்தித்து நிட்டை கூடுவான்.

சிப்பியானது, சோதி மழைக்கு அங்காந்திருந்து, துளி விழுந்தமாத்திரத்தில் அகட்டை மூடிக்கொள்ளும். அது போல், ஆசிரியர் எப்போது கூறுவார் ? என இதயமலர்ந்து எதிர்பார்த்திருந்து கேட்டு, அவ்வாக்கியப்பொருளை அகத்தில் அடக்கிச் சிந்தித்துணர்வான்.

கொக்கானது, நீர்த்துறையினிடத்தும், மடைவாயலினிடத்தும் அசைவறநின்று, மீன்வந்துழி ஒரே கொத்தில் கவர்ந்து புசிக்கும். அதுபோல், சித்திரப் பாவைபோன்று அசைவற இருந்து, பயன்தரும் வசனங்கள் வருந்தோறும் கவனமாகக் கொள்ளுவான்.

சச்சிதானந்த மாலை.

மடைவாயிற் பட்சிபோல் நடைபார்த் திராமலே
மற்றென்ன கற்றறிவையோ.

மூதுரை.

... ... ... —மடைத்தலையில்
ஓடுமீன் ஓடி யுறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாங் கொக்கு.

திருக்குறள்.

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

காய்ந்த இரும்பானது, தனக்கு வேண்டிய நீரைப் பருகி அதனைத் திரும்ப வெளியில்விடாது. அதுபோல் தமக்குவேண்டிய உபதேசமொழிகளை யேற்றுக்கொண்டு மறவாதிருப்பது மன்றி, வெளியில் பிதற்றுதலுஞ் செய் யான்.

இருண்டு மழைபெய்யும் மின்னற்காலத்தில், தீபமில்லாத போது ஒருபொருளை இன்னதென்று பார்க்க விரும்பியவன், அந்த மின்னல் ஒளியில் கூர்மையாக விரைந்து நோக்கு வான். அதுபோல் அதிசீக்கிரத்தில் கூறிய குருவாக்கியத் தின் பொருட்களை உடனே யறிந்துகொள்ளுவான்.

மத்திம மாணாக்கன் :—இவனே இடைமாணாக்கன். இவன் உழுகிற நிலத்துக்குச் சமானமானவன். உழுநில மானது, உழவர் வருந்திப் பயிர்செய்யும் முயற்சிக்குத் தக்க வாறு விளைவைத்தரும். அதுபோல் ஞானாசிரியர் சீடன் சமீபத்திலிருந்துகொண்டு எவ்வளவுக்கு இகழ்ந்துபேசி ஆன்ம விசாரம் உண்டாக்குகின்றாரோ? அவ்வளவுக்கு (நிர்ப்பந்தத்திற்காக) சிறிது சிறிது அநுஷ்டிப்பான்.

அதம மாணாக்கன்:-இவனே கடைமாணாக்கன். இவன் பன்னாடையையும், வெள்ளாட்டையும், எருமையையும், பல துவாரமுள்ள இல்லிக்குடத்தையும், உண்ணியையும், மரத்துண்டையும், சரீரத்தையும் நிகர்த்தவன்.

பன்னாடையானது, நெய், தேன் முதலியவைகளை வடிக்கட்டுதற் பொருட்டுத் தன்மேல் வார்க்கும்போது, மதுரமான சாரத்தைக் கீழே ஒழுகவிட்டுச் சாரமற்ற சக்கையையே தன்னிடத்தில் தங்கச்செய்யும். அதுபோல், ஆசிரியர் திருவாயிலிருந்துவந்த உசிதமான சம்பாஷணையை மறந்துவிட்டு அநுசிதமான சம்பாஷணையையே சிந்தித்துக் கொண்டிருப்பான்.

வெள்ளாடானது, ஒரு செடியிலேயே தன் வயிறு நிரம்பும்படி தழை நிரம்பியிருக்கப்பெற்றும், அதனை வயிறு நிரம்ப மேயாமல் "கன்று மனத்துடனூடு தழை தின்றாற் போல்" என்னும் பெரியார் வாக்கியப்போல் பல செடிகளிலுஞ் சென்று சிறிது சிறிது தின்று வயிறு நிரம்பாமல் அலையும். அதுபோல், தான்இரண்டறக் கலத்தலாகிய பிரம்மஞானம் அடைவதற்குண்டான தவநெறிகள் ஒரே ஆசிரியரிடத்திற் காணப்பெறினும், அவரிடத்திற் சிற்சில விஷயங்களைக் கேட்ட மாத்திரத்திலேயே அவரிடத்தை நீங்கி பல ஆசிரியர்களிடத்திலும் அலைந்து, உண்மையை அறியாமல் மயங்கித் திரிவான்.

எருமையானது, தெளிந்த நீரைக் கலக்கி அதன் பின்னரே பருகுவதுபோல, ஞானசிரியர் இதயத்தை மகிழும்படிச் செய்து அவரால் உபதேசிக்கப் பெறும் ஞானமிர்தத்தைத் தெளிவுபெற வுண்ணமல், அவர் சித்தத்தைத் தனது விபரீத வினவாற் கலக்கி, அவர் மனம் வருந்திக் கூறுஞ் சிற்சில மொழிகளைச் செவி வாயினல் உண்பான்.

பல துவாரங்களையுடைய இல்லிக்குடமானது, தன்னுள் வார்க்கும் நீரைப் புறத்தில் ஒழுகவிட்டு நிரம்பாமல் இருப்பது போன்று, ஆசிரியர் இரவும் பகலுமாக ஞானமிருதத்தைப் பல திருட்டாந்த தாட்டாந்தங்களைக் கொண்டுப் பலகாற் புகட்டினும், புகட்டும் அக் கணத்திற்றானே அந்த வாக்கியாமிருதத்தை மறந்துவிடுவான்.

உண்ணியானது, பசுவின் முலைக்காம்பில் (பால்வரும் துவாரத்தில்) கடித்துக் கொண்டிருந்தும், பரிசுத்தமும், மதுரமும் பொருந்திய அந்தப் பாலையுண்ண வகை தெரியாமல், அசுத்தமாயும், துர்க்கந்தமாயு மிருக்கின்ற அப்பசுவின் இரத்தத்தைப் பருகி ஆனந்தம் அடையும். அது

போல், ஆசிரியர் வாக்கியத்தின் ஞானமிருதம் சுரந்து பெருகிவராநின்ற அர்த்தத்தில் அழுந்திச் சுகானந்தம் பெறுமல், அனர்த்தத்தையே பொருளாகக் கொள்வான்.

உலர்ந்த மரத்துண்டைப் பல மனிதர்கள் கூடி நீரிற் பூமி மட்டத்துக்கு அழுத்தினலும், அவர்கள் கையை விட்டவுடன் கனவேகமாய்க் கிளம்பி நீர் மட்டத்திற்கு வந்துவிடும். அதுபோல் ஆசிரியர் மாணக்கன் அறிவைப் பற்பல சாத்திர உவமான உவமேயங்களின் ஆதரவைக் கொண்டு ஞானனந்த சமுத்திரத்தில் முழுகச் செய்யினும், அவர் போதனை நீங்கிய அக்கணத்திற்றனே விடய இச்சையாற் பகிர் முகத்தாராய்ச்சியிற் சிக்கி வருந்துவான்.

சரீரமானதைப் பலவிதமான சுகந்தப் பொடி சந்தன முதலிய களப கஸ்தூரிகளாற் பரிமளிக்கச் செய்து, திவ்வியமான வாசனைநீரில் ஸ்நானம் செய்து பரிசுத்தப்படுத்தி வைக்கப் பெற்றாலும், மீண்டும் வேர்வையாதிகளால் துர்க்கந்தம் வீசும். அதுபோல், ஆசிரியர் சீடன் மனத்தை ஞானோதகத்தாற் பல தடவைகளிலும் சுத்தப்படுத்தி உபதேசஞ்செய்தாலும் (ஒரு ஆசிரியர் மாணவனுக்குப் பாடஞ் சொல்லிக் கொடுத்து முடிந்த பின்னர், பையா! நான் சொன்னவை யெல்லாம் உன் செவியில் நுழைந்ததா? என்க, அதற்குப் பையன் பாடஞ் சொல்லும்போது பக்கத்திலிருந்த வளையில் ஒரு எலி நுழைவதைப் பார்த்துக் கொண்டே யிருந்தபடியால், உபாத்தியாயர் எலியைப்பற்றித்தான் கேட்கிறார் எனக் கருதி, எல்லாம் நுழைந்தது வால் மாத்திரம் நுழையவில்லை யென்றான் என்னுங் கதை போல்) ஞானசிரியர் உபதேசங் கூறும்போது அதைக் கவனிக்காமல் வேறொன்றிற் பராக்காக இருந்துவிட்டு மீண்டும் மும்மலாதிகளின் விடய துர்க்கந்தத்திற் பொருந்தி வருந்துவான்.

ஒழிவிலொடுக்கம்.

*முலையுண்ணி நீருண்ணு மோட்டெருமை மூடர்*
*சலமின்றிச் சந்துரைப்பார் தர்க்கர்—பலதாரை*
*வட்டிலே போலுமவர் மாயோக வாசகத்தைக்*
*கிட்டி னரகங் கிடீர்.*

நன்னூல்.

*அன்ன மாவே மண்ணொடு கிளியே*
*இல்லிக் குடமா டெருமை நெய்யரி*
*அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்.*

இந்த மூவகைத்தான மாணவர்களுள் வெவ்வேறு குணமுள்ள சிலரை, சத்திநிபாதர் என்னும் நான்கு வகைச் சீடர்களாக ஆன்றோர் வகுத்திருக்கின்றனர். அவர்கள், மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என்னும் பக்குவத்திற் குரியவர்கள்.

(1) மந்தம் :—கருங்கல்லை ஓர் பாவை வடிவாக்கு முறைமை போல், இப்பக்குவனை அருள்வடிவாக்குதற் பொருட்டு இவனது பந்தபாசத்தை நீக்குமிடத்து, சேறு கலந்த நீரானது தேற்றூங் கொட்டையின் சந்தனத்தினுல் தெளிந்து வருதல் போல், இவனுக்கு இல்வாழ்க்கையிற் பற்றும்-பற்றின்மையும் கலந்து வருவதுடன், நாம் யார்? இவர்கள் யாவர்? நாம் எதற்காகப் பிறந்தோம்? என்கிற ஆன்ம விசாரத் தெளிவும் பிறக்கும். அப்போது இல் வாழ்வானது, வாந்தி பண்ணிய சோற்றைப்போல் அருவருப்பாகத் தோற்றும். இவனுக்கு ஞானோபதேசஞ் செய்தால், பழத்தினுள் மறைந்திருக்கும் இரசமானது ஆராய்ந்தறிந்து புசிப்பவர்க்கு இன்பந் தருவதுபோலும்; ஈரமான வாழைத்தண்டைப் பல நாட்களாய்ப் பலவித விறகுகளால் சுடுவதுபோலும்; மதுவை வயிறு நிரம்ப அருந்தி மூர்ச்

சித்துக் கிடந்த பெண் தும்பியை ஆண் தும்பி சூழ்ந்து கொண்டு இடையறு ரீங்காரஞ் செய்து பாடியாட, அதற்கு மூர்ச்சை தெளிந்து இதனோடு பறந்து கூடுதல் போலும்; சீடனுடைய ஆணவ மூர்ச்சை தெளியும்படியாகக் குருவானவர் வேதாகமங்களைக் கொண்டும், பற்பல உபதேச மொழிகளைக் கொண்டும், நாநாவித உபாய யுத்திகளைக் கொண்டும் இடைவிடாது போதித்துக் கொண்டிருக்க, இவனுக்கு ஆன்ம சுத்தியாகி ஞானோதயமாகும். இவன் நெருப்பினால் உருகும் இரும்பை நிகர்த்தவன்.



திருமந்திரம்.

இருட்டறை மூலை யிருந்த குமரி
குருட்டுக் கிழவனைக் கூடற் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புரிந் தாளே.

(2) மந்ததரம்:—இரும்பை யுருக்கி ஓர் பாவை வடிவாக்கு முறைமைபோல், இப்பக்குவனை அருள்வடிவாக்குதற் பொருட்டு இவனது பந்தபாசத்தை நீக்குமிடத்து, சிற்சில விறகுகளால் பச்சை மரத்தைச் சுடுவித்தல் போலும், காய்ச்சிய பாலில் நெய்யானது தோன்றியுந் தோன்றாமல் மறைந்திருப்பது போலும், இவனுக்குச் சகுனப்புள் என்னும் ஆந்தையினது வாக்கால் கோறிய பொருள் கிடைத்தல் போலும் சற்குருவானவர் சிற்சில வாக்கியங்களால் தெளிவிக்கத் தெளிவு பிறக்கும். அப்போது இல்வாழ்க்கையானது தாமரை யிலை நீர்போல் பொருந்தியும் - பொருந்தாமலும் இருப்பதுடன், பிரபஞ்சமானது கானற் சலம்போல் தோற்றி ஆன்ம சுத்தியாகி ஞானோதயமாகும். இவன் நெருப்பினால் உருகும் அரக்கை நிகர்த்தவன்.

திருமந்திரம்.

மருட்டிப் புணர்ந்து மயக்கமு நீக்கி
வெருட்டி வினையறுத் தின்பம் விளைத்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
அருட்டிகழ் ஞான மதுபுரிந் தானே.

(3) தீவிரம்:—மரத்தை ஓர் பாவை வடிவாக்கு முறைமைபோல், இப்பக்குவனை அருள் வடிவாக்குதற் பொருட்டு இவனது பொறிகள் - கரணங்கள் - பந்தபாசங்கள் முதலானவைகளை நீக்குமிடத்து, மரம் சுட்ட கரியில் அக்கினி யுண்டாக்குவதுபோல், இவனுக்குக் குருவானவர் அவனுடைய தற்போதம் அடங்கி யிருந்தும், மீண்டும்பதையாது ஒழிவதற் கேதுவாகக் கூறும் ஓர் வாக்கியத்தால் தெளிவு பிறந்து, இல்வாழ்க்கையானது பல பேரும் தங்கும் பொது மண்டபம் போலவும், வானவர்கள் வாழ்வும், சுவர்க்காதிபோகமும் சொப்பனம் போலவும் தோற்றும். இவனுக்கு பூவின்கண் பரிமளம் இருப்பது தோற்றியும் பிரித்தறியப்படாதது போல், கடவுள் இருக்கையானது தோற்றியும் இத்தன்மைத் தென்று பிரித்தறிய முடியாத விதமாக ஆன்ம சுத்தியாகி ஞானோதயமாகும். இவன் நெருப்பினால் உருகும் மெழுகை நிகர்த்தவன்.



திருமந்திரம்.

அண்ணிக்கும் பெண்பிள்ளை யப்பனார் தோட்டத்தில்
எண்ணிக்கும் ஏழேழ் பிறவி யுணர்விக்கும்
உண்ணிற்ப தெல்லா மொழிய முதல்வனைக்
கண்ணுற்று நின்ற கனியது வாமே.

(4) தீவிரதரம்:—வெண்ணெயை ஓர் பாவை வடிவாக்கும் முறைமைபோல் இப்பக்குவனை அருள்வடி வாக்குதற் பொருட்டு இவனது பந்தபாசங்களை நீக்குமிடத்து, இவ

னுக்கு ஒன்றுங் கூறுமல் ஞானசிரியர் மவுனனந்த நோக்காற் பார்த்திருக்க, எரிகிற விளக்கின் கொழுந்திற் பிடித்த உரோமங் கருகியதுபோல் பாசம் நீங்கிக் காய்ந்த பஞ்சில் நெருப்புப் பற்றுவதுபோல் ஆன்ம சுத்தியினுல் ஞானேதயமாகி, முன்னடைந்த துன்பங்களை நினைந்து அழுகையும், அத்துன்பங்களை ஒரு கணத்தில் நீக்கிய ஆசிரியர் அற்புதச் செய்கையை நோக்கி ஆனந்தமுந் தோன்றி, உரோமஞ் சிலிர்த்தலு முண்டாகும். இவன் நெருப்பினுல் உருகும் வெண்ணெயை நிகர்த்தவன்.

திருமந்திரம்.

இருவினை நேரொப்பில் இன்னருட் சத்தி
குருவென வந்து குணம்பல நீக்கித்
தருமெனும் ஞானத்தால் தன்செய லற்ருல்
திரிமலந் தீர்ந்து சிவனவ னுமே.

ஆறு, எழு, எட்டு, ஒன்பது மாற்றுள்ள பொன்களைப் பத்து மாற்ருகும் பொருட்டு ஒன்ருகப் புடமிட்டால், மாற்றதிகமாயுள்ள (9) மாற்றுப் பொன் முதலிற் பழுக்குமேயன்றி, ஏனைய பொன்களும் ஒரே படித்தாய்ப் பழுக்காது. அதுபோல் ஞானசிரியர், பக்குவர் நால்வருக்கும் ஓர் படித்தாக உபதேசங் கூறினுலும் உயர்ந்த பக்குவனுகிய தீவிரதரனுக்கு முன்னர் ஞானேதயமாகுமே யன்றி, எல்லோர்க்கும் ஒரே படித்தாக ஞானேதயமாகாது. இதற்கு உதாரணம் :—

திருவுங் கல்வியும், சீருஞ் சிறப்பும் மருவிய பாண்டி மண்டலத்தில் திருவவதாரம் புரிந்து, தென்னிந்தியாவில் மஸ்தான்களுக்குள் மாட்சிமை பெற்ற மகுட மன்னராக, சென்னை இராயபுரத்தில் பரிபூரணமாக விளங்கும் காமில் ஒலியுல்லா, சுல்தான் அப்துல் காதிறு லெப்பை ஆலீம்

என்னும் குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள், தமது வனப்புறும் வாலை வயது பதினேழில் ஹிஜ்றி 1228 (இங்கிலீஷ் கி. பி. 1809) - வது வருடத்தில், கீழக்கரை தைக்கால் சாகிபு ஒலியுல்லா அவர்களிடம் பலமாணவர்களுக் கிடையில் அறபி பாஷையின் அரிய பெரிய நூற்களான "எஹியாவுல் உலூமித்தீன்", "இன்சான் காமில்" முதலியவைகளுக்கு பொருட் பாடங் கேட்டுக் கொண்டிருக்கும்போது, அவைகளிலுள்ள மகா இரகசியமாகிய யோகஞான மார்க்கங்களை யடையவேண்டுமென்று, மஸ்தான் சாகிபு அவர்கள் பேரவாக் கொண்டு, அவைகளை எவ்வாறு பெறலாம் என்று, அன்பு-அச்சம் முதலியவைகளுடன் ஆசிரியரிடம் கேட்க * வாயை மூடினால் சலாமத்து (ஈடேற்றம்) பெறலாம் என்று ஒரு மொழியின் பொருள் தோன்றும்படி ஒரே மொழியாக மொழிந்தார்கள். அம்

---

* வாயை மூடுதலினால் ஒருவித அட்சரம் உண்டாகிறது. அந்த அட்சரமானது கலிமாவினதும், பிரணவத்தினதுமாகிய ஹூ (ஓம்) என்னும் வட்டவடிவான ஏகாட்சர ஒரு மொழியாம். வாயை மூடுவதினால் ஏற்படுகிற அட்சரத்தின் தொனியையே மனிதர்கள் எல்லோரும் உச்சரிக்கிறார்கள்; ஏனைய பிராணிகளும் அதையே உச்சரிக்கின்றன. ரெயில், கப்பல், முதலான சகல நீராவி யந்திரங்களும் அவ்வட்சரத்தின் தொனியையே சப்திக்கின்றன. இந்த மகா மந்திராக்கரத்தின் மகத்துவத்தை எவராலும் புகலுந் தரத்ததன்று. இப்பரம ரகசிய அட்சரத்தை காயற்பட்டினம் நூகு லெப்பை ஒலியுல்லா அவர்கள் பாடிய வேத புராணத்திலும், சுப்பிரமணிய ஞானம் 200, சுப்பிரமணிய ஞானம் 500 முதலான பல நூற்களிலும் மிக்க ரகசியமா யமைக்கப் பெற்றுள்ளன. அன்றியும், அனேக சிறந்த மகான்களிடத்தில் நான் கலந்து பார்த்ததில், இம் மகா மந்திரத்தையே இரகசியமாக வைத்துள்ளார்கள்.

மகா வாக்கியத்தைக் கூறக் கேட்ட அக்கணமே மஸ்தா னவர்கள், கரண †மௌன விரதங்கொண்டு, பந்தபாசங்களை வேரோடறுத்து, உலக முற்றிலுந் துறந்து, வெளியேறி என்னை யறிந்தேனே—இனி ஏகாந்தமானேனே—என்னுஞ் சுகானுபவத்தால் "சையோகப் பித்தைவென்று சமர்த்தோடு கச்சை கட்டி" மெய்யோக வியோமாதீதத்திற் கலந்து "மீசையுள் ளாண்பிள்ளைச் சிங்கங்கள் என்கூட வெளியினில் வாருங்கள் காணும்" என்பது போன்ற அநேக நவநவமான வீர வசனங்களைக் கூறிப் பத்தி வைராக்கியக் கடன்மடையை திறந்து, வெற்றிக்கொடி நாட்டிய செயசீல தவராச சிம்ம மாகப் பிரகாசித்து, "கருதும் அன்பர் கலிதீரப் பருகவந்த செழுந்தேனுக" வேண்டுவார்க்கு வேண்டியவற்றைக் கடாட் சித்து, எண்ணற்கரியவண்ணம் அநேக அற்புதத் திருவிளை யாடல்களைப் புரிந்து, பின்னரும் உலோகோபகார்த்தமாக தமது யோக ஞானுனுபவங்களை மொழிக்குமொழி தித்திக் கும் இனிய இயலிசைப் பாசுரங்களின் மூலமாக கிருபா நோக்கத்துடன், "போவோம் குணங்குடிக் கெல்லோரும் புறப்படுங்கள்" எனத் திருவாய் மலர்ந்தருளிய கண்கண்ட காரண குருவான இவர்கள் திருப்பாடல்களை வாசித்த— கேட்ட சர்வமத சகோதர சகோதரிகளும் நன்குணர்வார்கள்.

அவ்வாறு வெளியேறிய மஸ்தான் சாகிபு அவர்களின் அதிதீவிர பக்குவத்தை யறிந்த ஏனைய மாணுக்கர்கள், தாங் களும் அவர்களைப்போல் துறவடைய விரும்பி, கரண மௌன விரதத்தை யனுட்டிக்க முடியாமல், சாதாரண வாக்கு

---

† மௌன மென்பது-வாக்கு மௌனம், கரண மௌனம், காட்ட மௌனம், சுழுத்தி மௌனம் என நான்கு வகையாகும். அவற்றின் முழு விபரங்களை நமது ஞானக் களஞ்சியம், குண்டலி சத்தி அத்தியாயத்திற் காண்க.

மௌனத்தை சில நாள் வரையில் அநுட்டித்து பின்னர் அதையும் வகிக்க முடியாமல் விட்டு விட்டார்கள்.

ஆசிரியாரகிய தைக்கால் சாகிபு ஒலியுல்லா அவர்கள், "வாயை மூடினல் சலாமத்துப் பெறலாம்" என்று எல்லா மாணவர்களுக்கும் ஒரே படித்தாய்க் கூறி யிருந்தும், குணங்குடி மஸ்தான் சாகிபவர்கட்குச் சித்தித்தது போல் ஏனைய மாணவர்கட்குச் சித்திக்கவில்லை. இது காரணத்தினலேயே மாணவர்கள், மந்தம்-மந்ததரம், தீவிரம்—தீவிரதரம் என்று நான்கு வகையாகப் பிரிக்கப் பெற்றிருக்கின்றனர்.

சற்குருவாகிய ஞானசிரியரைத் தீவிரதர பக்குவர்கள் எவ்வாறு தேடுவார்களெனின், முதிர் வேனிற் காலத்தில் மலைகளின்கண் உண்டாகும் தீ வெப்பத்தால் மெய்வருந்தி, அது தணிப்பான் கருதி நீர்எங்கேயுளது? என்று தேடும் அந்தகரைப்போல், பிறவித் துன்பத்தைத் துடைக்குமாறு கருதி, ஞானசிரியர் எங்குளர்? என்று பல திசைகளிலுந் தேடி யலைவார்கள்.

ஓர் விடயானந்தத்தை விரும்பிய அதிமோகியானவன், அதனல் வரும் இன்பத்தைக் கருதிக் கருதி, அக்காரியம் என்றைக்குக் கைகூடுமோவென்று அதையே நினைந்து கொண்டிருப்பது போல், பேரின்பத்தைக் கருதிக்கருதி, அவ்வின்பத்தைக் கொடுக்கும் ஞானசிரியரை என்றைக்கு அடைவோம்? என்று ஓயா விசாரங் கொள்வான்.

இத்தகைய ஆன்மவிசாரம் மேலிட்டு, ஞானசிரியர் எங்குளர்? என்று தேடும் தேட்டம் பிறந்த காலத்து, சரீரத்தில் வியர்வை அரும்பும்: கண்களில் ஆனந்தநீர் ஒழுகும்: மனமும் - உடலும் நடுங்கும்: வார்த்தை குழறும்: ஆசாரியரை யென்றைக் கடைவோம்? என்று மனமானது அதிக

கவலை கொள்ளும்: சரீரத்தில் வெதும்பும்: மயிர் விதிர் விதிர்க்கும். இந்த எட்டு குணங்களுடன்,

மனமானது, சகமுகத்தை நீங்கி அகமுகமாய் நிற்றலால் அருக்கிய நோக்கமென்னும் அரைக்கண் பார்வையும், ஞானசிரியரை அடையவேண்டுமென்கிற சிந்தனையும், அவரை நினைப்பான் தோறும் நெட்டுயிர்ப்பெறிதலும், அந்நினைவு மேலீட்டால் பிறர் அறியக்கூடாத உட்சுரம் வருதலும், அதனால் ஊணுறக்க முதலியவற்றைத் துறத்தலும், இதனைப் பிறருக்கு எதுவென்று சொல்வோம்? என்று சொல்லாமல் அடக்குகின்ற மானமும், அங்ஙனம் சொல்லாதிருக்கும் மவுனமும், விசார மேலீட்டால் பித்தம் ஏறலும், இந்த அவஸ்தைகள் படுங்காலத்தில் ஞானசிரியர் எதிர்ப்படாராயின் மூர்ச்சித்தலும், இறத்தலுமாகிய இந்தப் பத்து அவத்தைகளும் தோற்றும்.

மூர்ச்சித்தலும் - இறத்தலுமாகிய இரண்டவத்தைகளும், தீவிரதர பக்குவர்களுக்கே யன்றி, ஏனைய பக்குவர்கட்குத் தோற்றுது.

வேதாந்த சூடாமணி.

நானார்? இப் பவமெனக்கு வந்தவா றென்கொல்?
நசிப்பதெவ ரால்? என ஆய்ந் தலர்கரங்கொண் டேகி
யானாற் கல்வியறி வடக்கம்வை ராகம்
ஆதியாங் குணமுடைச்சற் குருவையடைந் தெதிர்மண்
ஊனாரப் பணிந்தெழுந்தன் பாற்கரங்கள் குவித்தே
உறவழுத்தி யருட்குருவே யென்பாசத் தொழிவு
தானுமெத் திறத்தின லெனவினவல் சீடன்
தனதுவிதி வசத்துபசன் னத்துவமா மன்றே.

பட்டினத் தடிகளுக்குப் பேய்க்கரும்பு தித்தித்த இடமே முத்திக்கு இடமென்றதுபோல், எந்தக் குருவைக்

கண்டால் சீடனுக்கு மேற்கூறிய பதினெண் குறிகளும் உண்டாகின்றனவோ, அந்தக் குருவே அவனுக்கு ஞானுசிரியர்.

ஞானுசிரியர் திருமேனியைச் சீடன் கண்ட மாத்திரத்திலே, அன்பென்னும் நதியானது கரைபுரண்டு பெருகி, அவ்வாசிரியரைப் பன்முறை வலம் வந்து அட்டாங்க முதலிய வணக்கஞ் செய்து எழுந்து, அஞ்சலி பந்தனம் புரிந்து ஆனந்தக் கண்ணீ ரொழுகத் தோத்திரம் பண்ணி, எமது பெருமானே! அடியேனுக்கு இந்த வுடல் எதற்காகக் கிடைத்தது? அதற்குள்ளிருக்கும் நான் யார்? எமக்கு முதலாயுள்ள மெய்ப்பொருள் யாது? என்று அன்பாவலோடு கேட்குஞ் சீடனுக்கே ஞானுசிரியர், முன் ஆசிரியரியலிற் கூறிய அறுவகைத் தீட்சைகளைப் புரிந்துய்யுமாறு செய்வார்.

## சிவஞானசித்தியார்.

பரப்பிரமம் இவனென்றும் பரசிவன் தானென்றும்
பரஞானம் இவனென்றும் பராபரன் தானென்றும்
அரன்தருஞ்சீர் நிலையெல்லாம் இவனே யென்றும்
அருட்குருவை வழிபடவே அவனிவன் தானுயே
இரங்கியவா ரணமாமை மீனண்டஞ் சினையை
இயல்பினெடு பரிசித்து நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதா மாக்குமாபோற் சிவமே யாக்கும்
பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே.

ஆனல் ஞானுசிரியர், மாணக்கனது பரிபக்குவ மறிந்து அகண்டாகாரமாகப் பேரின்ப மவுனனந்த வெள்ளம் பெருக்கெடுத்துப் பொங்கித் ததும்பிய காலத்து, அவனது சத்திக்குத் தக்கவாறு சீடனை நோக்கி வலியக் கூறுங் காலத்தளவும், சீடன் பணிவிடை செய்து காத்திருந்து கேட்க

வேண்டுமே யன்றி, ஆசிரியரிடம் சீடன் வலியக் கேட்கக் கூடாது. அங்ஙனம், அதைச் சொல்லுங்கள்! இதைச் சொல்லுங்கள்! என்று சுட்டிக் கேளாமல் மனம் பதைப் பற்றிருந்து, குரு சொல்லக் கேட்பவர்களுக்குத் தானாகவே (கொம்பில் பழுத்த பழத்தைப் புசிப்பது போல்) ஆனந்த சுகோதயம் உண்டாகும்.

ஒழிவிலோடுக்கம்.

தேனுண் டுமிழுந் திறம்போற் சிவானந்த
மோனந் துளும்பி மொழிகாலத்—தேநின்று
தோன்றிருது போலுமொன்றைச் சுட்டாது கேட்பவர்கட்
கான்றதவம் வேத மது.

சிவஞானவள்ளல்.

சீடனறி வெவ்வளவோ அவ்வளவுஞ் சிந்தித்துக்
கூடுமுப தேசங்கள் கூறுவா—னீடுபுகழ்
ஊக்கமுடைச் சீராம ஞெண்ணுதற்கா யன்றெய்தான்
காக்கைக்குத் தக்க கணை.

இவ்வாறு ஞானசிரியர் மாணாக்கனுக்கு (28)-ம் வயதில் அநுக்கிரகஞ் செய்தல் உத்தமம். (30)-ம் வயதில் அநுக்கிரகஞ் செய்தல் மத்திமம். (36)-ம் வயதில் அநுக்கிரகஞ் செய்தல் அதமம்.

(*) சாற்காலத்து முகிலைக் கண்டு குதூகலித்து நடனமாடும் பசிய கலாபத்தை யுடைய மயிலைப் போலவும், தியாகங் கொடுக்கும் தனவந்தர்களை ஆராய்ந்து தேடுங் கவிவாணர்களைப் போலவும், நாயகனைச் சிந்தித்துக் கொண்டிருக்குங் குலமகள் போலவும், சூரியனைக் கண்டு இதழ்கள் விரியாநின்ற சரோருகம் போலவும், சந்திரனைக் கண்டு மட

* சாற்காலம்—ஐப்பசியும் கார்த்திகையுமாம்.

லவிழும் நீலோற்பலம் போலவும், தனது குரு மூர்த்தியை இடைவிடாமற் சிந்தித்துத் தரிசித்த மாத்திரத்தில் ஆனந்த பாஷ்பம் சொரிந்து ஆனந்த நிர்த்தனம் செய்பவனே சற்சீடன்.

நான் யார்? எனக்கு ஆசான் யார்? நீங்காத செனன-மரணங்கள் எனக்கு வந்தது யாது காரணத்தால்? நான் எப்போது ஆன்ம லாபம் அடைவேன்? என்று தனக்குள் தானே ஆன்ம விசாரத்தை யடைந்து, தேனைத் தேடித் திரியும் வண்டினங்களைப் போல் தனது சற்குரு மூர்த்தியைப் பலவிடங்களிலும் தேடி யலைபவனே சற்சீடன்.

## சிவஞானவள்ளல்.

மண்ணுக் கிரையாம் இவ்வுடம்பை மாற்ற வேண்டி வனமலைகள்
மொண்ணைப் பொதும்பர் நந்தவன மூதூர் தனித்த விடந்தோறும்
உண்ணெக் குருகித் தேசிகனைத் தேடி வாடி யுயிர்ப்பெறிந்து
கண்ணி லருவி யொழியானுய்க் கலங்கி மலங்கிக் கதறினனே.

சாந்தமும் நோன்பும் தவமும் அடக்கமுந் தண்ணளியும்
வாய்ந்த குருச்சொலும் வாக்கியங் கேட்டு மனமவன்பால்
காந்தமும் ஊசியுங் கண்ணுங் கதிருங் கலப்பதுபோல்
எய்ந்தது வேமுத்தி யென்ருன் எழிற்கச்சி யேகம்பனே.

ஒவ்வோர் மனிதரும் அரசன் சமுகத்திலும், இயமன் முன்னிலையிலும் மீருமல் அடங்கி விடுவார். அதுபோல், ஞானுசிரியர் திருவாக்குக்கு எதிர் வாக்கின்றி, பாகன் கீழ் யானை அடங்கி அவனிட்ட வேலையைச் செய்து முடிப்பது போல், குருமூர்த்தியின் மனோ பீஷ்டத்திற் கிணங்கி அடங்கி நடப்பவனே சற்சீடன்.

இரவெல்லாம் சமீபத்தி லிருந்து குருபானது உபய திருவடித் தாமரைகளை வருடிக்கொண் டிருந்து, பகலெல்

லாம் குற்றேவல் புரிந்து, மனம்-வாக்கு-காயமென்னும் திரிகாண சுத்தியாக அன்புடன் பணி செய்பவனே நன் மாணவன்.

### திருமந்திரம்.

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவமாகிக் கோனுமாகி நிற்கும்
குருவே யுரையுணர் வந்ததோர் கோவே.

### சிவஞானவள்ளல்.

குருவாக் கமுதமெனக் கொண்டுவந்த சீடன்
குருவாக்கை யன்றிமற்றைக் கொள்ளான்—குருவாக்கால்
உய்ந்தோமென் றிந்த வுலகறியப் பன்முறையும்
தொந்தோமென் றூடித் தொழும்.

ஒற்றுமையில் உடலுக்கு உயிரைப் போலவும், பாது காத்தலிற் கண்ணுக்கு இமையைப் போலவும், நடையில் ஊசியும் - நூலும் போலவும், சர்ப்பத்தைப் பிடியென்று சொன்ன மாத்திரத்திற் பிடிக்கவும், புலியைக் கட்டித் தழுவு என்றவுடன் அங்ஙனஞ் செய்யவும், நெருப்பை யெடுக்கச் சொன்னால் அவ்வாறு எடுக்கவும், மதகரியின்முன் நில்லென் றால் அஞ்சாமல் நிற்கவும், இவனது சித்தம் மகா திடச் சித்தம்! என்று கண்டோர் வியந்து சொல்லும்படியான பரிபக்குவனுக்கு சற்குரு மூர்த்தியானவர் ஆன்மஞான நிட்டையை உபதேசிப்பார். அன்றியும், மாதர்கள் பிணங் கிக் கொண்டால், காமிக்கு இன்பமாவதுபோல், மாணவர் கள் இருந்துமாறு ஆசிரியர் பிணங்கிக் கொண்டால் முத்தி காமிகளாகிய மாணுக்கர்கட்குப் பேரின்பமாகத் தோற்றும்.

### குணங்குடிவள்ளல்.

வஞ்ச வேல்கொடு மார்பி லெறியினும்
மிஞ்சவே தழல் மீட்டி யெரிக்கினும்
நஞ்சிஞ ரழல் நாகம் நலியினும்
அஞ்சி டாதவர் ஆனந்த மாவரே.

ஆசிரியர், மாணவனுடைய பரிபாக பக்குவத்தைப் பரிசோதிக்க எண்ணி, சீடன் பயப்படும்படியாகத் தன்னு லாவது, பிறரைக் கொண்டாவது கேவலமான தொழில் களைச் செய்யும்படி உத்தாவு செய்தும், காருண்ய மில்லா தவர் போன்று கல் முதலியவைகளால் எறிந்தும், இழி வான சொற்களால் வைதும், மானக் குறைவு தோன்றும் படிச் செய்தாலும் அவ் வமயத்திலும் குருபத்தி வழுவா மற் பணி புரிபவனுக்கே சிற்சுகோதயப் பிரம்ம நிட்டையை உபதேசிப்பார்.

### சிவஞானவள்ளல்.

கடப்பருங் கடல்கடத்துங் கருணையா ரியன் முனிந்தே
அடித்துதைத் தருவருத்திட் டக்கிர மஞ்செய் தாலும்
உடற்பிணி யகற்றவல்ல வுத்தமன் இவனே யென்று
திடப்படு சிரத்தை யுள்ளோன் சீடனென் றுரைக்கும் வேதம்.

பாசமுத லைவகையு நீக்கிப் பதியாக்கிப்
பூசை தவம்விரதம் பொய்யென்ற—ஆசிரியன்
காலா லுதைத்தாலுங் கைதவங்கள் செய்தாலுங்
கோலா லடித்தாலுங் கொள்.

### பிரபுலிங்கலீலை.

இணங்கு மிக்க காமிதனக் கின்ப மூடல் சரலிங்கம்
பிணங்கல் முத்தி காமிக்குப் பேரின் பென்ப துணர்த்தற்குக்
குணங்கள் மிக்காய்! நினைச்சினந்தாங் குறையொன் றுளதோ நினக்கரவின்
பணங்கொள் நிலத்திற் பரமசிவ பத்திக் குவானீ யென்றக்கால்.

துவாபர யுகத்தில், சிகித்துவசன் என்னும் நாமத்தை யுடைய மாளவ தேயத்து அரசன் ஒருவ னிருந்தான். அவன் சுராட்டிர தேயத் தரசன் பெற்ற சூடாலே யென் னும் பெண்ணை விவாகஞ் செய்துகொண்டு, இருவரும் உட லும் உயிரும்போல் வாழ்ந்து வந்தனர். சில வருடங்கள் கழிந்தபின், தமது ஆயுள் கழிந்து போனமையைப் பற்றி விசாரம் ஏற்பட்டுத் தத்துவ விசாரஞ் செய்து, ஆன்ம தத் துவ ஞானம் ஒன்றினாலேயே செனனப் பிணி நீங்குமென்று இருவருங் கண்டறிந்தார்கள்.

சூடாலேயானவள் தனித்து ஆன்ம விசாரஞ் செய்து, சாதுசங்கத்தை யடைந்து அத்துவிதஞான அபரோட்ச, சாட்சாத்கார சொரூபப் பழக்க முதிர்ச்சியால் பழைய யௌவனத்தை யடைந்து அழகாய் விளங்கினாள். அதைச் சிகித்துவசன் கண்டு அதிசயித்து, நீ எவ்வாறு இவ்வரிய வாழ்க்கையை அடைந்தாய்? எனக் கேட்க, சூடாலே தனது அனுபவத்தை விளக்கமாகச் சொல்லினள். அரசன் அவைகளைக் கவனித்துக் கேளாமலும், அவளை மதியாமலும் சிரித்துச் சொல்கிறான் :—

பெண்ணே! நீ அரசிலக்கணத்தில் இருப்பவள் ஆன்ம சொரூபத்தில் எவ்வாறு விளங்கினாய்? என ஏளனஞ்செய்து வெளிப்படையாகச் சிரித்து வேறோரிடத்திற்குச் சென்றான். சூடாலே; அரசன் அறியாமைக்காக இரங்கி பரிபக்குவ மில் லாதவர்களுக்கு ஆன்ம ஞானத்தைப் போதிப்பவர்கள் அறி வில்லாதவர்கள் என்று ஆன்றோர் நூற்கள் ஓலமிடுவது உண்மைதானென் றுணர்ந்து, பின்பு இருவரும் வேற்றுமை யில்லாமல் முன்போலவே வெகுகாலம் சுகித்திருந்தார்கள். சூடாலே அணிமாதி அட்டமாசித்திகளில் பிரசித்திபெற்று விளங்கினள்.

## பிரபுலிங்க லீலை.

நெறிபல முறை யுரைத்து நினைந்தில ளதனை யந்தோ
மறுகுறு மனத்த ளாகி மாயைமால் கொண்டி ருந்தாள்
அறிவிலர்க் கறிவிப் பார்தா மறிவில ராவ ரென்று
வெறிமலர் வணர்வார் கூந்தல் விமலைதன் மனந்த ளர்ந்து.

சிகித்துவசன் வெகுகாலம் தானதருமங்களை அள வில்லாமற் செய்து பார்த்தும், காசி முதலான தல-தீர்த்த யாத்திரை புரிந்தும், அவைகளால் ஆன்ம லாபத்திற்கு ஏது வில்லையென்றும், இனி வனத்திற் சென்று தவம்புரிவதே தகுதியானதென்றும் ஆராய்ந்துணர்ந்து, தன் கருத்தைச் சூடாலைக்குத் தெரிவித்தான். அவள் ஏற்கனவே போதித் ததை அரசன் கேட்க வில்லையென்பதை யுத்தேசித்து, அரசே! நீர் மூப்பினுல் சரீரம் தளர்ந்தபின் வனத்திற்குப் போகலாம். இந்த எவ்வனத்தில் வனத்திற்குப்போவது முறையா? என்று அரசன் கருத்து முதிருமாறு நினைத்து கபடமாகத் தடுத்தாள். அதைச் சிகித்துவசன் கேட்டுப் பெண்ணே! நீ தடுக்க வேண்டாம்; நான் இனிமேல் இங்கு தங்கவே மாட்டேன்; நீயோ சிறு பெண்; என்னுடன் வருதல் தகாது; நீ எனக்குப் பதிலாகப் பூபாலனஞ் செய்து கொண்டிரு என்று போதித்துவிட்டு, பகற்காலம் போன பின்பு சந்தியாவந்தன நியமங்களைப் புரிந்து பஞ்சணை மெத் தையைப்போலப் பூமியில் நித்திரைசெய்து, நள்ளிரவில் உள்ளே யிருக்கும் சூடாலை யறியாதபடி மிருதுவாக எழுந்து போகும்போது, கூடவந்தவர்கள் அனைவருக்கும் நகர் சோதனைக்குச் செல்வதாகச் சொல்லி அவர்களை நிறுத்தி விட்டுப் பட்டணத்தை நீங்கி மந்தா மலைச்சாரலில் பதி னெண் வருடம் தவம்புரிந்து மெலிந்திருந்தான்.

## ஒழிவிலொடுக்கம்.

உபதேசப் பித்தோ வுபமானப் பித்தோ
விபரீத மோபழக்கோ வேறோ—தபசிநீ
கண்மூடா விண்மூடத் தேடுங் கவுசனைபோ
லெண்மூடா யோகமிது வென்.

வாலே முகமாய் வரவானை யேறினர்
போலேயுன் போதமோ போய்த்தீண்டுஞ்—சாலப்
பெருஞ்சிரிப்பாந் தன்னைப் பிடித்தாட்டும் பேயைத்
தெரிஞ் சிருக்கத் தேடுஞ் செயல்.

அப்போது, சூடாலை ஆகாயமார்க்கமாகச் சென்று, தனது நாயகன் இருக்கிற நிலையையுணர்ந்து, அவன் அறியாமைக்காகப் பரிதாபமுற்று, இவருக்கு இப்போது நாம் போய் ஆன்ம ஞானத்தை யுபதேசித்தால் இவள் நமது மனைவிதானே! யென்று அலட்சியம் செய்வானென்று கருதி, ஒரு பிராமண குமாரன் வடிவமெடுத்து ஆகாயமார்க்கத்திலிருந்து கணவன்முன் இறங்கினாள். அதைச் சிகித்துவசன் நோக்கி உடனே யெழுந்து வணங்கி ஆசனங்கொடுத்து அஞ்சலிபந்தனாக நின்று, தேவகுமாரனாகிய தேவரீருடைய தெரிசனத்தால் ஆன்மப் பிரயோசனம் அடைந்தேன்! என்று துதித்து, நீர் யாருடைய புத்திரர்? உமது பெயர் என்ன? இங்குவந்த காரியமென்ன? என்று கேட்க, சூடாலையாகிய பிராமண குமாரன் சொல்லுகிறான். நான் நாரதருடைய புதல்வன், என் பெயர் கும்பமுனியென்பது முதலாகத் தன் வரலாறு முழுமையும் ஞானவாசிட்டக் கதையிலுள்ளபடி கூறி, அரசனது அறியாமையையும், சகலத் தியாகம் இன்னதென்பதையும், சித்தத்தியாகம் இன்னதென்பதையும் விளக்கி ஞானோபதேசஞ்செய்து, அரசனது சமாதியின் திறத்தையும், மாதர்மீதுள்ள இச்சை

யையும் பரிசோதிக்க நினைந்து, நாயகனைப் பார்த்துக் கும்ப முனியாகிய சூடாலை சொல்லுவாள்.

தேவலோகத்தில் இன்றையதினம் ஒரு திருவிழா நடக்கிறது. அவ்விடத்தில் எனது பிதாவாகிய நாரதருடன் நான் இருந்தே தீரவேண்டும். சூரியாஸ்தமனத்திற்குள் திரும்ப இவ்விடம் வந்து சேர்கிறேன் என்றுகூறி, ஆகாய மார்க்கமாகத் தலைவன் கண்ணுக்குத் தெரியாதவரையிற் போய் தான் சூடாலை வடிவமெடுத்து, சற்றுநேரங் கழித்துத் திரும்பவும் கும்பமுனி வடிவம் தாங்கிக் கணவனிடம் வந்து, சுருங்கிய முகத்துடன் விசாரமுடையவனைப்போலிருந்தாள்.

அரசன், சூடாலையாகிய தேவகுமாரனை நோக்கி, எனது பிதாவே! தேவரீர் வதனமானது சுருங்கிப் போயிருக்க வேண்டிய காரணம் யாது? எனப் பலகால் கேட்கச் சூடாலை சொல்லுவாள்.

ஏ! இராச ரிஷியே! பிராரத்துவத்தை எவரும் தடுக்க முடியாது, அநுபவித்தே தீரவேண்டும். நான் தேவ லோகம் சென்று திரும்பி உன்னை நோக்கி ஆகாயமார்க்க மாகச் சூரிய மண்டலத்திற்குப் பக்கத்தில் வரும்போது, மேகமார்க்கமாகப் போகும் துருவாச ரிஷியை நோக்கி ஐயா! நீர் கரிய வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டு, தூர்த்த புருடனை இச்சிக்கின்ற விபசாரிகளைப்போல் போகத் தொடங்கினீர் என்று சொன்னேன். அவர் கோபித்து, நீ! இரவுகள் தோறும் பெண்ணுகப் போகக்கடவாய்! என்று சபித்தார் என்று சொல்ல, சிகித்துவசன் அவரை நோக்கிப் பயப்படாதிரும்; நியதி வல்லமையினுல் வருவது வரட்டும், அதை யாரால் தடுக்கமுடியும் என்று தேற்றிக் கொண்டிருக்க மாலைப்பொழுது வரவும், கும்பமுனி பெண் வடிவமாக மாறி இருவரும் ஒரே சயனத்தில் படுத்துக்

கொண்டார்கள். உதயத்தில் பெண் வடிவம் மாறிப் பழைய கும்பமுனியாகவும், இரவில் பெண் வடிவமாகவும், தனது கன்னித் தன்மை கெடாமல் சூடாலை சில காலம் கூடியிருந்தாள்.

ஒருநாள் மத்தியானம் அரசனை நோக்கி, வேந்தே! இரவில் பெண்வடிவம் வருவதால், பெண்களின் தன்மையில்லாமல் எத்தனை காலம் இருப்பது? ஒரு நாயகனை அடையவேண்டுமன்றோ? ஆதலால் உன்னையன்றி நான் எவரையும் விரும்பேன்; குருவாக்குக்கு எதிர்வாக்குச் சொல்லாதே யென்று தேற்றி விவாகஞ் செய்துகொண்டு இருவரும் சுகித்திருந்தார்கள்.

இவ்வாறிருக்கின்ற காலத்தில் தலைவனுக்கு ஆன்மஞான முதிர்ச்சியினால் போக போக்கியங்களில் நிராசை வந்திருக்கிறதா! என்பதைத் தேவ போகங்களினால் சோதிக்க நினைந்து, தனது அணிமாதி சித்திகளினால் தேவர்கள் சூழ்ந்துவர தேவேந்திரன் அக்கானகத்தில் தோற்றும்படியாக ஒரு மாயை செய்தாள்.

வந்திருக்கும் தேவேந்திரனை அரசன் வணங்கி, நீர் இவ்விடத்திற்குவர என்ன பாக்கியஞ் செய்தேனோ! என்று புகழ்ந்தான். அதற்குத் தேவேந்திரன் சொல்லுவான்.

அரசனே! உமது குணப்பிரதாபங்களைக் கேட்டுத் தேவர்களோடும் யான் வந்தேன். தேவலோக வாழ்க்கையெல்லாம் உமக்கே சொந்தமானது. அங்குற்ற அரம்பா ஸ்திரீகளெல்லாம் உமது வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஆகையால் எழுந்துவருவீர் என்றனன். அதற்கு அரசன் சுவர்க்கத்திலுள்ள சுகங்களை யான் அறிவேன். எனக்கு இவ்விடம் அவ்விடம் என்கின்ற பேதமில்லை. அடியேனுக்கு எவ்விடமும் சுவர்க்கமேயாம்.

ஆகையால் நீர் வசிக்குமிடம்போமின் என்று அனுப்பி வைத்தான். அதனல் அரசனுக்கு மனம் நசித்திருக்கிற தென்பதைச் சூடாலை யுணர்ந்து, பின்னும் அவனைச் சோதிக்க வெண்ணி ஒரு தூர்த்த புருடனை யுண்டாக்கிக் கூடினுள். அதை அரசன் கண்டு, மனோவிகற்பமின்றி நிர்ப்பயமாய்ப் புணருங்கள் என்று சந்தோஷமாகச் சொல்லிப் போனன். அதன்பின் நாயகியாகிய மதனிகை (2) நாழிகை கழித்து அந்த அலங்கோலத்துடன் அரசன்முன் வணக்க முற்று, தான் செய்த தவறுக்காக விசாரமடைந்தவள்போல் நின்றனள். அதைச் சிகித்துவசன் கண்டு, புணராநின்ற நாயகனை விட்டு ஏன் வந்தாய்? திரும்பிப்போய்ச் சுகத்தைப் பூர்த்தி செய்துவிட்டு வா என்னலும், மதனிகை சொல்வாள்.

பெண்களுடைய குணம் அனந்தபேதமாக மயங்கும், அதனுலேயே "சித்திர விழியார் நெஞ்சம் தெரிந்தவரில்லைத்தானே" என ஆன்ரேர் கூறியிருக்கின்றனர். ஆகையால் பொறுத்தற்கரிதான எனது தப்பிதத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று கெஞ்சினுள். அதற்கு அரசன், நான் உன்னை மனைவியாக நினைத்திருக்கவில்லை. ஆனதால் என்னிடம் கோபம் வாராதென்று சமதிருஷ்டியுடன் இருந்தான். அதை யுணர்ந்த மதனிகை பழைய சூடாலை வடிவத்துடன் தோன்றிச் சகல விபரங்களையும் ஆதியோடந்தமாகச் சொல்லிக் காட்டினுள்.

ஆகையால் இந்தச் சூடாலையென்னும் ஞானசிரியன், தனது தலைவனுகிய சிகித்துவசன் என்னும் சீடனைச் சோதித்ததுபோல், காரணக் குருவானவர் சில சமயங்களில் அவனவன் மனைவி விஷயமாகவும் சோதிப்பதுண்டு. அதற்கு மயங்காமல், பக்குவர்கள் சமதிருஷ்டியுடனும், பத்தியுடனும் இருக்க வேண்டுவது அத்தியாவசியம்.

## சிறந்த குரு பத்தி.

சோழதேசத்தில், காவேரி நதியானது சமுத்திரத்தில் கலத்தலால் காவேரி சங்கமம் எனச் சிறப்புப்பெயர் வாய்ந்த காவிரிப்பூம் பட்டினத்தில் வைசியகுல திலகராய் அவதரித்து அடியார் பத்தியிற் சிறந்தவராக ஒருவர் இருந்தார்; அவர் பெயர் இயற்கை நாயனர்.

அவர் இல்லறதருமத்தி லிருந்துகொண்டே சிவபத்தர்கள் விரும்பிய எல்லாவற்றையும் மகிழ்ச்சியோடு கொடுத்துக் கொண்டு வருங்காலத்தில் ஒருநாள், திருக்கைலாசபதியானவர், அவ்வியற் பகையார் அடியார்கள் விரும்பியவை யாவையேனும் அவற்றை இல்லையென்னமல் கொடுத்தலைச் சகலருக்கும் புலப்படுத்தும் பொருட்டு, ஒரு பிராமண வடிவங்கொண்டு, விபூதி திருமேனியிலே பிரகாசிக்க, தூர்த்த வேடமுந் தோன்ற அவர் வீட்டிற்கு எழுந்தருளினர். இயற்பகை நாயனர் அன்பினேடு அவரை எதிர்கொண்டு நமஸ்கரித்து, அழைத்துக்கொண்டுபோய், விதிப்படி அருச்சித்து, "சுவாமீ! தேவரீர் இங்கே எழுந்தருளியது அடியேன் செய்த தவத்தினுற் போலும்" என்றார்.

ஐயர் இயற்பகைநாயனரை நோக்கி, "சிவனடியார்கள் விரும்பிக் கேட்பன யாவையெனினும் நீர் இல்லையென்னமல் மகிழ்ச்சியோடு கொடுத்தலை நான் கேள்வியுற்று, உம்மிடத்திலுள்ள ஒரு பொருளை விரும்பி இங்கே வந்தேன். நீர் தருதற்கு இசைவீராகில், அந்தப் பொருள் இன்னது என்று சொல்லுவேன்" என்றார். அதற்கு இயற்பகைநாயனர் "எப்படிப்பட்ட பொருளாயினும் என்னிடத்தில் இருக்குமாயின், அந்தப்பொருள் நமது கடவுளாகிய பரமசிவனுடைய அடியார்களுக்கு உரிய பொருளேயாம். இதைக் குறித்துத் தேவரீர் சந்தேகிக்க வேண்டுவதில்லை. திரு

வுள்ளம் விரும்பியதை இன்னது என்று சொல்லியருளும்" என்று சொல்ல, ஐயர் "உம்முடைய மனைவியை விரும்பி வந்தேன்" என்றார்.

அப்பொழுது இயற்பகை நாயனார் முன்னிலும் அதிகமாக மனமகிழ்ந்து வணங்கி நின்று, "சுவாமீ, தேவரீர் அடியேனிடத்தில் இல்லாத பொருளைக் கேட்காமல் உள்ள பொருளையே விரும்பிக் கேட்டது அடியேனுடைய பாக்கியம்! பாக்கியம்!!" என்று சொல்லி, சீக்கிரம் உள்ளே போய், கற்பிலே சிறந்த தம்முடைய மனைவியாரை நோக்கி, "நான் இன்றைக்கு உன்னை இந்தச் சிவனடியாருக்குக் கொடுத்துவிட்டேன்" என்றார். உடனே மனைவியார் சற்று மனங் கலங்கிப் பின்னே தெளிந்து, "பிராண நாயகரே! நீர் கட்டளை யிட்டது எதுவோ அதையே நான் செய்வேன். அதையன்றிச் செய்தற்கு உரிய காரியம் எனக்கு வேறொன்று உண்டோ? இல்லை" என்று சொல்லி அவரை வணங்க, அவர் தமது மனைவியார் அங்கு வந்த சிவனடியாருக்கு மனைவியாகுதல் பற்றி வணங்கினார். மனைவியார் போய் அவ்வையருடைய பாதங்களிலே விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்றார்.

இயற்பகைநாயனார் மனமகிழ்ந்து அவ்வையரை வணங்கி, "இன்னும் அடியேன் செய்யவேண்டிய பணி யாது?" என்று வினவ, ஐயர் "இந்தப் பெண்ணை நான் தனியே கொண்டு போகையால், உங்கள்மேலே பற்றுள்ள பந்துக்களையும், ஊரார்களையும் கடக்கும் வரைக்கும் அவர்களால் எனக்கு ஓரிடையூறும் உண்டாகாதிருக்கும்படி நீர் துணையாக வரவேண்டும்" என்றார். இயற்பகைநாயனார் அதைக் கேட்டு, "இவர் கட்டளையிடுமுன் நானே நினைந்து செய்ய வேண்டிய இக்குற்றேவலைச் செய்யாமல், இவர்

சொல்லும் வரைக்கும் தாழ்த்து நின்றது குற்றம்! குற்றம்!!" என்று நினைத்துத் துக்கித்து, ஆயுதசாலையிலே போய் போர்க்கோலங்கொண்டு, வாளும், பரிசையும் ஏந்திக் கொண்டு ஐயரிடத்திற்கு வந்து அவரை வணங்கி, அவரையும், மனைவியாரையும் முன் போம்படி செய்து தாம் பின்னே போனர்.

அப்பொழுது இயற்பகை நாயனருடைய சுற்றத்தவர்களும், அவர் மனைவியாருடைய சுற்றத்தவர்களும் "இயற்பகை பைத்தியத்தினலே தன் மனைவியைக் கொடுத்தானுயினும், அவளை ஒருவன் கோண்டுபோவது நீதியா" என்று, தங்கள் மரபுக்கு வரும் பெரும் பழியை நீக்கிக்கொள்ளும் பொருட்டு அவர்களைத் தொடரக் கருதி, வேல், வில், வாள் முதலிய ஆயுதங்களை எடுத்துக் கொண்டு, சண்டமாருதம் போலத் தீவிரமாக நடந்து, நகருக்குப் புறத்திலே போய் ஐயருக்கு இரு பக்கத்திலும் நெருங்கி ஆரவாரித்து, "ஓ துட்டனே! எங்களுக்குப் பழி வாராதபடி எங்கள் குலப் பெண்ணை விட்டுப் போ" என்று சொல்லி அவரை வளைத்துக் கொண்டார்கள்.

ஐயர் அதைக் கண்டு அஞ்சினவர்போல இயற்பகை நாயனருடைய மனைவியாரைப் பார்க்க, அம் மனைவியார் "சுவாமின்! நீர் பயப்பட வேண்டாம். இயற்பகை நாயனர் அவர்களை வெல்லுவார்" என்ருர். இயற்பகை நாயனர் அதைக் கேட்டு, "அடியேன் அவர்கள் எல்லாரையும் இப்போது கொன்று போடுகிறேன். தேவரீர் அஞ்சவேண்டாம்" என்று சொல்லி, அங்கு வந்த சுற்றத்தவர்களைப் பார்த்து, "நீங்கள் என் வாளுக்கு இரையாவீர்கள்! ஒருவரும் எனக்கு எதிர் நில்லாமல் ஓடிப் பிழையுங்கள்!" என்று கூற, அவர்கள் "ஏடா இயற்பகை! நீ என்ன காரியஞ்

செய்தாய்? ஊரவர்கள் பேசும் பழிமொழிக்கும், நம்முடைய சத்துருக்கள் நகைக்கும் நகைப்புக்கும் நீ சற்றுயினும் வெட்கப்பட வில்லே. மனைவியைப் பிராமணனுக்குக் கொடுத்தோ நீ சாமர்த்தியம் பேசுவது. நாமெல்லாம் ஒருங்கே மடிவதன்றி இந்தப் பெண்ணைப் பிராமணனுக்குக் கொடுக்க விடோம்" என்றுர்கள். உடனே இயற்பகை நாயனுர் அதிக கோபங் கொண்டு, "உங்கள் சரீரங்களைத் துண்டம்-துண்டமாக்கி உங்களுயிரைச் சுவர்க்கத்துக் கேற்றி ஐயரைத் தடையின்றிப் போக விடுவேன்" என்று சொல்லி எதிர்க்க, அவர்கள் அந் நாயனுரோடு யுத்தஞ் செய்யத் தொடங்காமல், அவர் மனைவியாரைக் கொண்டு செல்கின்ற ஐயருக்கு முற்பட்டு, அதிக கோபத்தோடும் அவரைத் தடுத்தார்கள்.

நாயனுர் கோபங் கொண்டு வாளினுலே, இடசாரி வலசாரியாக மாறி மாறிச் சுற்றிவந்து, அவர்களுடைய தோள்களையும், கால்களையும், தலேகளையும் துணித்து விழுத்தி, பின் ஒவ்வொருவராய் வந்து எதிர்த்தவர்களையும் கொன்று, மேல் எதிர்ப்பவர் ஒருவருமின்றி யுத்த களத்திலே உலாவினுர். பின் இந்த செயற்கருஞ் செய்கையைச் செய்த நாயனுர் ஐயரை நோக்கி, "சுவாமீ! தேவரீர் அஞ்சாவண்ணம் இந்தக் காட்டைக் கடக்கும் வரைக்கும் வருகிறேன்" என்று சொல்லி, அவரோடு போனுர். திருச்சாய்க்காடு என்னுஞ் சிவ தலத்துக்குச் சமீபத்திலே போனபொழுது, ஐயர் இயற்பகை நாயனுரை நோக்கி, "இனி நீர் திரும்பிப் போகலாம்" என்று சொல்ல, நாயனுர் அவருடைய திருவடிகளே வணங்கி அஞ்சலி செய்து தோத்திரம் பண்ணிக்கொண்டு திரும்பினுர்.

அப்பொழுது ஐயர் "இயற்பகையே! இங்கே வா" என்று சொல்லி ஓலமிட்டார். நாயனுர் அந்த ஓசையைக்

கேட்டு, அடியேன் இதோ வந்துவிட்டேன், வந்துவிட்டேன், இன்னும் இடையூறு செய்பவர்கள் உண்டாயில் கொன்று போடுவேன்" என்று சொல்லிக்கொண்டு வர ஐயர் மறைந்தருளினார். வந்த நாயனார் அவ் வய்யரைக் காணமல் மனைவியாரை மாத்திரங் கண்டார். பின்பு ஆகாயத்திலே பார்வதி சமேதராகி இடபவாகனத்தில் எழுந்தருளி வந்த திருக்கைலாச பதியைக் கண்டார். ஆராமையினாலே உடனே விழுந்தார்; எழுந்து தோத்திரம் பண்ணினார். சுவாமி அவரை நோக்கி, "நம்மேலும், நம்முடைய அடியார்கள் மேலும் நிட்களங்கமாகிய அன்பு வைத்த இயற்பகையே! நீ உன் மனைவியோடும் நம்முடனே வா" என்று திருவாய் மலர்ந்து, அந்தர்த்தான மாயினார். இயற்பகை நாயனாரும், மனைவியாரும் சிவலோகத்தை அடைந்து பேரின்பத்தை அனுபவித்து வாழ்ந்திருந்தார்கள். யுத்தத்திலே இறந்த அவர்கள் பந்துக்களும் வானுலகத்தை அடைந்து இன்ப மனுபவித்தார்கள் என்பது பெரிய புராணத்தின் கருத்து. இத்தகைய பத்தி விசுவாசம் சிட்டனுக்கு உண்டாவதென்றால் சாமானியமா?

## பிரபுலிங்க லீலை.

விள்ளரு நற்சிவ வேடத் தோர்பொருள்
கொள்ளைகொள் கிற்பினுங் குறைகள் கூறினும்
பிள்ளையை யறுப்பினும் பிழைகள் செய்யினும்
எள்ளுறு னெனிலவன் ஈசர்க் கன்பனும்.

## பட்டினத்தடிகள்.

வாளால் மகவரிந் தூட்டவல் லேனல்லன் மாதுசொன்ன
சூளா லிளமை துறக்கவல் லேனல்லன் தொண்டுசெய்து
நாளாறிற் கண்ணிடந் தப்பவல் லேனல்லன் நானினிச்சென்
றாளாவ தெப்படி யோதிருக் காளத்தி யப்பருக்கே.

இந்தத் திருஷ்டாந்தத்திற்குத் துரியோதனன் மனைவி, கர்ன மகாராசனோடு சதுரங்க மாடும்பொழுது, தனது நாயகன் வரவைக் கண்டு எழுந்து போகையில் மேகலாபரணத்தைக் கர்னன் பற்றி யிழுக்க, சிந்திப்போன இரத்தினங்களைச் சமதிருஷ்டியுடன் துரியோதனன் பொறுக்கிக்கொடுத்த கதையையும் ஒருவாறு உவமானமாகக் கூறலாம்.

நல்லாப்பிள்ளை பாரதம்.

இன்னவ னினியா னென்று யாவரு மறியா வென்னைத்
தன்னொடு கூட்டி யுண்டு தார்மணி பொறுக்கிக் கோர்த்து
அன்னதும் போதா தங்க தேயத்துக் கதிப னாக்கி
மன்னவன் செய்த நன்றி மறப்பனோ பிறப்புக் கெல்லாம்.

வில்லிபுத்தூராழ்வார் பாரதம்.

மடந்தைபொற் றிருமே கலைமணி யுகவே
மாசறத் திகழுமே காந்த
இடந்தனிற் புரிந்து நானயர்ந் திருக்க
எடுக்கவோ! கோக்கவோ! என்றான்.

எமது அருமந்தப் பிதாவும் ஞான சற்குருவுமாகிய புலவர்கள் நாயகம் அப்துர் றகுமான் சாகிபு ஒலியுல்லா அவர்கள் பூவைமாநகரம் போகானந்த மஸ்தான் அவர்களையும் (இல்) விஷயமாய் சோதித்து உபதேசஞ் செய்திருக்கிறார்கள். இதுபோன்ற சரிதங்களை திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணத்திலுங் காணலாம்.

சிவநெறிப்பிரகாசம்.

தேசிகரு மாணவர்கள் செய்தியுணர்ந் திடவே
சிறியோரைப் பெரியோர்செய் தொழிலதனிற் செறித்தும்
ஏசிலராம் பெரியோரை யீனமாந் தொழிற்கே
இசைத்தும்அடித் தும்வைதும் இவ்வாறு செயவும்

கூசியிடா திட்டபணி செய்துகுரு பத்தி
குறைவிலராய் நம்பினராய்த் துரோகமென் பதின்றி
மாசிலராய் மனம்வாக்காற் காயத்தாற் குருவின்
வாக்கியம்பா லனஞ்செய்யும் மதிமானு மாமே.

அருட்பிரகாசம்.

குருபர னுக்கவன் நெஞ்சகம் போலநு கூலத்தனய்க்
கரசரணுதியி னேவல்செய் தேதினங் கட்கிமைபோல்
உரிய மனைமுதல் யாவையுங் காத்துண்மை யாயொருதற்
பரமிவ னேயெனக் காண்பான்சற் சீடன் பகர்ந்திடினே.

தேசிகன் பாற்பற் பலதீக் குணங்கள் செறியினுநம்
பாசப் பிராந்திக் கிவைதோற் றியவிறை பாலிலையென்
ருசறு பத்தியி னோர்ந்தெவ் விதத்து மவனருளைத்
தேசங் குலவ வளர்ப்போன்சற் சீடன் செறிந்திடினே.

நெருப்பில் நடந்தவர்களும், நீர்-நிழலில்லாத கொடிய பாலைவனத்திற் செல்பவர்களும் குளிர்ந்த சலத்தை தேடியலைவார்கள். அதுபோற் சற்சீடனனவன் உலக வியாபாரமாகிய வெப்பத்தைச் சகித்தற் கியலாது,குருமூர்த்தியாகிய கருணைத் தேவ விருட்சத்தின் திருவடி நீழலைத் தேடிக் கண்டு வணங்கிப் புகழ்ந்துய்ய வேண்டும்.

சிவஞானவள்ளல்.

கண்டான் குருவைக் கண்ணூரக் கதறி வீழ்ந்தான் கமலமிசை
அண்டா வரனே ! நெடுமாலே! அயனே என்ரு னகமகிழ்ந்தான்
தொண்டா லியலும் பணிசெய்யத் துணிந்தான் பணிந்தான் மும்
பண்டால் நிறைந்த பாவாலுங் காவா யென்னப் பாடினன்.[முறையே

கண்ணில்லாக் குழவி வெய்ய காரிருட் டறைபட் டாங்குத்
திண்ணிய மலவ றைக்குட் சிக்கிய சிறியேன் றன்னை
நண்ணரு ஞானக் கையால் நான்முகன் முதலோ ரேங்கத்
தண்ணளி யாலெ டுத்த சற்குரு நாதா! போற்றி!

முத்தரைப் பகைவ ரென்று மூர்க்கரை யுறவ ரென்றும்
பெத்தனு யனேக காலம் பிறந்திறந் தெய்த்திட் டேற்குப்
பத்தியான் ஞானங் காட்டி ஞானத்தாற் பரனைக் காட்டும்
சத்திய ஞானு னந்த சற்குரு நாதா! போற்றி!

உலகத்தில் சூராதி யிராட்சதர்களால் உண்டாகிய இடுக்கணுல் அரிபிரமர் முதலிய தேவர்கள் தத்தம் நிலை குலைந்து என்ன வரப் போகின்றதோ? என அச்சம் சனித்துக்கொண்டிருந்தார்கள். அவ்விடுக்கண் களைவான் கருதிச் சிவபெருமான் தமது ஞானக் கண்ணுகிய நெற்றிக் கண்ணி லிருந்து சுவாலித்துக் கொண்டிருந்த ஞானுக்கினியை அக்கினி தேவர், வாயு தேவர்களைக் கொண்டு சரவணப் பொய்கையில் விடுத்து முருகக் கடவுளாக திருவவதாரஞ் செய்து வைத்தனர். அம் முருகபிரான் பற்பல திருவிளையாடல்களைப் புரிந்து கைலாயக் கோபுர வாயிலில் இருக்கும்போது, அரிபிரமாதி தேவ கணங்கள் எல்லாம் சிவபெருமானது திருவோலக்கங் காணச் சென்றனர். அவர்களில் பிரமதேவன் எதிரிலிருந்த கந்தக்கடவுளை மதிக்காமல் இறுமாப்போடு சென்று திருவோலக்கங் கண்டு மீண்டனன். அப்போது முருகக் கடவுள் பிரமனை நோக்கி நீ யார்? எங்கு சென்றனை? உன் தொழில் யாது? என்று விசாரித் தறிந்து, நீ பஞ்ச கிருத்தியங்களின் முதலாவதாகிய சிருட்டித் தொழில் புரிய வல்லையாயின் நினக்கு வேதம் தெரியுமோ? தெரிந்தாற் சொல்லென்ருர். பிரமதேவன் பிரணவத்தை யுச்சரித்துக் கொண்டு வேதம் சொல்ல ஆரம்பித்தான். பிரம தேவனை நோக்கி நிறுத்து! நிறுத்து!! முன் சொன்ன "ஓம்" என்னும் பிரணவத்திற்குப் பொருள் யாதெனலும், பொருள் கூறத் தோன்ருமல் வெட்கித் தலைகவிழ்ந்து வெருண்டு திகைத்தான். பிரணவத்திற்கு பொருள் தெரியாத நீ சிருட்டி செய்வதும் இவ்வாறுதான் இருக்கும் என்று கூறி அவன்

சிரங் குலுங்கக் குட்டிக் கந்த வெற்பில் சிறையிடுவித்து உலகியல் கெடாவண்ணம் தாமே நெடுநாள் சிருட்டி செய்து வந்தார்.

கந்தபுராணச் சுருக்கம்.

*மன்னுகுடி லைப்பொருளை அறியாமல் மயங்குதலும்*
*கொன்னுடைய நரசிங்கக் குட்டிதலைக் குட்டியுதைத்*
*தின்னலுறக் கந்தவெற்பிற் சிறையிடுவித் ததிலேகி*
*அன்னனடை யுமைபாலன் ஆவிகள்பன் னுட்படைத்தான்.*

இதைத் திருமால் முதலிய தேவர்கள் ஓடோடியும் போய்ச் சிவபெருமானுக்குத் தெரிவிக்க, அவர் நந்திதேவரை யழைத்துப் பிரமனை சிறையினின்றும் விட்டுவிடும்படி நாம் சொன்னதாக கந்தவேளிடம் சொல்லி வரும்படி ஆக்ஞாபித்தனர். அவ்வுத்தரவை நந்திதேவர் சிரமேற்கொண்டுபோய் சண்முகக் கடவுளிடம் விண்ணப்பிக்க, அவர் கோபங் கொண்டு "உன்னையுஞ் சிறையிடுவோம்" என்னக் கேட்டு நடுங்கி வணங்கிப் போய் நடந்தவைகளைப் பரமசிவத்திடம் சொல்லி நின்றார். உடனே பரமசிவன் எழுந்து வந்து சிறைவிடச் சொல்லியும் கேளாததால், பல கடூரமான வார்த்தைகளைச் சொல்லிச் சிறைவிடச் செய்து, அதன்பின் குமாரக்கடவுளை நோக்கி அன்புடன், உனக்குப் பிரணவார்த்தம் சொல்ல வருமோ? தெரிந்தால் சொல் என்றனர். அதற்கு முருகவேள், குரு சீடக் கிரமமாய் இரகசியமாகச் சொல்வதன்றிப் பகிர்முகமாகச் சொல்லலாமா? எனச் சிவபெருமான் நகைத்து, நீ எனக்கு உபதேச விதிப்படி கூறென்று செவி சாய்த்து வணக்கமாகக் கேட்க, முருகபிரான் ஆசாரியக் கிரமத்திலிருந்து குடிலைப் பொருளை யுபதேசித் தருளினர் என்னும் ஆகமத்தைக் கும்பகோணத்தை யடுத்த திருவேரகத்தில் இன்றும் பிரத்தியட்சமாகக் காணலாம்.

கந்தபுராணம்.

முற்றெருங் குணரு மாதி முதல்வகேள் உலக மெல்லாம்
பெற்றிடு மவட்கு நீமுன் பிரருண ராத வாற்ரூற்
சொற்றதோ ரினைய மூலத் தொல்பொருள் யாரும் கேட்ப
இற்றென இயம்ப லாமோ மறையினுல் இசைப்ப தல்லால்.

சூராதி யிராக்கதர்களை யொழித்துத் தேவர்களைச் சிறைமீட்டு உய்வித்தற் பொருட்டு முருகக் கடவுள் அவதரித்தார் என்பது புராணக் கருத்தாயினும், அகத்தியர் முதலிய மகரிஷிகளுக்கும், ஏனைய பரிபக்குவ முடையவர்களுக்கும் உபதேசித் தருளுதற் பொருட்டு அவதாரஞ் செய்தனர் என்பதும் ஒருவாறு பொருந்தும்.

ஒருவர், ஒருவரிடத்தில் ஏதாவது ஞான யோக ரகசியார்த்தங்களைக் கேட்க விரும்பினுல், அவர் எத்தன்மையுடையவரா யிருப்பினும் குரு சீடக் கிரமமாய்க் கேட்கவேண்டுமே யன்றி, கண்ட கண்ட விடங்களில் மரியாதையில்லாமல் கேட்கக் கூடாது. கேட்டால் சீடனுக்குப் பரிபாக பக்குவ மில்லை யென்று சரிவரச் சொல்ல மாட்டாராதலால் கேட்பவனுக்கு உண்மை விளங்காது.

அஸ்தினுபுரியில் இராச்சிய பரிபாலனம் புரிந்த திருதராட்டிர மஹாராசனது நூறு புத்திரர்களாகிய கௌரவர்கட்கும், பாண்டு மஹாராஜன் புத்திரர்களாகிய பஞ்சவர்கட்கும் துரோணுச்சாரியர் வில் வித்தை கற்பித்து வந்தார். அவ் வித்தையைக் கற்றுக்கொள்ள அநேகர் ஆர்வங் கொண்டார்கள். அவர்களில் வேட சாதியில் தலைமைபூண்ட ஓர் சிற்றரசனது செல்வக் குமாரனுகிய ஏகலைவன் என்பவனும் கற்றுக்கொள்ள எண்ணி, துரோணரை யடுத்து, அதைத் தனக்குக் கற்றுக் கொடுக்கும்படி வணங்கிக் கேட்டுக்கொண்டான். அவனுக்குக் கற்றுக் கொடுப்பது முறையன்றெனக்

கருதி, தனக்கு அவகாசமில்லையென்று துரோணர் சொன்னார். அதனால் ஏகலைவன் மனச் சோர்வடையாமல் அவருக்குச் சாஷ்டாங்க தண்டஞ் சமர்ப்பித்து, அவரது உபய திருவடிகளைத் தன் நேத்திரங்களில் ஒத்திக்கொண்ட பின்னர் விடைபெற்று, தனது எதாத்தானத்திற்குச் சென்று அங்கோர் சிலம்பக்கூடம் நிறுமித்து, அதில் துரோணரைப் போன்ற விக்கிரகம் ஒன்று ஸ்தாபித்து, தினந்தோறும் அதை வணங்கி, வில்லைக் கையிற் பிடித்து ஆசிரியர் தனக்குக் கற்பிப்பது போல் மானதமாகப் பாவனை செய்து வந்தான்.

இஃதிங்ஙன மிருக்க; ஒருநாள் அர்ச்சுனன் தனது வேட்டை நாயுடன் காட்டுக்குச் சென்றான். அந்த நாய் அங்கும் இங்கும் ஓடித் திரிந்து, முடிவில் ஏகலைவன் சிலம்பக் கூடத்திற் புகுந்து, துரோண விக்கிரகத்தை அசுத்தப் படுத்தி விட்டது. அஃதுணர்ந்த வகலைவன் சினங்கொண்டு ஓர் அத்திரத்தை அந்த நாயின்மேற் பிரயோகித்தான். அந்த ஒரே அம்பு நாயின் சரீரமெங்கும் ஊடுருவிச் சல்லடைக் கண்போலாக்கி, முடிவில் அதன் வாயின் வழியாய் வெளி வந்தது. அவ் வருத்தத்தைச் சகிக்காமல், அந்த நாய் அர்ச்சுனன் சமுகத்தை யடைந்தது. அதைக் கண்ட அர்ச்சுனன், தன் நாய் படும் அவஸ்தைக்காக வருந்தியது மன்றி, ஒரே பகழியானது உடலெங்கும் பாயும் வித்தையை, நமக்கன்றிப் பிறர்க்குப் போதிப்ப தில்லை யென்று கூறியிருந்த நமதாசிரியர், நம்மை வஞ்சித்து மற்றொருவருக்கும் கற்றுக் கொடுத்திருக்கிறார் என்பது, இந்த நாயின் மூலமாய் விளங்குகின்ற தல்லவா? ஆயினும் இதனுண்மையை முற்றிலுங் கவனிப்போம் எனக் கருதி, தனது நாயுடன் ஏகலைவன் இருப்பிடத்தை நாடிச் சென்றான்.

அர்ச்சுனன் வரவை ஏகலைவன் கண்டு, எதிர் சென்று வணங்கி, ஓர் ஆசனத்தில் அமர்த்தி, நடந்தவைகளை மிகுந்த பணிவுடன் ஆதியோடந்தமாய்ச் சொன்னான். அதைக் கேட்டுப்போய் அருச்சுனன் துரோணருக்கு அறிவித்தான். உடனே துரோணர், ஏகலைவ னிடத்திற்கு வந்தார். அவர் வரவைக் கண்டு ஏகலைவன் அடங்கா மகிழ்ச்சி கொண்டு, எதிர் சென்று பன்முறை வணங்கி, ஓர் சிறந்த ஆசனத்தி லிருத்திக் கைகட்டி, வாய் புதைத்து நின்றான். துரோணர் ஏகலைவனை நோக்கி, நீ எவ்விதமாய் இவ் வித்தையைக் கற்றுக் கொண்டாய்? என வினவினார். அவரிடத்திலும் ஆதியோடந்தமாய்ச் சவிஸ்தாரமாகச் சொல்லி, குரு தட்சணையும் சமர்ப்பிக்க விரும்புகிறேன்? தேவரீர் விருப்பம் எவ்வாறென்று விண்ணப்பித்து நின்றான்.

துரோணர் அர்ச்சுனனது தூண்டுதலின் பேரில், அவனது வலது கைப் பெருவிரலைத் தட்சணையாகக் கேட்டார்; ஏகலைவன் முன்பின் ஆலோசிக்காமல் அவ்வாறே கொடுத்து வணங்கினான்.

இராமநாதபுரம் ஜில்லா பழசையம்பதி யென்னும் பெருநாழிமா நகரில் அவதரித்த செ. மு. அஹ்மது என்னும் சிறூர், சாமானிய கல்வி யறிவை யுடைத்தா யிருந்தும், சில காலத்திற்குள் இசைக் கவி பாடுந் திறமை பெற்று, தாமியற்றும் பாடல்களில் நம்மைக் குருவா யமைத்துப் பாடி வெளியிட்டதை யாம் கேள்வி யுற்று, நம்மை இன்னாரென்று நன்கு தெரியாத இவ் விளவல், நம்மைக் குருவாகப் பாவித்த தெங்ஙன மென்று யாம் வினவப் போந்த காலை, அனேகமாக ஏகலைவன் கொண்ட பக்தி உபாசனையைப் போல், நம்முடைய அருவுருவைத் தியானித்த காரணத்தினாலேயே அவ்வாறு பாடுஞ் சத்தி ஏற்பட்டதென்று தெரிய வந்தது.

ஆகையால் முத்தியைக் கருதி ஞானசிரியரை அடைய விரும்பும் பக்குவிகளாகிய மாணவர்கள், ஏகலைவன் பக்தியைத் தத்தம் மனதிற் பசுமரத் தாணியைப்போற் பதிய வைக்கவேண்டும்.

தனிப்பாசுரத் தொகை.

தந்தைக் குதவுந் தனிமகன் போல
விந்தைக் களத்தின் மேதக வெய்தியும்
தலைவனை விழையுந் தலைமகள் புரையக்
கலைவலா சானைக் கண்டுகளி சிறந்தும்
உருவைவிட் டகலா வொண்ணிழ லொப்பக்
குருவை யடுத்துக் குற்றேவல் செய்தும்
பரமனை வழிபடூஉம் பத்தன் மானக்
குரவனை மனத்திற் கொண்டு துதித்துங்
கார்பெயச் செழிக்குங் கழனி கடுப்ப
ஏர்பெறு மவன்சொலை யினிதுள மடுத்தும்
அரசற் கிறையிடு மவன்குடி யியையப்
பரசுபு நற்பதம் பைம்பொன் கொடுத்தும்
மன்னுநன் மாணவன்
என்ன வகுத்தன ரியல்புணர்ந் தோரே.

வீராகமம்.

அடுத்ததின் நன்மை யான்மா வாகுமென் றறிந்து நல்லோர்
நடித்திடுஞ் சமய வாத நற்றவஞ் செபந்தி யானம்
படிற்றுல கியற்கை யாவும் பரகதி விலக்கா மென்றே
விடுத்தருட் குரவன் பாத மேவிமெய்ப் பணிசெய் வாரே.

திருவிளையாடற் புராணம்.

கரவிலாத பேரன்பினுக் கெளிவருங் கருணைக்
குரவனா ரருளன்றியிக் கொடியவெம் பாசம்
புரையியில் கேள்வியாற் கடப்பது புணையினாலன்றி
யுரவுநீர்க்கடல் கரங்கொடு நீந்துவ தொக்கும்.

### சிவஞானவள்ளல்.

*முந்துநூ லுழைப்புமின்றி முத்தர்பா லிணக்குமின்றிச்*
*சுந்தரக் குரவற்பாதத் தொழும்புகள் சிறிதுமின்றி*
*யந்தமில் ஞானம்வேண்டும் அவாவெலாங் கொழுநற்கொன்று*
*சந்ததி வேண்டிநோற்குந் தன்மையோ டொக்குமன்றே.*

### சீடர் பரிபக்குவம்.

கன்னட தேயத்து அரசராகிய குமார தேவர், அத்துவித ஞான அபரோட்ச சாட்சாத்காரம் அடைய விரும்பி, பேரையூர் சாந்தலிங்க சுவாமிகளை ஞானசிரியாகக் கொண்டு, தமது முதன் மந்திரியினால் சுவாமிகளுக்குத் தமது விருப்பத்தைத் தெரிவித்து, அதன் பின்பு தாமே போய்க் கண்டு வணங்கி நிற்க, அது தெரிந்து சுவாமிகள் இவரது பரிபாகத்தை நோக்கும் பொருட்டுத் தமது கையேட்டுத் தம்பிரானை நோக்கி, அப்பா! இவனைப் பார்த்தால் அரசனைப்போல் இருக்கின்றது. இவன் இந்த வழிக்குப் பாத்திரவான் அல்லன். இவனை அரசுக்கே போகச் சொல் என்க, அதற்குத் தம்பிரான், சுவாமி! இவ்வரசனிடத்தில் அதிதீவிர பக்குவமுடைய சற் சீடர்க்குள்ள பதினெண் குறிகளும் உண்டா யிருக்கின்றனவே யென்று சைகையாய்ச் சொல்ல, ஆனால் இவனை நமது எருதுக்குப் புல்லறுத்துப் போடச் சொல்லென்று கட்டளை யிட்டனர். அவ்வாறே தம்பிரான், புல்லு கட்டக் கயிறும் அரிவாளும் கொடுத்தனுப்பக் குமார தேவர் அத் திருப்பணியைச் சிரசாக வகித்து, வயலுக்குப் போய்ப் பள்ளர்கள் புல்லறுப்பதைப் பார்த்துத் தாமும் அவ்வாறே அறுக்க நினைத்து, இடக் கையால் புல்லைப்பற்றி, வலக் கையிலுள்ள அரிவாளைப் புல்லின் மீது பூட்டாமல், இடக் கைமேற் பூட்டி யிழுக்க, கையறுபட்ட மாத்திரத்தில் வலக்கையை நோக்கி என் இப்படி

அறுத்தாய்? என்று கோபித்தார். அதைக் கண்ட பள்ளர்கள், நீர் யாரையா? எனலும்; நான் பேரையூர்ச் சாந்தலிங்க சுவாமிகள் வாகனத்திற்குப் புல்லறுப்பவன் என்று கூற ஆச்சரியமடைந்து, இவர் ஒரு உயர் குடும்பத்தவர்போல் இருக்கிறாரே யென்று அப் பள்ளர்கள் எண்ணி, அவர்களே புல்லறுத்துக் கட்டு கட்டி, அவர் திருமுடிமீது வைக்க, சுமை பொறாமல் சிரம் சாய்ந்து போவதைக் கண்டு, அவர்களே அச் சுமையை எடுத்து வந்து மடாலயத்துக்கு வெளியில் வைத்துவிட்டு, நடந்த வர்த்தமானங்களைத் தம்பிரானுக்குத் தெரிவித்துச் சென்றார்கள். கையறுப்புண்ட செய்தியைத் தம்பிரான், சுவாமிகளுக்குக் குறிப்பாகத் தெரிவித்தனர். சுவாமிகளும் குமாரதேவரை நோக்கிச் சோதனை நிமித்தம், முனிவு கொள்பவர்போல் கோபிக்க, அவரும் உண்மையாகவே பயந்து ஒதுங்கினர். இவ்வாறாகப் பல சோதனை புரிந்து அதன்மேல் ஞானோபதேசஞ் செய்தருளினர்.

திருவண்ணாமலையில் அருட் பெருஞ் சித்தாகக் குகை நமச்சிவாய தேவர் என்றொரு மகான் எழுந்தருளி யிருந்தனர். அவருக்குக் குரு நமச்சிவாயர் என்றொரு சீடர் இருந்தனர். அவரது பரிபாக பக்குவத்தைச் சில காரணார்த்தமாகச் சோதிக்க விரும்பிக் குகை நமச்சிவாய தேவர், தாம் புசித்த அன்னத்தை ஒரு திருவோட்டில் வாந்தி செய்து, இதை மனிதர் காலடி படாத விடத்தில் கொண்டுபோய் வைத்துவிட்டுவா என்று கட்டளையிட் டனுப்பினர். அதைக் குரு நமச்சிவாயர் வாங்கி, மனிதர் சஞ்சரிக்காத விடம் நமது வயிறுதான் என்று கருதி, அவ்வமுதை யுட்கொண்டனர்.

ஆசிரியர் இவ் வற்புதத்தை யறிந்து, அப்பா! நமச்சிவாயா! காலடி படாத விடத்திற் கொண்டுபோய் வைத்த

னேயா ? என்க, சுவாமி! வைக்கவேண்டிய விடத்தில் வைத்தேன் என்று மனமும் சிரமும் வணங்கிக் கூறினர். உடனே ஆசிரியர், சீடரைக் கட்டித் தழுவி அப்பா! என்னருமந்தக் கண்மணி! இன்றல்லவோ நீ மெய்ஞ்ஞானத்தை அடையும் பாக்கியத்தைப் பெற்ருய். உன்னைப் போன்ற அதி தீவிரமுடைய சீடர்கள் யாருக்குக் கிடைக்கும்? நானே பெரும் பாக்கியவான் என்ருசீர்வதித்து ஞானேபதேசம் செய்தருளினர்.

குமார தேவரைப் போலும்—குரு நமச்சிவாயரைப் போலும் அந்தக் காண ஆபாசமும் மனமாசும் நீங்கியவர்கட்கன்றே! பிரமஞான வுணர்ச்சி தோன்றும். ஞானசிரியர், தம்மை யடைந்த சீடர்களின் பக்குவம் அறிவான் கருதி, அவர்களை இன்னவிதமாகத் தான் சோதனை புரிய வேண்டும் என்பதை ஒருவராலும் வரையறுத்துச் சொல்ல இயலாது. அது, அந்தந்த ஞானசிரியரின் திருவுளச் சம்மதம் எவ்விதமோ அவ்விதமே யாம்.

கார்த்தவீரி யார்ச்சுனன் என்பவன் தத்தாத்திரேய ரென்ற மகரிஷியைக் குருவாக நாடி அவருக்குப் பணிவிடை செய்துவருங் காலத்தில், ஒருநாள் குரு நித்திரை செய்யும் போது அவர் பாதங்கள் இரண்டையும் மிருதுவாகப் பிடித்து, அவருக்குச் சுகத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தான். அதனல் தத்தாத்திரேயாது உள்ளங்கால்களிலிருந்த சூட்சுமாக்கினியானது கார்த்தவீரி யார்ச்சுனனது கைகளை எரித்துவிட்டது. கையிழந்த கஷ்டத்தோடும் தன் குருவைத் தடவிக் கொடுத்து சுகப்படுத்திக்கொண்டிருந்தான். ரிஷி விழித்துச் சீடனுடைய துன்பத்தைப் பார்த்து, தன்னுடைய ஞான திருட்டியால் காரணத்தை உணர்ந்தார். தன் துன்பத்தைக்கூடக் கவனியாது மிகுந்த பத்தி விசுவாசத்துடன் கார்த்தவீரியன் பணிவிடை செய்த

தற்கு மெச்சி, அவனுக்குத் தீர்க்காயுளும், ஆயிரம் கரங்களும், சக்கரவர்த்தி நிலைமையும் உண்டாகும்படி ஆசிர்வதித்தார். அவ்வாறே அவன் சகல போகங்களையு மடைந்து சக்கரவர்த்தியாகி, நெடுங்காலம் பிரசைகள் ஆனந்திக்க சுகமாக இராச்சிய பரிபாலனம் செய்தானும். இஃதன்றோ குருபக்தி.

மன்னார் குடியில் சமாதி கொண்டிலகும் சூட்டுக் கோல்—இராமலிங்க சுவாமிகள், தம்மிடம் வந்து உபதேசங் கேட்குஞ் சீடர்களுக்கு, பாம்பு, தேள், பூரான், நண்டுத் தெறுக்கால் முதலிய விடசெந்துக்களின் கியாழம் ஒரு கிண்ணம் குடித்து, இந்தச் சூட்டுக் கோலால் ஒரு சூடு தாங்கினால் உபதேசஞ் செய்வோம் என்று சொல்லி, அவ்வாறு சம்மதப் படுகிறவர்களுக்கு உபதேசம் செய்வாராம்.

விண்டாவப் புகழ்படைத்து விளங்குதென்று வாரகைவாழ்
விமலன் சர்வ
சண்டாளக் குழம்பருந்தி யிக்கோலால் ஒருசூடு
தாங்கு வோர்க்கே
உண்டாமெய் யுணர்ச்சிதரு மூபதேசம் புரிதுமென
வொருசூட் டுக்கோல்
கொண்டாரும் பரமனெங்கள் குடிபுரக்கு மிராமலிங்கக்
குருதாள் போற்றி.

நாட்டுக்கோர் திலகமெனப் புகழ்மன்னார் குடியெனுமா
நகரிற் றோன்றி
தேட்டுக்கே தேடரிய சித்தர்களும் புகழ்பெரிய
சித்த ராகி
வீட்டுக்கே யுரியரிவ ரரியரிவ ரெனவறிய
விரும்பிக் கையிற்
சூட்டுக்கோல் கொண்டருளும் இராமலிங்க சுவாமிபதந்
தொழுது வாழ்வாம்.

எமது அருமைப் பிதாவும் ஞானாசிரியருமாகிய புலவர்கள் நாயகம் அப்துர் றகுமான் சாகிபு ஒலியுல்லா அவர்களிடம் சில அன்பர்கள் ஞானோபதேசம் கேட்டபோது அவர்கள் சொன்னதாவது,

அன்பர்களே! நீங்கள் இல்லறத்தை நீத்துத் துறவறம் அடைய விரும்புகிறீர்கள். துறவறம் என்பது காவி வேஷ்டி, உருத்திராக்க முதலானவைகளை அணிவது மட்டுமல்ல. துறவு என்பது மனத் துறவு. ஞானத்தை ஒருவன் அடைவது மகா அருமை. ஊணுறக்கம் குறைவதென்றால் எவருக்கும் திருப்தியா யிராது. ஆகையால் சூட்டுக்கோல் இராமலிங்க சுவாமிகளைப் போல் சண்டாளக் குழம்பு குடித்து, சூடு தாங்கும்படி சொல்லவில்லை. அவ்வாறு சொல்லின், இந்தப் பக்கமே வரமாட்டீர்கள். ஆயினும் நீங்கள் அவ்வளவு வருத்த மடையாமல், 10 நாளைக்கு அறுசுவை யில்லாமல் அதாவது உப்பில்லாக் கஞ்சி குடித்துப் பாருங்கள். அது உங்களுக்குத் திருப்தியா யிருந்தால், இங்கே வந்து ஞானோபதேசங் கேளுங்கள் என்று திருவாய்மலர்ந் தருளினார்கள். அதைச் செய்ய முடியாததால் அவர்கள் அதன்பின் வரவேயில்லை.

ஆகையால் ஞானாசிரியர் சோதனைக் கெல்லாம் உள்ளாயிருக்க விருப்பமுள்ளவர்கள் தான் உபதேசங் கேட்க முயலவேண்டும். அதை யெல்லாஞ் செய்ய ஆற்றலிருந்தாலன்றி, யோக ஞானங்களைச் சாதிக்கமுடியாது. யோக ஞானங்கள், வாழைப்பழம், கரும்பு, கற்கண்டு இவைகளைப் போல் இருக்குமென்று ஆரம்பத்தில் நினைத்துப் போய், ஞானாசிரியர் சோதனை நிமித்தம் புரியும் பரீட்சையில் தேறாமல் போய்விடக்கூடாது. கொஞ்சம் கஷ்டப்பட்டு அனுட்டித்தால் சில காலத்திற்குப் பின், நீங்கள் விரும்பியபடி

வாழைப்பழம், கரும்பு, கற்கண்டு முதலியவைகளிலும் பல்லாயிர மடங்கு தித்திக்கும்படியான இன்பத்தைப் பெறுவீர்கள். இதிற் சந்தேகமில்லை. இந்த நெறியைக் கைவிட்டு பலதேச யாத்திரை செய்து அலைவதினால் பிரயோசனங் கிடையாது. ஞானாசிரியருடைய தெரிசனத்தினாலேயே ஆன்ம லாபம் அடைவீர்கள்.

சிவஞான வள்ளல்.

காசிவாஞ்சியங் காளத்தி கழுக்குன்றங் காஞ்சி
மாசிலாருறை பருப்பதங் கோகன மறைக்கா
டேசிலாதுறை மூர்த்திதந் தெரிசன மெல்லாந்
தேசிகன்றிருச் சேவையை நிகர்க்குமோ செப்பில்.

நெஞ்சறி விளக்கம்.

எட்டிலே யெழுதும் நூல்கள் எத்தனை படித்தும் நீதான்
காட்டிலே யெரித்த திங்கள் கானலின் சலம்போ லானாய்
நாட்டிலே தெய்வ மென்று நடந்தலை யாம லுன்றன்
கூட்டிலே நாகை நாதர் குறிப்பறிந் துணர்வாய் நெஞ்சே.

பழமலை யந்தாதி.

தண்டங்க மண்டலங் கொண்டு பழமலைச் சங்கர தாட்
புண்டங்க மண்டலங் கண்டுசென் றூலுமெய்ப் போத முறார்
பண்டங்க மண்டலங் காரமின் ஞக்கினன் பாட் டியலைக்
கொண்டங்க மண்டலம் பாழாக் கியவனைக் கூற லரே.

ஆசிரியர், சீடனிடத்தில் அதிக பற்றுதலோடு இருப்பதாகத் தெரிந்தால், அதற்காக அவரிடத்தில் கூச்சமில்லாமல் அதிகமாக நெருங்கி மரியாதை யின்றித் தொந்தரவுகள் செய்யாமலும்; சீடனை வைது கோபித்து வருத்தமாக இருந்தால், அதற்காக வெறுத்து விலகிப் போகாமலும்; நெருப்பில் குளிர் காய்பவனைப் போல் நெருங்காமலும், விலகாமலும் நடந்து கொள்ள வேண்டும். அன்றியும், இருக்கச்

சொன்னால் இருந்து, போகச் சொன்னால் போய், எப்படி நடந்தால் அவருக்குப் பிரியம் வருமோ அப்படி அவரது பிரியம்போல் வழிபாட்டுடன் நடந்து வரவேண்டும்.

நன்னூல்.

அழலி னீங்கான் அணுகான் அஞ்சி
நிழலி னீங்கான் நிறைந்த நெஞ்சமோடு
எத்திறத் தாசா னுவக்கு மத்திறம்
அறத்தின் றிரியாப் படர்ச்சி வழிபாடே.

ஆசாரிய னிடத்தில் நம்பிக்கையும்-பக்தி விசுவாசமும்-தாழ்மையும் சீடனுக்கு இல்லாவிடின், அந்தச் சீடனுக்கு ஞானோதய மாவது மிக்க துர்லபம்.

நான், சிறு பிராயத்தில், அதாவது : 16 வயதிலேயே எனது அருமந்தப் பிதா அவர்களால் பிரம்ம நிட்டையை உபதேசிக்கப் பெற்றேன். அதன் அருமையை அப்போது நான் அறியாத காரணத்தால் சரிவர அநுட்டிக்காமல், பல ஆசிரியர்க ளிடத்திலும் அலைந்து திரிந்தேன். அவர்களும் அதையே தான் சொன்னார்கள். பின்னர், எனது அருமந்தப் பிதா அவர்களிடத்திலேயே அடைக்கலம் புகுந்தேன். அதற்கவர்கள் சுகப்பிரமம், தனது பிதாவாகிய வியாச மகரிஷியை அலட்சியம் செய்த கதையைச் சொல்லிக் காட்டி, அன்பு கூர்ந்து தீட்சை செய்ததனால் மீண்டும் பிர யோசனத்தை யடைந்தேன். ஆதலால் ஓர் எழுத்தாகி னும் ஓர் சொல்லாகினும் தனக்கு உபதேசித்தவரைச் சற் குருவாகப் பாவித்துத் திரிகரண சுத்தியாக வணங்கித் தன்னு லியன்ற ஒத்தாசைகளைச் செய்து வழிபட வேண்டும். அவர் நீங்கிய காலத்தினும், மனத்தில் மானதமாகச் சிந்திக்க வேண்டும். அங்ஙன மின்றி, அவர் மனது நோகும்படி நடந்து கொண்டால், ஞானோதய மாகாமலும் வேறெந்தக்

குருவினாலும் அநுக்கிரகிக்கப் பெறாமலும் துன்பத்தில் வருந்துவான்.

திருமந்திரம்

ஓரெழுத் தொருபொரு ளுணரக் கூறிய
சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோர்
ஊரிடைச் சுணங்கனாய்ப் பிறந்தங் கோருகம்
பாரிடைக் கிருமியாய்ப் படிவர் மண்ணிலே.

மந்திர மோரெழுத் துரைத்த மாதவர்
சிந்தையில் நொந்திடத் தீமை செய்தவர்
நுந்திய சுணங்கனாய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே.

ஆண்டா னடியவர் யார்க்கும் விரோதிகள்
ஆண்டா னடியவ ரையமேற் றண்பவர்
ஆண்டா னடியாரை வேண்டாது பேசினோர்
தாந்தாம் வீழ்வது தாழ்வா நரகமே.

தபோ மகிமை-சாபாநுக்கிரக வல்லமை-அட்டாங்க யோகம்-அட்டமா சித்திகள் முதலாகச் சொல்ல முடியாத தமது சாமர்த்தியங்களை யெல்லாம், நீறு பூத்த நெருப்புப் போலவும், கரித் துணியில் முடிந்த மாணிக்கம் போலவும் புறத்தில் தோன்றாமல் அடக்கி, கோபமாகிய நெருப்பானது மூண்டெழாதபடி, கருணை யென்னும் தண்ணீரால் அவித்து, சாந்தமும் வாய்மையுமே பொருளாக மேற்கொண்டு பரம சாதுக்களா யிருப்பதனாலும்;

சிறியோர் செய்த சிறுபிழை எல்லாம்
பெரியோ ராயிற் பொறுப்பது கடனே

என்பதனாலும்; பெரியோர்களுக்குக் கோபம் வாராதென்று எளிதாக நினைத்து;

சிறியோர் பெரும்பிழை செய்தன ராயின்
பெரியோர் அப்பிழை பொறுத்தலு மரிதே

என்பதை ஆராய்ந்துணராமல் நெருப்பை முன்றானையில் முடிவது போலவும்; பாம்பினிடத்தில் பரிகாசம் பண்ணுவது போலவும்; அவர்கள் விஷயத்தில் நிந்தை செய்து கோப மூட்டலாகாது. மௌனம் மலையைச் சாதிக்கு மல்லவா?

திருக்குறள்.

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேனுங் காத்தல் அரிது.

விவேக சிந்தாமணி.

வில்லது வளைந்த தென்றும் வேழம துறங்கிற் றென்றும்
வல்லினம் பதுங்கிற் றென்றும் வளர்கடா பிந்திற் றென்றும்
புல்லர்கள் கோபந் தன்னைப் பொறுத்தனர் பெரியோ ரென்றும்
நல்லதென் றிருக்க வேண்டாம் நஞ்சினுங் கொடிய தாமே.

ஞானாசிரியர் முதலான பெரியோர்களின் எதிரே உயர்ந்த ஆசனத் திருத்தலும், காலை நீட்டிக் கொண்டிருத்தலும், காலின் மேலே கால் போட்டுக்கொண்டிருத்தலும், சயனித்தலும், சிரித்தலும், எதிர்த்துப் பேசுதலும், அவசியமான வார்த்தைகளைப் பேசுதலும், கை சுட்டிப் பேசுதலும், எச்சில் உமிழ்தலும், அரையிலே கையூன்றுதலும், காலைத் தூக்கி உயர்ந்த தானத்தில் வைத்துக்கொண்டு நிற்றலும், போர்த்துக் கொள்ளுதலும், அங்கவஸ்திரத்தைத் தொங்கவிட்டுக் கொள்ளுதலும், அவர்களைத் தூரத்தில் நின்று கூப்பிடுதலும், அவர்கள் நிழலை மிதித்தலும் இது போன்றவைகளும் ஆகாவாம்.

தனிப்பாடற்றிரட்டு.

தோப்புப் பெருத்து விளைநிலம் பாழ்த்தது தொங்கலிரு
மாப்புப் பெருத்து மரியாதை பாழ்த்தது வஞ்சியர்தம்
மூப்புப் பெருத்து மலையாளம் பாழ்த்தது முப்புரிநூல்
பாப்புப் பெருத்து மதுரைத் துரைத்தனம் பாழ்த்ததுவே.

பெரியோர் முன்னே போம்பொழுது, வேட்டியை ஒதுக்கிக்கொண்டு, தணிந்த நடையுடனே போகவேண்டும். அவர் சமீபத்திலே நின்று பேசும்பொழுது, வாய் புதைத்து நின்று பேசுதல் வேண்டும்.

பெரியோர் நம்முடன் பேசும்பொழுது வேறொன்றையும் பாராமலும்; வேறொன்றுக்குச் செவி கொடாமலும், அவர் முகத்தையே பார்த்துக்கொண்டு, அவர் வார்த்தைக்கே செவி கொடுக்க வேண்டும்.

பெரியோருடனே நாம் பேசும்பொழுது, அவரை சுவாமி! ஐயா! என்பவை போன்ற வார்த்தைகளினாலே உயர்த்தியும்; நம்மை அடியேன்! தமியேன்! என்பவை போன்ற வார்த்தைகளினாலே தாழ்த்தியும் பேச வேண்டும்.

பெரியோர் நமக்கு ஒன்றைத் தரும்பொழுது, நாம் எழுந்து இரண்டு கைகளினாலும் வாங்கவேண்டும். பெரியோருக்கு நாம் ஒன்றைக் கொடுக்கும்பொழுது, எழுந்து இரண்டு கைகளினாலும் கொடுக்க வேண்டும்.

பெரியோர் நமது வீட்டுக்கு வந்தாராயின், நாம் அவரை விரைந்து எதிர்கொண்டு வணங்கி அழைத்துக் கொண்டு வந்து, ஆசனத்திலே யிருத்தி, அவரை மூன்று தரமாயினும் ஐந்து தரமாயினும் நமஸ்கரித் தெழுந்து, *நவ புண்ணியத் துடன் வழிபட்டு; அவர் இரு என்றபின் இருக்க வேண்டும். அவர் போம்பொழுது, எழுந்து அவர் பின்னே சிறிது தூரம் போய், அவரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு திரும்ப வேண்டும்.

---

* நவபுண்ணியம்:—நமது ஞானக் களஞ்சியம்—சீவன் முத்தர்களிலக்கண அத்தியாயத்திற் காண்க.

## குரு சேவை

கடவுளது சேவைக்கு அந்தக்கரண சுத்தி அவசியமாதல்போல, குருவினது சேவைக்கும் அங்ஙனமே வேண்டுவது அத்தியாவசியம். குருவினது சேவையானது மனம், வாக்கு, காயம், திரவியம் முதலானவைகளின் அர்ப்பணத்தாலுண்டாகிறது.

கற்புடைய மாதருக்கு, கணவனிடத்தில் தெய்வ பாவனை ஏற்பட்டிருப்பதுபோல், மாணாக்கர்கட்கும் குருவினிடத்து தெய்வ பாவனை ஏற்பட வேண்டும். குருபிரான் இராசத குண விவகாரத்திலிருக்கும்போது, அவரை சிருஷ்டிகர்த்தா (பிரம்மா) வடிவாகவும், இரட்சிக்கும்போது இரட்சக கர்த்தா (விஷ்ணு) வடிவாகவும், குற்றத்தைக் கடிந்து கோபிக்கும்போது சங்கார கர்த்தா (சிவ) வடிவாகவும், சாந்தமா யிருக்கும்போது புனல் (கங்கை) வடிவாகவும், சாத்திரங்களில் தற்பராகும்போது பிரணவ வடிவாகவும், சந்தேக விபரீத அஞ்ஞான அந்த காரத்தைப் போக்கும்போது ஞான சூரிய வடிவமாகவும், சதா காலமும் மனதினால் நமஸ்கரித்தல் வேண்டும். இவை மனத்தின் அர்ப்பணத்தாலுண்டாகும் சேவை.

குரு பிரானைத் துதித்தல், "நமோ நம" "செய செய" என்று புகழ்தல் முதலானவை வாக்கின் அர்ப்பணத்தாலுண்டாகும் சேவை.

குருவின் பாத கமலங்களைப் பிடித்தல், தீர்க்க தண்டம் சமர்ப்பித்தல், குருவுக்கு வேண்டிய பணிகளைச் செய்தல் முதலானவை சரீரார்ப் பணத்தாலுண்டாகும் சேவை.

தனம், தானியம், மனைவி, மக்கள், ஆடு, மாடு, பூமி, தாசன், தாசி முதலியனவை தனமாதலால் அவற்றை, குரு

பிரான் கிரகத்தராயிருந்தால் உடல்-பொருள்-ஆவி மூன்றும் உள்பட அர்ப்பணம் செய்தல் வேண்டும். குருபிரான் சந்நியாசியாயிருப்பின் அவற்றை நீக்கி அவரைச் சரணகதி யடைய வேண்டும். இவை தானத்தின் அர்ப்பணத்தா லுண்டாகும் சேவை. இவ்விதமாக குருவுக்கு உடல்-பொருள் - ஆவி மூன்றையும் தத்தஞ் செய்திருந்தா லும் மனதை அர்ப்பணம் செய்வதே முக்கியம். இதற் குதாரணம் :—

அரசனும்-ஆன்மலாபமும்.

அரபி தேசத்திலுள்ள ஒரு சுல்தான் (சக்கரவர்த்தி) தன் அரசிலக்கணத்துடன், ஆன்ம லாபமும் அடைய வேண்டுமென்ற அவாக்கொண்டு, தன் தேயத்திலுள்ள குரு மார்கள் தங்களுக்குத் தெரிந்த யோக ஞான அப்பியாசங் களைத் தனக்கு நிர்ப்பயத்துடன் தாராளமாய் வந்து உப தேசம் செய்யலாம் என்றும், அப்படிச் செய்யும் உப தேசம் யாருடையது தன் மனதைக் கவரச் செய்கிறதோ, அப்பெரியார் கோரும் எப்பொருளையும் தான் தருவதாக வும் தந்தேச முழுவதும் பறையறையச் செய்ததுமன்றி, தன் ஆசாரவாசலில் ஒரு ஆராய்ச்சி மணி கட்டுவித்து, உப தேசிக்க வருபவர் அம் மணியை அடித்தால், அரண்மனை யதிகாரிகள் உடனே அவருக்குபசரணை செய்து, நீராட்டி, ஆடையாபரணங்களால் அலங்கரித்து, அறுசுவை யுண்டி யளித்து தன்னிடத்திற்கு அழைத்து வர வேண்டுமென்றும் உத்தரவு செய்திருந்தான்.

இதைக் கேள்வியுற்ற அறிஞர்கள் பலர், திரவிய ஆசை கொண்டு, ஆராய்ச்சி மணி மூலமாய் சுல்தானிடம் சென்று, தங்களுக் கப்பியாசமுள்ள முறைகளை உபதேசித்தார்கள். ஒன்றுவது சுல்தான் மனதைக் கவர்ச்சி செய்யாததால்,

இவர்கள் பூரண ஞானமுடைய குருமார்களன்று ; சரியான குருபிரான் வரும் வரையில் இவர்களில் ஒருவரையும் வெளியில் விடக்கூடாதென்று தன் பாதுகாப்பிலேயே வைத்திருந்தான்.

கருத்த உருவமும், நீண்ட பற்களும், குழிந்த கன்னங்களும்-கண்களும், சொள்ளை முகமும், மெலிந்த கை-கால்களும், சர்வ விகாரமும் பொருந்திய ஒரு சிறுவன், ஒருநாள் பள்ளிக்கூடத்திலிருந்து வந்தவுடன், தன் தாயை நோக்கி, அம்மா! என் பிதாவை நான் வெகு நாளாகப் பார்த்ததில்லையே, அவர் எங்கே என்று கேட்டான். தாயானவள் தேம்பித் தேம்பி யழுதாள். ஏனம்மா அழுகிறாய்? என் பிதா இறந்துவிட்டனரா? என்றனன். தாயானவள், மகனே! நம் தேசத்து சுல்தானுக்கு உபதேசம் செய்யச் சென்ற அனேக குருமார்களில் உன் பிதாவும் ஒருவர்: அவர் சென்று பல வருடங்களாயின: அரசன் ஆக்ஞைப்படி அரண்மனையிலேயே பந்தோபஸ்தில் வைக்கப்பட்டிருக்கிறாரென்று சொன்னாள். அச்சிறுவன், அம்மா! அழாதே. நான் போய் சுல்தானுக்கு உபதேசஞ் செய்து என் பிதாவையும் அழைத்து வருகிறேனென்று புறப்பட, தாயானவள், கண்மணி! எத்தனையோ ஞான பண்டிதர்கள் சென்றும் திரும்பிலர். உன்னை அனுப்பிவிட்டு நான் எவ்வாறு உயிர்தரித்து வாழ்வேன். உன் தந்தை பிரிந்த துக்கமானது உன்னைப் பார்த்தல்லவோ சாந்தி யடைந்துகொண்டிருக்கிறது. உபதேசஞ் செய்ய உனக்கென்ன தெரியும்? என்று சொல்லித் தடுத்தாள். இளைஞன் அதையுங் கேளாமல் இராச மாளிகையை யடைந்து ஆராய்ச்சி மணியை யடித்தான். அரண்மனை உத்தியோகத்தர்கள் வந்து வழக்கம் போல் உபசரித்து சுல்தானிடம் அழைத்துப்போனார்கள்.

பால குருவும்-சக்கரவர்த்தியும்.

சிறுவனைக் கண்டதும் சுல்தான் நகைத்தார். சிறுவன் சுல்தானை நோக்கி, "ஏன் நகைக்கிறீர்? குயவனைப் பார்த்து நகைக்கிறீரா? பாண்டத்தைப் பார்த்து நகைக்கிறீரா?" என்னலும், குயவனென்றால் என்ன? பாண்டமென்றால் என்ன? என்று சுல்தான் மருண்ட சிந்தையுடையவராய் அவ்விளவலை வணங்கி, தனக்கு ஆன்ம ஞானோதயம் உண்டாகுமாறு உபதேசிக்க வேண்டுமென்று மீண்டும் வணங்கி, தங்கள் திருச்சித்தம் எப்படியோ! அப்படியே நடக்கிறேன். தங்கள் விருப்பம் யாது? என்று வினவினன்.

ஞானவாசிட்டம்.

ஊகமுள தேற்சிறுவ ருரையுங் கொள்க
 வொழிந்ததய னுரைசெயினுந் திரண மொப்ப
வேகவிடு வாய்ஞான மெளிது தோன்ற
 வியம்புமுவ மானமெலா மேக தேச
மாகநினை வாயுருவ மற்ற ஞான
 மாகார மாமுவமைக் கண்டா தென்னு
மூகரனு பவமில்லா விகற்பத் தாலே
 மொழிகுதர்க்க மறிவழிக்கு முயல வேண்டா.

இளவலாகிய குருபிரான் சுல்தானை நோக்கி, அரசே! நீ உனக்குச் சொந்தமாக எண்ணியிருப்பதை எனக்குத் தத்தஞ் செய், பின்னர் உபதேசிக்கிறேன்; அதுவே என் விருப்பம் என்றனர். அதற்கு சுல்தான் நமக்குச் சொந்தமாவது யாது? இந்தத் தேயம் நமக்குச் சொந்தமல்லவா? ஆகையால் இன்ன எல்லைக்கு வடக்கு, இன்ன எல்லைக்குத் தெற்கு, இன்ன எல்லைக்கு மேற்கு, இன்ன எல்லைக்கு கிழக்கு, இந்த நான் கெல்லைக்குட்பட்ட எனது தேய முழுவதையும் தங்களுக்குத் தத்தஞ் செய்துவிட்டேன் என்றனன்.

அப்போது சிறுவல், இந்தத் தேயமானது, உன் பாட்டன், தகப்பன் முதலியவர்களிடமிருந்து உனக்குக் கிடைத்தது. இதையே உன் புதல்வன், பௌத்திரன் முதலானவர்கள் தத்த முடையதென்று சொல்வார்கள். ஆதலால் இந்தத் தேயம் உனக்குச் சொந்தமானதன்று. உனக்கு உரித்தான பொருள் இன்னதென்பதை யுணர்ந்து கொடுப்பாயாக என்னலும், சுல்தான் அதிசயித்து அது சரிதான் என்றுணர்ந்து, என் மனைவி எனக்கே உரியவள், அவளைத் தங்களுக்குத் தத்தஞ் செய்துவிட்டேன் என்றான். உன் மனைவியை மகள் என்றும், மருமகள் என்றும், தங்கை யென்றும், தமக்கை யென்றும், தாயென்றும் முறை கொண்டு அவரவர்களும் தத்தமக்குச் சொந்தமென்று பாத்தியங் கொள்வார்களாதலால், அவளும் உனக்குச் சொந்தமன்று என்றனர்.

என் சரீரம் எனக்குச் சொந்தமானதே அதை அர்ப்பணஞ் செய்கிறேன் எனலும் நீ நித்திரை செய்யும் போது, உன் சரீரத்தின் மீது ஒரு பெரிய சர்ப்பம் ஊர்ந்தாலும் உனக்குத் தெரியவில்லையே. ஆன்மா நீங்கிய பின்னர் சரீரம் இருக்கும் வாறென்னே ? ஆதலால் உன் சரீரமும் உனக்குச் சொந்தமானதன்று என்றனர். இவ்வாறு ஒவ்வொன்றையும் இளவல் மறுத்துச் சொல்லச் சொல்ல, சுல்தான் மதிமயங்கி, எனக்குச் சாசுவதச் சொந்தமான பொருள் இன்னதென்று விளங்கவில்லை. அடியேனுக்கு விளக்கமாகும்படி தேவரீரே திருவாய்மலர்ந்தருளல் வேண்டும். அவ்வாறே நடந்துகொள்கிறேன் என்றான்.

இளவல், உன் மனதுதான் உனக்குச் சொந்தம். அதை மந்திரி முதலான யாவருமறிய எனக்குத் தத்தஞ் செய்து கொடுத்தால், நான் உனக்கு உபதேசிக்கிறேன்

என்றனர். அந்தப்படி சுல்தான் கடவுள் சாட்சியாகவும், மந்திரி பிரதானி முதலிய் உத்தியோகத்தர்கள் சாட்சியாக வும், என் மனதைத் தங்களுக் கர்ப்பணஞ் செய்துவிட் டேன், என்று பிரமாணம் செய்து கொடுத்தான். அவன் தத்தஞ் செய்ததைச் சோதிக்கும்பொருட்டு பால குரு வெளியிற் புறப்பட்டார். அரசன் அவரை நோக்கி, பிதாவே! தாங்கள் எனக்கு ஞானோபதேசம் செய்யாமற் செல்லு கிறீர்களே! என்று புகல, பால சற்குரு சுல்தானை நோக்கி அரசே! உன் மனதை எனக்குத் தத்தஞ் செய்த துண்மை யாகில், நான் உபதேசிக்காமற் போவதைப்பற்றி நீ எப் படிக் கேட்டாய்?

உன் மனது உன்னிடமே இருப்பதனாலல்லவா இவ் வாறு கேட்டனை? ஏ! மந்திரி பிரதானிகளே! இவ்வரசனைப் பார்த்தீர்களா! நீங்க ளெல்லோரும் அறிய இவ்வரசன் தன் மனதை எனக்குத் தத்தஞ் செய்துவிட்டு, அந்த மனத்தினால் எவ்வாறு என்னைக் கூப்பிட்டான்? இது உங்க ளுக்கு நியாயமாகத் தோன்றுகிறதா? என்றனர். அர சன் திடுக்கிட்டு வணங்கி, குருபிரானே! அடியேன் அறியாத் தன்மையினால் செய்த பிழையை மன்னித்தருளல்வேண்டும். இனி என்வசமென்பதில்லாமல் தேவரீர் ஆக்ஞைப்படியே நடந்துகொள்கிறேன் என்று மீட்டும் வணங்கினான்.

பால சற்குருவானவர், தன் பிதா முதலிய குருமார்களை பந்தோபஸ்தி லிருந்து விடுவித்து, அவர்களுக்குத் தக்க சன்மானங் கொடுக்கும்படிச் செய்த பின்னர், அரசனை நோக்கி, நீ அதிகாலையில் இத்தனை மணிக்கு நித்திரையை விட்டு எழுக! அதன் பின்னர் இத்தனை மணி முதல் இத்தனை மணி வரையில், அரசிலக்கண காரியங்களைக் கவனித்திடுக! இத்தனை மணி முதல் இத்தனை மணி

வரையில் ஆன்மஞான சம்பந்தமான காரியங்களைக் கவனித்திடுக! இன்ன வேளையில் நீராடுக! இன்ன நேரத்தில் உண்ணுக! இன்ன நேரத்தில் நித்திரை செய்க! என்று அறுபது நாழிகை (24-மணி) நேரத்திற்கும் நியமனம் ஏற்படுத்தி, அரசனைத் தன்வசத்தனாகும்படிச் செய்து, அவனுக்கு நிகரற்ற ஆன்ம ஞானத்தையும் போதித்து பிரம்ம கைவல்லியம் அடையும்படிச் செய்தனர்.

ஆகையால் சற்சீடர்கள் குருமூர்த்திக்கு எந்த அர்ப்பணத்தைச் செய்திருந்தாலும், செய்யாதிருந்தாலும் மன அர்ப்பணத்தையே அவசியம் செய்திருத்தல் வேண்டும்.

## சீடராகத் தக்கவர்.

இந்தியாவிலுள்ள மானிட வர்க்கத்தை, பிரம்ம-சத்திரிய-வைசிய-சூத்திர என்ற நான்கு வருண பேதங்களையுடையதாய் முற்காலத்திலேயே வகுக்கப் பெற்றிருக்கிறது.

(1) பிராமணர் என்போர் வேதம் ஓதுதலாலும், தாம் பிரம்ம குலத்தவர், ஏனைய மூன்று வருணத்தார்களுக்கும் தாங்களே குருவாயிருக்கிறோம் என்ற மமதையான எண்ணம் உடையவர்களா யிருத்தலாலும் தங்களுக்கு குரு ஒருவர் வேண்டும், தாங்கள் அன்னாருக்குச் சீடராயிருத்தல் வேண்டும் என்ற எண்ணமே அவர்கள் கொள்ளார். ஆதலால் பிராமணர்கள் சீடராயிருப்பதற்குப் பெரும்பாலும் இசைய மாட்டார்கள்.

(2) சத்திரியர்களோ அரசாட்சி புரியும் அதிகாரத்திலிருந்து, சகல பிரசைகளும் தங்களை வணங்க வேண்டுமென்னும் ஒரு திண்ணிய எண்ணத்தையுடையவரா யிருப்பதுமன்றி, இராச்சியாதிகாரியத்திற்குரிய பலவித இன்ப துன்பங்களிலாழ்ந்து கிடப்பவர்களாதலால் இவர்களும் சீடர்களாக முயல்வது சிரம சாத்தியம்.

(3) வைசியர்களோ பொருளீட்டலையே முற்காரியமாகக் கொண்டு, சேர்த்த பொருளைச் சேமித்து, அதைச் சிக்கனமாகச் செலவு செய்கிறவர்களாதலாலும், தங்கள் குருமார்களுக்குப் பொருளுதவி செய்யத் தாராளமான சிந்தையுடையவர்க ளல்லாததனாலும், இவர்களும் சீடவர்க்கத்திற் சேர்ந்து நிராசையாய்க் காலங் கழிக்க அனேகமாய்ப் பொருந்தார்.

(4) கடை வருணத்தாரென் றெண்ணப்பெற்ற சூத்திரர்களே, தங்களுக்கு மேம்பட்ட மூன்று வருணத்தாரிடமும் அன்பு பூண்டொழுகவல்லார். பிராமணர்களையே தெய்வம்போல் மதித்து, அவர்கள் பால் பய-பத்தி கொண்டு நடந்தும், விரதாதி முதலிய விஷயங்களில் பிராமணர்கள் சொல்லையே வேத வாக்கைப்போலவும், தெய்வ வாக்கைப்போலவும் நினைத்தும் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்து வருகிறார்கள்.

சூத்திரர்கள் அரசர் செங்கோலுக்குப் பயந்து, விசுவாசமும், பத்தியுங்கொண்டு, இராசாக்கினைக்குக் கீழ்ப்படிந்து, இறை செலுத்தி அவர்களுக்குறும் சுக-துக்கங்களையும் தம்முடையதாகப் பாவித்து செங்கோல் செழிக்கும்படியாகச் செய்கிறார்கள்.

வைசியர்கள் மாட்டுஞ் சூத்திரர்கள் சென்று, அவர்களிடும் ஏவலைக் கேட்டு, பலவித ஊழியமுஞ்செய்து, பயிரிடல், நிரைகாத்தல், ஆடை நெய்தல் முதலிய கைத்தொழில் செய்தலாகிய பல பணி யியற்றுதலுமன்றி,

தாழ்ந்தோருயர்வரென் றுமிகவுயர்ந்தோர்தாழ்வரென் றுமறஞ்
சூழ்ந்தோருரைக்குமுரைகண்டாமதில்சூழ்கிடந்ததொல்லகழி
தாழ்ந்தோரனந்தன்மணிமுடிமேனின்றன் றுயர்ந்துதடவரையைச்
சூழ்ந்தோர்வரையினுதிப்பவன்றாட்கீழ்நின்றதுபோய்ச்சூழெயிலே

என்னும் பிரபுலிங்க லீலைக் கருத்தையும், "தாழ்ந்து நிற்போர் வாழ்ந்து நிற்பார்" என்ற பழமொழியையும் மனத்திற் கொண்டவராயிருத்தலால், சூத்திரர்களே சீடர்களாயிருக்கத் தகுதியுடையாரென்று பல சாத்திரங்கள் முறையிடுகின்றன.

## கோங்கணர் கடைக்காண்டம் 500.

செப்புகிறேன் சீடரைத்தான் சேர்க்குஞ் சேதி
　　தெளிந்துபார் சாதியெல்லாம் நாலே சாதி
செப்புகிறேன் பிரமனென்றும் சத்திரியனென்றும்
　　செய்யதோர் செட்டியென்றுஞ் சூத்திரன்தா னென்றும்
செப்புகிறேன் வேதனென்றால் சாத்திரத்தில் மாய்வான்
　　திடமாக நிரந்தரமே குருவாமென்பான்
செப்புகிறேன் ராசனென்றால் குருவைக் காரான்
　　திருவேடந் தனைப்பழிப்பான் குருவா ரென்றே. 206

என்றதொரு வணிகனென்றால் காசுக் கள்ள
　　னென்குருவா மென்றொருநாள் சோறு போடான்
அன்றியொரு பணங்கேட்கில் லோபஞ் சொல்வான்
　　ஞானமிந்த மூவருக்கும் வாய்க்கா தப்பா
வென்றியுல கத்திலேபதினெண் சாதி
　　வெவ்வேறே குலம்பேசுங் கோடி சாதி
கண்டான சாதியெல்லாம் நால்வரு ணத்துள்
　　கண்டறிய வேணுமப்பா சீடர் காணே. 207

மேற்கூறிய செய்யுள்களிற் கண்ட விஷயம் ஒருவாறு உண்மையெனினும், முதன் மூன்று வருணத்தார்களில் எவ்வளவோபேர் சிறந்த குணத்தவராயிருந்து, தங்களுக்கு ஞான குருவைத் தேடி ஆன்மலாபமடைந்துள்ளார்கள்.

உதாரணமாக:—பிராமணரில் மன்னார்குடி சூட்டுக்கோல் இராமலிங்கசுவாமி முதலானவர்களும்,

அரசர்களில் :—சனகர், பத்திரகிரியார், குமாரதேவர் முதலானவர்களும்,

வைசியர்களில் :—பட்டினத்தடிகள், ஏலேலோசிங்கர் முதலானவர்களும் சற்குருவை யடைந்தது உலகப் பிரசித்தம்.

இவ்வாறு பல வருணத்தாரிலும் குரு-சீட ஆசாரத்தை யனுட்டித்தவர்களிருந்திருந்தாலும், ஆராயுமிடத்து 100-க்கு 90 பங்கு சூத்திர வர்க்கத்தாரே சீடாசாரத்திற் கருகராயிருந்து வந்திருக்கிறார்கள்—வருகிறார்கள்.

சீடன் மாயையால் பீடிக்கப்பட்டு வருந்தி, அம்மாயை நீங்கி ஆன்மஞானம் அடையும் பொருட்டு ஓர் சற்குருவை யடுத்து, என்னைக் கடைக்கணித்தருள வேண்டுமென இரந்து கெஞ்சிக் கேட்கும்போது, அவர் அவனை நேரில் புகழ்ந்து பேசுவதானது எத்தன்மைத்தா யிருக்கிற தெனில், தண்ணீரில் மூழ்கித் தத்தளிக்கின்ற பயிரின் குருத்தைக் கிள்ளி யெறிந்ததுபோலாம்.

மேகக் கர்ச்சனையால் மயிலானது உஷ்ணம் நீங்கி ஆனந்த மடைதல்போல், சற்குருவானவர் சீடனை யிகழ்ந்து பேசிச் செருக் ககலும்படிச் செய்வதனால், சற்சீடர்கள் மனத்துயரம் நீங்கி ஞானனந்தம் அடைவார்கள்.

## திருக்குறள்.

இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

## பிரபுலிங்கலீலை.

இகழ்ந்தென துளச்செருக் கினைய கற்றிலாய்
புகழ்ந்தனை விழைபுளிங் கறியிட் டாறுநோய்
மிகுந்தெழ வளர்த்தல்போல் எனவி ளம்புபு
தகுங்கழ லிறைஞ்சினன் தண்ட நாயகன்.

## இராமாயணம்.

கடிக்கும்வல் லரவுங் கேட்கு மந்திரங் களிக்கின் றேயை
அடுக்குமீ தடாதென் றன்ற வேதவோ டறிவு காட்டி
இடிக்குன ரில்லை யுள்ளா ரெண்ணிய தெண்ணி யுன்னை
முடிக்குள ரென்ற போது முடிவன்றி முடிவ துண்டோ.

குருவில்லாமல் ஒருவன் அநுட்டிக்கும் யோகஞான நெறியானது எத்தன்மைத் தெனில், குதிரைச் சாரியிற் பழகாத ஒருவன் கடிவாளம் பூட்டாத ஒரு புதிய முரட்டுக் குதிரையின்மேல் ஆரோகணித்துப் பிரயாணஞ் செய்கையில் தவறிக் கீழே விழுந்து மாணுபாயத்திற்குள்ளாவதை நிகர்க்கும். சற்குருவினுல் உபதேசிக்கப்பெற்று அநுட்டிக்கும் யோகஞான நிட்டையானது, குதிரைச் சாரியில் நன்கு பழகிய ஒருவன் கடிவாளந் தாங்கியதும், பழகியதுமான ஒரு சாதுவான குதிரை மேல் ஆரோகணித்துக் குறித்த விடத்திற்கு ஆனந்தமாய் விரைவிற் போய்ச் சேர்ந்ததை நிகர்க்கும்.

## சிவஞான வள்ளல்.

குருவிலான் பெற்ற ஞானங் குமரியைக் குமரி கூடி
மருவிய வின்ப மொக்கு மண்ணிடை நம்போல் வந்த
குருவினுற் பெற்ற ஞானங் குமரியைக் குமரன் கூடி
மருவிய வின்பமொக்கு மென்பர்நன் மதியு ளாரே.

முந்துநூ லுழைப்பு மின்றி முத்தர்பா லிணக்கு மின்றிச்
சுந்தரக் குரவன் பாதத் தொழும்புகள் சிறிது மின்றி
அந்தமில் ஞானம் வேண்டு மவாவெலாங் கொழுநற் கொன்று
சந்ததி வேண்டி நோற்குந் தன்மையோ டொக்கு மன்றே.

## குகை நமசிவாயர்.

செப்பரிய ஞானச் செழுஞ்சுடரே சோணகிரி
அப்பனே நன்னூ லறிந்தாலும்—இப்புவியில்
கொண்டகுரு வைப்பொருளாக் கொள்ளார் பயனேது?
கண்டவெலாம் வீணிலே கற்று.

## குரு நமசிவாயர்.

சற்குருவைப் போற்றுமற் சற்குருவைச் சாற்றுமல்
சற்குருவைச் சந்ததமுஞ் சாராமற்—சற்குருவை
நின்று தரியாமல் நீள்பிறவி நீங்கிடுமோ
மன்று! சிதம்பரதே வா!!

## ஞான வாசிட்டம்.

பேசியதன் விசாரத்தாற் சனகர்பிரான் பெரும்பேறு
பெற்ற தல்லால்
வாசியுள மற்றொன்றால் வந்ததல்ல வாரீச
மலர்க்கண் மாலே!
ஆசிலதாய்ச் செவ்வியதாய்த் தனதான விசாரத்தால்
அடைவ தல்லால்
தேசிகரில் லாவீனர் செய்தொழிலாற் பெறலாமோ
சிற்சொ ரூபம்.

## ஔவைக் குறள்.

நெறிப்பட்ட சற்குரு நேர்வழி காட்டில்
பிரிவற் றிருக்குஞ் சிவம்.

பிறவிக் குருடர்கள் வசிக்கின்ற பட்டினத்தில் கோடி சூரியர்கள் தமது வெவ்விய கிரணங்களை விரித்துப்

பிரகாசித்தாலும், குருடாகது கட்புலனுக்குச் சிறிதும் ஒளி தெரியாது. அதுபோல் விவேக சூனியர்களுக்குக் கடவுளே ஒரு மனிதனைப்போல் வந்து உபதேசிக்க எத்தனித்தாலும், இவர் சற்குரு மூர்த்திதான் என்று உணர முடியாது.

அத்துவித வுண்மை.

மேலாஞ் சதுட்ட சாதனங்கள் மேவி நிறைந்த பேர்க்குரைக்கின்
மேலா மதுநா மெனத்திடமாய் விளங்கு மவையில் லாதவர்க்கு
மேலாம் பரமன் மான்மழுவாய் விளங்கி யுரைத்தும் விளக்காது
மேலாஞ் சாத னங்கள்வர மேவ வேண்டுஞ் சாதுசங்கம்.

மேகமானது எவ்வளவுக்கு விசாலமாகப் படருகிறதோ அவ்வளவுக்கு மலை மல்லிகை யென்னும் குடமஞ்சரி விருத்தி யடையும். அதுபோல் ஞானசிரியர் திருவுள்ள மகிழ்ந்து கருணை பாலிப்பதற்குத் தக்கவாறு சீடனுக்கு ஞானம் பிரகாசிக்கும்.

சிற்றின்பமானது கன்னிகைப் பருவப் பெண்ணுக்கு வேம்புபோல் விருப்ப மில்லாதிருத்தலும், மடந்தைப் பருவ மடைந்த பெண்ணுக்குக் கரும்புபோல் விருப்பமுண்டாதலும் இயற்கை. அதுபோல் ஞானசிரியாது வாக்கியாமிர்தம் அபக்குவர்களுக்கு கசப்பாகவும், பரிபக்குவர்கட்கு மதுரமாகவும் இருக்கும்.

தாயுமான சுவாமிகள்.

அரும்போநன் மணங்காட்டுங் காமரசங் கன்னி
அறிவாளோ அபக்குவர்க்கோ அந்நலந்தான் விளங்கும்.

பாரநாயக கமனமுள்ள ஒரு கன்னிகை, அழகிலும், குணத்திலுஞ் சிறந்த தனது நாயகனை விட்டுப் பிரிந்து, ஒரு மூடனை இச்சித்து அவனுடன் இருக்குங் காலத்தில்

இருவருக்கும் பிணக்குண்டாக, அதன் பின் தனது நாயகனை நினைந்து-நினைந்து வருந்தினாள் என்ற கதை போல், சில சீடர் ஒரு சாதுவாகிய சற்குருவினிடத்தில் உபதேசம் பெற்று அநுட்டித்துக்கொண் டிருக்கும்போது அதை முற்றிலும் கைவிட்டு படாடோபமுள்ள அஞசிரியர் வலையிற் சிக்குண்டு துன்புறும்போது, பழைய ஞாஞசிரியரை நினைந்து, நினைந்து வருந்துவார்கள்.

ஒரு மாணுக்கன், சற்குருவினிடத்தில் ஞானுபதேசம் பெற்று அந்நிலையை அநுட்டிக்கும்போது காரியக் குருக்களின் மாயவார்த்தையாகிய வலைக்குட் சிக்கி மயங்கி, அவரால் உபதேசிக்கப் பெறும் நிலையை அநுட்டிக்கத் தொடங்குவதானது எத்தன்மைத்தெனில், ஒரு நாய் ஒரு மாமிசத் துண்டை வாயில் கௌவிக்கொண்டு ஒரு வாய்க்காலின் மேப் பாலத்தின்மீது செல்லும்போது, தண்ணீரில் தெரிந்த தன்னிழலை மற்றோர் நாய் போவதாக எண்ணி அதன் வாயிலிருக்கிற மாமிசத் துண்டையும் அபகரித்துக் கொள்ள நினைந்து அந்நிழலைக் கௌவ, தன் வாயிலிருந்த மாமிசத்தையும் இழந்து ஏமாந்து பெரு மூச்சுவிட்டுப் போனதை நிகர்க்கும்.

திருமந்திரம்.

குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்வார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வார்
குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே.

சிறிய குழந்தை கையில் அருமையான மாணிக்கம் கிடைத்தாலும் அதனருமை-பெருமை தெரியாததால், அதை யெறிந்துவிட்டு மற்றோர் பொருளை யெடுத்து விளையாடிக்கொண் டிருக்கும். அதுபோல், பரிபக்குவமற்றவர்

கட்குக் கிடைத்தற் கரிதான சற்குருவின் உபதேசங் கிடைத்தாலும், அதன் தன்மையை உணர முடியாமல், மாதர் முதலிய ஈடணப் பிரகிருதியைக் கருதி யலைவார்கள்.

உரோம ரிஷி.

அழைப்பதுவு நல்லபிள்ளை யானுல் நன்று
ஆகாத சீடர்களைச் சேர்த்தால் தோடம்
பிழைப்பதற்கு வழிசொன்னுல் பார்க்க மாட்டான்
பெண்டாட்டி மனங்குளிரப் பேசு மாடு
உழைப்பதற்குச் செனனமெடுத் தானே யல்லால்
உடலதுதான் கதிபெறவே யொன்றுங் காணன்
இளப்பமிவன் பேச்சையடிக் கடிதான் நாமும்
ஏதுக்குச் சொல்லுகிறோம் இனிமேல் தானே.

ஒரு ஸ்திரீயைப் பிடித்திருந்த பேய் மந்திரவாதியினுல் நீங்கினுலும், அது அவளை மறுபடியும் அணுகாதபடி இயந்திர ஸ்தாபன முதலிய பலவித வுபாயங்களைச் செய்து நிவர்த்திப்பார்கள். அதுபோல் சற்குருவால் உபதேசிக்கப் பெற்ற ஞானேதகத்தால் தன்னைப் பிணித்திருந்த மாயா மலங்கள் முழுவதும் நீங்கினுலும், தனது தவமுயற்சியின் சோர்வினுல் அந்த மாயை திரும்பவும் தன்னை இம்சிக்காதபடி எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

கார்காலத்து மேகமானது உப்பு மயமான சமுத்திர ஜலத்தின் உவரை நீக்கி ஆகாயத்தை அளாவிய மலைச்சிகரத்தில் வைத்தாலும், மலையைவிட்டிறங்கிச் சமுத்திரத்தையே நாடிச்செல்லும். அதுபோல், ஞானசிரியர் பசுவென்னும் சீவனைப் பாசம் என்னும் ஆசையைவிட்டு நீக்கிப் பதியென்னும் பிரமத்தில் நிலைக்கும்படி செய்தாலும் அதில் நிலைபெருமல் பாசத்தையே நோக்கிச் செல்லும்.

அதிதீவிர பக்குவமில்லாத மாணக்கனுக்கு ஞானசிரியர் வேதங்களினது முடிவாகிய உண்மைப்பொருளை உபதேசிப்பது எத்தன்மைத் தெனில், மட்பாண்டத்தைப் பொற்பாத்திரமாக்க நினைத்தல்போலவும், காம இச்சையில்லாத கன்னிகைப் பெண்ணுக்கு மதனாகமங்களைப் புகட்டியது போலவும், பிறவிக் குருடனுக்கு இரத்தினமாலையணிந்தது போலவுமாகும்.

திருக்குறள்.

*காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்*
*கண்டானாந் தான்கண்ட வாறு.*

பிரபுலிங்கலீலை.

*நெறிபல முறையுரைத்தும் நினைந்திலள் அதனையந்தோ*
*மறுகுறு மனத்தாளாகி மாயைமால் கொண்டிருந்தாள்*
*அறிவிலர்க் கறிவிப்பார்தாம் அறிவில ராவரென்று*
*வெறிமலர் வணர்வார்கூந்தல் விமலைதன் மனந்தளர்ந்து.*

கருடனைத் தனக்கு ஏறும் வாகனமாகவுடைய திருமாலானவர் கருடனையழைத்து, நீ இனிமேல் மச்சங்களைத் தின்னாதேயென்று இருபதினாயிர வருடம் உபதேசித்தாலும், அதன் இயற்கையான புலால் உண்ணுங் குணத்தை விட்டு மாறாது. அதுபோல் கபடநாடகமாகிய வஞ்சகமுள்ள சீடனுக்குக் களங்கரகிதமான ஆசிரியர் எவ்வளவு உபதேசித்தாலும் அவனுக்கு இயற்கையான கள்ளத்தனம் நீங்குவது மிகவும் அருமை.

திருக்குறள்.

*நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்*
*உண்மை யறிவே மிகும்.*

பிறவிச் செவிடன் காதில் இனிமையான வீணாகானஞ் செய்தாலும் லவலேசமேனும் அவனுக்குக் கேட்காது.

அதுபோல், அஞ்ஞானமுள்ள சீடனுக்கு மயக்கம் நீங்கும் படி எத்தன்மையான தத்துவோபதேசஞ் செய்தபோதிலும் அவையனைத்தும் விழலுக்கிறைத்த நீரும், காட்டிலெரித்த சந்திரிகைபோலும் ஆகும்.

வெண்டிங்கள் நிலவுவா யிடைப்புகினும் சகோரமெனு
மென்புள் ளன்றி
உண்டிங்கு வாழுமுயி ருளதோநம் மல்லமனு
மொருவன் ருனும்
பண்டங்கு மொழிமாயை கைப்படினு மவள்பிடிக்கப்
படுவ னேதான்
தொண்டன்பின் வழிநின்று மனமாசு தீர்ந்தபெருந்
தூயோர்க் கல்லால்.

சீடரல்லாதார்.

நாய்க்கு முழுத்தேங்காய் கிடைத்தாலும் அதையுடைத்துத் தின்னத்தெரியாமல் உருட்டி உருட்டிப் பார்த்துப் போட்டுவிட்டுப் போய்விடும். அதுபோல் அபக்குவர்கட்கு (முடவனுக்குக் கொம்புத்தேன் அகப்பட்டதுபோல்) ஞானநிட்டை கிடைக்கப்பெற்றாலும் அதை நிராசையாய் அநுட்டிக்க முடியாமல் சலிப்படைந்து விட்டுவிடுவான்.

திருமந்திரம்.

மனத்தி லெழுந்ததோர் மாயக் கண்ணாடி
நினைப்பி னதனின் நிழலையுங் காணார்
வினைப்பயன் போக விளக்கியுங் கொள்ளார்
புறக்கடை யிச்சித்துப் போகின்ற வாறே.

களங்கரகிதமான படிகக் கண்ணாடியிலன்றி வதனம் தோன்றாது. அதுபோல் மாசில்லாத மனத்திலன்றி ஞானோதயமாகாது.

குருதெரிசனப் பலன்.

அழகில் மிகுந்த விலைமாதர்களைக் கண்ட காமிய வாலிபர்கள் நெஞ்சமானது குழைந்து மயங்கும். அக்கினி நட்சத்திரத்தில் வன்மையான கல்லும் உருகும். இரும்பானது காந்தத்தை அடுத்தவுடன் தானே வலிந்து காந்தத்தினிடம் செல்லும். அதுபோல் மகான்களாகிய சற்குருவின் தெரிசனத்தைக் கண்டவுடன் சற்சீடர்கட்கு மனங் கசிந்து, கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீரும் உண்டாகும்.

சிவஞான வள்ளல்.

ஆசானைக் காண்டோறும் அன்புருகுங் கை குவியும்
மாசா ருடம்பு மயிர்க் குச்செறியும்—பேசாத
ஆனந்த முள்ளூறும் அக்கணமே பாசங்கள்
தானந்து முத்தி தரும்.

குயிலானது காக்கையினது கூட்டில் முட்டையிட்டு நீங்கிப் போக, காகமானது அம்முட்டையைத் தன் முட்டையாகக் கருதி அடைகாத்துக் குஞ்சு பொரிக்கும். குயில் குஞ்சானது காகத்தைத் தன் தாயல்ல வென்றும், சப்தமிட்டால் தொனி வேறுபாட்டை யறிந்துச் செவிலித் தாயாகிய காகம் தன்னைக் கொன்றுவிடுமென்றும், இளமையிலேயே நன்குணர்ந்து, நன்றாகப் பறந்து செல்லும் சக்தி வரும் வரையில் மவுனமாயிருந்து, பறக்கச் சக்தி வந்தவுடன் தன்னினமாகிய குயில்களுடன் போய்ச் சேர்ந்து கொள்ளும். அதுபோல் ஆன்ம ஞானத்தை அடைய விருப்பமுள்ளவர்கள், சற்குருவைத் தெரிசிக்கும் வரையில் குடும்பத்திற்கு வேற்றுமை தெரியாதபடி ஒற்றுமையாக நடந்து, குருமூர்த்தியினது தெரிசனம் கிடைத்தபின் அவரை அணுகித் தனது மாதா-பிதாவாகக் கருதி தொண்டு புரிந்து உண்மை நிலையை அநுட்டிப்பார்கள்.

சப்திக்கப் பெற்ற சமுத்திர ஜலம் அதிகமென்று அதனைப் பானம் பண்ணினல் தாகம் தணியாது. அந்த உப்புச் சலம் மேகத்தின் வாய்ப்பட்டு உலகில் மழையாக வருடிக்க, அந்த சலத்தைப் பானம் பண்ணினல் தாகம் தணியும். அதுபோல், சாத்திரங்கள் எண்ணிறந்தனவா யிருக்கின்றனவென்று வாங்கித் தானகவே பார்த்து ஞானம் அடைந்துவிட முடியாது. அதைச் சற்குரு வென்னும் மேகத்தின் முகத்தாற் கேட்டு வைராக்கியமாய்ச் சாதித்தால்தான் உண்மை யின்னதென்று தெற்றெனப் புலப்படும்.

ஞானமணிமாலே.

அண்டமும் அவனி தானும் அதிர்ந்திட மறைக ளோதிக்
கண்டமுங் கடுத்து நோகக் கதறிய மைந்தா கேண்மோ
என்றுமுள் ளவனே மெய்யுள் எழுத்தின லிருத்திப் பார்க்குந்
தொண்டருக் கடிமை செய்தால் சேரலாஞ் சொர்க்கந் தானே.

ஒருவன் தனக்கேற்பட்டிருக்கும் வியாதியை நீக்கிக் கொள்வதற்கு வைத்தியனும் ஔடதமும் எவ்வாறு இன்றியமையாதனவோ, அவ்வாறே தனது இதயத்திலுள்ள காமக்குரோத முதலிய வியாதிகளைப் போக்கிக் கொள்வதற்கு சற்குருவென்னும் வைத்தியரும், யோகம்-ஞானம்-அன்பு என்னும் அருமருந்தாகிய ஔடதமும் அத்தியாவசியம்.

சீடனனவன் கடவுளது வடிவ மின்னதென்று ஆரம்பத்தில் உணரமுடியா தாதலால், குருமூர்த்தியை கடவுளது பிரதிநிதியாகவாவது, அல்லது கடவுளாகவாவது சிந்தித்தல் வேண்டும். குருவைவிட மேலான தொன்று மூவுலகத்தினு மில்லை. திவ்விய ஞானத்தை யுபதேசிக்கும் தேசிகராகிய பரமேசுவரனே மேலான பத்தியோடு பூசிக்க

வேண்டும். அவ்வாறு பூசிக்கின்றவனுக்கே ஞானமாகிய பலமுண்டாம். எப்படிக் குருவோ அப்படியே ஈசுவரன்; எப்படி ஈசுவரனோ அப்படியே குரு; இவ்விருவருக்கும் பேதமில்லை. ஆனாலும், கடவுள் தொண்டர்க்குள் அடக்கம் ஆகையால் குருவானவர் மகா பத்தியோடு பூசிக்கத் தக்கவராவர். குருவோடு ஓரிடத்தும் அத்துவிதவாதஞ் செய்யலாகாது. குரு - தெய்வம் - ஆன்மா என்பவற்றின் அத்துவிதம், பத்தியால் பாவிக்கவேண்டும் என்று யோக சிகோப நிடதத்தின் ஐந்தாவது அத்தியாயத்திற் சொல்லப் பெற்றிருக்கிறது.

பிதாவானவன் பூரண ஆயுளும், சற்குணமும், நல்லறிவுமுள்ள புத்திரன் பிறக்க வேண்டுமென்று வரம் கேட்பதே யன்றி, பிள்ளையானவன் அத்தகைய தகப்பன் பிறக்க வேண்டுமென்று எங்ஙனங் கேட்க நியாயமில்லையோ, அது போல் சற்குருவானவர் சற்சீடன் கிடைக்க வேண்டுமென்றும், அவன் சீக்கிரத்தில் நன்னிலைமைக்கு வரவேண்டுமென்றும் சிந்திப்பார். சீடனோ, குருவினிடத்தில் தான் நல்லுபதேசங்களைக் கேட்டுக்கொள்ள வேண்டுமென்றும், அதனால் தான் நன்னிலைமைக்கு வரவேண்டும் என்றும், தன் நன்மையைக் கோரிப் பணிபுரிவதே யன்றி, பெரும்பாலும் குருவினுடைய நன்மையைக் கருதி பணிபுரிவதில்லை. ஆகையால், சீடன் நன்னிலைமைக்கு வரவேண்டுமென்பதே குருமூர்த்தியினுடைய கவலை. இதனால் குருபிரானுக்கு சீடன் எவ்வித கைம்மாறையும் புரியவல்லனல்லன் என்பது உணரப்பெற்றும்.

---

# ஐந்தாவது அத்தியாயம்.

---

## ஞான சோபானம்.

### விருத்தம்.

சரிதையொண் கிரியைகா றடுக்கும் யோகிவை
புரிதரு நிலையையும் புகன்ற முத்தொழில்
இரிதரு ஞானமெய்ந் நிலையு மித்தெனத்
தெரிதரு வணமிவண் செப்பு வாமரோ.

கடவுளை யடையும் மார்க்கங்கள்—தாதமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என நான்கு வகையாகும். இவற்றுள் தாதமார்க்கமாவது கடவுளிடம், ஆண்டானும், அடியானும்போலிருந்து பத்தி செய்தல். சற்புத்திர மார்க்கமாவது தகப்பனும்-பிள்ளையும்போலிருந்து பத்தி செய்தல். சகமார்க்கமாவது தோழனும் தோழனும்போலிருந்து பத்திசெய்தல். சன்மார்க்கமாவது மேற் சொல்லிய இருமையுமற்று ஒருமையாக, அதாவது "நீ" யு "நான்" என்கிற பேதமில்லாமல் அத்துவிதமாகப் பாவித்தல். இவற்றை முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பர்.

இவற்றால் அடையும் முத்திகள்—சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய மென நான்கு வகையாம். இருதய சிதாகாயமாகிய கடவுளுலகத்தில் வாழுதல் சாலோகம். கடவுள் சமீபத்தில் வாழுதல் சாமீபம். கடவுள் உருப் பெற்று வாழுதல் சாரூபம். கடவுளுடன் அத்துவிதமாக வாழுதல் சாயுச்சியம்.

இவற்றுள் சாயுச்சியமானது ஞானத்தால் வந்து சேரும். இதை முத்தி முடிவென்றும் ஏனைய மூன்றையும் பத முத்தி யென்றும் ஆன்றோர் கூறுவர்.

ஞானம் என்னும் வீட்டிற்கு சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்று முதன்மையான படிகளும், சரியை முதல் ஞான மீறாக ஒவ்வொன்றிற்கும் நான்கு படிகள் வீதம் $4 \times 4 = 16$-படிகளும் ஏற்பட்டிருக்கின்றன.

சரியை.

சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என நான்கு படிகள்.

சரியையிற் சரியை :—சரியா பாதமாகிய தாதமார்க்கமானது—ஆலயங்களில் திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருவிளக்கிடுதல், விதானம் (மேற் கட்டி) கட்டுதல், தோரணம் நாட்டுதல், தூபமிடுதல், நந்தவனம் வைத்தல், பூக்கொய்தல், மாலைதொடுத்தல், புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை செய்தல், நதிகளில் மூழ்குதல், ஆலயப் பிரதட்சணம் செய்தல், தோத்திரம் பாடல், புல்லுச் செதுக்குதல், திருக்குள (ஹவுல்) முதலியவை சுத்திசெய்தல், அடியார்களைக் கண்டால் எதிர் சென்று, எளியேன் ஏதேனும் பணிவிடை செய்யவேண்டியதுண்டா? என்று தெரிந்து செய்தல்.

சரியையிற் கிரியை :—இருதயத்தில் ஒரு இலட்சியத்தை யமைத்துக்கொள்ளுதல்.

சரியையில் யோகம் :—இருதயத்தில் ஒரு சொரூப பாவனையைத் தியானஞ்செய்தல்.

சரியையில் ஞானம் :—அந்த தியான பாவனையின் முதிர்ச்சியினால் ஓர் அனுபவ வுணர்வு நிகழ்தல்.

சரிதையை வேதாகமங்களிற் கூறிய விதிப்படி ஒருவன் தவறுமற் செய்தாலும், அவன் செய்வதிற் பல *சங்கற்ப மனமுடையவனுனல் சரிதையை ஒருங்கே முறைப்படி புரிந்தவனுகமாட்டான். தனக்குக் கிடைத்ததை மனே திருத்தியாகச் செய்து கடவுளுக்கு அர்ப்பணம் எவன் பண்ணினுனே அவனே, அச் சரிதைக்குடையவனுகி சாலோக பதவியை அடைவான்.

### திருமந்திரம்.

#### சரிதை.

*நேர்ந்திடு மூலசரிதை நெறியிதென்*
*றுய்ந்திடுங் காலங்கி கஞ்சமலையமா*
*ஞேர்ந்திடுங் கந்துருகேண் மின்கள்பூதலத்*
*தோர்ந்திடுஞ் சுத்தசைவத் துக்குயிரதே.*

*உயிர்க்குயிராய் நிற்றலொண் ஞானபூசை*
*யுயிர்க்கொளி நோக்கின்மகா யோகபூசை*
*யுயிர்ப்பெறு மாவாகனம் புறப்பூசை*
*செயிற்கடை நேசஞ்சிவ பூசையாமே.*

*பத்தர்சரிதை படுவோர் கிரியையோ*
*ரத்தகுதொண்ட ரருள்வேடத் தாகுவோர்*
*சுத்தவியமாதி சாதகர் தூயோகர்*
*சித்தர்சிவஞானஞ் சென்றெய்து வோர்களே.*

*சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவனுயினேர்*
*சேர்ந்தவெண் யோகத்தார் சித்தர்சமாதியோ*
*ராய்ந்தகிரியை யோரருச்சனை தப்பாதோர்*
*நேர்ந்த சரிதையோர் நீணிலத்தோரே.*

---

* சங்கற்பம் - விருப்பம்.

சரிதாதிநான்குந் தருஞான நான்கும்
விரிவான வேதாந்த சித்தாந்தமாறும்
பொருளானது நந்தி பொன்னகர்போந்து
மருளாகுமாந்தர் வணங்க வைத்தானே.

கிரியை.

கிரியையிற் சரியை, கிரியையிற் கிரியை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம் என நான்கு படிகள்.

கிரியையிற் சரியை :—கிரியா பாதமாகிய சற்புத்திர மார்க்கமானது, பூசைக்கு வேண்டப்படும் உபகரணங்களைச் செய்துகொள்ளல்.

கிரியையிற் கிரியை :—*சிற்சத்தி, பராசத்தி, இச்சா சத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, என்னும் பஞ்சசத்திகள் முன்னிலையிற் சிவலிங்கவடிவிற் செய்யும் பூசனை.

கிரியையில் யோகம் :—அகத்தி னிடத்தே, பூசை, ஓமம், தியானம் என்னும் மூன்றற்கும் மூவிடம் வகுத்துக் கொண்டு செய்யும் அந்தரியாகம்.

கிரியையில் ஞானம் :—அந்த அந்தரியாக உறைப்பின் கண் நிகழும் ஓர் அநுபவவுணர்வு.

கிரியை விதிப்படி செய்கின்றவன் தான் பூசிப்பதிற் குறைவு-நிறைவு வருங்கால் இதாகிதமாகிய சித்தத்தை யுடையவனானும், கிடைத்தமட்டும் பூசித்துத் திருப்தி யடைந்து, அப்பூசையினிடத்திற் காமிய மனதுடையவ னானும், கிரியா மார்க்கத்தை முற்றுந் தெரிந்து பிறருக்கு

* சிற்சத்தி உயிர்க்கொளியாக நிற்பது. பராசத்தி பிராணன் முதலிய வாயுக்களாக நிற்பது. இச்சாசத்தி பஞ்ச பூதமாக நிற்பது. ஞானசத்தி பஞ்சேந்திரிய வுணர்ச்சியாக நிற்பது. கிரியாசத்தி இதா வினைகட்குத் துணையாக நிற்பது. சிவலிங்கம் ஆன்ம சொரூபம்.

உபதேசிக்கத் தக்கவனானாலும், அவன் அக்கிரியைக்குப் பாத்திரவானாகமாட்டான். எவன் நிட்காமிய மனத்துடன் ஆராதனை பண்ணுகிறானோ, அவனே அக்கிரியா பூசையிற் சிறந்தவனாகி கடவுளது சாமீப பதத்தையடைவன்.

திருமந்திரம்.

கிரியை.

பத்துத்திசையும் பரமொரு தெய்வமுண்
டெத்திக்கிலரில்லை யென்பதி னமலர்க்
கொத்துத்திருவடி நீழல் சரணெனத்
தத்தும்வினைக்கடல் சாராது காணுமே.

கானுறுகோடி கடிகமழ் சந்தனம்
வானுறுமாமல ரிட்டுவணங் கினு
மூனினைநீக்கி யுணர்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண்ணாதே.

கோனக்கன்றாயே குரைகழ லேத்துமின்
ஞானக்கன்றாகிய நடுவே யுழிதரும்
வானக்கன்றாகிய வானவர் கைதொழு
மானக்கன் றீசனருள் வள்ளமாமே.

பத்தன்கிரியை சரிதைபயில் வுற்றுச்
சுத்தவருளாற் றுரிசற்ற யோகத்தி
லுய்த்தநெறி யுற்றுணர்கின்ற ஞானத்தாற்
சித்தங்குரு வருளாற் சிவமாகுமே.

அன்பி னுருகுவனாளும் பணிசெய்வன்
செம்பொன் செய்மேனி கமலத்திருவடி
முன்புநின்றாங்கே மொழிவ தெனக்கரு
ளென்பினுட் சோதி யிலங்குகின்றானே.

யோகத்திற் சரியை, யோகத்திற் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம் என நான்குபடிகள்.

யோகத்திற் சரியை :—யோகபாதமாகிய சகமார்க்க மானது, இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம் முதலானவைகளை யனுட்டித்து, பஞ்சேந்திரியங்களை ஒடுக்கி, இரேசக - பூரகமாக இயங்கிக்கொண்டிருக்கும் வாயுவை நிரோதனம் செய்து கும்பித்திருந்து, பிராண வாயுவை சுழுமுனையில் நிறுத்தி, தனது சடத்தினுள் முக்கோணம் முதலான ஆறுதாரங்களையும், அவற்றின் பதுமதளம் அதிகாரர்கள் அக்கரங்களையும் நன்குணர்ந்து தியானித்து, மூலாதாரத்தில் அக்கினியை சொலிப்பித்து, நாபித்தானத்திற் குண்டலி சத்தி வடிவாயிருக்கும் அமுத தாரையை உருகச் செய்து, ஏனைய ஆதாரங்களின் அதோமுகமா (தலைகீழா)ன பதுமங்களைப் பேதித்து, மேல் மார்க்கத்திற் சென்று, விந்துத் தானத்தின் வழியே யிறங்கிப் பெருகுகின்ற அமுத தாரையைச் சரீரமெங்கும் நிறைத்து நனையச்செய்து, நீக்கமற நிறைந்த சுயம்பிரகாசத்தைத் தியானிப்பது முதலாக அட்டாங்க யோகத்தைப் பந்தபாசங்கள் நசிக்கும்படி வருந்திச் சாதித்தல்.

யோகத்திற் கிரியை:-பிரத்தியாகாரம், தாரணை என்பன.

யோகத்தில் யோகம் :—தியானம்.

யோகத்தில் ஞானம் :—சமாதி.

அட்டாங்கயோக விதிப்படி துறவறத்தைப் பொருந்தி, சரீரத்தை மெலிந்து வாடச்செய்து, கற்பகாலம் தியான நிட்டையைப்புரிகின்ற யோகீஸ்வரனுனலும் அவன் யோக முடிந்தவனுகான். எவன் தனது தியான சமாதியில் வைத்திருக்கிற சித்தம் வேறுபட்டலையாமற் பரிசுத்தம் பொருந்தி, அவ்விடத்திற் பொருந்தியதே * சாட்சாத்காரமென்று

* சாட்சாத்காரம், கருவிகரணுதிகட்கெல்லாஞ் சாட்சியாயிருக்கின்ற சுயம்புவாயிருப்பது.

உண்மையாகக் கருதுகின்றானோ அவனே பரமயோகி யென்னும் கடவுள் தன்மையுடையவனாகி சாரூப பதவியை அடைவான்.

### திருமந்திரம்.

#### யோகம்.

நெறிவழியே சென்று நேர்மையு ளொன்றித்
தறியிருந் தாப்போலத் தம்மை யிருத்திச்
சொறியினுந் தாக்கினுந் துண்ணென் றுணராக்
குறியறி வாளர்க்குக் கூடலு மாமே.

ஊழி தோறூழி யுணர்ந்தவர்க் கல்லது
ஆழிதோறாழி யுணரவுந் தானொட்டா
னூழியமரு மரியய னென்றுளா
ரூழிமுயன்று மொருச்சி யுளானே.

பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
வோவியம் போல வுணர்ந்தறி வாளர்க்கு
நாவியணைந்த நடுதறி யாமே.

யோகிக்கு யோகாதி மூன்றுள கொண்டுற்றோ
ராகத் தருகிரி யாதி சரிதையாந்
தாகத்தைவிட்ட சரிதை யொன்றுமொன்று
ளாதித்தன் பத்தியு ளன்பு வைத்தேனே.

யோகச் சமயமே யோகம்பல வுன்னல்
யோக விசேடமே யட்டாங்க யோகமாம்
யோகநிர் வாணமே யுற்ற பரோதயம்
யோகவபி டேகமே யொண்சித்தி யுற்றலே.

#### ஞானம்.

ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என நான்குபடிகள்.

ஞானத்திற் சரியை :—ஞானபாதமாகிய சன்மார்க்கமாவது ஆசிரியரிடம் உபதேசங் கேட்குதல்.

ஞானத்திற் கிரியை :— அங்ஙனங் கேட்டதைச் சிந்தித்தல்.

ஞானத்தில் யோகம் :— அவ்வுபதேசத்தை ஐயந்திரிபறத் தெளிதல்.

ஞானத்தில் ஞானம் :—தெளிந்தபின் நிட்டைகூடல்.

சகலமும் பிரம்மமயமாக, சுருதி, குரு * சுவானுபவத்தால் நோக்குகின்ற ஆன்மஞானி, பிராரத்துவ வசத்தில் அணுவளவும் பேதமில்லாமற் சுயஞ்†சைதன்யமாகப் பிரகாசிக்கின்ற மனதுடன் விளங்குவாராகில், அவரே மேலான பரமஞானியாகி சாயுச்சிய பதவியை அடைவர்.

மேற்கூறிவந்த யோகத்திற் சரியையாகிய இயமம், நியமம், ஆதனம், பிராணயாமம் என்னும் நான்கின் விபரமும், யோகத்திற் கிரியையாகிய பிரத்தியாகாரம், தாரணை என்னும் இரண்டின் விபரமும், யோகத்தில் யோகமாகிய தியானத்தின் விபரமும், யோகத்தில் ஞானமாகிய சமாதியின் விபரமும் பின்வரும் அட்டாங்கயோக அத்தியாயத்திற் பார்த்துணர்க.

திருமந்திரம்.

ஞானம்.

ஞானத்தின் மிக்க வறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றது
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே.

---

* சுவானுபவம், சொந்த அனுபவம்.

† சைதன்யம், சர்வேந்தரியாமியாகிய கடவுள்.

அறிவு மடக்கமு மன்பு முடனே
பிறியாநகர் மன்னும் பேரரு ளாளன்
குறியுங் குணமுங் குறைகழ னீங்கா
நெறியறி வார்க்கிது நீர்த்தொனி யாமே.

ஞானம்விளைந் தெழுகின்ற தோர் சிந்தையு
ளேனம் விளைந்தெதிரே காண்வழி தொறுங்
கூனல்மதி மண்டலத்தெதிர் நீர்கண்டு
வூனமறுத்து நின்றொண் சுடராகுமே.

ஞானிக் குடன்குண ஞானத்தி னன்குமா
மோனிக் கிவையொன்றுங் கூடாமுன் மோகித்து
மேனிற் றலாஞ்சத்தி வித்தை விளைத்திடுந்
தானிக் குலத்தோர் சரிதை கிரியையே.

ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு
ஞானத்தின் ஞானமே நானெனத் தென்னுமல்
ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி
ஞானக் கிரியையேநன் முத்தி நாடலே.

நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்
புண்ணிய பாவங்கடந்த பிணக்கற் றோன்
கண்ணிய நேயங்கரை ஞானங் கண்டுளோன்
றண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே.

ஞானச் சமயமே நாடுந் தனைக்காண்டன்
ஞான விசேடமே நாடு பரோதய
ஞானநிர் வாணமே நன்றறி வானருள்
ஞானபி டேகமே நற்குரு பாதமே.

மேற்சொல்லிவந்த சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்றும், ஞானமென்னும் வீட்டிற்கு உதவியான படிகளென்று முன்னமே சொல்லியிருக்கின்றோம். ஆதலால் நாம் ஒவ்வோர் படியாகப் படிகளைக்கடந்து வீட்டிற்குள் பிரவேசித்தாலன்றி, வீட்டுக்குள்ளிருக்கும் பொருளைக் காண

முடியாது. படிகளில் ஏறிய மாத்திரத்தினாலேயே வீட்டுக்குள்ளிருக்கும் பொருளைக் கண்டுகொண்டதாகப் பாவிக்கிறவனுக்கு யாது பிரயோசன முண்டாகும். அதுபோல் சிலர் சரியை, கிரியைகளைத் தன் ஆயுள் வரையிலும் புரிந்துகொண்டிருப்பதினாலேயே சாயுச்யம் அடைந்து விடலாமென அபிப்பிராயப் படுகிறார்கள். அவர்கள் அவ்வாறு பகற்கனவுகண்டு மனப்பால் குடித்துக்கொண்டிருக்க, ஆன்றோர்கள் பின்வருமாறு கூறியிருக்கின்றார்கள்.

### பிரமகீதை.

*சரிதையாதி யொருமூன்றுஞ் சவுபானங்கள் பயனில்லை*
*அரியும்பிரம ராலும் அறிதற்கரிய காரணங்கள்*
*உரையுமில்லை முடிவறியா வொன்றாய்நின்ற தனிஞானப் [ன்*
*பொருளையிருளும் வெளியுமிலாப் போதமருவிக் களியென்று*

### சிவஞான தீபம்.

*சாத்திரம்புத் தகம்பூசை சமயமதந் தருக்கம்*
*தந்திரமந் திரயோகந் தவவிரதஞ் சீலம்*
*ஏத்தரிய பாவனையெண் சித்திகளே முதலாம்*
*எப்பயனும் முத்திவிலக் கெனவொருசொல் லதனால்*
*தீர்த்தவன்மெய்த் தேசிகனும் அவனருளால் அகலாச்*
*சித்தமல மறுத்துலகிற் றீமைநன்மை செயினும்*
*வாய்த்தகதி ரவன்செயல்போல் இசைந்திசையா தொழுகும்*
*வண்மையரே மெய்ஞ்ஞான வுண்மைநிலை யினரே.*

### பிரபுலிங்கலீலை.

*உரைசெயிற் பரம ஞானம் ஒன்றுமே முத்திக் கேது*
*சரியைநற் கிரியை யோகந் தாமொரு மூன்றும் ஞானம்*
*மருவுதற் கேது வென்று மறைபுகன் றுரைக்கு மிந்தக்*
*கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவ ரன்றே.*

பிறப்பொரு கோடி பிறந்து பிறந்து
புறக்கரு மங்கள் புரிந்திடி னும்பொய்
மறப்புறும் ஆணவ வல்விரு ளின்றிச்
சிறப்புறு முத்தி செறிந்திடு வாரோ.
மரிப்பொ டெதிப்பு மறிக்குது மென்று
கருத்தை வெளிக்கரு மத்தில் விடுத்து
விரிக்குதல் நெய்யை விடுத்தெரி கின்ற
நெருப்பை யவிப்ப நினைப்பதை யொக்கும்.

தாயுமானவர்.

பத்திநெறி நிலைநின்று நவகண்ட பூமிப்
பரப்பைவல மாகவந்தும்
பரவையிடை மூழ்கியும் நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றியெழுநா
மத்தியிடை நின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்கடைத்தும்
மௌனத் திருந்துமுயர் மலைநுழைவு புக்கியும்
மன்னுதச நாடிமுற்றும்
சுத்திசெய் தும்மூல ப்ராணனோ டங்கியைச்
சோமவட் டத்தடைத்தும்
சொல்லரிய அமுதுண்டும் அற்பவுடல் கற்பங்கள்
தோறும்நிலை நிற்கவீறு
சித்திசெய் தும்ஞான மலதுகதி கூடுமோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தட்சணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

ஒரு சிறிய குழந்தையானது மண் முதலியவைகளைத் தின்று, அதனால் மாந்தம் முதலான வியாதிகள் சம்பவிக்க, அதையுணர்ந்த தாயானவள் மனமிரங்கி இஞ்சிச்சாறு, வேப்பஞ்சாறு முதலிய ஔடதப் பிரயோகஞ்செய்ய எத்தனிக்கையில்; அம்மருந்தின் அருமையை அறியாத அக்

குழந்தை பயந்து வெளியில் ஓடிப்போக, மாதாவானவள் வாழைப்பழம் முதலிய தின்பண்டங்களைக் காட்டி, என் கண்ணே! என் செல்வமே! இங்கே ஓடிவா! மிட்டாய் தருகிறேன்! கடலை தருகிறேன்! என்று குழந்தையை ஏமாற்றிக் கூப்பிட்டுப் பிடித்து மருந்தைப் புகட்டுவாள். அதுபோல், அறிவில்லாத சிறிய மதலைப்பிள்ளையை நிகர்த்த இப்பிரபஞ்சத்தார் மாயாரூபமாகிய இவ்வநித்தியப் பிரபஞ்சத்தையே சதமென நம்பியிருப்பவர்களாதலால் அவர்களுக்கு வண்டிச்சக்கரம்போல் மாறி - மாறி வரும் பிறவி நோய்க்கிரங்கி மகான்களானவர்கள் ஞானபோதகமென்னும் மருந்தைச் செவியென்னும் வாயின்வழியே புகட்ட எண்ணினால்,

நஞ்சுண்ணு மாப்போலும் நாத னருள்பெறவென்
னெஞ்சேநீ புண்ணாய் நினைப்பதேன்—அஞ்சாதே!

என்னும் வாக்கியம்போல் ஞானமானது வேப்பங்காயினுங் கசப்பாக அவர்களுக்குத் தோன்றுகின்றது. நாக்குப் பூச்சியைத் தூண்டிலிற்போட்டு பெரிய மீன்களைப் பிடிக்க எத்தனிப்பதுபோல், வாழைப்பழம் - மிட்டாய்போன்று தித்திப்பதாகிய இவ்வுலக வியாபாரத்தையுஞ் செய்து கொண்டு, அத்துடன் இன்னின்ன கருமங்களையுஞ் செய்து வா எனச் சொல்லியது எதற்காகவென்றால் ஞானமென்னும் மருந்தைத் தந்திரமாகப் புகட்டுவதற்கேயன்றி வாஸ்தவத்தில் யாகாதி கருமங்களைச் செய்வதற்கல்ல வென்னுங் கருத்தை யடக்கிப் பின்வருமாறு கூறுகின்றது.

கைவல்ய நவநீதம்.

தினமும் மண்ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே
தீம்பண்ட மெதிர்காட்டிக்
கனம ருந்துகள் ஒழித்துவைத் தழைக்கின்ற
கருணையார் தாய்போல

மனைய றங்கள்செய் மகங்கள்செய் நன்றென்று
மலர்ந்தவா சகஞ்சொல்லு
நினைவு வேறுகாண் சுவர்க்கா மிகளந்த
நிர்ணயந் தெரியாரே.

## சிவஞான வள்ளல்.

ஆல யந்தொழு அறந்தலை நிறப்புநல் லருச்சனை புரியென்றே
ஓல மிட்டுநான் மறையெலா முரைப்பது வுலகரைக் குறித்தன்றோ
மூல காரண பரம்பர சூக்கமாய் முழுதையுங் காணென்னுஞ்
சில முற்றிய அறிஞரைக் குறித்துரை செய்ததம் மறையன்றே.

"வண்ணானிடத்தில் வஸ்திரத்தைப் போட்டுவிட்டுக் கோக்கின் பின்னே ஓடியலைந்தான்'' என்ற பழமொழிபோல் ஒருவன் தன் வீட்டிற்குள் அலமாரி - பீரோ முதலிய எவ்விடங்களிலாவது ஒரு வஸ்துவை வைத்து மறந்துவிட்டு, அப்பொருளை வயல், வாய்க்கால் முதலிய விடங்களில் தேடியும் காணப்பெறுமல் யோசித்துப்பார்த்து, மறதி நீங்கி நினைப்பு வந்தவுடன், தான் வைத்த விடத்திலிருந்து எடுத்துக் கொள்வதுபோல், ஞானமென்னும் பொருளை, பிரபஞ்ச மாயையென்னும் இராக்காலத்திற்றேட எண்ணினல், அறிவென்னுந் தீபத்தைக் கொளுத்திப் பிரகாசிக்கச்செய்து, மறதியென்னும் இருளை நீக்கிப்பாராமல், இருட்டிலே பொருளைத் தேடுவதுபோன்ற பல புறக்கருமங்களைப் புரிவதனல் *சாயுச்யபதம் எங்ஙனம் கிடைக்கும்.

---

* சாயுச்ய பதமாவது,—ஞானானந்தத்தில் அதீதப்படுவது. அஃது, சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்யம் என்னப்படும். அவையாவது: முப்பத்தாறு தத்துவங்களையும் நியதிகளைவது சரியை; அவற்றை நன்கறிந்து நீங்கிய தன்னை அருளாலறிந்து அவற்றின் முடிவில் நிற்பது சாலோகபதம். ஆங்கு தனக்கறிவித்த அவ்வருளைத் தெரிசித்து அதன்பின், அருள்வேறென்றும் தான் வேறென்றும் பகுத்து நோக்காமல் தற்போதத்தை அடக்குவது

கைவல்ய நவநீதம்.

மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன் வருடனு றழுதாலு
நினைத் துணர்ந்தபின் கிட்டுமெப் படியிந்த நின்மல வான்மாவும்
அனர்த்த மானதன் மறதியைக் கெடுக்குந்தன் அறிவினுற் பாராமற்
கனத்த கர்மங்க ளூறுகஞ் செய்யினுங் காணுமோ காணுதே.

ஞானிகளின் கோள்கை.

இச் சரீரமானது "பொல்லாப் புழுமலிநோய் புன் குரம்பை" என்றருவருத்து, உண்டி சுருங்குதல் முதலிய வைகளால் உடலை வெறுத்தல் சரியை.

தத்துவங்கள் முப்பத்தாறையும் நியதி களைந்து, அவற் றின் முடிவில் பிரகாசிக்கும் தன்னை யுள்ளபடியறிதல் கிரியை.

தன்னையுள்ளபடி யறிந்தவிடத்தில் தமக் குயிர்க்குயிரா யிருந்த திருவருளைக் கண்டு, அவ்வருளே வடிவாகி நின்று, முன் நீக்கிய தத்துவங்களுடன் கலவாமை யோகம்.

மேற்கூறிய மூன்று நிலைகளாலுங் கண்டுங் கேட்டுமறி யாத அருளே வடிவாயிருந்து, தான் சிறிதுந்தோன்றாத பேரின்பமேலீட்டைப் பெறுதல் ஞானம்.

திருமந்திரம்.

சாற்றுஞ்சன் மார்க்கமாந் தற்சிவ தத்துவத்
தோற்றங்க ளான சுருதி சுடர்க்கண்டு
சீற்ற மொழிந்து சிவயோக சித்தராய்க்
கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே.

---

கிரியை; அந்த அருள் வடிவாயிருப்பது சாமீப பதம். அவ்வித மிருந்து கிஞ்சிற்றேனும் தற்போதம் வாராதபடி ஒழிப்பது யோகம்; அவ்விடத்தில் மனோன்மணியே தான் என்றிருப்பது சாரூப பதம். அந்த மனோன்மணி நீக்கத்தில் உண்டாகும் போனந்தத்தைப் பெறுவது ஞானம்; அந்த ஆனந்தத்தில் அதீதப்பட்டுப் பிரகாசியா நிற்பது சாயுச்ய பதம்.

தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்
பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக்
குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க்குத்
தருமுத்தி சார்பூட்டுஞ் சன்மார்க்கந் தானே.

சன்மார்க்கத் தார்க்கு முகத்தொடு பீடமுஞ்
சன்மார்க்கத் தார்க்கு மிடத்தொடு தெய்வமுஞ்
சன்மார்க்கத் தார்க்கு வருக்கந் தரிசன
மெம்மார்க்கத் தார்க்கு மியம்புவன் கேண்மினே.

சன்மார்க்க சாதனந் தான்ஞான ஞேயமாம்
பின்மார்க்க சாதனம் பேதையர்க் காய்நிற்குந்
துன்மார்க்கம் விட்ட துரியத் துரிசற்றோர்
சன்மார்க்கந் தானவ னாகுஞ்சன் மார்க்கமே.

சன்மார்க்க மெய்த வருமருஞ் சீடர்க்குப்
பின்மார்க்க மூன்றும் பெறவியல் பாமென்று
னன்மார்க்கந் தானே சிவனொடு நாடலே
சொன்மார்க்க மென்னச் சுருதிகைக் கொள்ளுமே.

---

## ஆருவது அத்தியாயம்.

## அட்டாங்க யோகம்.

### விருத்தம்.

*சட்டாங்கம் புகலியம நியமவா தனம்பிராணன்*
*றனேயா யாமந்*
*தொட்டாங்கு பிரத்தியா காரந்தா ரணைதியானஞ்*
*சுகச மாதி*
*நிட்டாங்க மாகியவெண் வகைத்தான சாதனையின்*
*நெறிகள் சேர்ந்த*
*அட்டாங்க யோகமதைப் பரிபக்கு வர்க்கெனவிங்*
*கறைகு வாமால்.*

அட்டாங்கயோக மெனினும், எட்டாங்கயோக மெனினும் பொருள் ஒன்றேயாம். அட்டாங்க யோகமானது எட்டுவிதமாகச் செய்யப்பெற்ற தாதலால் இவ்வத்தியாயத்திற்கு அட்டாங்கயோகம் என்று சொல்லப் பெறுகிறது. அவை :—

இயமம், நியமம், ஆதனம், பிராணயாமம், பிரத்தியா காரம், தாரணை, தியானம், சமாதி என்பனவாம்.

### முதலங்கம்—இயமம்.

எவ்வுயிரையும் கொல்லாதிருத்தல், சத்தியம் தவறுமல் உண்மை பேசுதல், பிறர்பொருளைக் கவராதிருத்தல், பிறர் மனைவியரையும், பொதுமகளிரையும் விரும்பாதிருத்தல், சகல வுயிர்கள்மீதும் கருணைபாலித்தல், வஞ்சகமில்லாதிருத் தல், பொறுமையுடைத்தாயிருத்தல், துன்பம் வந்தகாலத் திலும் மனங்கலங்காதிருத்தல், அற்ப ஆகாரம் புசித்தல், சுசிகரமோடிருத்தல் என்னும் பத்துமாம்.

திருமந்திரம்.

கொல்லான்பொய் கூறான் களவிலா னெண்குண
நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காமம்
இல்லான் இயமத் திடையில்நின் றானே.

## இயமபேதம்.

அன்றியும், அஹிம்சை, அஸ்தேயம், சத்தியம், க்ஷமை, பிரமச்சரியம், திருதி, தயை, ஆர்ஜவம், மிதாகாரம், சௌசம் என்னும் பத்துக் கிருத்தியங்களை இயமம் என்று வடநூலார் கூறுவர். இவற்றிற்கு முறையே கொல்லாமை, கள்ளாமை, வாய்மை, பொறை, விவாக மின்மை, தைரியம், கருணை, நேர்மை, சிற்றுணவு, சுத்தியென்று பொருள்.

## இயமபேத விபரம்.

1. மனோவாக்குக் காயங்களால் கொலை செய்யா திருத்தல் அஹிம்சை. ஆன்மாவானது எல்லாவற்றிலு முள்ளது, சேதிக்கப்படாதது, கிரகிக்கத்தகாதது என்னும் புத்தியை மேலான அஹிம்சை யென்று பெரியோர் கூறுவர்.

2. அன்னியர்களது துரும்பு முதல் இரத்தினம், பொன் முதலிய சகல பொருள்களையும் கவர எண்ணாதிருத்தல் அஸ்தேயம். ஆன்மாவினிடத்து அனான்மத் தன்மையாக வியவகரியாதிருத்தலை அஸ்தேய மென்று ஞானிகள் கூறுவர்.

3. நேத்திர முதலிய இந்திரியங்களால் கண்டவை-கேட்டவை முதலியவற்றை அப்படியே சொல்லிவிடுதல் சத்தியம். எல்லாமாகிய பரப்பிரமமே சத்தியம், மற்றவை அசத்தியமா மென்னும் புத்தியைச் சத்தியமென்று மேலோர் கூறுவர்.

4. சத்துருக்கள் முதலியவர்களால் தனக்குத் துன்பம் வந்த காலத்தும் கலங்காமல் பொறுமையோ டிருத்தல் க்ஷமை யென்பர்.

5. அன்னிய மாதரை மனோவாக்குக் காயங்களால் விலக்கியிருத்தல் பிரமச்சரியம். இதனையே அஷ்டவித மைதுனமில்லாமை யென்றுங் கூறுவர். பிரம பாவனையில் மனம் சஞ்சரித்தலையும் பிரமச்சரியம் என்பர்.

6. யான் ஆன்மா, அன்னியனல்லன் என்னும் உறுதியான எண்ணத்தைத் திருதி என்பர்.

7. மன்னுயிரையுந் தன்னுயிர்போல் எண்ணல் தயை.

8. புத்திர-மித்திர களத்திராதிகளிடத்தும், பகைவரிடத்தும், தன்னிடத்தும் சமபாவனை வைத்தல் ஆர்ஜவம்.

9. யோகத்திற் கனுகூலமான அரைவயிறு ஆகாரமும், கால்வயிறு நீரும் உட்கொண்டு, கால்வயிறு வாயு சஞ்சரிக்கும்படிச் செய்தல் மிதாகாரம்.

10. தன் தேகத்தில் மண் முதலியவைகளிட்டு மலத்தை நீரினாற் கழுவுவது வெளி சௌசம். நான் எப்போதும் பரிசுத்தன் என்னும் விவேகம் உடைத்தாயிருத்தல் உள் சௌசம். இவற்றுள் ஞான சௌசமென்னும் உள் சௌசத்தைவிட்டு வெளி சௌசத்தையே பிரதானமாகவுடையவர்கள், சாரத்தை யொழுகவிட்டு, சக்கையைக் கிரகிக்கிறவர்களை நிகர்ப்பர். இதன் முழு விபரம் ஞானக் களஞ்சியம் அடியா ரிலக்கணத்தில், அங்க சுத்தியும்—சித்த சுத்தியும் என்ற தலைப்பிற் பார்த்துணர்க.

இரண்டாமங்கம்—நியமம்.

தவம்புரிதல், மனமுவந்திருத்தல், கடவு ளுண்டென்னும் விசுவாசம் வைத்தல், பாவத்திற்குப்பயந்து சம்பாதித்த

பொருளைச் சற்பாத்திரமா யுள்ளவர்கட்குக் கொடுத்தல், தன்னில் உயர்ந்தோரைக் கண்டால் வழிபடுதல், உயிர்கட்கு உறுதிபயக்கும் உண்மையான தத்துவ நூற்களைக் கேட்டல், குலம், செல்வம், அதிகார முதலியவைகளினுற் செருக்கடையாமல் அடங்கி பொழுகுதல், தக்கது இன்னதென்றும், தகாதது இன்னதென்றும் பகுத்தறிதல், செபம், விரதம் என்னும் பத்துவிதக் கிருத்தியங்களாம்.

## திருமந்திரம்.

தூய்மை யருளூண் சுருக்கம் பொறை செம்மை
வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை
காமங் களவு கொலையெனக் காண்பவை
நேமியீ ரைந்து நியமத்த னுமே.

## விஞ்ஞானசாரம்.

இயமநியமத் துடையரா யெழிலார்ஞான யோகராய்
உயர்நற்குருவி னருளாலே ஓரஞ்ஞான நிவர்த்தியையும்
சுயசித்தாந்த வாதியையுந் தோன்றும் அனுபூதியிலடைந்தோர்
பயனில்விடயந் தனைவிரும்பார் பற்ருயுழலு மற்றையரே.

இயமநியம மியற்ருமல் எழிலார்நிட்டை யடைவோர்க்குச்
சுயநற்சொரூபா னந்தமதுந் தோன்ருதிருளு மாருது
பயந்தபரமம் அடைந்தவற்போர் பாவித்துள னிற்பினுமிந்தக்
கயவற்குரித்தாம்போகத்தை கருதியிருந்துந் தொடர்ச்சி
[யென்பர்.

## நியமபேதம்.

அன்றியும் தவம், சந்தோஷம், ஆஸ்திக்கியம், தானம், ஈசுரபூஜனம், சித்தாந்த சிரவணம், இலஜ்ஜை, மதி, ஜபம், விரதம் என்னும் பத்து கிருத்தியங்களையும் நியமம் என்று வடநூலார் கூறுவர். இவற்றிற்கு முறையே தவஞ் செய்தல், திருத்தியடைதல், நம்பிக்கை, ஈகை, கடவுள் வணக்கம்

சாத்திர விசாரணை, நாணம், விவேகம், தியானம், நோன்பு என்று பொருள்.

நியமபேத விபரம்.

1. வேதாகமங்களிற் கூறியபடி சாந்திராயண விரதம் முதலியவற்றால் சரீரத்தை உலர்த்தல் தவம். முத்தி யென்பது யாது? பந்தமென்பது யாது? இந்தச் சமுசார சாகரம் எப்படி வந்தது? என்று விசாரித்தலுந் தவமாம்.

2. கிடைத்ததைக் கொண்டு திருத்தியடைதல் சந்தோஷம். பிரமலோகம் வரையிலுண்டாகும் அவாவை யகற்றி ஆன்மஞானத்தை விரும்பியிருத்தலும் சந்தோஷம்.

3. வேதாகமங்களிற் கூறியவற்றை விசுவசித்து நம்புதல் ஆஸ்திக்கியம்.

4. ஞாய வழியிற் சம்பாதித்த பொருளை அடியார் முதலியவர்களுக்குச் செலவு செய்தல் தானம்.

5. குரு வுபதேசித்தபடி கடவுளைப் பூசித்தல் ஈசுர பூசை. இராகாதி குணங்க ளொழிந்து உண்மை பேசுதலும், நல்லொழுக்கம் உடைத்தாயிருத்தலும், இம்சை முதலானவைகளில்லாமல் கருமத்தைப் புரிதலும் ஈசுர பூசையாம்.

6. சத்தியம், ஞானம், அனந்தம், பரமானந்தம், முதலிய இலட்சணமுடையது அந்தரான்மாவென் றுணர்வது வேதாந்த சிரவணமாகிய சித்தாந்த சிரவணமாம்.

7. வைதிக லௌகிக மார்க்கங்களுக்கு விரோதமாகிய கருமங்களிற் பிரவர்த்திக்க நாணுதல் இலஜ்ஜை.

8. சகல வைதிக கருமங்களிலுண்டாகும் சிரத்தை மதியாம்.

9. வேதத்திற் சொல்லியபடி மந்திரங்களை அப்பியசித்தல் ஜபம். கற்ப சூத்திரம், வேதம், தரும சாத்திரங்களை

அப்பியசித்தலும் ஜபம் எனப்படும். அந்த ஜபம் வாசிகம், மானசமென இருவகையாகும். அவற்றுள் வாசிக மென்பது உபாஞ்சு, உச்சம் என இருவகையாகவும், மானசமானது மனனம், தியானம் என இருவகையாகவும் வகுக்கப்பெற்றுள்ளது. இவற்றுள் பிறர் காதிற் கேட்கும்படி உரத்துச் செபித்தலாகிய உச்சத்தைவிட, பிறர் காதிற் கேட்காதபடி செபித்தலாகிய உபாஞ்சுவானது ஆயிரம் மடங்கும், உபாஞ்சுவைவிட மானசமாகிய மனனத் தியானங்கள் கோடி மடங்கும் அதிக பலனைத் தருவனவாம். உச்சத்தினல் சிறிது பலனுண்டாவதா யிருந்தாலும், அது நீசத்தன்மை யுடையோர் காதிற் படுமாயின் பிரயோசனமற்றதேயாம்.

10. வேதத்திற் கூறிய விதி நிஷேதங்களை யனுட்டித்தலாகிய நித்திய கருமம் விரத மெனப்பெறும். இதை மக மென்றும் கூறுவர்.

அன்றியும் தேகேந்திரியங்களி லுண்டாகும் வைராக்கியம் இயமம் என்றும், பரத்துவத்தில் இடைவிடா துண்டாகும் விருப்பம் நியமம் என்றும் பெயர் பெறும். சர்வ வஸ்துக்களிடத்தும் உதாசினமாயிருத்தல் உத்தமமாகிய ஆசனம். இந்தச் சகல சகத்தும் மித்தையாகத் தோன்றுதல் பிராணுயாமம். சித்தத்தின் அந்தர் முகத்தன்மை பிரத்தியாகாரம். சித்தத்தின் நிச்சயத் தன்மையை தாரணை அந்தச் சின் மாத்திரமே நானென்று சிந்தித்தல் தியானம். தியானத்தைச் செவ்வையாய் மறத்தல் சமாதி என்று இயமாதிகளின் இலட்சணம் திரிசிகி யுபநிடதத்திற் சொல்லப்பெற்றிருக்கின்றது.

இந்த இயம - நியமாதிகளால் மனம் பரிசுத்தமடைந்திருந்தாலன்றி சாதாரண கிரியை, மந்திர - தந்திரங்களும், எத்தகைய யோகஞானங்களும் கைகூடாதென்பது சத்தி

யம். இயம - நியமாதி சற்கருமங்கள் யாருக்கோ சொல்லி வைத்ததென்று நினைத்துவிட்டுத் தவம்புரிவதாக நினைத்து கண்களை மட்டும் மூடிக்கொண் டிருப்பவர்களுக்கும், கண்ணை மூடிக்கொண்டிருக்கும் பூனைக்கும் எவ்வித வித்தியாசமுமில்லை. இயம - நியமமென்னும் வாசல் வழியாக நுழையாதவர்கள் ஞானமென்னும் வீட்டை அறியவே மாட்டார்கள். ஆனால் இயம - நியமங்களின் வடிவாகவே அவதரித்த பாக்கியசாலிகளைப் பற்றி இங்கு குறிப்பிடவில்லை.

## மூன்றுமங்கம்—ஆதனம்.

ஆதனம் இருவகைத்து. மான்தோல், புலித்தோல், கம்பளம், வஸ்திரம், தருப்பை முதலானவைகள் ஒன்று; பின் வருமாறு சரீரத்தால் அமைத்துக்கொள்ளுதல் மற்றொன்று :—

1. சுவத்திகாசனம், கோமுகாசனம், பதுமாசனம், வீராசனம், சிம்மாசனம், பத்திராசனம், சித்தாசனம், மயூராசனம், சுகாசனம் என ஆசனங்கள் ஒன்பது (9). இவை முதற் பகுதியாம்.

2. தனுராசனம், யோகாசனம், மச்சேந்திராசனம், பச்சிமத்தானசனம், உற்கடாசனம், குக்குடாசனம், கூர்மாசனம், உத்தான கூர்மாசனம், மண்டுகாசனம், மற்கடாசனம் என ஆசனங்கள் பத்து (10). இவை இரண்டாம் பகுதியாம்.

3. காமதகனசனம், பூர்வதானசனம், அற்பகாசனம், வல்லரியாசனம், டிட்டிபாசனம், பாரிசோபதாசனம், விருச்சிகாசனம், கேசரியாசனம், பத்தயோனியாசனம், சோபாசிர ஆசனம், வெளவியாசனம், பரியங்காசனம், பேகனசனம், பத்தாசனம், மகாபேகாசனம், ஏகபாதா

சனம், பைரவாசனம், பிராணுசனம், அபானுசனம், சமாணு சனம், பருவதாசனம், யோகநித்திராசனம், சக்கராசனம், பணிந்திராசனம், தண்டாசனம், சவாசனம் என ஆசனங்கள் இருபத்தாறு. (26) இவை மூன்றும் பகுதியாம்.

இவையன்றி, சௌவியாசனம், சூலாசனம், கருடாசனம், மச்சாசனம், முற்கராசனம், மிருகாசனம், நாகாசனம், குஞ்சராசனம், காஷ்டாசனம், கிரவுஞ்சாசனம், கடகாசனம், யோனியாசனம், வியாக்கிராசனம், வைநிகாசனம், வத்திராசனம், வாசவாசனம், வராகாசனம், பதாசனம், திரிபதாசனம், அத்தனுசனம், அயிம்மாசனம் என 21 வகை ஆசனங்களும் உள. ஆக ஆசன பேதங்கள் 66. வசிட்டர், மச்சேந்திரர் முதலிய மகான்களால் அளவிறந்த ஆசன பேதங்கள் சொல்லப்பெற் றிருக்கின்றன.

குறிப்பு:—ஆசனங்களின் மொத்தம் எண்பத்துநான்கு இலட்சங்களென்றும், அவற்றுள் இலட்சத்திற் கொவ்வொன்றுக சிரேட்டமும், செவ்வையுமான எண்பத்து நான்கு ஆசனங்களை மட்டும் வெளியிடப்பெற்றதென்றும் கூறப்பெற்றுள்ளன. இந்த எண்பத்துநான்கு ஆசனங்களிலும் முக்கியமான சில ஆசனங்களையே இந்நூலில் விளக்கப் பெற்றிருக்கிறது.

ஆசனமானது பிராணுயாமத்திற்கு முதலங்கமாயிருத்தலால் இதை அதற்கு முன்னதாக வைக்கப்பெற் றிருக்கிறது. அதுபோலவே இயமம் முதல் சமாதி வரையிலுள்ள அட்டாங்கமும் ஒன்றுக் கொன்று சகாயமாய், ஒன்றன்பின் ஒன்றுக அமைக்கப்பெற் றிருக்கிறது. ஆசனமானது தேகத்திலுள்ள அயர்ச்சியையும், மனுே சாஞ்சலியத்தையும் பலவிதமான ரோகங்களையும் நிவர்த்தித்து,

அப்பியாசம் செய்வதற்கு உற்சாகத்தையும், சரீர ஆரோக்கியத்தையுந் தருகின்றது.

இக்காலத்தில் யோகிகளால் அனுட்டித்துக் கொண்டு வரப்பெற்ற சிறந்த ஆசனங்கள் ஒன்பதாம். அவை :— மேலே கூறப்பெற்ற சுவத்திகம், கோமுகம், பதுமம், வீரம், சிம்மம், பத்திரம், சித்தம், மயூரம், சுகம் என்பனவாம்.

சுவத்திகமாதி ஆசனங்கள் 9. (முதற் பகுதி.)

1 சுவத்திகாசனம் :—இது சுகத்தைத் தருவதா யிருத்தலால் இவ்வாசனத்தை முதலிற் கூறுகின்றனம்.

முழந்தாளுக்கும், தொடைக்கும் மத்தியில் இரண்டு பாதங்களையும் வைத்துச் சரீரத்தை நிமிர்ந்திருக்கச் செய்து இருமாப்புடன் செவ்வையா யுட்கார்ந்திருத்தல் சுவத்திகாசனமாம். இங்கே முழந்தாளென்னும் சொல்லால் அதைச் சம்பந்தித்துள்ள கணைக்கால் கொள்ளப்பெறுகின்றது. ஆகவே, தொடைக்கும், கணைக்காலுக்கும் இடையாகிய முழந்தாள் மத்தியில் இரண்டு பாதங்களையும் வைத்துக் கொண்டிருப்பது தான் சுவத்திகமென்று விவேகிகளறிவார்.

சுவத்திகம், பதுமம், சித்தம், உக்கிரம் என்னும் பச்சிமதானம் ஆகிய சதுராசனங்களும் பிரதானமாம். அவற்றுள் பதுமம், சித்தம் என்னும் இரண்டாசனங்களும் இல்லற ஆச்சிரமிகளுக்குக் கூடுமாயினும், பதுமம், இல்லறத்தாருக்கும், சித்தம் ஏனைய ஆச்சிரமிகளுக்கும் சிலாக்கியமாகும்.

2 கோமுகாசனம் :—இடது பின் பாகத்தில் வலது பரட்டையும், அப்படியே வலது பின் பாகத்தில் இடது பரட்டையும் செவ்வையாகச் சேர்த்து, இரண்டு கால்

பெருவிரல்களையும் கையினுற் பிடித்துக் கொண்டிருத்தல். இவ்வாசனம் மூல பந்தத்தால் அபான சித்தியைத் தருவதுடன், பகந்தர மென்னுங் குத நோயையும் தவிர்க்கும். இது கோமுகம் போன்றிருப்பதால், கோமுகாசனமெனக் கூறப்பெறுகின்றது.

இவ்வாசனம் கபசுத்தி செய்வதாகிய வளிவமனம் (பவன தௌதி) என்னும் அப்பியாசத்திற்குச் சாலச் சிறந்தது.

3 பதுமாசனம் :—வலது பாதத்தை இடது தொடையின் மீதும், இடது பாதத்தை வலது தொடையின்மீதும் வைத்து, இரண்டு பாதங்களையும் ஆகாயத்தைப் பார்க்குப்படி செய்து, சின் முத்திரையுடன் சம நோக்காய் சரீரங் தளராதிருத்தல்.

திருமந்திரம், பதுமாசனம்.

ஓா ணைப்பத மூருவின் மேலேறிட்
டார வலித்ததன் மேல்வைத் தழகுறச்
சீர்திகழ் கைக ளதனைத்தன் மேல்வைக்கப்
பார்திகழ் பத்மா சனமென லாகுமே.

பதுமாசன பேதம் I.

பின்புறமாக இரண்டு கைகளாலும் இரண்டு காற்பெருவிரல்களையும் பிடித்துக் கொண்டு இருதயத்திற்குச் சமீபத்தில் (4 அங்குலம் இடைவிட்டு) மோவாய்க் கட்டையை வைத்து நாசி நுனியைப் பார்த்தல். இது வியாதியை நாசஞ் செய்யும். இதைச் சுபாசனமென்றுங் கூறுவார்கள்.

பதுமாசன மற்ரெரு பேதம் II.

இரண்டுபுறங் கால்களையும், தொடையின்மீது பொருத்தித் தொடையின் மத்தியில் இரண்டு கைகளையும்

பொருந்தச் செய்து, அதன்பின் பார்வையை அசைவில்லாத தாக நாசி நுனியில் அமைத்து, முன் பற்களின் இருபுறத் திலு மிருக்கும் மூலத்தில் நாவினுல் தம்பித்து, மார்பில் மோவாய்க் கட்டையை வைத்து, மெல்ல மெல்ல வாயுவை எழுப்புதல். இது சகல வியாதிகளையும் நாசஞ் செய்யும்.

## பதுமாசன மற்ருெரு பேதம் III.

பதுமாசனத்தை மிகத் திடமாகச் சேர்த்து, கைகளைச் சம்புடமாகச் செய்து மடியில் வைத்து, மார்பில் மோவாய்க் கட்டையை நிறுத்தி, பிரமத்தை சித்தத்தில் தியானித்துக் கொண்டு, அடிக் கட்டி அபான வாயுவை மேலெழுப்பி, சுழுமுனை மார்க்கத்தால் பிராணனை மேற்கொண்டு போய்ப் பூரகத்தால் உட்கொண்ட பிராணனைக் கீழ்ச் செலுத்தலால் யோகி நிகரற்ற ஞானத்தை யடைகிருன்.

பதுமாசனத்தி லிருக்கும் எந்த யோகி பூரகத்தால் உட்செலுத்திய வாயுவைச் சுழுமுனை மார்க்கத்தால் கபாலத்திற் கொண்டுபோய்த் திரமாக்குகிருனே அவன் சிவன் முத்தனுகின்ருன்.

4 வீராசனம் :—வலது பாதத்தை இடது தொடையிலும், இடது பாதத்தை வலது தொடையிலும் வைத்து இருமாப் புற்றிருத்தல். இதை அர்த்தாசன மென் றுங் கூறுவார்கள்.

5 சிம்மாசனம் :—பரடுக ளிரண்டையும் பீசத்தின் கீழ்ப் பாகத்திலுள்ள நரம்பின் இரு பக்கங்களிலும் சேர்க்க வேண்டும். அஃதாவது வலப்புறத்தில் இடதுகாற் பரட்டையும் இடப்புறத்தில் வலதுகாற் பரட்டையுஞ் சேர்த்து நாசி நுனியை நோக்கி முழந்தாளிற் கைகளை நீட்டி யிருத்தல்.

### சிங்காதனம்.

பாத முழந்தாளிற் பாணி களைநீட்டி
ஆதர வோடும்வா யங்காந் தழகுறக்
கோதில் நயனங் கொடிமூக்கி லேயுறச்
சீர்திகழ் சிங்கா தனமென லாமே.

### சிம்மாசன பேதம்.

முழந்தாளின்மேல் இரண்டு கைகளையும் நன்ருய்ப் பொருந்தும்படியாக வைத்து, கைவிரல்களைச் செவ்வையாய் விரித்து, வாய் திறந்து நாவை நீட்டிக்கொண்டு, ஒரே மனத்தை யுடையவனுக நாசி நுனியைப் பார்த்திருத்தல். இது ஆசனங்கள் எல்லாவற்றினும் சிறந்தது.

6 பத்திராசனம் :—பீசத்தின் கீழ் ஆசனப் பக்கத்தில் இருகாற் பரட்டையும் வைத்து இருகாலையும் இரு கரத்தா லிறுகப் பிடித்து அசையாது முழந்தாளிற் கைகளை நீட்டி இருமாந்திருத்தல்.

### பத்திராசனம்.

துரிசில் வலக்காலைத் தோன்றமேல் வைத்து
அரிய முழந்தாளி லங்கை களைநீட்டி
உருகி யிடுமுடற் செவ்வே யிருத்திப்
பரிசு பெறுமது பத்திரா சனமே.

### பத்திராசன பேதம்.

இருபாரிசங்களின் சமீபத்திலுள்ள இரண்டு பாதங்களையும் இரண்டு கைகளாற் பலமாகச் சேர்த்து, ஒன்ருேடொன்று நெருங்கிய விரல்களுடையதும், வயிற்ருேடு ஒட்டியதுமாகிய கைகளாற் கட்டிக்கொண் டிருத்தல்.

7 சித்தாசனம் :—(மச்சேந்திரம்) குதத்திற்கும், உபத்தத்திற்கும் மத்தியப் பிரதேசமாகிய யோனித்தானத்தை

இடதுகாலின் பாத மூலத்தால் அழுத்தி, வலது பாதத்தை உபத்தத்திற்கு மேற்பாக (இலிங்க)த்திற்றிடமாக அழுத்தவேண்டும். இருதயத்தில் மோவாய்க் கட்டையைச் செவ்வையாக நிறுத்தி (நாலங்குலம் விட்டு) இந்திரியங்களை விடயங்களினின்றுந் தடுத்து, அசைவற்ற நோக்குடன் புருவ மத்தியிற் பார்த்தல். இது சித்தர்களது ஆசனமாதலால் சித்தாசனமென்று கூறப்பெற்றது.

சித்தாசன பேதம்.

(இதை மதாந்திர சித்தாசனமென்று சொல்லுவார்கள்.)

உபத்தத்திற்கு மேற்பாகத்தில் (இலிங்கத்தின்மேல்) இடது பரட்டைச் சேர்த்து, அப்படியே முக்கியமாகிய இடது பாதத்தின்பேரில் வலது பரட்டைச் சேர்த்து வைத்தல். இதைச் சிலர் சித்தாசனமென்றும், சிலர் வச்சிராசனமென்றும், சிலர் முத்தாசனமென்றும், வேறு சிலர் குப்தாசனமென்றும் சொல்லுகின்றனர்.

இடதுகாற் பரட்டை யோனித்தானத்திற் சேர்த்து, வலதுகாற் பரட்டை உபத்தத்தின் பேரில் வைத்தலைச் சித்தாசனமென்றும்,

வலதுகாற் பரட்டை யோனித்தானத்தில் வைத்து, இடதுகாற் பரட்டை உபத்தத்தின் பேரில் வைத்தலை வச்சிராசனம் என்றும்,

இருகாற் பரடுகளையும் மேலுங் கீழுமாகச் சேர்த்து யோனித்தானத்தில் வைத்தலையும், இடதுகாற் பரட்டால் சீவனியை அழுத்தி, வலதுகாற் பரட்டை இடதுகால் பரட்டின் கீழ் உந்த வைத்தலையும் முத்தாசனம் என்றும், மேலுங் கீழுமாய்ச் சேர்க்கப்பட்ட இரண்டு பரடுகளையும்

உபத்தத்தின்மேல் வைத்தலைக் குப்தாசனம் என்றும் வழங்கப் பெறுகின்றது. எண்பத்து நான்காசனங்களில் சித்தாசனத்தையே பன்னிரண்டு வருடம் வரையில் அப்பியாசிக்கிறவன், வேறு யோகாப்பியாச மின்றி சித்தியை யடைவான்.

8 மயூராசனம் :—முழங்கை யிரண்டும் உந்திப் புறத்தில் அழுந்தும்படி பூமியிற் கைகளை யூன்றிக் கால்களை நீட்டி பூமியிற் படாமல் தலையையும், கால்களையும் உயர்த்தி மயிலைப்போல் நிமிர்ந்திருத்தல்.

விரல்களை விரித்து, இரண்டு கைகளையும் பூமியிலூன்றி, நாபியினிருபக்கங்களினும் முழங்கைகளை வைத்து, உயர்ந்த ஆசனமாக தண்டத்தைப்போல் எழும்பி நிற்றல்.

இது குன்மம், சலோதர முதலிய கொடிய ரோகங்களைக் கெடுத்து, அதிகமாய்ச் சாப்பிட்ட அன்னத்தைப் பஸ்பமாக்குவது மன்றி, சடராக்கினியையும் உண்டாக்கும்.

9. சுகாசனம் :—சுகமுந் திடமும் எவ்வாறிருக்கின் எய்துமோ அவ்வாறு இருத்தல்.

இவ்வாசனமானது திடமாக இருக்க சத்தியற்றவர்கள் ஆசிரயிக்க வேண்டிய ஆசனம். மற்றவர்களுக்கு அவ்வளவு அவசியமில்லை.

பதஞ்சலியார்.

சாத கங்கலை யும்புலி யாசன
மோடு பங்கய முந்தரை மீதினும்
தானி ருந்தசை வென்பதி லாமலே தாராளம்.

---

# யோகாசனங்கள்.



1. சவுத்திகாசனம்.



2. கோமுகாசனம்.



3. பதுமாசனம்.



4. வீராசனம்.



5. சிம்மாசனம்.



6. பத்திராசனம்.

187-ஆம் பக்கம் பார்க்க.



7. சித்தாசனம்.



8. மயூராசனம்.

அப்பியாசிகட்கு மிக்க அவசியமானதும் உத்தமமானதுமாகிய ஆசனங்கள் ஒன்பதில், அவரவர் சௌகரியம்போல் அமைத்துக்கொள்ளும் சுகாசனம் நீங்கலாக, ஏனைய 8 ஆசனங்களை மட்டும் மேல்படத்தின் மூலமாக விளக்கியுள்ளனம். இவற்றுள் பத்திராசனத்தை கோரக்காசனம் என்றும் கூறுவதுண்டு. கோரக்கர் அநுட்டித்ததை கோரக்காசனமென்றும், மச்சமுனிவர் அநுட்டித்ததை மச்சேந்திராசனமென்றும் அவரவரால் வழங்கப்படுகிறது. ஒவ்வொரு ஆசனத்திலும் சிறிது மாறுதலுடன் வெவ்வேறு பெயரால் பதுமாசன பேதம்—மற்கடாசன பேதம் என்பதுபோன்ற வசனங்களால் ஆசன பேதங்கள் எண்ணிறந்தனவாகவும் வழங்கப் படுகிறது. அதனுல் அப்பியாசிகள் இதுவோ அதுவோ என்று விபரீதங்கொள்ளாமல் அமைதியுடன் நிதானித்து அப்பியாசிக்கும்படி விரும்புகின்றனம்

## தனுராதி ஆசனங்கள் 10.

### இரண்டாம் பகுதி.

1. தனுராசனம் :—கைகளால் இரண்டு காற் பெருவிரல்களையும் பிடித்து, காதுவரையிலும் வில்லைப்போலிழுக்க வேண்டும். அதாவது பெருவிரலைப் பிடித்திருக்கும் ஒரு கையை நீட்டிக்கொண்டு, பெருவிரலைப் பிடித்திருக்கும் மற்றொரு கையைக் காதுவரையிலிழுத்தல்.

இவ்வாசனம் ஆலசியத்தைக் கெடுத்து, கபம் முதலான தோஷங்களை நீக்கி, மல சுத்தியைத் தருகின்றது.

2. யோகாசனம் :—முழங்காலுக்குக் கீழ் யோகப் பட்டையைச் சேர்த்து, இரண்டு பாதங்களையும் பூமியில் வைத்து, இரண்டு முழங்கைகளையும் தொடைகளுக்கு மத்தியப் பிரதேசத்திற் பொருத்தி, இரண்டு கைகளையும் கன்னத்திற் சேர்த்திருத்தல். குதத்தைப் பரடுகளாலழுத்தி நேராக நிமிர்ந்திருத்தலையும் யோகாசனமென்று வழங்குவார்கள்.

3. மச்சேந்திராசனம் :—இது மச்சேந்திர நாதரால் சொல்லப் பெற்றமையால் அவர் பெயரால் வழங்கப் பெறுகிறது.

இடது தொடையின் மூலத்தில் வைக்கப்பெற்ற வலது பாதத்தை, பின்புறமாகச் சென்ற இடது காத்தினல் குதியின் மேற்பாகத்தைப் பிடித்துக்கொண்டு, வலது முழந்தாளுக்கு வெளியில் வைக்கப்பெற்றிருக்கும் இடது பாதத்தின் பெருவிரலை, இடது முழந்தாளுக்கு வெளியிற் சுற்றிய வலது காத்தினற் பிடித்துக்கொண்டு, இடதுபக்கம் பின்புறமாய் முகமிருக்கும்படித் திரும்பிய அங்கமாக இருத்தல் வேண்டும்.

### மச்சேந்திராசன பேதம்.

வலது தொடையின் மூலத்திற் சேர்க்கப்பெற்ற இடது பாதத்தை, பின்புறமாகச் சென்ற வலதுகாத்தாற் பிடித்து, இடது முழந்தாளுக்கு வெளியிற் சூழ்ந்த வலது பாதத்தை, வலது முழந்தாளுக்கு வெளியிற் சூழ்ந்த இடது காத்தினாற் பற்றி, வலப்பாகமாய், முகம் பின்புற மிருக்கும்படி திரும்பிய அங்கமாக அப்பியாசித்தல் வேண்டும்.

இவ்வாசனம், சகித்தற்கியலாத பற்பல பிணிகளென்னும் சேனைகளைக் கண்டிப்பதில் அம்பைப்போன்றிருத்தலு மன்றி, நாள்தோறும் செய்யும் அப்பியாசத்தால் சடராக்கினியின் விருத்தியைக்கொடுத்து, குண்டலி சத்தியென்னும் ஆதார தேவதையின் விழிப்பையும், அண்ணாக்கின் மேற் பாகத்தில் நிரந்தரம் அசைந்து கொண்டிருக்கும் சந்திரனுக்கு அசைவின்மையையுந் தருகின்றது.

4. பச்சிமதான ஆசனம் :—பூமியில் தண்டவடிவமாக இரண்டு குதிகளையும் சேர்த்துப் பாதங்களை நீட்டி, காத்தின் சுட்டு விரல்களால் காலின் பெருவிரல்களைப் பலமாக இழுத்து, முழந்தாளின் கீழ்ப்பாகம் பூமியினின்றெழாத வண்ணம் பிடித்துக்கொண்டு, முழந்தாளின்மேல் நெற்றியைப் பொருத்திக்கொண்டிருத்தல். இதை உக்கிராசனமென்றுங் கூறுவர்.

இவ்வாசனத்தைப் பயிற்சி செய்வதால், பிராணனைச் சுழுமுனை மார்க்கமாகச் செல்லச் செய்வதுமன்றி, சடராக்கினியை விருத்திசெய்து, பல ரோகங்களையும், வயிற்றின் மெலிவையும் நிவர்த்திசெய்து, சரீர ஆரோக்கியத்தையும், நாடியின் நிமிர்ச்சி முதலியவற்றின் சமத்தன்மையையுந் தருகின்றது. இவ்வாசனத்தைப் பரியங்கம் என்றும் கூறு

வதுடன் முழந்தாள்களில் கைகளை நீட்டி சயனித்தலையும் பரியங்காசனமெனக் கூறுவர்.

5. உற்கடாசனம் :—இரண்டு குதிகாலிலும் இரண்டு கடிதடங்களையும் பொருந்தும்படிச் செய்து, கால் விரல்கள் பூமியிற் படும்படி யிருத்தல்.

இவ்வாசனம் குடற் சுத்தி செய்வதாகிய விசர்க்கம் (பஸ்தி) என்னும் அப்பியாசத்திற்கு இன்றி யமையாதது.

7. குக்குடாசனம் :—தொடைகளின்பேரில் மேல் நோக்கிய பாதங்களாக வைக்கும் பதுமாசனத்தைச் செவ்வையாகச் சேர்த்துக்கொண்டு, முழந்தாளுக்கும் அதாவது முழங்காலுக்கடுத்த கணைக்காலுக்கும் - தொடைக்கும் மத்தியில் இரண்டு கைகளையும் நுழைத்து, பூமியிற் செவ்வையாய் நிறுத்தி மேலெழும்பி யிருத்தல், பதுமாசனம்போன்ற குக்குடாசனமாம். இந்தக் குக்குடாசனத்திலிருந்து தலையைக் கீழே சாய்த்தலுக்குச் சௌலியாசனமென்றுங் கூறுவர். இது சரீரத்திற்கு சீதளத்தையும், குண்டலி சத்தியின் விழிப்பையுந் தரும்.

7. கூர்மாசனம் :—இது இரண்டு பாடுகளினாலும் குதத்தை நிரோதித்து, இரண்டு முழந்தாள்களையும் பூமியில் வைத்து, நிமிர்ந்து செவ்வையா யிருத்தலாம். இது எண்பது வாத தோஷங்களையும் நிவர்த்திக்கும்.

8. உத்தான கூர்மாசனம் :—மேற்கூறிய குக்குடாசன பந்தத்திலிருந்து கொண்டு, இரண்டு புயங்களாலும் கழுத்தை நெருக்கி ஆமையைப்போல் ஒட்டியிருத்தல்.

9. மண்டுகாசனம் :—பாடுகளிரண்டினாலும் பிருட்டமென்னும் பின்பாகத்தைச் செவ்வையாயழுத்தி முழந்தாள்

களை எறிவலையமென்னும் சக்கராயுத வடிவமாய் வைத்து கைகளைப் பாதங்களில் அமைத்தல்.

10. மர்க்கடாசனம் :—இது கைகளாற் பாதங்களைச் செவ்வையா யழுத்தி, பாதமத்தியில் சிரசை வில்லைப்போ லமைத்து, அங்குட்டங்களைத் திட்டமாகப் பிடித்துக் கொண்டிருத்தல்.

## பிராணாதி ஆசனங்கள் 26.

### மூன்றும் பகுதி.

1. பிராணாசனம் :—ஒரு பாதத்தைத் தொடையிலும் மற்றப் பாதத்தைத் தோளிலுமாகச் சேர்த்திருத்தல். இது சகல சித்திகளையுந் தரும்.

2. அபானாசனம் :-மூலத்தினின்றும் வாயுவை யெழுப்பிப் பரவச்செய்து, பிரயத்தனத்தால் ஒரு பாதத்தைத் தோளில் வைத்து, மற்றொரு பாதத்தால் நிற்றல். இது சர்வ பூரகங்களுக்கும் ஆதாரமாம்.

3. சமானாசனம் :—ஒரு பாதத்தைத் தொடையில் வைத்து, மற்றப் பாதத்தைக் குய்யமாகிய இலிங்கத் துவாரத்திற் சேர்த்தல்.

4. வல்லரி :—சமமாகப் பதுமாசனத்தி லிருந்துகொண்டு, அப்பாதங்களையும், தொடையையும் ஒட்டி முழங்கைகளை வைத்து, இரண்டு கைகளையுங் கோர்த்துச் சிரசின் பேரில் வைத்து, மோவாய்க் கட்டையை மார்பில் பொருந்தச் சேர்த்து, வாயுவை நிரோதித்து, ஏகாக்கிர சித்தமா யிருத்தல்.

5. டிட்டிபாசனம் :—கைகளை யூன்றி, இரண்டு பாதங்களையும் சிரசின்பேரில் வைத்துப் பின் பாகத்தை யுயர்த்தல்.

6. பாரிசோபதாசனம் :—சமமான பூமியிற் படுத்துக் கொண்டு, இரண்டு கைகளையும் இரண்டு விலாக்களி னிடையாகிய முதுகிற் சேர்த்து, ஒன்றையொன்றுற் செவ்வையாய்ப் பிடித்துக் கொண்டிருத்தல்.

7. விருச்சிகாசனம் :—இரண்டு கைகளையும் பூமியிலூன்றி, இரண்டு முழங்கைகளையும் விலாப்பக்கத்திற் சேர்த்து, மோவாய்க் கட்டையைக் கீழே வைத்து, தேளின் கொடுக்குப் போன்றதாக இரண்டு பாதங்களையும் சிரசின் பேரில் வைத்தல்.

8. கேசரியாசனம் :—பீசத்தின் கீழ்ச் சீவனி யிடத்துப் பாட்டை வைத்து, முழங்கையை முழந்தாளில் வைத்து, அங்குலியை விரித்து நாசியைப் பார்த்திருத்தல்.

9. பத்தயோனியாசனம் :—இலிங்கம் என்னும் குய்ய முதலியவற்றைப் பந்தித்தலாகிய யோனியாசனத்தைச் செய்து, * உதடுகளைச் சுண்டுவிரல்களாலும், நாசித் துவாரங்களை மோதிர விரல்களாலும், நேத்திரங்களை நடுவிரல்களாலும், காதுகளைச் சுட்டு விரல்களாலும் மூடுதல்.

10. சோபாசிரயாசனம் :—யோகப் பட்டை சேர்த்திருத்தல்.

11. லௌலியாசனம் :—குக்குடாசனத்திலிருந்து தலையைக் கீழே சாய்த்தல். இது சரீரத்திற்குச் சீதளத்தையும், குண்டலியின் விழிப்பையுந் தரும்.

12. பரியங்காசனம் :—பச்சிமதான ஆசனத்தைப் பரியங்க மென்பதோடு, முழந்தாள்களில் கைகளை நீட்டிச்

---

* இவ்வாசனமானது நமது யோக ரகசியம் என்னும் நூலிற் கூறப்பெற்ற சண்முகி முத்திரையின் சம்பந்தமுள்ளது.

சயனித்தல். சிலர் வீராசனத்தைப் பரியங்காசன மென்றுங் கூறுவர்.

13. பேகனுசனம்:—இரண்டு பாதங்களேயும் தோளின் பேரில் வைத்து, அப்பாதங்களின் மேல் இரண்டு கைகளே யும் வைத்திருத்தல்.

14. பத்தாசனம் :—பிருட்டத்தில் இரண்டு பாதங் களேயும் வைத்து, பிடரியில் இரண்டு கைகளேயும் வைத்துக் காயத்தைச் சுருக்கிப் பிடித்தல்.

15. மகாபேகாசனம் :—சர்வாங்கங்களேயும் ஆகாயத் தில் உயர்த்துதலாகிய கேசராசனமே மகாபேகாசன மெனப் படும்.

16. ஏகபாதாசனம் :—ஒரு பாதத்தை நீட்டி மற்றப் பாதத்தைக் கழுத்தின் பேரில் வைத்து இரண்டு கைகளே யுங் கோர்த்து, அதின்மேல் வைத்துக்கொண் டிருத்தல்.

17. பைரவாசனம் :—காடுக ளிரண்டையும் ஒன்றே டொன்று சேர்த்து நேராக நிமிர்ந்து, முழந்தாள்களுக்குப் பக்கத்தில் இரண்டு கைகளேயும் தண்டம்போல் வைத்திருத் தல்.

18. காமதகனுசனம் :—நுனி விரல்களேப் பூமியி லூன்றி, முழந்தாள்களேக் கீழூன்றுமல் குதிகளே யோனியிற் பொருத்தி, அம்ச தண்டத்தின் பேரில் கைகளே யூன்றிப் புருவ நடுவைப் பார்த்திருத்தல்.

19. பூர்வதானுசனம் :—கால் விரல்களே மடித்துப் பூமியிலூன்றி, கடிதடங்களேப் பரடுகளில் வைத்து, சிரசைக் கைகளாலும், இடையை முழங்கைகளாலும் அழுந் தப் பிடித்துக் கொண்டு இடுப்பு நிமிர்ந்திருத்தல்.

20. அர்ப்பகாசனம் :—இரண்டு பாதங்களேயும் பூமி யில் வைத்து, கடிதடங்களேப் பூமியில் வைத்தாவது, வைக்

காமலாவது முழந்தாள்களின் பேரில் சிரசை வைத்து, முழந்தாள்களை இரண்டு கைகளாலும் சுற்றிப் பிடித்துக் கொண்டிருத்தல்.

21. பருவதாசனம் :—மலைபோ லசையா திருத்தல்.

22. யோகநித்திராசனம் :—கால்களால் கழுத்தைச் சுற்றி, கைகளைப் பின்புறம் கட்டிக்கொண்டு சயனித்தல். இது சுகத்தைத் தரும்.

23. சக்கிராசனம் :—வலதுகாற் பாட்டில் இடது தொடையையும், இடது பாட்டில் வலது தொடையையும் வைத்து, உடல் நிமிர்ந்திருத்தல்.

24. சவாசனம் :—இறந்த சரீரத்திற்குச் சமமாக முதுகு பூமியில் ஒட்டி யிருக்கும்படி, நித்திரை செய்வது போல் மல்லாந்து படுத்திருத்தல். இது அப்பியாசத்தா லுண்டான இளைப்பைத் தீர்ப்பதாயும் சித்தத்திற்கு விசிராந்தியைத் தருவதாயு மிருக்கின்றது.

25. தண்டாசனம் :—உட்கார்ந்து விரல்களையும், பாடுகளையும் சேர்த்து, தொடை—கணைக்கால்—பாதம் என்பவைகளைப் பூமியிற் பொருந்த நீட்டி, தண்டத்தைப் போற் சயனித்தல்.

26. பணீந்திராசனம் :—இரண்டு கால்களையும் சுற்றிக் கொண்டு, இரண்டு கைகளில் நிற்றல்.

இவையன்றி சவ்வியாசனம், சூலாசனம், கருடாசனம், மச்சாசனம், முற்கராசனம், மிருகாசனம், நாகாசனம், குஞ்சராசனம், காஷ்டாசனம், கிரவுஞ்சாசனம், கடகாசனம், யோனியாசனம், வியாக்கிராசனம், வைநிகாசனம், வத்திராசனம், வாசவாசனம், வராகாசனம், பதாசனம், திரியதாசனம், அத்தனுசனம், அயிம்மாசனம் என 22 வகை

ஆசனங்களுள்பட மொத்த ஆசன பேதங்கள் 67 உள்ளன. வசிட்டர், மச்சேந்திரர் முதலிய மகான்களால் அளவிறந்த ஆசன பேதங்கள் சொல்லப் பெற்றிருக்கின்றன.

மேற் சொல்லிவந்த உசிதமான ஆசனங்களாற் பற்பல வியாதிகள் வராமல் தடுக்கப் பெறுகின்றன. இதற்காகவே ஆசனங்களை அவசியமென்று முன்னோர்கள் ஏற்படுத்தியுள்ளார்கள்.

### நான்காமங்கம்—பிராணயாமம்.

இஃது பிராணவாயுவை நிரோதித்து இரேசக-பூரகஞ் செய்த வாயுவைச் செயித்தல். இதன் முழு விபரம் இந்நூலின் ஏழாவது அத்தியாயத்திற் காண்க.

### திருமந்திரம்.

வளியினை வாங்கி வயத்தி லடக்கிற்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம்
தெளியக் குருவின் றிருவருள் பெற்றால்
வளியினும் வேட்டு வளியனுமாமே.

எற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்குங்
காற்றைப் பிடிக்குங் கணக்கறிவா ரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது மாமே.

### ஐந்தா மங்கம்—பிரத்தியாகாரம்.

பிரத்தி = எதிரிடையாக, ஆகாரம் = பிரவர்த்திக்கும்படி செய்தல் அதாவது இந்திரியங்களை விடய சம்பந்தங்களிலிருந்து பெயர்த்து, அதற்கெதிரிடையாக மனத்துடன் பொருந்தும்படிச் செய்தல்.

அது உபாதியை நீக்கி உள்நோக்கலும், இந்திரியங்களைப் பலமாக இழுத்தலும், அவற்றைச் செயித்தலும்,

இந்திரியங்கள் விடயங்களுடனே சம்பந்த மின்றி சித்தத்தி னுடைய தன்மையை அனுசரிப்பது போலிருத்தலுமாம். தவிர—

1. சுபாவமாக விஷயங்களிற் செல்லும் இந்திரியங் களைப் பலமாக இழுத்தலும்,

2. எதைப் பார்க்கிருனே அது முழுவதும் பிரமமா மெனக் காண்டலும்,

3. பாதம்-அங்குட்டம்-கரடு-கணைக்கால்-முழந்தாள்-தொடை-பாயு - இலிங்கம்-நாபி - இருதயம்-கழுத்து-மிடறு-அண்ணம் - நாசி - கண் - புருவநடு-நெற்றி-சிரசென்னும் பதி னெட்டு மர்மத்தானங்களிலும் கிரமமாகத் தரித்தல். அதா வது அந்தத் தானங்களில் ஆரோக அவரோகக் கிரமமாகப் பிரத்தியாகாரஞ் செய்தலும்,

4. நித்திய கருமங்களின் பலத்தை விடுதலும்,

5. மரண பரியந்தம் தான் செய்யும் சுத்தா சுத்தங்க ளெல்லாவற்றையும், பிரம்மத்தினிடத்திற் செய்தலும்,

6. நித்திய கருமங்களையும், காமிய கருமங்களையும் பிரமாராதனைப் புத்தியாகச் செய்தலும்,

7. வாயுவை ஒரு தானத்திலிருந்து மற்ருெரு தானத் தில், அதாவது தந்த (பல்) மூலத்தினின்று, கண்டத் தானத்திலும், கண்டத் தானத்தினின்று மார்பிலும், மார்பி னின்று வயிற்றிலும், வயிற்றினின்று நாபியிலும், நாபியி னின்று குண்டலியிலும் குண்டலியினின்று மூலாதாரத்தி லும், மூலாதாரத்தினின்று அரை என்னும் இரண்டு கடிகளி லும், கடிகளினின்று தொடைகளிலும் தொடைகளினின்று முழந்தாள்களிலும், முழந்தாள்களினின்று கணைக்கால்களி லும், கணைக்கால்களினின்று பாதாங் குட்டங்களிலுமாக நிரோதித்தலும்,

8. சலனமில்லாது சுவத்திகாசனத்திலிருந்து கொண்டு இரண்டு நாசிகளாலாவது, அல்லது பத்தாவது துவாரமாகிய மேல் வாசலினாலாவது வாயுவை இழுத்துப் பாத முதல் சிரசு பரியந்தம் பூரிக்க வேண்டும். பின்னர் இரண்டு பாதங்களிலும் அதுபோல் மூலாதாரத்திலும் நாபியிலும், இருதயத்திலும், கண்ட மூலத்திலும் அண்ணத் திலும், புருவ நடுவிலும், நெற்றியிலும், சிரசிலும் நிறுத்த லும்.

9. சகல விடயங்களிலும் பராமுகமா யிருத்தலும், வித்துவான் தனது புத்தியை யிழுத்துச் சமசித்த முள்ளவனாகி, நிர்த் தொந்தமும் நிர் விகற்பமுமாகிய ஆன் மாவில் நிறுத்தலுமாகிய இந்த ஒன்பது கிரியைகளும் பிரத்தியாகாரமாம்.

திருமந்திரம்.

நாபிக்குங் கீழே பன்னிரண் டங்குலந்
தாபிக்கும் மந்திரந் தன்னை யறிகிலர்
தாபிக்கும் மந்திரந் தன்னை யறிந்தபின்
கூவிக்கொண் டீசன் குடிபுகுந் தானே.

மூலத் திருவிரல் மேலுக்கு முன்னின்ற
பாலித்தயோனிக் கிருவிரற் கீழ்நின்ற
கோலித்த குண்டலி யுள்ளே செழுஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழே.

நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்தும்
தேகத்துக் கென்றுஞ் சிதைவில்லை யாகுமே.

மூலத் துவாரத்தை முக்கார மிட்டிரு
மேலத் துவாரத்தின் மேல்மனம் வைத்திரு
வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லுங் கருத்திது தானே.

ஆறுமங்கம்—தாரணை.

நாபி, இருதயம், கண்டம், நெற்றி, கபாலம் இவைக ளொன்றில் சொற்பகாலம் சிந்தையை வைத்திருத்தல். அதாவது மனதைக் குறித்த விடத்திற் கட்டுதலும், ஆன்மாவினிடத்தில் இந்திரியங்களோடு மனதைச் சேர்த் தலுந் தாரணையாம்.

நாத தாரணையில் விருப்ப முள்ளதும், அதனுல் கணத் திற்குக் கணம் விடயங்களைப் பற்றுதலாகிய சபலத் தன்மையை முற்றிலும் விட்டதுமாகிய மனமானது, அசை வற்ற விருட்சம் போல் திறமான தாரணையைப் பெறு கின்றது. அதாவது பிராணுயாமத்தால் வாயுவையும், பிரத்தி யாகாரத்தால் இந்திரியத்தையும் வசமாக்கி, பின்னர் சகுண அல்லது நிர்க்குண பிரமத்தில், சித்தத்தின் உறுதித் தன்மையைச் செய்ய வேண்டு மென்பது கருத்து. இதனுல் பிரமத்தில் சித்தத்தை நிறுத்துதல் தாரணையாம். அன்றியும் மனிதரிடத்தில் சகலத்தையும் நடத்தும் போதானந்த வடிவமாகிய கடவுளை சகல பாவங்களும் நீங்கும் பொருட்டு நடோறுந் தாரணை செய்தல் வேண்டும்.

பிரமாதி காரிய சொரூபங்களைத் தத்தம் காரணத்தி லொடுக்கி, சகலத்திற்குங் காரணமான அதர்சனமும், நிரு பிக்கத் தகாததுமாகிய அசேதனத்தை பிரணவமாகிய சம் பூரண சாட்சாத் ஆன்மாவினிடத்தில் தாரணை செய்தல் வேண்டும்.

திருமந்திரம்.

கோணு மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்காட்டி
வீணுத்தண் டேட வெளியுறத் தானேக்கிக்
காணுக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணு ளடைக்கும் வழியது வாமே.

பஞ்சபூத தாரணை.

தேகமத்திய ஆகாயத்தில் வெளி யாகாயத்தையும், பிராணவாயுவில் வெளி வாயுவையும், உதராக்கினியில் வெளி யக்கினியையும், அப்புவின் அம்சத்தில் நீரையும், பிருதிவி பாகத்தில் பூமியையும் தரிக்க வேண்டும். இவற்றிற்கு முறையே அ-ய-ர-வ-ல, என்னும் மந்திராக்கரங்களை மந்திர பூர்வமாக உச்சரித்தல் வேண்டும்.

பாத முதல் முழந்தாள் வரையில் பிருதிவித் (மண்) தானமென்றும், முழந்தாள் முதல் பாயுரு வரையில் அப்பு (நீர்)த் தானமென்றும், பாயுரு முதல் இருதயம் வரையில் தேயு (அக்கினி)த் தானமென்றும், இருதய முதல் புருவ நடுவரையில் வாயு (காற்று)த் தானமென்றும், புருவ நடு முதல் சிரசு வரையில் ஆகாய (வெளி)த் தானமென்றும் கூறுவர்.

பிருதிவி - நாற்கோணமும், மஞ்சள் நிறமும், லகார பீசாக்கரமும்; அப்பு-அர்த்த சந்திர வடிவமும், வெண்ணிற மும், வகார பீசாக்கரமும்; தேயு - முக்கோண வடிவமும், இரத்த நிறமும், ரகார பீசாக்கரமும்; வாயு-அறுகோண வடிவமும், கரிய நிறமும், யகார பீசாக்கரமும்; ஆகாயம்- வட்ட வடிவமும், புகை நிறமும், அகார பீசாக்கரமும் உடையது.

(1) பிருதிவி தானத்தில் வாயுவை ஆரோபித்து (ஏற்றி) லகார அக்கர தியானத்தோடு ஐந்து கடிகை

(நாழிகை) நேரம் நிறுத்தல் வேண்டும். இந்த பிருதிவி தாரணையினுல் யோகிக்கு பிருதிவி வெற்றி கிடைப்பதுடன், மண்ணிற்குள் புதைக்கப் பெற்றிருப்பினும், மண் சம்பந்தத்தினுல் மரணமில்லை.

(2) அப்புத்தானத்தில் வாயுவை ஏற்றி, வகார அக்கரத் தியானத்தோடு ஐந்து கடிகை நேரம் நிறுத்தல் வேண்டும். இந்த அப்பு தாரணையினுல் சகல பாவங்களும், நீர்ப் பயமும், நீர் மரணமுமில்லை. நீரில் மிதக்கலாம், நீர்க்குள் சஞ்சரிக்கலாம்.

(3) அக்கினித் தானத்தில் வாயுவை ஏற்றி ரகார அக்கரத் தியானத்தோடு ஐந்து கடிகை நேரம் நிறுத்தல் வேண்டும். இந்தத் தேயு தாரணையினுல் யோகி அக்கினியுட் பிரவேசிப்பினும், அவன் தேகம் தகிக்கப்பட மாட்டாது. அக்கினியினுல் மரணமுமில்லை.

(4) வாயுத்தானத்தில் வாயுவை ஏற்றி, யகார அக்கரத் தியானத்தோடு ஐந்து கடிகை நேரம் நிறுத்தல் வேண்டும். இந்த வாயு தாரணையினுல் ஆகாயத்தில் வாயுவைப் போல் சஞ்சரிக்குந் தன்மை ஏற்படுகிறது. வாயுவினுல் எத்தகைய பயமும் மரணமும் நேரிடா.

(5) ஆகாயத் தானத்தில் வாயுவை ஏற்றி, அகார அக்கரத் தியானத்தோடு ஐந்து கடிகை நேரம் நிறுத்தல் வேண்டும். இந்த ஆகாய தாரணையினுல் யோகிக்கு ஆகாயத்தில் வெளியைப்போல் சஞ்சரிக்குந் தன்மையும், எவ்விடங்களி லிருப்பினும் சுகத்தை யனுபவிக்குந் தன்மையும் ஏற்படுகிறது.

இந்த பஞ்சபூதங்களுக்குத் தேவதைகள் முறையே பிரம்மா, நாரணன், உருத்திரன், ஈச்சுரன் (சிவம்) சதாசிவம் என்று இந்து நூல்களில் கூறப்பெற்றிருக்கின்றது.

### திருமந்திரம்.

*அரித்த வுடலையைம் பூதத்தில் வைத்துப்*
*பொருத்தவைம் பூதஞ் சித்தாதியிற் போந்து*
*தெரித்த மனுதிசத் தாதியிற் செல்ல*
*தரித்தது தாரணை தற்பரத் தோடே.*

இந்தப் பஞ்ச பூதங்களை ஒன்றுக்கு ஐந்தாக, அதாவது $(5 \times 5 = 25)$ இருபத்தைந்தாகப் பங்கிடப் பெற்று, பிருதிவியில் வருகிற, பிருதிவி-அப்பு-தேயு - வாயு - ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களால் சில தொழில்களையும், அவ்வாறே அப்புவில் வருகிற பஞ்ச பூதங்களால் சில தொழில்களையும், தேயுவில் வருகிற பஞ்ச பூதங்களால் சில தொழில்களையும், வாயுவில் வருகிற பஞ்ச பூதங்களால் சில தொழில்களையும், ஆகாயத்தில் வருகிற பஞ்ச பூதங்களால் சில தொழில்களையும் செய்யலாம்.

### புலவர்கள் நாயகம்.

(1) *வன்னியில் நீரை வைக்கில் வருஞ்சுரம் மாறிப் போகும்*
*வன்னியிற் பூவை வைக்கில் வசீகர மிகவுண் டாகும்*
*வன்னியில் வானை வைக்கில் வச்சிர சரீர மாகும்*
*வன்னியிற் காலை வைக்கில் மகாயோகஞ் சித்தி யாமே.*

(2) *காலிலே தீயை வைக்கிற் கலந்திடும் விஷங்க ளென்ன*
*காலிலே நீரை வைக்கிற் கனமுக வசிய முண்டாம்*
*காலிலே பூவை வைக்கிற் கதித்ததம் பனமே யாகும்*
*காலிலா காய மாகிற் கடிவிடங் கொடிய தாமே.*

(3) *வானிலே காலை வைக்கில் வலியரா வோடு மென்ன*
*வானிலே தீயை வைக்கில் வல்வினை பலவுண் டாகும்*
*வானிலே நீரை வைக்கில் மருவுமோ கனமுண் டாகும்*
*வானிலே பூவை வைக்கில் வசீகர மிகவுண் டாமே.*

(4) நீரிலே பூவை வைக்கில் நித்திய வசிய முண்டாம்
நீரிலே வானை வைக்கில் நின்றவன் ஓடு வானே
நீரிலே காற்றை வைக்கில் நின்றவன் னிலையே நிற்கும்.
நீரிலே தீயை வைக்கில் நெருங்கிய பிணிகள் போமே.

(5) பூமியில் வானை வைக்கிற் பொருந்திய விஷங்கள் தீரும்
பூமியிற் காலை வைக்கிற் பொருந்துதம் பனமே யாகும்
பூமியில் தீயை வைக்கிற் பொருந்துச்சா டனம தாகும்
பூமியில் நீரை வைக்கிற் புகழ்பெறு வசிய மாமே.

## ஏழாமங்கம்—தியானம்.

பல வாறான விருத்திகளை நீக்கி, ஒரு இலட்சியத்தில் நிகழும் ஏகரூபமான விருத்திப் பிரவாகமே தியானமாகும். அதாவது, தாரணை செய்யப் பெற்ற சொரூபத்தின் சொரூப மாகிய விருத்தியும், ஏகாக்கிரத் தன்மையின் பிரவாகமும், அதற்கு அன்னிய விடயங்களிற் செல்லாமையுமாகிய ஒருமை நிலையே தியானமாம். அன்றியும், பஞ்சேந்திரியங் களை யடக்கி யோகஞ் செய்தலும், ஒரு இலட்சியத்தில் மனத்தைச் சிலகாலம் திறமாய் நிறுத்தி, தியானிக்கப்படும் பொருளில், ஆற்றின் பிரவாகம் போலும், தைலதாரை போலும், இடையறாது மனத்தை அதில் பதிந்திருக்கும்படி செய்தலும் தியானமாகும்.

## தியான பேதம்.

அசலமும், நித்தியமும், ஆதிமத்தியாந்த மில்லாததும், நிர்த்தூலமும், ஆகாயமல்லாததும், பரிசிக்கப்படாததும், பார்க்கப்படாததும், இரசமுங் கந்தமு மில்லாததும், அளக் கப்படாததும், உவமையில்லாததும், தியானிக்கப்பெறும் பொருளுக்கப்பாற்பட்டதும், சச்சிதானந்தமும், அனந் தமும், ஆன்மாவுமாகிய பிரமத்தை (அந்தப் பிரமமே) நா னென்று விசேட முத்தியின் பொருட்டுத் தியானித்தல்

வேண்டும். அன்றியும்—"ஒரு பரமாத்வைத பாவமிருக்கின்றது. அதுவே ஆன்மா வென்பதாக எப்படி யெப்படி எழும்புகின்றதோ, அங்கே சொரூபமாகவே பாவித்தல் வேண்டும். அவ்வெல்லாப் பூதங்களிலும் சமதிருட்டியும் பாவிக்கவேண்டும்" என்று தியான இலட்சணங் கூறப்பெற்றிருக்கின்றது.

இங்கே சொரூபத்தியான மென்னும் சகுணம், ஆன்ம எதார்த்தத் தன்மை யென்னும் நிர்க்குணம் என்று இருவகை தியானம் கூறப்பெற்றுள்ளன. இவற்றுள் மனது நிலைக்கும் பொருட்டு ஆரம்பத்தில் தூலசொரூபத்தைச் சிந்தித்தல் வேண்டும். பின்னர் அந்த தூலத்தில் நிலைபெற்ற மனது சூக்குமத்திலும் நிலை பெறும்.

சகுணம் என்பதை நாஸாத்தென்றும், நிர்க்குணம் என்பதை மலக்கூத்தென்றும் கொள்க.

திருமூலர்.

நயன மிரண்டு நாசிமேல் வைத்திட்
டுயர்விழா வாயுவை யுள்ளே யடக்கித்
துயராறு நாடியே தூங்கவல் லார்க்குப்
பயனிது காயம் பயமில்லை தானே.

நடலித்த நாபிக்கு நால்விரன் மேலே
மடலித்த வாணிக் கிருவிர லுள்ளே
கடலித் திருந்து கருதவல் லார்கள்
சடலத் தலைவனைத் தாமறிந் தாரே.

தியானம் பயன் பெறவேண்டுமானால், குறித்தகாலம்-குறித்த இடம்-நியமித்தமுறை இவை மாறாமல் தினம் ஒரே படித்தாயிருக்கவேண்டும். ஒரு நாள் ஒரு இடத்திலும், ஒரு காலத்திலும், ஒரு முறையாகவும் ; மறுநாள்

வேறு மாறுதலாகவும், சாவகாசங் குறைந்தபோது குறைவாகவும், சாவகாசம் அதிகரித்தபோது அதிகமாகவும் தியானிப்பது பயன்தாராவாம். ஆனல், தியானம் நிகழும் காலத்தை வளர்பிறைச் சந்திரன் போல் சிறுகச்சிறுக அதிகப்படுத்திக்கொண்டு போதல் நன்மையைத் தரும். அந்தத் தியானமே வஸ்து சொரூபமாக மாத்திரம் தோன்றுவதாயும், தியானம்-தியானிக்கிறவன் என்னும் இரண்டின் சொரூபமும் இல்லனபோல் இருப்பதாயும் நிகழ்கின்ற மனத்தின் நிலையில் சமாதியென்று பெயர் புனைந்து நிற்கும்.

* சொரூப ஆராதனைக்காரர்கள் முதலில் கடவுளுக்கு எல்லாக்கல்யாண குணங்களுடன் கூடியவும், பல ஆவரணங்களை யுடையவுமான சொரூபத்தைக் கற்பித்து, அதில் நிற்கும் திறமை பெற்றபின்பு, கற்பித்த சொரூபத்தினின்று ஒவ்வொரு ஆவரணத்தின் குணத்தை ஒன்றின்பின் ஒன்ருய் நீக்கி, அந்தந்த ஆவரணமின்றியும், அந்தந்தத் தனித்தனி குணமின்றியுமுள்ள சொரூபத்தில் மனத்தை நிறுத்த

---

* சொரூப ஆராதனைக்காரர்கள், ஈச்சுரனுடைய ஞாபகச் சின்னமாக அமைத்துக்கொண்ட ஓர் வடிவை பிரதி பிம்பமென்றும்-ஓர் அடையாள மென்றும் எண்ணமல், நூற்றிற்குத் தொண்ணூற்றென்பதின்மர், அந்தச் சொரூப அடையாளத்தையே உண்மையான தெய்வமெனக் கருதி, அதை ஆராதிப்பதோடு நின்றுகொண்டு, மேற் செல்லவேண்டிய காரியம் உளதா? இல்லையா? என்றுணராமல் நின்று விட்டார்கள். சாதாரண சனங்கள் தானிப்படிச் செய்கிருர்கள் என்ருல், பெரிய கலா நிபுணர்களும் எங்கள் அப்பன் செய்ததை நாங்களும் செய்கிறேம் என்று மதிமறந்தவர்களாகச் செய்து வருகிருர்களே யன்றி, இந்தச் சொரூபத்தின் மூலமென்ன? இது எங்கிருந்து வந்தது? இதை யார் தயார் செய்தது? இதுதான கடவுள்? இதற்குமேல் யாதொன்றுமில்லையா? என்று விசாரணை செய்யாமல் ஒரே படித்தாயிருந்து வருவதும் ஆராய்ச்சியில்லாமையே.

வேண்டு மென்றும், பின்னர் அந்த சொரூபத்திலும் பல அவயவங்களையும் நீக்கி நியதி செய்து கொண்டே போக, ஒரு நிலையில் யோகியானவன் சோதியைக் காண்பான் என்றும் கூறப் பெற்றிருக்கின்றது.

இதன் வியாக்கியானமாவது :—ஆரம்பத்தில் ஈசுரனைப் பல ஆவரணங்கள் உள்ளவராக தியானிக்க வேண்டும். அந்தத் தியானம் திரப்பட அவைகளில் ஒன்றொன்றாய் விட்டு அவரைத் தியானித்தல் வேண்டும். பின்பு எல்லா வற்றையும் முற்றும் விட்டு அரூபமாய்த் தியானித்தல் வேண்டும். இவ்வாறு தியானம் அதிகரித்து, சொரூப உதவியினால் உயரிய நிலை கைவந்த பின்னர், சாயுச்சிய பதவி யில், "கடவுளும் - தியானிக்கிறவனும்" என இரண்டில்லா மல், ஒருவராக, அதாவது "சோகம்—அம்சம்" "அம்சம்—சோகம்" என்ற விதமாய், "அவரே நாம்"—"நாமே அவர்" என்ற சோகப் பிரணவத்தின் பொருள் தோன்றும்படி அத்துவிதமாகத் தியானித்தல் வேண்டும். அதன் பின்னர் துவித நாட்டமுமற்று, 'நான்' என்ற பிரக்ஞை மாத்திரம் நிகழும் வரையில் தியானமானது உயரிய நன்னலம் பெறுவ தாகும்.

திருமந்திரம்.

நானென்றுந் தானென்று நாடிநான் சாரவே
தானென்று நானென்றி ரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலாற்
றானென்று நானென்றுஞ் சாற்றகி லேனே.

இயம - நியமாதி நற்குணங்களுடைய தியான அப்பி யாசிகள் (சாலீக்கீன்கள்) இருதயம் என்கிற கண்ணாடியி லுள்ள மலினங்களை, தியானம் என்னும் வஸ்திரத்தினால் சுத்தப்படுத்தி வரும்போது, மறைந்திருந்த ஒளிகள்

இருதயத்தின் தெளிவுக்குத் தக்கவாறு புலனாகும். ஆரம்பத்தில், மின்னலைப்போல் தோன்றி மறையும். பின் அந்த மின்னல் சற்று தாமதிக்கும். பின்பு, பந்தத்தின் சுடரைப் போலவும், தீபத்தின் சுடரைப் போலவும், நட்சத்திரங்களைப் போலவும், இளம்பிறையைப் போலவும், பூரண சந்திரனைப் போலவும் தோன்றும். இந்த தெரிசனை தான் கடவுளுடைய தெரிசனை யென்று மருண்டுவிடக் கூடாது. ஆண்டவனுக்கும், அடிமைக்கும் இடையே ஒளியினால் எழுபது (70) திரைகள் இருக்கின்றன. இத்திரைகளின் விபரத்தை, நமது ஞானக் களஞ்சியம்—ஆன்மஞான அத்தியாயத்தில் விரிவாய்க் கூறப்பெற்றுள்ளது.

அப்பியாசி (சாலிக் கீன்)களிற் சிலர், தங்களுக்கு விளக்கமாகும் பிரகாசமாகிய திரைகளைக் கண்டு மருண்டு, இதுதான் உண்மையென்று கருதுகிறார்கள். சிலர் முதல் திரையிலேயே மயங்கிவிடுகிறார்கள். ஆண்டவனுக்கும், அடிமைக்கும் இடையேயுள்ள திரைகளில் முதல் திரையானது அகம்பாவம் என்கிற தன்னுடைய நபுசுதான். அது கடவுளது கருமத்திலுள்ள தானபடியால், அதுவும் கடவுளுடைய ஒளியிலுள்ள ஒரு ஒளியே யாம். அதுதான் இருதயத்தின் ரகசியம். கடவுளுடைய உண்மைகளெல்லாம் அதிலே தான் (வெளி)யாக வேண்டும். அப்படி வெளியானால், அது ஆலம்கள் எல்லாவற்றிலும் விரிந்து, அவைகளை தனக்குள் ஐக்கியப்படுத்தி விடும். சகலமும் ஒன்றாய் வெளியாகா நின்ற மகத்துவமுடைய ஒளி பிரகாசித்து சகல சிருட்டிகளின் நிலையும் தனக்கு வெளியாகும். இது முதலாவது ஒளியின் திரையாம்.

இந்த முதல் திரை நீங்கிய பின்னர், அப்பியாச முதிர்ச்சியால் தூரத்தில் நடக்கிற விஷயங்கள் மனக்

கண்ணுக்குப் புலனாகும். இப்படிப் புலனாவது கடவுள் நம்மைச் சோதிப்பதற்காகவேயாம். ஆகையால், பெரிய பயனைக் கருதிய அப்பியாசிகள், தனக்குத் தோற்றுகிற இரகசியங்களை பிறரிடம் சொல்லி வெளியிடக்கூடாது. அன்றியும் ஒருவனுடைய துன்மார்க்கத்தை மனக் கண்ணா லுணர்ந்தாலும் அவன் வெட்கப்படும்படியாவது, தன்னுடைய மகிமையைப் பிறர் தெரிந்து கொள்ளட்டு மென்றாவது வெளியிடக்கூடாது. இந்தச் சித்துகளை ஆசிக்காமல், தன்னுடைய தியானத்தில் மாறாமல் நிலைபெற்றிருக்கும் அப்பியாசியே பேரின்பப் பெருவாழ்வைப் பெறுவான்.

அப்பியாசம் முதிர்வடைந்து கொண்டே வர சில காலத்தில் அண்ட - பிண்டங்களில் நடக்கிற ஒவ்வொரு கிரியைகளும் புலப்படும். பூமியில் மறைந்திருக்கிற புதையல்கள், இரத்தினக் கற்கள், தங்கம்-பொன் முதலானவைகளும் தோற்றமாகும். பின்னர், மரம்-செடி-கொடி-கல்-முதலான தாவர வஸ்துக்களின் இரகசியங்களும், அவற்றின் பிரயோசனங்களும், இவ்விதமே பற்பல பிராணிகள், பற்பல வஸ்துக்கள் இவைகளில், இன்னது இன்னதுக்காகும், இன்ன பிரயோசனத்தைக் கொடுக்கும் என்று தெரிய வரும். இவ்விதமாகவே பெரியோர்கள் தமது ஆன்ம சத்தியால் பலவற்றையும் உணர்ந்து, வைத்தியம்-மாந்திரீகம்-சோதிடம் முதலானவைகளை உற்பத்தி செய்திருக்கிறார்கள். ஆனால் அப்பியாச முதிருமுன் அற்புதங்களின்மீது பாராக்காகக்கூடாது. பாராக்கானால் அந்தந்த மக்காமாகிய ஆதாரங்களிலிருந்து கீழ்ப்படிக்குத் தள்ளிவிடப்படுவதுந் தவிர, அந்த அற்புதங்களும் அப்பியாசியை விட்டு நீங்கிவிடும். ஆகையால் அற்புதங்களின்மீது பாராக்காகி மருண்டுழலாமல் அவ்வற்புதத்தை நமக்குக் கொடுத்த கடவுள்மீது விசுவாசத்தோடிருந்து, மேன்மேலும் தியானத்தை அதிகப்

படுத்தி, சமாதி என்னும் மக்காமுக்கு வந்து சேரவேண்டும். அன்றியும், இவ்வற்புதமானது இயற்கையாக தெய்வீக சத்தியிலிருந்து உண்டாகிறதா? அல்லது நமது சிந்தனையிலிருந்து உண்டாகிறதா? என்று சோதித் தறிந்துகொள்ள வேண்டும். நாம் காண்கிற சிருட்டிகளெல்லாம் நாம் செய்யும் தியானத்தையே தியானித்துக் கொண்டிருப்பதாகத் தோன்றினால், நம்முடைய அற்புதம் (கஷ்பு) நமது சிந்தனையிலிருந் துண்டானதென்று கருதவேண்டும். அவ்வாறின்றி, சிருட்டிகள் தத்தமக்குச் சொந்தமான வெவ்வேறு தியானுதிகளை தியானித்துக் கொண்டிருப்பதாகத் தோன்றினால், நம்முடைய அற்புதம் தெய்வீக சத்தியிலிருந் துண்டானதென்று உணரவேண்டும்.

பற்பல தரீக்கிலுள்ள அப்பியாசிகள், எங்கள் தரீக்கு மேலானது; உங்கள் தரீக்கு கீழானது. எங்கள் (சுலூக்கு) யோகம் சரியானது; உங்கள் யோகம் பிசகானது என்று வீண் தர்க்கங்களில் தலையிடாமல் பேணிக் கொள்ளல் வேண்டும். தரீக்குகளுக்குரிய குத்துபுமார்கள், அவரவர்கள் சென்று வெற்றி பெற்ற ஒழுங்குகளைக் காட்டிக் கொடுப்பார்கள். சிலர் திக்றை வாயால் மொழிவதினும் கல்பால் செய்யும்படி ஏவுவார்கள். சிலர், இது ஆரம்பத்தில் வருத்தமென்று வாயால் சத்தமிட்டுச் சொல்லும்படிச் செய்வார்கள். சிலர் ஆடியும், இராகமாய்ப்பாடியும், ஆசையில் மூழ்கிக் கல்பைத் தரிப்பிக்கிறதற்குக் கட்டளை யிடுவார்கள். ஆனால் இவர்கள் நோக்கமெல்லாம் இருதயத்தை ஒரே எண்ணத்திற் நிலைபடுத்துகிறதற்கேயாம். ஒருவர் ஒரு அப்பியாசத்தை அப்பியாசிக்கும் பொழுது கண்ணை யுயர்த்தியும், சிலர் நெற்றியில் விரல்களை வைத்தழுத்தி மனதைச் செலுத்தியும், சிலர் கீழே பார்வையை நிலைபெறச் செய்தும், சிலர் சம பார்வையுடன் பார்க்கச் செய்தும், சிலர் வெகு நேரம்

விழியிமையாமலிருக்கும்படிச் செய்தும் பிரயாசைப்படுவார்கள். இவ்வாறு பலர், பல தரீக்குகளின் மூலமாகப் பிரயாசைப்பட்டாலும், எல்லாரும் ஒரே இன்பத்தை நாடினவர்களே யன்றிப் பல இன்பத்தை நாடினவர்க ளல்லர்.

இந்தத் தரீக்கு (மார்க்கங்)கள் எண்ணிறந்தனவாய் இருக்கின்றன. ஏனென்றால், அவரவருடைய இருதயத்தை உலகப் பாக்குகளில் செல்ல விடாது தடுத்து, பிரமத்தில் நிலைபெற வேண்டிய முறைகளைப் பின்பற்றி, அவரவர்கள் வெற்றி பெற்ற மார்க்கங்கள் வெவ்வேறாய் இருப்பதனாலேயாம். ஆயினும் இந்தத் தரீக்குகளை ஒருவாறு நாற்பது ஞானமார்க்கங்களாக ஒருங்கு சேர்க்கப் பெற்றுளது.

## நாற்பது ஞான மார்க்கங்கள்.

ஜாமிஉல்லுசூல் என்கிற நூலி (கித்தாபி)ல் நாற்பது தரீக்குகளாகிய ஞானமார்க்கங்க ளிருப்பதாக கூறப்பெற்றிருக்கிறது. அவை காதிரிய்யா, சாதுலிய்யா, நஃஷபந்திய்யா, றபாயிய்யா, அஹ்மதிய்யா, தசூக்கிய்யா, அக்பரிய்யா, மௌலவிய்யா, சஹ்றவர்திய்யா, கபறவிய்யா, கல்வத்திய்யா, ஜல்வத்திய்யா, பஃதாதிய்யா, கஸ்ஸாலிய்யா, றூமிய்யா, ஸஉதிய்யா, ஜிஷ்திய்யா, ஷஉபானிய்யா, கல்ஸனிய்யா, ஹம்ஸவிய்யா, பைறூமிய்யா, இஷாக்கிய்யா, பக்கீரிய்யா, உமரிய்யா, உதுமானிய்யா, அலவிய்யா, அப்பாஸிய்யா, சைனபிய்யா, ஈசவிய்யா, மஃறபிய்யா, புஹாரிய்யா, ஹத்தாதிய்யா, கைபிய்யா, கிலுரிய்யா, ஷத்தாரிய்யா, மலாமிய்யா, ஐதுறூஸிய்யா, மத்பூலிய்யா, சுன்பூலிய்யா, உவைஸிய்யா என்பனவாம்.

இவையன்றி ஹிந்துஸ்தான் - ஹீறுன் - திஹ்றுன் - குறுஸான் - முதலிய தேசங்களில் சூபியாக்களுடைய வழியைச் சேர்ந்தவர்கள் பல பிரிவினர்க ளிருக்கின்றனர்

அவர்களுக்கு பக்கீரென்றும், அவர்கள் தரீக்குக்குத் தலைமையானவர்களைப் பீரென்றுஞ் சொல்லப்படும். இவர்கள் பெரும்பாலும் அலிறலியல்லாகு அன்கு அவர்களிலிருந்தும், சிலர் அபுபக்கறுஸ் சித்தீக்கு றலியல்லாகு அன்கு அவர்களிலிருந்தும் சில்சிலா பிடிக்கிறார்கள். அவர்கள் கூட்டத்திற்கு ஒவ்வொரு பீருண்டு. பீர்குவாஜா, ஹசன்குவாஜா, ஹஸன்பஸரீ, இவர்களிலிருந்து ஒன்பது கூட்டங்கள் பிரிந்திருக்கின்றன.

(1) தைபூரிய்யாக்கள்: அபாயசீதுல் பிஸ்தாமி றகுமகுல்லாகு அவர்களுடைய தரீக்கைச் சேர்ந்தவர்கள். (2) கர்கிய்யாக்கள்: செய்கு மஉருபுல் கர்கி றகுமகுல்லாகு அவர்கள் தரீக்கையும்; (3) ஜுனைதிய்யாக்கள்: ஜுனைதுல் பஃதாதி றகுமகுல்லாகு அவர்கள் தரீக்கையும்; (4) சிர்ரிஸ் சித்திய்யாக்கள்: சிர்ரிஸ்சிந்தி றகுமகுல்லாகு அவர்கள் தரீக்கையும்; (5) கஸ்றானிய்யாக்கள்: ஹனீபா கஸ்றானி றகுமகுல்லாகு அவர்கள் தரீக்கையும்; (6) தர்தூசிய்யாக்கள்: அப்துல் பர்று தர்தூசி றகுமகுல்லாகு அவர்கள் தரீக்கையும் சேர்ந்தவர்கள். இவர்களுக்குப் பொதுவாய் காதிரிய்யா பக்கீரென்று பெயர். (7) பிர்தூசி நிஜாமுத்தீன்: பிர்தூசி றகுமகுல்லாகு அவர்களுடைய தரீக்கையும்; (8) ஷஹ்றவர்திய்யாக்கள்: அபூநஜீப் ஷஹ்றவர்தி றகுமகுல்லாகு அவர்களுடைய தரீக்கையும் சேர்ந்தவர்கள். இவர்களுக்குப் பொதுவாய் ஷஹ்றவர்தீ பக்கீர்களென்று பெயர்.

பீர் அப்துல் வாஹிது இபுனு செய்யிது கூபி றகுமகுல்லாகு அவர்களால் சில கூட்டங்கள் பிரிந்தார்கள். (9) ஈசியாக்கள்: ஸூபில் இபுனு ஈசா றகுமகுல்லாகு அவர்களுடைய தரீக்கைச் சேர்ந்தவர்கள். அத்ஹமிய்யாக்கள்:

பீர் இபுறாஹீ மிபுனு அத்ஹம் ரஹ்மதுல்லாகு அவர்கள் தரீக்கைச் சேர்ந்தவர்கள். சித்தீக்கிய்யாக்கள் : பீர் செய்கு அபூ இஸ்ஹாக்குஸ் சித்தீக்கு றகுமதுல்லாகு அவர்கள் தரீக்கைச் சேர்ந்தவர்கள். இவர்களுக் கெல்லாம் ஜிஸ்தி பக்கீரென்று பெயர். இவர்களை யன்றி வேறு கூட்டத்தினர்களு மிருக்கின்றனர்.

இந்த தரீக்குகளில் இன்ன தரீக்கு சிறந்த தென்றும், இன்ன தரீக்கு தாழ்ந்த தென்றும் சொல்லக்கூடாது ஒவ்வொரு தரீக்குகளுடைய இமாம்களும், நபிசல்லல்லாகு அலைகிவசல்ல மவர்களுடைய தரீக்கையே பின் பற்றினவர்கள். வித்தியாசமெல்லாம் அவரவர்கள் இருதயமானது விடயங்களில் செல்லாமல், பிரமத்தில் நிலைபெறுமாறு நடக்கவேண்டிய முறைகளைப் பற்றி அவரவர்கள் செயம் பெற்ற வழியைக் காட்டி யிருக்கிறார்கள். இவர்களில் இந்தியாவில் காதிறிய்யா-சாதுலிய்யா-நக்ஷபந்திய்யாவாகிய தரீக்குகளே அதிகம்.

சில அரபி நூற்களில், அபுல்ஹசன் ஷாதுலிய்யி றலியல்லாகு அன்கு அவர்கள் பதவியிலுயர்ந்தவர்களென்றும், சில அரபி நூற்களில் செய்கு அப்துல் காதிறு ஜெய்லானி றலியல்லாகு அன்கு அவர்கள் பதவியிலுயர்ந்தவர்களென்றுங் கூறப் பெற்றுள்ளன. ஆகிலும் அவர்கள் பதவிகளை வரையறுத்துக் கூற ஆண்டவனுக்கே யன்றி, வேறொருவராலுங் கூடாது. அவர்களொவ்வொருவரையும் பின்பற்றி, அவுலியாக்களாகவும், குத்புமார்களாகவு மாகியிருப்பவர்கள் அனந்தம். ஆகையால் எந்த தரீக்கிலிருந்தாலும், அவர்களை இகழ்ந்து கூறாமல், அவர்களுடைய பறக்கத்தையும், உதவியையும் பெற்றுக்கொள்ள ஆசித்தல் வேண்டும். ஆனால் ஒவ்வொரு குத்புமார்களுக்கும், நபிமார்களுக்குக்

கொடுத்தது போல், சில அருள்களை ஆண்டவன் சிலருக்கு கொடுத்திருக்கிறான். செய்கு அப்துல் காதிறு ஜெய்லானி அவர்களுக்கு, ஆலத்தில் அதிகாரத்தை நடத்துந் தத்துவமும்-உதவி செய்யும் தத்துவமும் அதிகமாகவும்; அபுல் ஹசன் ஷாதுலிய்யி ரலியல்லாகு அன்கு அவர்களுக்கு, இல்மின் தத்துவமும்-திருவருளின் தத்துவமும் அதிகமாகவும்; நஃஷபந்தீ முகம்மது பஹாவுத்தீன் றலியல்லாகு அன்கு அவர்களுக்கு, வஹ்தத்தென்கிற சமுத்திரத்தில் அமிழ்ந்துந் தத்துவத்தை அதிகமாகவும்; முகியித்தீனிபுனு அறபி ரலியல்லாகு அன்கு அவர்களுக்கு, மஃறிபா வென்னும் மெய்ஞ்ஞானக் கல்வியின் பூரணத்தை அதிகமாகவும்; அஹ்மதுல் பதவி ரலியல்லாகு அன்கு அவர்களுக்கு, கருணையும்-இரக்கமும் அதிகமாகவும்; மவுலானா றூமி ரலியல்லாகு அன்கு அவர்களுக்கு, அன்பும்-ஆசையும் அதிகமாகவும்; அஹ்மது கபீறுர் றபாயி றகுமதுல்லா அவர்களுக்கு அற்புதமும் - உதாரகுணமும் அதிகமாகவும் கொடுக்கப் பெற்றது என்று கூறப் பெற்றிருக்கிறது.

ஆகையால் இந்த விகற்பங்களைப் பாராட்டிக்கொண்டு காலத்தை வீணாக்காமல் சதாத் தியானம்புரிந்து, இதற்கு உயரிய நிலையாகிய சமாதியின் பதமானது கைவல்யமாகும்படி முயற்சிக்க வேண்டும்.

## எட்டாமங்கம்—சமாதி.

இந்திரியம் முதலிய தத்துவச் சேட்டைகளுக்கு எதுவாகிய யாக்கையுள் நின்று, அவற்றோடு கூடினும் அவற்றிற் பற்றின்றி யிருக்கும் ஆன்மாவாகிய தன்னைத் தான் காணுதலும், தான் நினைத்தபடி ஒரு மாதம், ஒரு வருடம் வரையில் மனத்தை நிலைக்கச் செய்தலும் சமாதியாகும். நாமரூபாதி கற்பனையின்றிய சொரூபக்கிரகணம் எதுவோ?

அதுவே மனதின் தியானத்தால் சம்பாதிக்கப் பெறும் சமாதியாகும்.

## சமாதி பேதம்.

திரிபுடியில்லாத பரமானந்த சொரூப சுத்த சைதன்னிய வடிவமாகிய சீவான்ம - பரமான்ம ஐக்கியாவஸ்தை **சமாதி** எனப் பெறும். நித்தியமும், எல்லாவற்றினும் உள்ளதும், தோஷங்களில்லாததும், கூடத்த பிரமமுமாகிய ஆன்மா ஒன்ருயிருந்துகொண்டு மாயாமயக்கத்தாற் பேதப் படுகின்றது. ஆனுல் அது உண்மையில் பேதப்படுகிறதில்லை. அதனுல் அத்துவிதம் ஒன்றேயுள்ளது. பிரபஞ்சமுமில்லை; சமுசாரமுமில்லை. ஒரே ஆகாயமானது, கடாகாயம்-மடா காயமென இருவகைப்படுவது போல், ஒரே ஆன்மா, சீவான்மா - பரமான்மா வென இரண்டு வகையாக சிலரால் சொல்லப் பெறுகின்றது. (இவற்றின் முழுவிவரத்தை **ஞானக்களஞ்சியம்-ஆன்ம விளக்க அத்தியாயத்திற் காண்க**). நான் தேகமல்லன், பிராணனல்லன், இந்திரியங்களல்லன், மன மல்லன், புத்தியல்லன், சாட்சி சொரூபமாயிருத்தலால் நானே பிரமம் என்னும் அபேத புத்தி எதுவோ ? அதுவே சமாதி யென்றும் சொல்லப் பெறுகின்றது.

தியானிக்கிறவன் - தியானம் என்னும் இரண்டையும் விட்டு, காற்றில்லா விடத்திலுள்ள தீபம் போல், அதாவது சித்திரதீபம் போல், தியானிக்கப் பெறும் பொருள் ஒன்றை மாத்திரம் சிந்தித்துக் கொண்டிருக்கும் சித்தமானது சமாதி யாகும். 'நானே பரப்பிரமம்', 'பரப்பிரமமே நான்' என்னும் நிலையானது, சர்வ விருத்திக்கு நிரோதமாகிய சமாதி யாகும். இன்னது செய்கிறேம், இன்னது செய்யவில்லை யென்னும் பிரக்ஞை யற்று, தியானத்தை மறத்தலும் சமாதி என்று கொள்ளப்பெறும்.

## யோக பஞ்ச பூமிகள்.

சமாதிக்குரித்தான மனத்தின் நிலையை உழல் நிலை-உறக்க நிலை-இருமை நிலை-ஒருமைநிலை-தன்னிலை-என ஐந்தாக வகுக்கப் பெற்றிருக்கின்றது. இவற்றிற்கு வடநூலார் முறையே க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம், ஏகாக்ரம், நிருத்தம் எனக் கூறுவர்.

(1) உழல் நிலை:—ஒவ்வொரு விநாடியிலும், இருவினையாகிய காற்றினால் அனுபவிக்கப் பெறும் பல பொருளினும் ஆசையுடையதாய், விரைவிற் சுழலும்படி செலுத்தப்பெற்ற மனத்தின் நிலைமை.

(2) உறக்க நிலை :—தூக்கம்-சோம்பல்-வீண் காலம் போக்குதல் முதலியவற்றோடுங் கூடிய மனத்தின் நிலைமை.

(3) இருமை நிலை :—எப்போதாயினும் ஒரு வேளை சமாதியிற் பொருந்தி, ஏனைய வேளைகளில் பிரபஞ்ச விடயங்களென்னும் மூவாசைகளில் சிக்குண்ட மனதின் நிலைமை.

(4) ஒருமை நிலை :— இயம - நியமாதி அட்டாங்க யோகப் பயிற்சியின் திறமையினால், ஒரே பொருளினிடத்தில் இடைவிடாது தைலதாரைபோல் செல்லும் மனத்தின் நிலைமையாம். இந்த ஒன்று பட்ட நிலையினால் சம்பிரக்ஞாத (பிரக்ஞையுள்ள) சமாதி யுண்டாகின்றது. இதுவே இராசயோக முண்டாகும் நிலை.

(5) தன்னிலை :— மனமானது தன்னை மறந்து அயர்ந்து போகாமல் விழித்திருந்தும், வேறொரு புற விடயத்திலும் உணர்ச்சி நிகழாமல் இருத்தலும், அவ்வுணர்ச்சி ஒருக்கால் வேண்டும்போது நிகழ்வதற்கேது வாகிய அதன் காரியம் கெடாது நிற்றலுமாகிய நிலைமை.

இந்த நிலையினுல் அசம் பிரஞ்ஞாத (பிரக்ஞையற்ற) சமாதி யுண்டாகின்றது. இதனையே ஞான யோகமென்றும், நிருவிகற்ப சமாதி யென்றுங் கூறுவர். உழல்நிலை - உறக்க நிலை யென்னும் இரண்டவத்தைகளிலும் சமாதி பொருந்தாது. மூன்ருவதாகிய இருமைநிலையில் அபூர்வமாக ஓர் காலத்தில் சமாதியுதிக்கினும், இருமை நிலையின் காரணத்தால் அது நிலை பெற்று நிற்காமல், நீராழி மண்டபம் போல் உடனே மறைந்துபோம். ஏனைய ஒருமை நிலையும் தன்னிலையுமே சமாதிக்கு இன்றியமை யாதனவாம்.

சம்பிரஞ்ஞாத சமாதியின் பலன் அசம்பிரஞ்ஞாத சமாதியாம். அசம்பிரஞ்ஞாத சமாதியின் பலன் கைவல்லியமாம்.

சம்பிரஞ்ஞாத சமாதியானது, விதர்க்கம் - விசாரம்-ஆனந்தம்-அசுமிதை என நான்குவகை. அசம் பிரஞ்ஞாத சமாதியானது பவப்பிரத்தியயம் - உபாயப் பிரத்தியயம் என இருவகை.

(1) யோகியானவன் தூலவஸ்துவை ஆரம்பத்தில் தியானிப்பது விதர்க்கம்.

(2) அதன் சூக்குமநிலையான சத்தம்-பரிசம்-உருவம்-இரசம்-கந்தம் என்னும் பஞ்ச தன்மாத்திரை, அகங்காரம் முதலியவைகளில் ஏதேனும் ஒன்றின்மேல் தியானிப்பது விசாரம்.

(3) தூல-சூக்கும நிலையின்றி, பஞ்சேந்திரியங்களை அதனதனிடத்தில் நிற்கும்படி நிறுத்தி, அந்த நிலையில் தியானிப்பது ஆனந்தம்.

(4) இந்திரியங்களை விட்டு விலகித் தனித்திருந்து நிட்டை கூடுவது அசுமிதை. இந்நான்கு படிகளின் விபரங்களும் சம்பிரஞ்ஞாத சமாதியின் விஷயங்களாம்.

அசம்பிரஞ்ஞாத சமாதியின் விபரமாவன :—

(1) அவித்தை என்ற ஆவரணத்தின் சம்பந்தத்தினுலும், அதன் காரணத்தினுலும், பல புவனங்களின் போக-போக்கியங்களை அனுபவிக்க வேண்டு மென்ற இச்சை யோகியைப் பற்றி நிற்றலானது பவப் பிரத்தியயம்.

(2) பிரகிருதிலய அனுபவங்களில் கிஞ்சிற்றேனும் பற்றின்றி, மனமானது மேல் நோக்கி ஆன்ம தரிசனம் அடையுமாகில், அதுவே கைவல்லியமான உன்னத நிலை. இந்த நிலையைப் பெற்றவர்கள் காலவரம்பைத் தாண்டி விடுவார்கள். எமன் உத்தியோகத்தைப் போக்கி விடுவார்கள். இதுதான் உபாயப் பிரத்தியயம்.

குணங்குடி வள்ளல்.

... ... ... ... எமன்
உத்தியோ கந்தனைப் போக்கும் நல்ல
வெற்றிக் குணங்குடி வாய்க்கும். (எத்தனை)

இடைபிங் கலைக்கண்டத் தாட்ட மொடுக்கவும்
எனக்குப் பயந்தெம னோட்டம் பிடிக்கவும் (வங்)
எனக்குப் பயந்தெமன் ஒருத்தன் சாகவும் (வங்)

தேகேந்திரியங்களிலுண்டாகும் வைராக்கியம் இயமம் என்றும், பாத்துவத்தில் இடைவிடாதுண்டாகும் விருப்பம் நியமமென்றும், சர்வ வஸ்துக்களிடத்தும் உதாசீனமாயிருத்தல் ஆசனமென்றும், பிரபஞ்சமானது மித்தையாகத் தோற்றுதல் பிராணுயாம மென்றும், சித்தத்தின் அந்தர்முகத் தன்மை பிரத்தியாகார மென்றும், சித்தத்தின் நிச்சயத் தன்மை தாரணை யென்றும், அந்த சின் மாத்திரமே நானென்று சிந்தித்தல் தியானமென்றும், தியானத்தை செவ்வையாய் மறத்தல் சமாதி யென்றும், இவ்வாறு திரிசிகி உபநிடத்தில் கூறப் பெற்றுள்ளது. இதைச் சுருக்கி

ஐந்தைந்தாக பதஞ்சலி முனிவராலும், பிறராலும் சொல்லப் பெற்றிருக்கின்றது.

பிரத்தியாகாரம்-தாரணை-தியானம்-சமாதி இவைகளின் விவரம் நமது யோக ரகசியத்திலும் விளக்கப் பெற்றிருக்கின்றது.

## திருமந்திரம்.

மூலத்து மேலது முச்சதி ரத்தது
காலத் திசையிற் கலக்கின்ற சந்தினில்
மேலைப் பிறையினுள் நெற்றிநேர் நின்ற
கோலத்தின் கோலங்கள் வெவ்வேறு கொண்டதே.

சமாதிசெய் வார்க்குத் தரும்பல யோகம்
சமாதிகள் வேண்டா மிறையுட னேகிற்
சமாதிதா னில்லை தானவ னாகிற்
சமாதியி லெட்டெட்டுச் சித்தியு மெய்துமே.

---

## ஏழாவது அத்தியாயம்.

---

## * பிராணயாம யோகம்.

### அறுசீர் விருத்தம்.

பெட்பமரு மட்டாங்க யோகமது ளொன்ருய
 பிராண யாமத்
துட்பொருளாம் பூரகங்கும் பகம்ரேச கம்மெனச்சொல்
 ஒருமூன் றுக்குள்
நுட்பமதாம் பரமரக சியங்களையும் வாயுவதை
 நுகர்த லாலே
தட்பமும்வெப் பமும்விளையுச் தன்மையையு மின்னதெனச்
 சாற்று வாமால்.

பிராணயாமம் என்பதாவது, பிராணன் = பிராணனை, ஆயாமம் = தடுத்தல், அதாவது பிராணனை வெளிச் செல்லவிடாது தடுத்தல் என்று பொருள் பெறும்.

---

* இந்தப் பிராணயாம யோக அத்தியாயத்தையும், இதற்கடுத்த காய கற்பசாதனை அத்தியாயத்தையும், இவ்விரண்டு அத்தியாயங்கள் சம்பந்தமான அனேக சாதனைகளையும் தொகுத்து, யோக ரகசியம் என்னும் தனி நூலாகச் செய்து விட்டோம். ஆதலால், அவைகளை இப்பதிப்பில் சேர்க்க வேண்டியதில்லை. ஆயினும், இந்நூலின் முதற் பதிப்பைக் கண்ணுற்றவர்கள் இவ் விரண்டாம் பதிப்பை நோக்குங்கால், பிராணயாம யோகம், காய கற்பசாதனை யென்னும் அத்தியாயங்களைக் காணப் பெற வில்லையே! என்று சந்தேகமுறுவண்ணம் இப்பதிப்பிலும் அமைக்கப் பெற்றிருப்பது மிகையாகாது. இவற்றின் முழு விபரங்களை நமது யோக ரகசியத்திற் காண்க.

கூர்மபுராணம்.

இவைமுத லாக நூலோ ரியம்பும்ஆ சனங்கள் தம்மில்
உவகைகூ ராச னத்தி லிருந்துயர் யோகஞ் செய்தல்
நவையில தாகும் யாக்கை நண்ணிய வளிபி ராணன்
தவலற வதைநி றுத்தல் தன்னையா யாம மென்பார்.

பிராணுயாமம் என்பது சுவாசத்தைப்பற்றிய விஷய மட்டுந்தான் என்று அநேகர் நினைக்கிறார்கள். சுவாசமானது பிராணுயாமத்தை அடைதற்குரிய ஓர் சாதனமாகும். (ஒரு அரசனை மந்திரி தன் வசப்படுத்தி ஆள்வதுபோல்) பிராணனை அடக்கி யாள்வதற்கே பிராணுயாமம் என்று சொல்லப் பெறுகிறது.

சுவாச பந்தனமானது, இரேசகம்-பூரகம்-கும்பகம்-சூனியம் என நான்கு வகையாக வகுக்கப் பெற்றிருக்கிறது. சூனியகம் என்பதற்கு கேவல கும்பகம் என்று மற்றொரு பெயரும் உண்டு. கேவல கும்பகமானது, இரேசக-பூரகமின்றி மனதை நிறுத்துவது. இஃது உயர்தர நிலையாம். இவ்வப்பியாசத்தையே இராசயோகம் என்று கூறுவார்கள்.

இரேசகம்:—கும்பித்த (உள்ளடங்கிய) வாயுவை (32) மாத்திரை நேரம் சிறிது சிறிதாக வெளியில் விடுதல்.

பூரகம்:—வெளியிலுள்ள பரிசுத்தமான வாயுவை, நாசித் துவாரத்தின் வழியாக (16) * மாத்திரை நேரம் சரீர அசைவின்றி மிருதுவாக உள்ளுக்கிழுத்து வாங்குதல்.

* மாத்திரை என்பது:—ஒருவர் நித்திரை செய்யும்போது சுவாசமானது, எவ்வளவு நேரம் இயற்கையாகச் சென்று திரும்புகிறதோ, அதுவே பிராணுயாம மாத்திரையாம். அன்றியும், பெருவிரலை நடுவிரலோடு சேர்த்து மூன்று முறை சுண்டுதலையும், முழந்தாளை இடக்கரத்தால் (16) முறை சுற்றுவதையும், அங்ஙனஞ் செய்ய இயலாதார்க்குக் கைந்நொடிப் பொழுதையும் மாத்திரை என்பர்.

கும்பகம் :—உள்ளுக்கிழுத்த வாயுவை வெளியில் விடாமல் (64) மாத்திரை நேரம் நிறுத்திவைத்தல். பூரகம் செய்யாமல் கும்பகம் செய்தல். அதாவது வெளியேறின வாயுவை வெளியிலேயே யிருக்கும்படிச் செய்தல். இது மற்றொருவித கும்பகமாம். இவ்விதம் செய்வதனால் சரீரம் இலகுத்துவத்தை அடைகிறது.

ஔவைக் குறள்.

முன்ன மிரேசி முயலுபின் பூரகம்
பின்னது கும்பம் பிடி.

இங்கு பூரகத்தைக் காட்டிலும் இரேசகத்திற்கு மாத்திரை அதிகமாய்ச் சொன்னது, இரேசகத்தை அவ்வளவு மெதுவாகச் செய்ய வேண்டுமென்பது கருத்து.

சிவதருமோத்தரம்.

கைத்தலத் தாலே சானுப் புரிவலங் கணிக்க வீரெட்
டத்தொகை யனைத்து மொன்றே யாகுமாத் திரையா யாமத்
துத்தம நாற்பத் தெட்டாம் ஒருபது மிரண்டும் நீசம்
மத்திம மெண்மூன் றுங்கை நொடிப்புமாத் திரைமாட் டார்க்கே.

அகஸ்தியர்.

என்னவே ரேசகமுப் பத்தி ரண்டு
இயலான பூரகமோ பதினா றாகும்
உன்னவே கும்பமறு பத்து நாலு
உயர்ந்து நின்ற பிராணயங் குருசொற் கேட்டு.

---

உத்தம பிராணயாமம் (48) மாத்திரை. மத்திமம், (24) மாத்திரை. அதமம், (12) மாத்திரையென்று கூறப் பெற்றிருப்பதுங் கவனிக்கத் தக்கது.

திருமந்திரம்.

ஏறுதல் பூரக மீரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பக மறுபத்து நாலதி
லூறுதல் முப்பத்தி ரண்டதி ரேசகம்
மாறுத லொன்றின்கண் வஞ்சக மாமே.

வாமத்தி லீரெட்டு மாத்திரை பூரித்தே
யேமுற்ற முப்பத்தி ரண்டுமி ரேசித்துக்
காமுற்ற பிங்கலைக் கண்ணாக விவ்விரண்
டோமத்தா லெட்டெட்டுக் கும்பிக்க உண்மையே.

ஔவைக் குறள்

இரேசக முப்பத்தி ரண்டது மாத்திரை
பூரகம் பத்தாறு புகும்.
கும்பகம் நாலோ டறுபது மாத்திரை
தம்பித் திடுவது தான்.

இவ்வாறு மாத்திரையின் அளவு கூறியிருக்க, இதற்கு மாறாக கும்பகம் (64) மாத்திரை யென்றும், பூரகம் (32) மாத்திரை யென்றும், இரேசகம் (16) மாத்திரை யென்றும், இப்படியே புசுண்டர் செய்தனர் என்றும்

போகர் ஆயிரத்தில்

ஆடவே அவர்செய்த வகையே தென்னில்
ஐயமாங் கும்ப மறு பத்து நாலு
பூடவே பூரகந்தான் முப்பத்தி ரண்டு
புகையான ரேசகந்தான் பதினா றாகும்

என்று கூறப்பெற்றிருக்கிறது. இந்த மாத்திரை அளவை அநுசரித்தே கொங்கண மஹரிஷியும் பின்வருஞ் செய்யுளைத் திருவாய்மலர்ந்துள்ளனர்.

சோங்கனர் கடைக்காண்டம்.

விளம்புகிறேன் பூரகமுப் பத்தி ரண்டு
மேலான கும்பகந்தான் அறுபத்து நாலு
விளம்புகிறேன் ரேசகந்தான் பதினு ருகும்
விரிவான மாத்திரைதா னறியச் சொன்னேன்.

இவ்விதம் பூரகத்தைக் கூட்டியும், இரேசகத்தைக் குறைத்தும் வேறு விதமாகக் கூறியிருப்பதால் மாத்திரை பேதப்படுவது கவனிக்கத் தக்கதே. அன்றியும் சிலர் பூரகம் (12) மாத்திரையாகவும், இரேசகம் (32) மாத்திரையாகவும், சிலர் (12) அங்குலம் ஓடும் சுவாசத்தை முதலில் (10) அங்குலத்திற்கும், பிறகு (8) அங்குலத்திற்கும் ஓடச்செய்து அப்பியாசிக்கிறார்கள். ஆகையால் இவை ஒன்றற்கொன்று மாத்திரை முரணகக் காணப்பெறினும், அவர்கள் சரீர திடத்துக்குத் தக்கபடி, கூட்டியுங் குறைத்துஞ் செய்து கொள்ள வேண்டுமென்கிற நியாயமிருத்தலால் முரணுக மாட்டாது.

மேற்கூறிய மாத்திரை அளவின்படி அப்பியாச ஆரம்பத்தில் சுவாசபந்தனஞ் செய்வது அருமை. ஆதலால், காலவரையின்றிச் சதாவேளையும், அதாவது இருக்கும் போதும், நடக்கும்போதும், நிற்கும்போதும், படுத்திருக்கிற போதும், சவரம் பண்ணிக்கொள்ளுகிற காலத்தும், ஏதாவது ஒன்றைப் புசிக்கும் போதும், மாதர்களுடன் சம்போகம் பண்ணும் காலத்தும், ஏனைய சமயங்களிலும் சுவாசத்தை வீணகப் போக்காமல் மெல்ல மெல்ல அப்பியாசித்து, சுவாசம் வசப்படுகிற காலத்தில் மாத்திரை அளவைக் கவனித்தல் வேண்டும்.

அகஸ்தியர்.

உண்ணும்போ துயிரெழுத்தை உயர வாங்கு
உறங்குகின்ற போதெல்லாம் அதுவே யாகும்
பெண்ணின்பால் இந்திரியம் விடும்போ தெல்லாம்
பேணிவல மேனோக்கி யவத்தில் நில்லு
திண்ணுங்கா யிலையருந்து மதுவே யாகும்
தினந்தோறு மிப்படியே செலுத்த வல்லார்
மண்ணூழி காலமட்டும் இருப்பார் பாரு
மறலிகையில் அகப்படவு மாட்டார் தாமே.

சுவாசத்தை மேற்கூறியபடி சிறிது - சிறிதாக, ஏற்றி-யிறக்கிப் பழக்கம் செய்யாமல், தொனியுண்டாகும்படி சீறிச் சீறி யிழுத்துக் கடினமாக ஏற்றினல், அது ஒருபோதும் நமது வசப்படாது. சிங்கம்-புலி-கரடி-யானை முதலிய துஷ்ட விலங்கினங்களைப் பிடித்து, எப்படி நாளடைவில் கொஞ்சங் கொஞ்சமாக வசப்படுத்துகிறார்களோ, அப்படியே சுவாசத்தையும் சிறுகச் சிறுக அதன் இயற்கைப் படியே செலுத்தி வசப்படுத்த வேண்டும். அங்ஙனமின்றி, ஆவற்பெருக்கத்தால் விரைவாகப்பூரித்தால், சிங்கம்-புலி முதலியவற்றைப்போல், அப்பியாசியை பற்பல ரோகத்திற் குள்ளாக்கிக் கொல்ல எத்தனிக்கும்; சரீரத்தில் பலக் குறைவும் உண்டாகும். சுருக்கமாகச் சொல்லுமிடத்து, பொருத்தமான அப்பியாசமானது, சர்வ ரோகங்களையும் நாசமாக்கி, ஆன்மாநுசந்தானப் பழக்கத்திற்கு உதவியாக நிற்கும். பொருத்த மின்றிய அப்பியாசமானது, சகல பிணிகளையும் சம்பவிக்கச் செய்யும்.

யுக்தமாகப் பூரிக்குஞ் சுவாசமானது, சிறிய துவாரத்தையுடைய சுழிமுனை வழியாகச் சென்று, மூளையைக் கடந்து, பிரம்ம கபாலத்தைத் தாக்கி, பிடரி வழியாக முதுகுப் புறத்திலிறங்கி, எழுபத்தீராயிரம் நாடிகளிலும்

சென்று, மூலாதாரத்தை யடைந்து, ஈரற்குலையின் வழி யாகத் திருகித் திருகிச் சென்று, வெளியேறுமல் தச நாடி களை அவைகளிருக்கு மிடத்தைவிட்டு அலையும்படிச் செய்வ தால் அந்த நாடிகள் வெளிக்கிளம்பி, சர்ப்பத்தைப் போற் சீறிக்கொண்டு, ஓங்காரத்துடன் - ஆன்மஞான நிட்டை அத்தியாயத்திற் கூறி, பின்வரும்படி மணி - சமுத்திரம்- மேகம் - மத்தளம் - பேரிகை—சங்கு - கைத்தாளம் - வீணை - சிலம்பு-வண்டு முதலிய பத்துவித நாத கீதங்களுங் கேட் கும்படிச் செய்யும்.

துணங்குடி வள்ளல்.

என்ன விதமென்று சொல்வேன் முழக்க
முழங்குவ தென்னுக்குள் ளாலே—ஒரு
அன்ன மிருந்தே யழகு பிறக்க
அசைந்தசைந் தாடுவ தாலே—அதன்
முன்னாலே யான்செய்த பாக்கியங் கண்டு
மூன்றுசை யில்லாத தாலே—அது
தன்னாலே யானந்த வெள்ளம் பெருகித்
தடையறப் பாய்வத னாலே—பயிர்
அன்னம் பிடிப்பத னாலே—உனக்
கென்ன குறைலாயி லாக (இல்லல்லா)

## ஞானபூபதிகள்—கந்தப்புகழ்.

இராகம் செஞ்சுருட்டி & புன்னகவராளி, தாளம் ஆதி.

சேஞ்சுருட்டி.

நாதசங் கீதப்பொன் மணிமண்டப
நயனத் திடையினில் நடனங்கண்டே
நாவை மடக்கியே மேல்வாசல்
நளின மதுவருந்த அருள்வாயே
ஞானவேலா ஞானவேலா
நவமணி பதித்தொளிர் ஞானவேலா.

புன்னாகவராளி.

முத்தொடு பவளமும் பச்சையுமாய்
முச்சுட ரொளிமணி முழக்கமெனும்
சுத்தஅற் புததச விதநாதம்
தொனிக்கு தெனக்குள்சுதி லயத்துடனே
சோதியாதே சோதியாதே
சுதனென்னை யினிப்பரி சோதியாதே.

செஞ்சுருட்டி.

கமலமென் மலரிதழ் மனைவாழும்
கௌரிகுண் டலிதுயில் கலைந்திடவே
சமரச மோன சுகாதீத
தாரகப் பிரணவச் சுழிமுனையின்
சாமகீதா சாமகீதா
தவமக ரிஷிமகிழ் சாமகீதா.

புன்னாகவராளி.

பஞ்சுபோல் பட்டதுன்பம் போதாதா
பாலனை வெறுப்பதுண் டோமாதா
கொஞ்சந் தயவுசெய்ய லாகாதா
குழந்தைநான் சொல்வதெல்லாங் கேளாதா
கோபமாமோ கோபமாமோ
குழந்தைஎன் மீதில்மனஸ் தாபமாமோ.

செஞ்சுருட்டி.

சாகாத் தலைவே காக்காலும்
சந்த்ரபுட் கரணிவெண் சாரையெனும்
போகாப் புனல்நுரை திரைநீக்கிப்
புசிக்கும் வகையெனக்குப் புகல்வாயே
போகலாமோ போகலாமோ
பொழுதெல்லாம் வீண்பொழுதாய்ப் போகலாமோ.

புன்னுகவராளி.

முருகவிழ் வனசசெம் மலர்ப்பாதா
முகமுடி விதுவென அருள்நீதா
கருணையா னந்ததவக் குருநாதா
கவலைப் படுவதெல்லாம் தெரியாதா
காதலானேன் காதலானேன்
கருணையா னந்தனுன்மேல் காதலானேன்.

விஞ்ஞான தீபம்.

சிறுகச் சிறுக மேல்வாசல் செலுத்தப் பழுத்துச் சூடேறி
உருகி மூளை தனைத்தாண்டி உனது பிடரி வழியிறங்கி
மருவி மூலந் தனிற்சேர்ந்து மாறிக் குலையின் வழியாகத்
திருகித் திருகி யிவ்விதமுட் டிரும்பும் வெளியிற் றிரும்பாதே.

மிருகங்களை நன்ருய்ப் பழக்கிய பின்னரே அதைத் தன் இஷ்டம்போல் "கோலாடக் குரங்காடும்" என்பதற் கிணங்க ஆட்டிவைக்கின்ருன். அதுபோல் அப்பியாசியான வன் வெகுகாலம் சுவாசத்துடன் நன்ருய்ப் பழகிய பின் னரே முன்சொல்லி யிருக்கிற மாத்திரை யளவின்படி அப்பி யாசிக்க முயலவேண்டும்.

சூரியோதயத்திற்கு முன்னதாகவே ஐந்து நாழிகை வரையிலும், நண்பகலிலும், சாயங்காலத்திலும் அப்பியா சஞ்செய்து வருவதால் சரீரத்திலுள்ள சர்வரோகங்களும் நிவர்த்தியாகின்றது. ஆனுற் கற்பசாதனையுடன் பழகிவர வேண்டும்; இன்றேல் சரீரத்தை வருத்தும். இதன் முழு விபரம் காயகற்பசாதனை அத்தியாயத்திற் பார்த்துணர்க.

திருமந்திரம்.

அஞ்சனம் போன்றுட லையறு மந்தியில்
வஞ்சக வாத மறுமத்தி யானத்தில்
செஞ்சிறு காலையிற் செய்திடிற் பித்தறும்
நஞ்சறச் சொன்னேம் நரைதிரை நாசமே.

பிராணவாயுவானது நம்மிடத்திலுள்ள சாதாரண மான சுவாசந்தானே ? இதனாலேயா அநுகூலமுண்டாகப் போகின்றது ? என்று எண்ணி அதை அலட்சியம் செய்யப் படாது. ஒருவனுக்குச் சகல பற்றுதலினும் மேலான பற்றுதலையுடைய இந்தச் சரீரமானது எந்தப் பொருள் நீங்கினாற் பிரயோசனமற்ற பிணமாகின்றது ? சுவாசமென் னும் அரும்பெரும் பொருள் நீங்கினதினா லல்லவா ? என் பதை ஆழ்ந்த யோசனையுடன் யூகித்துணரற் பாலதாம்.

விஞ்ஞான தீபம்.

இடகலையும் பின்கலையும் வெறுங்காற் றென்று
எண்ணாதே நான்குசத்து மிதற்குள் ளாச்சு.

## ஞானபூபதிகள்—கந்தப்புகழ்.

மூலக் கொழுங்கனல் எழுப்பியறு தலமுருவி
மூக்குநுனி பாயவிருசண்
மூடிச் சுகாதீத சாதன சதுட்டநெறி
முழுதுமைம் பொறியடக்கி
மேலத் துவாரத்தொ ராயிரத் தெட்டிதழ்
விரிக்குமொரு கமலசத்தி
வீட்டுக் கபாடந் திறந்தமிர்த முண்டுவளர்
மெய்த்தவ முனாற்றிடாமல்
நாலைத் தினஞ்செலவு செய்துவா ணாளவீ
ணாளாக்கி மூன்றிலொன்றை
நாசப் படுத்திவான் றேய்பிறை யெனக்குறைய
நமனுடைய தூதரான
சேலைப் பகட்டில்யான் சிக்கிடா வணம்அருள்செய்
திலகபுலி வலமுருகனே
தெண்டபா ணிக்குமுயர் அண்டபா ணிக்குமருள்
தெண்டபா ணிக்கடவுளே.

இவ்வித மகத்துவம் வாய்ந்து யோகிகளால் அப்பியாசிக்கானின்ற பிராணாயாமம் :—உத்தமப் பிராணாயாமம், மத்திமப் பிராணாயாமம், அதமப் பிராணாயாமம் என மூவகைப்படும். அவற்றில், உத்தமப் பிராணாயாமத்தால் சுவாசமானது பிரம்மரந்திரத்திற்குச் செல்லும். மத்திமப் பிராணாயாமத்தாற் சரீரத்தில் நடுக்கம் (கம்பலை) உண்டாகும். அதம (மந்த)ப் பிராணாயாமத்தால் வியர்வையுண்டாகும். அந்த வியர்வையை உடனே தைலத்தைத் தேய்ப்பதுபோல் சரீரத்தில் நன்றாய்த் தேய்க்கவேண்டும். அதனால் உடம்புக்குத் திடத்தன்மையும், இலகுத்தன்மையுமுண்டாகும். உத்தமப் பிராணாயாமம் 36 மாத்திரை நேரம். மத்திமப் பிராணாயாமம் 24 மாத்திரை நேரம். அதமப் பிராணாயாமம் 12 மாத்திரை நேரம் என்றறிக.

பிரதமத்தில் வியர்வையும், இரண்டாவது நடுக்கமும், மூன்றுவது தவளைத்தத்தும் சரீரத்தி லுண்டாகும். மிகுந்த அப்பியாசத்தாற் சரீரத்தை உயரக் கிளப்பச் செய்யினுஞ் செய்யும்.

பிராணாயாம மாத்திரைக் கணக்கு.

சுமார் இரண்டு நாழிகை நேரம் அப்பியாசஞ் செய்வதில், மனமானது எவ்வளவு நேரம் ஏகாக்கிர சித்தமாயிருக்கதோ, அவ்வளவு நேரந்தான் பிராணாயாம மாத்திரையாகும். ஆனால், மாத்திரை அளவை ஒரு உத்தேசமாய் இவ்வளவு நேரந்தான் அநுஷ்டித்திருப்போம் என்று முடிவில் நிதானிக்கவேண்டுமே யன்றி, அப்பியாசத்தின்போது சிந்திக்கப்படாது. அங்ஙனஞ் சிந்திக்கின், மனமானது பகிர்முகத்திற் சென்றுவிடும். அதனால் அப்பியாச பங்கமுண்டாகும். அப்பியாசிகள் இந்த வசனத்தை எல்லா வசனத்திற்கும் முதன்மையாகக் கருதவேண்டும்.

பன்னிரண்டுரைச் சுவாசங்கொண்ட பிராணுயாமம் பன்னிரண்டினுற் பிரத்தியாகாரமும், பிரத்தியாகாரம் பன்னிரண்டினுல் தாரணையும், தாரணை பன்னிரண்டினுல் தியானமும், தியானம் பன்னிரண்டினுற் சமாதியும் ஆகின்றது.

கொழுப்பும், கோழையும் (கபம்) அதிகமாயுள்ள சரீரிகள் பிராணுயாமம் அப்பியாசத்திற்கு முன்னதாகவே *வமனம்-†விசர்க்கம், (தௌதி பஸ்தி) முதலிய தொழில்களைச் செய்துகொண்டு, அதன் பின்னரே அப்பியாசந் தொடங்க வேண்டும்.

கோங்கணர், கடைக்காண்டம்.

கேளப்பா சூரியன்ரு னுதிக்கு முன்னே
கெட்டியாய்ப் படுக்கைவிட்டுத் தடாகஞ் சென்று
வாளப்பா பூரித்துக் கும்பி ரேசி
மலமெல்லாம் வரையறவே யுட்சா டிக்கும்

---

* வமனம் என்பவை :—நீர்வமனம்-புரிவமனம்-சிதர்வமனம்-வளிவமனம் என நான்கு வகை. அவை முறையே ; நீரினுலும், நூற்கயிற்றினுலும், துணியினுலும், வாயுவினுலும் குடலிலுள்ள பக்குவப்பட்டதும், பக்குவப்படாததும், இளகினதும், இறுகினதுமான மலங்களை வெளியேற்றிச் சுத்தம் செய்தல் இவற்றை வடநூலார் முறையே ஜலதௌதி-சூஸ்திரதௌதி-வஸ்திரதௌதி-பவனதௌதி என்பர்.

† விசர்க்கம் என்பவை :—நீர்விசர்க்கம்-வளிவிசர்க்கம் என இருபாற்று. இவற்றில் அபானத்துவாரத்தால் சலத்தை உடலுக்குள்ளிழுத்து, நாபிமுதல் இருதயம் வரையிற் செலுத்தி, வயிறு முழுவதையுஞ் சலத்தால் நிரப்பிச் சுழற்றி, மலங்களை வெளியேற்றிக் குடலைச் சலவைச் செய்த துணிபோற் சுத்தப்படுத்துவது நீர்விசர்க்கம்.

அபானத் துவாரத்தால் வாயுவை உடலுக்குள் ளிழுத்துக், குடலைச் சுத்திசெய்வது வளிவிசர்க்கம் இதை வடநூலார் முறையே ஜலபஸ்தி-வாயுபஸ்தி என்பர். இவற்றின் இரகசியம் பலவுள. அவற்றைச் குரு முகத்தாற் கேட்டுணர்க.

வேளப்பா வல்லாமல் வேறோர் சேதி
மேற்குமுகப் பிறவிவட்ட மிட்டி ருந்து
கோளப்பா கும்பித்து ரேசித் தேதான்
கோடுமுச்சா டனங்கொண்டு மலத்தைப் போக்கே.

போக்கடா வெள்ளத்தா லாகிருஷ்ணஞ் செய்து
புத்தாசு சுற்றடியின் பிறத்தி வாங்கி
தேக்கடா ஜலத்தாலே வுச்சா டித்துத்
திடமாகத் தற்சனையா லிரேச கஞ்செய்
வாக்கடா மலசுத்தி யான பின்பு
வாய்கழுவிக் கால்கழுவிச் சுத்த மாக்கி
நாக்கடா தந்தமுத லூத்தை வாங்கி
நலமாகக் கையானை யன்பால் வேண்டே,

பிராணயாமம் யோகிகளுக்கே உரித்தானதென்றும், இல்லறவாசிகட்கு உரித்தன்றென்றுங் கருதவொண்ணாது. அஃது பிராணனை இரட்சிக்கப்படும் அரும்பொருளாதலால், ஒவ்வொரு மக்கட்கும் இன்றியமையாதது. பிராணயாமத்தை அப்பியாசிப்பதால் இல்லறவாசிகட்குப் பாப விமோசனமும், ரோக நிவர்த்தியும்; யோகிகட்கு யோக சித்தியும், தெரிசனானந்தமும் உண்டாகும். பிராணயாமத்தை அப்பியாசிக்கும் போது, இல்லறவாசிகளும் ஏகாந்தமான விடத்திலிருந்தே தொடங்கவேண்டும். அதன் பின் எழுந்து (அவசியமானால்) சன சமூகத்திற் கலக்க வேண்டும். அங்ஙனம் செய்து வருங்காலத்தில் "நண்டூருவதும் சிற்சில சமயத்தில் அட்சரமாகி விடுவதுபோல்" கிரகஸ்தர்களும் அப்பியாச முதிர்ச்சியால் யோகீஸ்வரர்களாகிறார்கள். எவ்விதமெனில், யுக்தமான பிராணயாமத்தை விடாமல் ஆறுமாதம், அல்லது ஒருவருடம் வரையில் ஏகாக்ர சித்தமுடையவராக அப்பியாசித்து வந்தால், ஆனந்த சுகோதயமுண்டாகும்.

பகவற்கீதை.

இப்பரிசி லெப்பொழுது மென்னைநினை கிற்பார்க்
கப்படியொ ராண்டொரறு திங்களள வுள்ளே
கைப்படுவன் யானெனியல் கைப்பட விருந்தோர்
பொய்ப்பிறவி யானவை மறுத்தடைதல் பூணர்.

அப்பியாசஞ் செய்து வருங்காலங்களில், இராசத, தாமத குணோதயத்தாலும், பூதியப்பிரிவினுலும், இஃது என்ன யோகம்? இந்த யோகப் பழக்கத்தினுல் ஞானோதய மாகுமா? எனப் பற்பல விதமாக எண்ணிச் சலிப்பு உண்டாகினும் உண்டாகும். அக்காலத்திலும், வைராக்யங் கொண்டு, யோக, ஞான சாத்திரங்களின் ஆதரவினுலும், சாது சங்கப் பழக்கத்தின் உதவியினுலும், "மந்திக்குருளை யொத்தேனில்லை" என்னும் ஆன்றோர் வாக்கியம்போற், குரங் குப்பிடிபோன்று விடாமற் பழகிவரவேண்டும். ஆரம் பத்திற் சிறிது கடினமாகத் தோன்றினும், பழகப்பழக ஆனந்த முண்டாகும்.

விஞ்ஞானதீபம்.

வாங்குவாய் நடக்கையிலே யடிக்கொன் ருக
வர்ய்வதனை யுள்ளிழுத்து வழக்க மாக்கு
எங்குவாய் யோகமிது தானோ வென்று
எண்ணுதே ஆதியீ தெவர்க்குர் தானே.

சர்க்கஸ் வித்தைக்காரர்கள் யானையைத் தூக்கவும், கற்களைத் தூள் தூளாய்த் தகர்க்கவும், கயிற்றின்மேல் நடக்கவும், அக்கயிற்றில் துவிச்சக்கா (Cycle) வண்டியை நடத்தவும், இன்னும் அநேக ஆச்சரியகாமான விநோதங் களைச் செய்யவும் வன்மை பெற்றிருப்பதை நாம் எத்தனையோ முறை பார்த்தும் கேட்டு மிருக்கின்றோம். அவர்கள் அப்பியாசகாலத்தின் ஆரம்பத்தில் கஷ்ட

நஷ்டங்களைப் பொருட்பண்ணமல், மேன் மேலும் விடா முயற்சி செய்ததினலல்லவா? இப்போது அத்தகைய வன்மையை யடைந்திருக்கின்றார்கள். அதுபோலவே, நமக்கும் அப்பியாச ஆரம்பத்தில் கொஞ்சம் கஷ்ட நஷ்டங்களேற்படினும் ஆலசியஞ் செய்யாமல் விடாமுயற்சி செய்ய வேண்டும்.

திருக்குறள்.

(1) தெய்வத்தா லாகா தெனினு முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்.

(2) முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

முயற்சியின்றிச் சோம்பேறிகளா யிருப்பவர்கட்கு எந்தக் காரியமுங் கைகூடாது. பாடுபட்டால் தானே? பலனடையலாம். வேலை செய்தாலல்லவா? கூலிபெறலாம். "உழுகிற நாளில் ஊருக்குப் போய்விட்டு அறுக்கிற நாளில் அரிவாளேடுத்து வந்தாளும்" என்கிற முதுமொழிக்கிணங்க, வாய்ஞானம் பேசிவிட்டுக் "கலியாணச் சந்தடியில் தாலி கட்ட மறந்து விட்டதுபோல்" மனத்தை யடக்கிப் பிராணயாம அப்பியாசத்தைச் செய்யாமல், சிந்திப்போன இரசம் சிதறி யோடுவதுபோல் மனத்தை அலையவிட்டவருக்கு யாது பிரயோசன முண்டாகும்.

பட்டினத்துப்பிள்ளை.

கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன் றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழு
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்பு மியான்
செய்கின்ற பூசையெவ் வாறுகொள் வாய்வினை தீர்த்தவனே.

இப்படி அப்பியாசஞ் செய்வதைவிட்டு ஒருவர் நமக்குத் தூக்கிக் கையில் கொடுப்பாரென்று எண்ணிப் பல பெயர்

களிடத்திலும் அலைந்து திரிவது, பெரும்பாலும் நன்மையைத் தரத்தக்கதல்ல.

விஞ்ஞானதீபம்.

அங்கமதா வெளியதனை வாயா லுண்ணு
அடங்கவென்றால் நாசியினு லுள்ளே வாங்கு
பங்கமொன்று செய்யாமல் நெடுநாள் நீயும்
பழகிவரி லிதுவுனக்குப் பலித மாகும்
இங்ஙனநீ நடவாம லெவரா லேனு
மெய்துமென்று தொண்டுசெய்தா லிசைப்பார் யாவர்
தங்கள் தங்க ளறிவாலே யுற்று நோக்கித்
தனையுணர்வார்க் கிதுகிட்டுந் தப்பா தன்றே.

சுப்பிரமணியர் ஞானம்.

கொள்ளடா வாசியொன்றே முத்தி யாகும்.
கொடியதொரு நற்றவமுஞ் சித்தி யில்லை

பல மனிதர்களாலும் இலகுவாக விவசாயஞ்செய்யா நின்ற சாமான்ய நெற்பயிருக்கு, நெல்மணிகளைக் காணுமலே ஐந்து-ஆறுமாதம் வரையிற் பொறுமையோடு முயற்சி செய்கின்ருர்கள். அங்ஙனமிருக்க, எவராலுஞ் செய்வதற்கரிய யோக, ஞானமென்னும் மோட்சப்பயிரை விளைவேற்றக் கருதி அப்பியாசஞ் செய்பவர்கள், அந்த நிமிஷத்திலேயே பிரயோசனங் கிடைக்கவில்லை யென்று நினைந்து, குருமூர்த்தி சொன்ன உண்மை நிலையையும் அசட்டை செய்வதானது என்ன துரதிஷ்டம்?

ஒரு நாள் தச்சனுக்கும், அவன் கருவிகட்கும் சண்டையுண்டாயிற்று. அவன், தன் கருவிகளைப் பார்த்து, அரம்பமே! நீ நன்ருய் அறுக்கவில்லை; வாய்ச்சியே! நீ நன்ருய்ச் செதுக்கவில்லை; இழைப்புளியே! நீ நன்ருய்

இழைக்கவில்லை; துறப்பணமே! நீ நன்றாய்த் துளைக்கவில்லை என்று ஒவ்வொன்றையுங் கடோமாக நிந்தித்துவைதான். அந்த நிந்தனையைப் பொறுக்கமாட்டாமல் ஆயுதங்களெல்லாம் ஒன்று சேர்ந்து தைரியங்கொண்டு, தச்சனை நோக்கி, அடா மூடா! உன்வேலை உனக்கு நன்றாய்த் தெரியுமானால், நாங்களும் எங்கள் வேலையைச் செவ்வையாய்ச் செய்வோம்; குற்றம் உன்னிடத்திலேயே யல்லாமல் எங்களிடத்திற் கிஞ்சிற்றுமில்லை யென்றன.

அதுபோல் அவரவர்கட்குக் குருசொன்ன மார்க்கத்தைச் சிரத்தையுடன் அப்பியாசித்துப் பார்க்காமல், குருவானவர் சரியான முத்திநெறிப்படி உபதேசிக்கவில்லை யென்று அவதூறு சொல்வதிற் பயனொன்றுமில்லை.

திருமந்திரம்.

சத்தியார் கோயி லிடவலஞ் சாதித்தால்
மத்தியா னத்திலே வாக்கியங் கேட்கலாம்
தித்தித்த கூத்துஞ் சிவனும் வெளிப்படும்
சத்தியஞ் சொன்னோம் சதாநந்தி யாணையே.

உரோமர்.

மேலென்ன விருக்கையிலு நடக்கும் போதும்
வேறுரையால் சரமதனை விடாம லேற்று
நாலென்ன எட்டென்ன எல்லா மொன்று
நலமான அஷ்டாங்கம் அப்பா சித்துக்
காலென்ன பிராணய முன்னே செய்யிற்
கணக்காகப் பூரகமாங் கும்பம் நாலு
கோலென்ன ரேசகந்தான் என்று மூன்று
குறையாமற் சரபீசங் கூட்டித் தீரே.

போகர்.

போச்சென்று விடுகாதே மூலந் தன்னைப்
போகையிலு மிருக்கையிலு மனத்தை யூணு
பூச்சென்ற பிறசத்தங் கேளாப் பக்கம்
புறத்திருந்து லட்சியத்தைப் பூட்டி வாங்கு
மாச்சென்று வாசியைநீ தவறொட் டாதே
மனந்தன்னை மூலத்தில் மருவிச் சேர்க்கும்
வேச்சென்று கடினம்போல் முன்னே காணும்
விடுகாதே மாச்சலாய் விரைந்து வுன்னே.

உன்னியே பழகுமட்டுங் கடிசாய்க் காணும்
உட்புகுந்து பார்த்துவந்தா லுறுதி கூடும்
வன்னியே துலங்குமட்டு மனஞ்ச லிக்கும்
மாசற்ற வொளிவுகண்டால் மகிழ்ச்சி யாகும்
பின்னியே பின்கலையி னிடையிற் கூடும்
பேரான சுழினைதன்னில் நெட்டிட் டேறும்
நன்னியே நமன்வெருண்டு அப்பாற் போவான்
நாளெல்லாங் கடிகையுமாய் நாட்ட மாமே.

நாட்டமாய் லகுவாக மூலம் பாரு
நலமான வாசிகொண்டு வூதி யூதி
ஊட்டமாய்ச் சாக்கிரத்தில் நின்று நின்று
உத்தமனே நந்திகண்டால் வாதங் காணும்
தூட்டமாய் வெறும்பேச்சாம் வார்த்தை சொன்னாற்
சுடுகாட்டுப் பிணமான சொல்லுக் கொக்கும்
பூட்டுவாய் மூலத்தில் ஒளிகாண் மட்டும்
பொற்கொடிபோற் சுழிமுனையுந் திறந்து போமே.

சுழிமுனையே திறந்தாக்கால் மனமொ டுங்கும்
சுழியிலே அகப்பட்ட துரும்பு போலாம்
வழிமுனையே ஆதார மேற லாகும்
மகத்தான சித்தியது எட்டு மாடும்

கழிமுனையாஞ் சுழியுள்ளே யழித்தி டாது
கணக்கோடே வாசியென்ற குதிரை யேறு
இழிமுனையி லிறந்தாலங் கொன்று மில்லை
ஏறுவது கடினமெத்த விதத்தோ டேறே.

அகத்தியர்.

ஆச்சப்பா இந்தமுறை பதினெண் பேரும்
அயன்மாலு மரனோடு தேவ ரெல்லாம்
மூச்சப்பா தெய்வமென்று அறியச் சொன்னார்
முனியோர்கள் ரிஷியோர்க ளிப்படியே சொன்னார்.

சுவாசமானது குறைவுபடாமற் பூரணமாயிருப்பதற்காகவே யோகாப்பியாசிகள் பிறருடன் அதிகமாகப் பேசுதல், கடினவேலை, கோபம், அதிக நித்திரை, மாதர் சங்கம், சனசங்கம் முதலியவைகளை நீத்திருக்கின்றார்கள்.

ஞானவெட்டி.

மழைகன நடையும் ரவிபனி காற்று
மனிதர்சஞ் சாரமு மாய்கைப்
பிழையகன் றிடவுஞ் சோம்பலுந் தூக்கம்
பிதற்றலுங் கோபமா காதே.

சுவாச அப்பியாசம் முதிர்ச்சியடைந்த பின்னர் முன் அங்கயோக அத்தியாயத்தில் சுவத்திகமாதி ஆசனத்தில் சொல்லி யிருக்கிறபடி, பதுமாசனமிட்டு, * சின்முத்திரையுடன் வடக்குமுகமாயிருந்து, தேற்றாங்கொட்டையின் சந்தனத்தினால் தெளிந்த நிர்மலமான சலத்தைப்போற், பிரபஞ்ச வாழ்க்கையினின்றுந் தெளிந்த மனதைப் பிரபஞ்

* சின்முத்திரை :—பெருவிரலின் அங்குலக்கோடென்னும் இறையில் ஆட்காட்டி நுனிவிரலை வைத்து, இதர மூன்று விரல்களையும் ஆகாயத்தைப் பார்க்கும்படி நீட்டி, இரண்டு கைகளையும் இரண்டு முழந்தாளின்மேல் வைத்து நிட்டை செய்வது. இதைப் பதுமாசனமிட்ட படங்களில் அநேகமாய்க் காணலாம்.

சத்தைப் பார்த்துக்கொண்டிருந்தும் 'மனத்திற்குப் பற்ருத அகக்கண்ணேடு புருவமத்தியாகிய சிதாகாயத்திற் பிறழாமல் நிறுத்திச், சரீரத்தை அசைவற இருத்தி, இடை-கண்டம்-தலை-கண் ஆகிய நான்கையும் சோர்வடையாமல் நிறுத்தி, சந்திர-சூரியகலைகளின் வழியேசென்று திரும்புகிற சுவாசத்தை, முன் சொல்லியிருக்கிற மாத்திரையளவின்படி பூரக, கும்பக, இரேசகஞ்செய்து, நடுநாடியாகிய சுழிமுனையிற் செலுத்தி ஒப்புவமையற்ற அம்சகாயத்திரி மந்திரத்தைச் செபியாமல் செபிக்கவேண்டும்.

## 1. அம்சகாயத்திரி மந்திரம்.

ஓம் புவஹா ஹம்ஸஸ் ஸோஹம் ஓம் புவஹா ஹம்ஸஸ் ஸோஹம்
ஓம் சுவஹா ஹம்ஸஸ் ஸோஹம் ஓம் மஹஹா ஹம்ஸஸ் ஸோஹம்
ஓம் ஜநஹா ஹம்ஸஸ் ஸோஹம் ஓம் ஸத்யம் ஹம்ஸஸ் ஸோஹம்
ஓம் தத்ஸ விதுர்வரேணியம் ஹம்ஸஸ் ஸோஹம்
ஓம் பர்கோ தேவஸ்யதீமஹீ ஹம்ஸஸ் ஸோஹம்
ஓம் தியோயோநஹா பிரசோதயாத் ஹம்ஸஸ் ஸோஹம்
ஓம் பரோரஜஸி ஸாவதோம் ஹம்ஸஸ் ஸோஹம்
ஓம் ஆபோஜ்யோதீ ரஸோம்ருதம் ப்ரஹ்ம
பூர்புவஸ்வரோம் ஹம்ஸஸ் ஸோஹம்.

## 2. காயத்திரி மந்திரம்.

ஓம் பூர்வஸ்வ மஹாஜன தமஸத்தியம்
ஓம் தத்ஸ விதுர்வரேணியம்
பர்கோ தேவஸ்ய தீமஹீ தீயோயோநஹா ப்ரசோதயாத்
ஓம் ஆபோஜ்யோதீ ரஸோம்ருதம் ப்ரஹ்ம பூர்புவஸ்வரோம்.

## 3. காயத்திரி தியானம்.

முக்தாவித்ரு ஹேமநீலதவளச் சாயைர்முகை ஸ்தீக்ஷணை
யுக்தாமிந்துநி பத்நரத்நமகுடாம் தத்வார்த்த வர்ணாத்மிகாம்
காயத்ரீம் வரதாபயாம் குசகசசுப்ரங்க பாலங்கதாம்
சங்கம்சக்ர மதாரவிந்தயுகளம் ஹஸ்தைர்வஹந்தீம் பஜே.

மேற்கூறிய மூன்று காயத்திரிகளை வெளியிற் சொல்லக் கூடாதென்பதும், அதிக ரகசியமென்பதும் அந்தணர்கள் கருத்தாயினும், அங்ஙனம் வெளிப் படையாய்ச் சொல்லக் கூடாதேயன்றி, சாத்திரங்களில் எழுதலாம் என்பது ஆன்றோர் துணிபு. இதுபற்றியே இருக்குவேதத்தில் தோத்தரிக்கப்பெற்றுளது.

முன்சொல்லியிருக்கின்ற 1-வது அம்சகாயத்திரி மந்திரத்துடன் ஒரு மொழியாகிய பிரணவ மஹா மந்திரத்தை உச்சரிக்காம லுச்சரித்து, பிராணவாயுவை நிறுத்தி, அதன்படியே மனதும், மனத்துடன் பஞ்சேந்திரியங்களும், அவற்றின் சேஷ்டைகளும் நிற்க, பிரபஞ்சமென்பதே தோன்ருமல்சமாதியிலிருந்து, ஆறுதாரகமலங்களைக் கடந்து, நெற்றியின் மேற்பட்டிருக்கும் சகஸ்த்ரதளமாகிய பிரம்மரந்திரத்திற் பிரகாசித்துக்கொண்டிரானின்ற, சுயம்புவடிவாகிய பிரம்ம சைதன்ய சொரூபத்தைத் தரிசித்து நித்தியானந்த மடைய முயலவேண்டும்.

இடை, கண்டம், தலை, கண் முதலானவைகளை அசையாமல் நிறுத்தவேண்டுமென்று முன் சொன்னதற்குப் பிரமாணம்:—

பிரபுலிங்கலீலை.

தறிபோ லுடல நேரிருந்து தயங்கு மருந்து விருநாடி
நெறிபோய் மீழும் வளியதனை நிறுவி நடுநா டியிற்செலுத்தி
அறிவோர் சிறிதுஞ் சலியாமல் * அன்னப் பெயர்மந் திரமாறிக்
குறிபோ லிருந்த வொருகுறியைக் குறித்துக் கொண்டங்
கிருந்தனரால்.

* அன்னம் என்பது தமிழ்மொழி; அம்சம் என்பது வடமொழி. ஆதலால், அன்னப்பெயர் மந்திரம்என்பது அம்சகாயத்திரி மந்திரமென்ருயிற்று. இஃதே மேற்கூறிய 1-வது அம்சகாயத்திரி மந்திரம்.

பகவற்கீதை.

தலையுங் கழுத்து முடம்புமிவை செவ்வே தளரா தேயிருக்கு
நிலையி லிருந்து கண்களைத்தன் மூக்கு நுனிமே லேநிறுத்தி
அலையுங் கடல்போற் காமமுமெய்ப் பயமுந் தன்னை விட்டகல
உலையு மனமுள் ளடங்கவெனை யுணர்ந்தே யிருக்கு மதுயோகம்.

ஞானிகள் நிலைமை.

அத்தனுமெய்ஞ் ஞானியரு முரைத்த வாறே
ஆகமுடி யிடையசையாத் தறிபோ லாக்கிப்
பத்திரங்கோ முகம்வீரம் பதுமத் தோடு
பகர்குலவு மாதனத்திற் படிந்தே காந்த
முத்திரைசாம் பவியான நோக்க தாகி
முயல்கருத்து நடுநிலையி லிருத்தி நாளு
மித்தகைய சிவயோகத் திருப்பார் ஞானி
யினியவர்க்குப் பிறவியுமுண் டென்ன லாமோ.

அமுதசாரம்.

செவ்வே யுடலுங் கழுத்துஞ் சிரமுமுற
வெவ்வா தனத்தே யிருந்தெவர்க்குங்—கைவர்தால்
வாத முதனோய் நலியா மதியுடையோர்
ஆதன மென்ப தது.

பிரமகீதை.

தக்கஞா னத்தைத் தான்பெறற் பொருட்டுத்
தனியிடந் தனையடைந் திதய
துக்கமே வாமற் சுகாசனத் திருந்து
தோள்தலை கழுத்துடம் பிவைநே
ரொக்குமா றிருத்திப் பூதிகொண் டிந்த
வுடம்பையுத் தூளனம் பண்ணி
மிக்கவாய் வருமிந் தியங்களை யெல்லாம்
விடயமே லெழாவகை மீட்டு.

யோகாப்பியாசிகள் இரேசக, பூரகஞ் செய்து வருங் காலங்களில், சரீரத்தில் உஷ்ணமதிகரித்தால் அடியிற் கண்டிருக்கிற விபரப்படி தலை முழுகிக்கொள்வதுடன், மூதண்டக்கியாழமும் பருகி வர வேண்டியது.

## தலைமுழுகும் விதி.

| | |
|---|---|
| கஸ்தூரி மஞ்சள், வெள்ளை மிளகு, கடுக்காய்த் தோல், நெல்லி முள்ளி, வேப்பம் பருப்பு, | பஞ்சகற்பம். இவை வகைக்குப் பலம் கால் $(\frac{1}{4})$ |

இவைகளை மேற்கண்டபடி நிறுத்தெடுத்து, முதனுள் இரவிலேயே அமுரியிலாவது, அல்லது பசும்பாலிலாவது ஊறப்போட்டு, மறுநாள் பசுப்பால் விட்டரைத்து, சுமார் காற்படிபாலிற் கலக்கிக் கொதிக்க வைத்துச் சேறுபதத்தில் இறக்கி, சரீரமெங்குந்தேய்த்து, 2-மணிநேரம் வைத்திருந்து இள வெந்நீரில் ஸ்நானம் பண்ணவேண்டும். போசனத்தில் நெய், பால் முதலியவைகளை மிதமாகச் சேர்த்துக் கொள்ளவேண்டும். இப்படி முழுகுவதனுற் கபாலம் இருகும்; குளிர்ச்சியுண்டாம்.

### திருமந்திரம்.

அளக நன்னுத லாயோ ரதிசயங்
களவு காயங் கலந்தவிந் நீரிலே
மிளகு நெல்லியு மஞ்சளும் வேம்பிடி
விளகு மேனி யிருகுங் கபாலமே.

### சட்டமுனி கற்பவிதி.

தானென்ற தலைமுழுக வரிசை கேளு
சாதகமாய் மிளகோடு கடுக்காய் மஞ்சள்
வேனென்ற வேப்பரிசி நெல்லி முள்ளி
மீருத சமபாகம் நிறுத்துக் கொண்டு

கோனென்ற ஆவின்பால் விட்டு ஆட்டிக்
குமுரவே முழுகிவரப் பட்சந் தோறும்
ஊனென்ற நெய்வார்த்து வாரந் தோறும்
முத்தமனே பசும்பயர்க்காய்ப் பாகம் பண்ணே.

நந்தீசர் ஞானம்.

சார்ந்துபார் தலைமுழுக விபரங் கேளு
தப்பாது நெல்லியொடு மிளகு மஞ்சள்
கூர்ந்துபார் வேப்பரிசி கடுக்கா யோடு
குறையாம லமுரியிலே குளிரப் போட்டு
ஆர்ந்துபா ராவின்பால் விட்ட ரைத்து
அப்பனே அக்கினியில் வைத்து வாங்கித்
தேர்ந்துபார் சிரசதிலே சீராய்த் தேய்த்துத்
திறமாகச் சுடுவெந்நீர் முழுகு வாயே.
முழுகிவர மண்டலத்தில் தேகங் கல்லாம்
முக்கியமாய் வாதபித்தம் நிலையில் நிற்கும்
கழுகிவர ஆவின்நெய் கூட்டி வாநீ
கமலமெனக் கண்குளிரும் விந்து கட்டும்.

## மூதண்டக்கியாழம்.

அறுகம்வேர் பலம் ஒன்று, மிளகு நூற்றெட்டு, சீரகம் களஞ்சுமூன்று. இம்மூன்றையும் சிதைத்து, மூன்றுபடி ஆற்றுச் சலத்திலிட்டு அடுப்பேற்றி, முக்காற்படியாக வற்ற வைத்து, அதில் ஒரு * வெருகடிப் பிரமாணம் பசுவெண்ணெய் போட்டு இளஞ்சூடாயிருக்கும்போதே குடித்துவிட வேண்டியது.

நந்தீசர் ஞானம்.

அறைகிறேன் அறுகம்வேர் பலந்தா னொன்று
அப்பனே மிளகதுதான் நூற்றெட் டாகும்
பறைகிறேன் சீரகந்தான் முக்க ழஞ்சு
பாங்காக மூன்றுமொன் றாய் நறுக்கி யிட்டு

* வெருகடி = பூனையின் பாதக்குறி.

நிறைகிறேன் மூன்றுபடி வெள்ள நீரில்
நேராக முக்காலாய்க் குறுக்கிப் பின்பு
குறைகிறேன் வெருகடி தான் வெண்ணெ யிட்டுக்
கூசாமற் குடித்துவிடு குணமுண் டாமே.

உண்டான குணமதுதான் சொல்லக் கேளு
உஷ்ணத்தின் காந்தமெல்லா மோடிப் போகும்
பண்டான மேகமது பறந்து போகும்
பாரப்பா கண்குளிருந் திரேகம் பொன்னும்
துண்டான தேகமது இறுகிக் காணும்
சொல்லாத ஆனந்தந் துலக்க மாகும்
தண்டான உந்தியிலே தாது நிற்குந்
தப்பாது இந்தமுறை சார்ந்து பாரே.

---

## எட்டாவது அத்தியாயம்

---

### காய கற்பசாதனை.

விருத்தம்.

வாயுங்ரோதம் புரிவதனுல் வளராக்கினியை மீருமல்
நேயமாகச் சாந்திசெய்து நிகழ்த்தும் பிராண வாயுவது
வாயில்தோறுஞ் செல்லாமல் வசமாய்த்தேகந் தனிலயிக்கக்
காயகற்ப சாதனையைக் கவல்வாங்காத லுடையோர்க்கே.

காய கற்பமானது சீவான்மாவும், பரமான்மாவும் ஒன்று கூடி, சீவான்மா என்பது அற்றுப் பரமான்ம சொரூபமாகி, சீவப் பிரம்மைக்கியம் என்னும் அத்துவித முத்தியை அடையும் வரையில், அந்த ஆன்மா என்னும் எசமானன் வசிப்பதற்கு அனுகூலமான இந்தச் சரீரம் என்னும் மாளிகையானது கெடாமல் இருக்கும்

பொருட்டுக் காப்பாற்றி வைக்கும் இன்றி யமையாத ஔடதப் பிரயோகமாம்.

ஞான யோகிகள் ஆன்மா, ஒன்றையே பொருளாக மதித்து அனுட்டிப்பவர்கள். ஆதலால் அவர்களது அதி தீவிர பக்குவத்திற்குக் காய கற்பம் அவசியமே யில்லை. அங்ஙனம் செய்ய இயலாத பிராணயாம யோகிகள், பூரக கும்பகங்களால், அதிகரித்த மூலாக்கினியினால் சரீரத்தில் பற்பல வியாதிகள் அணுகி யோகவிக்கினம் செய்யாவண்ணம் கற்பசாதனை செய்யவேண்டியது அத்தியாவசியம்.

காய கற்பமானது * அகக்கற்பம் என்றும், புறக் கற்பம் என்றும் இருவகைத்து. அவற்றுள், அகக் கற்பமாவது :— அகார கற்பம்—உகார கற்பம்—மகார கற்பம் என்னும் மும்மூல கற்பங்கள். இவ் வர்த்தத்தால் இதற்குப் பிரணவ கற்பமென்றுங் கூறலாம். இவை யல்லாதவை யனைத்தும் புறக் கற்பங்களாம்.

## கற்பம் உண்ண அங்கம்.

கற்ப சாதனை செய்ய ஆரம்பிக்குங் காலத்தில் சகல பற்றுக்களையும் தவிர்த்து, திருவருளைச் சிந்தித்து, கிடைத்தற் கரிதாகிய மெய்ஞ்ஞான நிலையைச் சொல்லாமற் சொல்லிக் காட்டிய குருமூர்த்தியின் உபய திருவடித் தாமரைகளையும், ஏனைய பெரியோர்களையும், † சகுணமாகவும், நிர்க்குணமாகவும், மனோ வாக்குக் காயமென்னுந் திரிகரண சுத்தியுடன் வணங்கி, ஓர் ஏகாந்தமான விடத்தில் ஏகாக்ர சித்தனாகப் பதுமாசனமிட்டு, சின்முத்திரையிற் பொருந்தி,

---

* அகக்கற்ப - புறக்கற்ப மகா இரகசியங்களை, நாமியற்றிய யோக ரகசிய நூலில் சவித்தாரமாகக் காண்க.

† சகுணம் :—சடரூபம் அல்லது தூலம். நிர்க்குணம் :— ஆன்மரூபம் அல்லது சூக்குமம்.

இடகலையில் வருகிறசுவாசத்தை, பிராணுபாம அத்தியாயத்தில் விவரித்தபடி இரேசக, பூரகஞ்செய்து, குருமுகத்தாற் கேட்டறிந்த ஒப்பற்ற மும்மூல கற்பசாதனையை அநுட்டித்து * தசநாடிகளின் மர்மத்தை அறியவேண்டும். ஆனல் கற்பசாதனை செய்ய ஆரம்பிக்கு முன்னதாக,

சாப நிவர்த்தி.

சுப்பிரமணியர் ஞானம் 200.

நாட்டடா நாற்கோண முன்னே யிட்டு
நலமான வட்டமிட் டறுகோண மிட்டுப்
பூட்டடா முக்கோணம் அதுமே லிட்டுப்
புகழான பிறைவட்ட மேலே போட்டு
மாட்டடா என்தாயாள் முகந்தான் வைத்து
மதிக்கவே ஆறெழுத்தை யதிலே சாத்தி
வாட்டடா கற்பமதை மனதில் வைத்து
வாலைதனைப் பூசைசெய்து வணங்கிக் கொள்ளே

என்னுஞ் செய்யுளின்படி செய்துகொண்டு, அதன்பின் கற்பசாதனைக்கு ஆரம்பித்தால் மகான்களது சாபநிவர்த்தியாகும்; ஆறுதார வீடுகளும் பிரகாசிக்கும்; யாதொரு விக்கினமும் நேரிடாது. இன்றேல் சாதனைபுரிவது மிக அருமையாகும்.

இந்த மும்மூல கற்பத்தைச் சூரியகலையில் உதயாதி மூன்றே முக்கால் நாழிகை வரையிலும் உபயோகித்து, அதன்பின் இடகலையில் இரேசக - பூரகஞ்செய்து, கருங் குருவையரிசி படி அரைக்கால், பாசிப்பயறு படி அரைக் கால் இவைகளை வெண்மையான பசுமாட்டின் பாலிற் கலந்து பொங்கல் செய்து, தினம் ஒருவேளை அரைவயிறு

* தசநாடி :—இதன் விபரம் பின்வரும் அத்தியாயத்திற் பார்த்துணர்க.

போசனம் உப்பில்லாமல் சாப்பிடவேண்டியது. இராக் காலத்தில் மிளகுப் பொடியிட்டுக் காய்ச்சிய பசும்பால் மித மாகச் சாப்பிடவேண்டும். துயிலும்போது தன்னை யறிந்த நித்திரையுடன் கொஞ்சநேரந் தூங்கவேண்டும். அங்ஙன மின்றித் தன்னை மறந்து தூங்கினுற் கனவிற் பெண்போல் வந்து மருவி இந்திரியக் கலிதம் பண்ணிவிடும்; இந்திரியம் கலிதமானுல் தவம் அழிந்துபோகும்.

அகத்தியர் பூரணசூத்திரம்.

கற்பந்தான் தின்பதற்கு மூன்றே முக்கால்
கடந்தபின்பு பத்தியங்கொள் கனலே ருது
உற்பனமாங் கற்பத்தைச் சூரியனிற் கொள்ளு
உண்பதுவு முறங்குவது மொன்றே மார்க்கம்
நற்புடனே பூசைசெய்வார் கால மூன்றும்
நாளொன்றுக் கிருநேரம் நாட்டம் பாரு
சொர்பமென்ற பெண்ணாசை விட்டா லுந்தான்
சுகமான சயனத்திற் பெண்தான் வந்தே.

வந்துதான் மருவிடவே விந்து வீழும்
மகத்தான தவமெல்லாம் அழிந்து போகும்
கொந்துதா னழியாமல் நினைவாய்த் தூங்கு
குறியான புருவமையங் குறியைப் பாரு
வெந்துதான் போகுமடா மூலத் தீதான்
மேற்கொண்டால் மாயையெல்லாம் வெளியு மாகும்
உந்திதான் பசியாம லிருக்க வென்றால்
உறைப்பான வாசிகொண்டு அமிர்த முண்ணே.

மேற்கண்டபடி கற்பமுண்ணுங் காலத்தில் மழை, அதிக நடை, வெய்யில், பனி, காற்று, வாடை, மனிதர் கூட்டம், மாயை, சோம்பல், அதிக தூக்கம், அதிகப் பேச்சு, அறுசுவை, குளிர்ந்த சலம் முதலியவைகளைத் தள்ளி வைக்கவேண்டும்.

ஞானமணிமாலை.

நீபெருக்கத் தின்றாக்கால் நித்திரையுங் கோபமதாம்
நீசுவர்க்கத் தேகாம லேநிறுத்தும்—நீபெருக்க
வுண்ணுமை லுண்டு வுறங்கா திறையைமனக்
கண்ணாலே கண்டு களி.

வாசியோகம் செய்துவருங் காலத்தில் மும்மூல கற்பத்தை உபயோகித்து வரவேண்டும். கற்பத்தைச் சாப்பிடாமல் வாயுவை மட்டும் ஏற்றியிறக்கிக் கொண்டுவந் தால் சரீரத்தில் உஷ்ண மதிகரித்துச் சில ரோகங்கள் சம்ப விக்கும். அதனால் இரேசக, பூரகஞ்செய்ய முடியாமற் போகும். வாசியும் வசப்படாமல் குதித்துவோடும்; சுக்கி லமும் கலிதமாகும். ஆதலால், தினந்தோறுந் தவறாமல் கற்பமுண்டு வரவேண்டும். இப்படிப் பதின்மூன்று வரு டஞ் சாதனை புரிந்தவர்கட்கு சுவாசமானது சரீரத்தில் இலயமாகி தேகமானது கற்போலாவதுடன் சுவாசம் செல வாகாமல் மாணவாதனையையும் வராதபடி தடுக்கும்.

சுப்பிரமணியர் ஞானம்.

கொள்ளடா மும்மூலங் கொள்ளா விட்டால்
குறுகிநின்ற காமமுந்தான் குதித்தே யோடும்
அள்ளடா அம்மூலங் கொண்டீ ராகில்
அணுவளவுங் காமமுந்தான் அசையா தையா
மெள்ளடா பதின்மூன்று வருடங் கொள்ள
மேதினியிற் சஞ்சரித்து விரும்பி நில்லு
வள்ளடா வல்லவனு யோகம் பார்த்து
வாய்வான சுழல்தன்னில் வருந்தி நில்லே.

நில்லடா மும்மூலங் கொண்டு தானும்
நிலையான வாசியைத்தா னினைத்துப் போற்று
அல்லடா கற்பமுந்தான் கொள்ளா மற்றான்
அறிவான வாசியைத்தான் ஏற்றி னாக்கால்

மெல்லடா தேகமுந்தான் பொத்துப் போகும்
மேன்மையுள்ள வாசியுந்தான் குதித்து வோடும்
வல்லடா வல்லவனுக் கற்பங் கொண்டு
வாய்வான வாசியைத்தான் வாங்கு வாயே.

தீர்க்கமாய் மும்மூலந் தினந்தோ றுந்தான்
தின்னுமல் விடாதேஐயா திடமாய்ச் சொன்னேன்
ஆர்க்குமடா அவனுயிரும் போகா தப்பா
அகண்டவெளிக் குள்ளிருந்து ஆடச் செய்வான்.

மும்மூல கற்பசாதனையின் மர்மத்தை வெளிப்படை யாய்க் காட்டி எழுதவில்லையே எனச் சில பரிபக்குவர்கட்கு மனோ சாஞ்சல்ய முண்டாகலாம்; அது என்னுடைய குற்றமே யன்று. ஏன்? கற்பசாதனையின் முழு அந்தரங் கத்தைக் குருமுகத்தாற் கேட்டுணர வேண்டுமே யன்றி சாத்திரங்களில் வெட்டவெளியாய் எழுதக்கூடாது. இது பற்றியே ஆன்றோர்கள் மிகப் பயங்கர முண்டாகும்படிப் பின்வருஞ் செய்யுட்களைக் கூறி யிருக்கின்றார்கள். அதைப் பொருட்படுத்தாது பொது நலத்தைக் கருதி வெட்டவெளி யாய் எழுத ஆரம்பித்தேன். அப்போது, என்னை யறியா மல் நானெழுதி வந்த எழுதுகோல் (பேனா) நடுங்க ஆரம் பித்தது யாதொரு காரணமு மில்லாமல் மனதிலும் ஓர் விதத் திகிலுண்டாயது. அதிலிருந்து, வெட்டவெளியாய் எழுதக்கூடாதென்று ஆன்றோர்கள் கூறியிருக்க, நாம் அதை மறுத்து எழுத ஆரம்பித்ததா லல்லவா? இச்சம்ப வம் நிகழ்ந்ததென்று கருதி, அவ்வாறு எழுதாமல் யானும் மர்மமாகவே எழுத ஆரம்பித்தேன். யான் அவ்வாறு எழு தாமல் நிறுத்தியதற்கு பின்வருஞ் செய்யுட்களே போதிய சான்றாகும். அப்போது சரி-சரியல்லவென நன்கு விளங் கும். ஷை மர்மங்களை எப்படித்தான் தெரிந்துகொள்வ தெனில், குருமூர்த்தியை அடுத்துத் தொண்டு புரிந்தால்,

அவர்கள் சீடனைக் கவனித்து, இவன் பாத்திரவானா? அபாத்திரவானா? என யூகித்தறிந்து, அதன்பின்னரே அநுக்ரகம் பண்ணுவார்கள்.

### தாயுமானவர்.

என்னையுன்னை யின்னதிது வென்னுமல் நிற்குநிலை
தன்னையரு ளென்ற தருணத்தில்—அன்னைபெற்ற
பிள்ளைக்குஞ் சொல்லாத பெற்றிகண்டா லையனே
உள்ளத்தி னுள்ளே யுணர்.

### பகவற்கீதை.

மற்றுனக்குச் சொல்லியவிம் மறைப்பொருள்மா தவமிலர்க்குங்
குற்றமறுத் தறிவருளுங் குருவழிபா டிலாதவர்க்குஞ்
செற்றமனச் சழக்கினர்க்கு மெனைநினையாத் திறத்தினர்க்கும்
பற்றமறத் தெரிந்துரைக்கப் படாதென்றே யறிகண்டாய்.

### மூக்காண்ட திருமந்திரம்.

சோதி யான துரிசியைச் சொல்லொணு
பேதி யான குரிசியைப் பேசொணு
ஆதிதான் சொன்ன அரும்பொருள் தன்னை
வீதியாய்ச் சொன்னால் விண்ணிடி வீழுமே.

விண்ணிடி வீழும் வெளியிட்ட பேர்க்குத்
தன்னடி தானுய்த் தனக்குச் சரியாய்க்
கண்ணடி கண்ணுய்க் கற்றுணர்ந் தோர்க்குப்
பொன்னடி மூலம் பொருள்சொல்ல லாமே.

சொல்லா ரணமாஞ் சுருதி முடிந்திடம்
எல்லாருங் காண எடுத்தே யுரைத்தவன்
பொல்லாத சென்மம் புகுந்து புலையனாய்
எல்லா நரகத்துக் கேகுவார் காணுமே.

சொல்லா ரணமாஞ் சுருதி முடிந்தவிடம்
எல்லார்க்குஞ் சொன்ன லெழுாரகம்—நல்லா
ஆளாக்கிச் சொன்னல் அவனே யிவனுகும்
பாழாக்கிப் போட்டகுரு பாழ்.

மகான்களுக்குச் சீடர்கள் மீது இரக்கமில்லாமலும், உபதேசிக்கத் தெரியாமலு மில்லை. அவரவர் பக்குவம் நோக்கி உபதேசிக்கவேண்டு மென்றே காலத்தை எதிர் பார்த்தவர்களா யிருப்பார்கள். அதனல் சில அவசரப் புத்திபுடைய சீடர்கள் அவர்களுக்குக் கருணை யில்லை யென்று கூறுவார்கள்.

சீடருடைய பருவத்தை ஆராய்ச்சி செய்யாமல் அவசரப்பட்டு உபதேசஞ் செய்வாராயின், அது அந்தப் புத்தகத்திலுள்ளது தானே! இது இந்தப் புத்தகத்திலுள்ளது தானே! என்று அலட்சியம் செய்து, ஒன்றையும் சரிவர அனுட்டிக்காமல் வீணுகக் கெட்டுப் போவார்கள் என்னும் கருணை மேலீட்டால் மறைத்துள்ளார்களே யன்றி பிறிதில்லை. யோக ஞானர்த்தங்களை மறைத்துக் கூறவேண்டு மென்றுங் கருத்தை யமைத்தே வேதத்திற்கு மறை யென்று ஒரு பெயருமுண்டாயிருக்கிறது.

நோக்கிலுயர் சட்டமுனி ஞானமிரு நூறதனில்
வாக்குமனங் கொள்ளாமல் வாரிவிட்டார்

என்று சித்தர் பெருமானல் வியந்து கூறப்பெற்ற கைலாச சட்ட முனிவர் வெட்ட வெளியாகப் பாடிய பாடல் இருநூற்றையும், உரோமரிஷி பாடல் ஐந்நூற்றையும் கொங்கணர் அறிந்து சனகாதி சித்தர்களிடத்தில் சென்று கோள்சொல்ல, அந் நூற்களை திருமூலர் வாங்கிக் கிழித்ததுவும்-மறைத்ததுவும் பக்குவம் நோக்கிச் சொல்லவேண்டு மென்னும் அபிப்பிராயமேயாம்.

நாகபட்டினத்திலிருந்த ஒரு பிராமண தாசில்தார் கி. பி. 1918-ம் ஆண்டில் கீழ்வேளூருக்கு வந்தகாலத்தில், அவ்வூர் கனதனவானாகிய தொண்டைமண்டலம் அருணாசல முதலியாரவர்களிடமிருந்த நமது வேதாந்த பாஸ்கரன் முதற் பதிப்பைக் கண்ணுற்று, அதிற்கண்ட சில ஞானார்த்தங்களை விளங்கிக் கொள்ளும் வண்ணம் நம்மிடத்தில் வந்தனர். நாம் அவரை அருகிலிருந்த எமது ஞானபிதாவினது ஆச்சிரமத்திற்குச் சென்று கேட்டுணருமாறு பணித்தோம். அவ்வாறே தாசில்தார் சென்று, சிடாசார முறைப்படி வினவ, அவர் உத்தியோக மமதையை அநுசரிக்கிறாரா? அதைப் பொருட் படுத்தாது நம்மிடம் வருகிறாரா? என்பதைச் சோதிப்பான் பொருட்டு, நீர், மாதத்திற்கொருமுறையாக மூன்று முறை, இன்ன மாதத்தில், இன்ன தினத்தில், இத்தனை மணி, இத்தனை நிமிட நேரத்திற்கு நம்மை வந்து காண்க என்று ஆக்ஞாபித்தார்கள். அவர் அவ்வாக்கியத்தைச் சிரமேற்கொண்டு, குறித்த நிமிடத்தில் தவறாது வந்து தரிசித்து, தனக்கு வேண்டிய ஞானார்த்தத்தை உணர்ந்து கொண்டார். இதனால் தாசில்தாரை மூன்று முறை தம்மிடம் வரும்படியாகச் செய்தது அவரை அலைய வைக்க வேண்டுமென்ற நோக்கமா? அன்று. அவரது பக்குவத்தைச் சோதிக்கும் பொருட்டே யாம். ஆகையால் பெரியோர்கள் மறைத்துக் கூறுவது சீடர்கள் மோகித்து அருட்டிக்கவே யாம். மூடியது முத்துப்பெறும் என்பது ஓர் பழமொழி யல்லவா?

சட்டமுனிவர் கற்பவிதி.

காணப்பா யிதின்பிறகு நூறு பாட்டுக்
    கைமுறையாய்த் தீட்சைபா டியதைப் பார்த்து
ஊணப்பா தீட்சைவிதி சத்தி மார்க்கம்
    உத்தமனே பூசைவிதி சிவசத்தி மார்க்கம்

தோணப்பா வெட்டவெளி யாகச் சொன்னேன்
சொன்னதொரு யிருநூறு பாட்டும் பார்த்து
ஆணப்பா ஆணவத்தாற் சொன்னே னென்று
அரைச்சணத்தி லென்னையங்கே அழையென் றுரே.

அழைத்துஎன்னை மச்சமுனி கூட்டிப் போனர்
அப்பவல்லோ ஜனகாதி சித்த ரெல்லாம்
குழைத்தகுரு வலக்காதிற் சொல்லுந் தீட்சை
கொழுப்போடா பாடினது என்று கேட்டுத்
துழைத்தகுரு சித்தருக்கு நீரா னீரோ
சொற்பெரிய பூரணத்தை தள்ளி னீரோ
இழைத்தகுரு சித்தருக்கு நீரா னீரோ
இடும்போடா பாடினது எனச்சொன் னரே.

சொன்னமொழி கேட்டயர்ந்து நிற்கும் போது
துடியான மூலகுரு இருநூற்றை வாங்கிப்
பன்னநல்ல பாழென்று கிழித்துப் போட்டார்.

உரோமரிஷி 100.

வாய்க்கொழுப்பாய்ப் பேசினல் வருமோ வாதம்
வாசிதனைச் செலவழித்தால் வருமோ யோகம்
காயில்லாப் பழமாமோ வேதை மார்க்கம்
காலடக்க மில்லாட்டால் ஞான மாமோ.

தாயில்லாப் பிள்ளையுண்டோ வுலக வாசந்
தழுவுகின்ற குறிபோலே சமாதி காணும்
பேயனுக்குச் சொன்னதினு லொன்று மில்லை
பிடரிவழி மார்க்கத்தைப் பேசொண் ணதே.

பேசினது முன்னுரைத்த ஐந்நூற் றுள்ளே
பேசிவைத்தே னதினுலே மறைத்தார் சித்தர்
காசினியிற் சட்டமுனி தீட்சைக் குள்ளே
கறுப்பில்லா மல்வெளியாய்க் காணச் சொன்னர்.

இது மனிதன் சரீரத்திலுள்ள எழுபத்தீராயிரம் இரத்தநாடிகள் பேய்ப்பீர்க்கங் கூடுபோல் பறந்து நிற்பதையும், இருதயம் அமைந்திருக்கும் விதத்தையும் காட்டும் படம்.




இருதயமும், இருதய கபாடங்களும் அமைந்திருக்கும் விதத்தை

நமது ஞானக்கண்ணுக்குச் சியம் 478-479-ஆம் பக்கங்களிற் காணலாம்.

நாடிகள் வலமிடம் பேதமாயிருப்பதாலேயே பண்டிதர்கள் ஆண்களுக்கு வலது கரத்திலும், பெண்களுக்கு இடது கரத்திலும் நாடி பரீட்சிக்கிறார்கள்.

(261 ஆம் பக்கம் பார்க்க.)

# மனிதனின் இரத்த நாடிகள்.



மோசமென்று திருமூலர் கிழித்துப் போட்டார்
மூலகுரு வர்க்கமெல்லாம் மோசக் காரர்
பாசையினுற் பாடிவைத்தார் நூல்கள் தோறும்
பற்றிநின்று பார்த்தாலும் பனிரெண் டாண்டே.

ஆண்டுபன்னி ரண்டுக்கும் வேறே சித்தம்
ஆகாமற் சேகரித்துப் பலநூ லெல்லாம்
பூண்டிருந்து பார்த்தாக்காற் குருத்தா னுகிப்
புத்தியெனும் அறிவாலே தோன்றுந் தோன்றும்
தூண்டுவது சொர்க்கபதம் அடைந்தாப் போலே
சுருக்கமதி லிதுதோன்றுந் தோன்று மப்பா
மாண்டதனுற் பலனென்ன ? ஞான மென்ன ?
மரணமடைந் தாப்போலே மனிதர் வாழ்வே.

மனிதரெல்லாம் மரணமடைந் தார்க ளென்று
மனதிரங்கி யைந்நூற்றில் வழியாய்ச் சொன்னேன்
சனியனைப்போற் சித்தரெல்லாங் கூடிக் கொண்டு
சமாதிக்குள் ளடக்கிவிட்டார் சட்டை நாதர்
கனிவுவந்து சொன்னதையுங் கிழித்தா ரையோ !
கண்ராவி ! கண்ராவி ! யென்ன சொல்வேன்
அனீதமாய்ப் போகுதையோ ! மனிதர் வாழ்க்கை
ஆனுலும் புத்தியில்லை சண்டா ளர்க்கே.

சண்டாளா ! பெரியோரை யடுத்துக் காரு
சாத்திரத்தை வினையம்வைத்துத் தாக்கிப் பாரு
பெண்டாட்டி பிள்ளையுட கழுத்தைக் கட்டிப்
பிதற்றுகிறுய் போனவுயிர் கொடுப்பா ளோசொல்
திண்டாட்டம் பண்ணுதே வுனக்கே புண்யம்
சேரடா வளையினுள்ளே சாரைப் பாம்பைக்
கண்டாக்காற் சந்திரனும் ஒடுக்க மாவான்
கவசமிடாச் சாதிலிங்கப் பற்ப மாச்சே.

அகத்தியர் பூரண சூத்திரம்.

உண்மையாம் இந்நூல்தான் கிட்டாத் தோஷம்
உலகத்தில் மானிடர்க ளூளறிப் போனூர்
தண்மையுள்ள விந்நூல்யார் கொடுக்கப் போமுர்
சாத்திரந்தான் மெத்தவுண்டு சமுசயந் தீராது
வெண்மையாய்ச் சட்டமுனி தீட்சை யிருநூறும்
விளம்பினூர் வெளியாமி தென்று மூலர்
அண்மையாய்க் கிழித்தாரே ஐயோ! ஐயோ!!
அல்லாம லின்னமொரு ஆகங் கேளே.

சிவஞானவள்ளல்.

யானென தெனுஞ்செ ருக்கை யிரித்தொளி யாயெ றிக்கும்
ஞானதே சிகர்க்குத் தன்னை நதிர்கொடுத் திறைஞ்சா நின்ற
ஆனமா ணுக்கற் கிந்த அனுபவம் அரைய லாகும்
ஏனையோர்க் குரைப்பி னன்ஞேன் இருள்புரை நிரையத்தெய்தும்.

ஞானமணிமாலே.

கோன்கண்ட ஞானக் குருவருள்வா ராப்பொருளை
நான்கண்டே னென்று நவிலாதே—ஏனென்றால்!
வெண்கலத்தி ஞேசை வெகுவாய் முழங்கும்பசும்
பொன்கலத்தி ஞேசைப் பொருள்.

மிக்க சிறியோர்க்கும் மெல்லியர்க்கும் வீணருக்கும்
சற்குருவி னுபதேசஞ் சாற்றரிது—மக்காபி
வாகா யெடுத்துரைத்தார் வான்பொருளைக் கண்டிறைஞ்சும்
சாகாமற் செத்தவர்க்கே தான்.

ஆவென் றதின்பொருளை யார்க்கும் நவிலாதே
ஊவதனுக் கப்பாலென் றேதிவிடு—நீயெவர்க்கும்

சற்குரு நாதனிடத்தில் தொண்டுபுரிந்து வாங்கிய நிலையை பத்துமாதம் வரையில் ஒருமை மனத்துடன்

அநுட்டித்து வந்தால் * தசவாயுக்களும் வசப்படும். அவற்றில் பிரிதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதியங்களுண்டு. அவற்றிற்கு முறையே வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் என்னும் பஞ்ச பட்சிகள் தொழிற் பட்சிகளாகும். அப்பட்சிகளைக் கொண்டு தொழிற் செய்வதற்கு முறையே அ, இ, உ, எ, ஒ என்னும் பஞ்சாட்சரங்கள் பொருந்தியதாகும். அவற்றால் † அட்ட கர்மங்களும் செய்யலாம். அதன் முழுவிபரம் விரிவாகுமாதலால் அகத்தியர் பஞ்சபட்சி, உரோமர் விநாடிபஞ்சபட்சி, மச்சமுனிவர் பஞ்சபட்சி, போகர் பஞ்சபட்சி முதலிய சாத்திரங்களிற் சவித்தாரமாய்க் காணலாம்.

ஆனால் சற்குரு மூர்த்தியிடத்திலும், மாதர்களிடத்திலும் வலிந்து இன்பமடைய முடியாது. ஆதலாற், குருமூர்த்தி மனமகிழ்ந்தே சொல்லவேண்டும்.

பிரபுலிங்கலீலை.

கோயிலின் மேவி யிருந்துயர் ஞானக் குறிகூறும்
தூயவ ராகிய வாரியர் தாமுஞ் சுடர்செம்பொற்
சேயிழை யாரும் வலிந்துறி லின்பு செயாரென்று
வாயிலி லுலணை வேனென மன்னன் மனத்தெண்ணி.

---

* தசவாயுக்கள்:—இதன் விபரம் பின்வரும் தசவாயுக்கள் என்ற அத்தியாயத்திற் பார்த்துணர்க.

† அட்டகர்மங்கள்:—வசியம், மோகனம், தம்பனம், பேதனம், ஆகிருஷ்ணம், உச்சாடனம், வித்துவேடணம், மாரணம் என்பன.

## ஒன்பதாவது அத்தியாயம்.

### தசநாடிகள்.

விருத்தம்.

*அரிதினு மரிய தாய வாக்கையி லெழுபத் தீரா*
*யிரமெனு நாடி தன்னு ளிலகிய பத்து நாடி*
*மரபையு மவையுண் டாகு மாண்பையும் பிரம மோக்கந்*
*தருதிருச் சுழினை நாடி நலனையுஞ் சாற்று வாமால்.*

இந்தச் சரீரத்தில் இருவினையாகிய நிலைக்கதவு அமைத்து, மூலத் தண்டாகிய நெடுங்கயிற்றை முகட்டு வளையாகச் சேர்த்து, பழுவெலும்பாகிய வரிசை யிட்டு, நரம்பாகிய யாக்கையாலே கட்டி, உதிரமாகிய சலத்தினாலே மண் கூட்டிச் சுவரேற்றி, உரோமமாகிய கத்தையாலே வேய்ந்த வீட்டுக்கு நவத்துவார மென்னும் வாசலிட்டு, அச்சமாகிய கதவுகளிட்டு, பல்லாகிய தாள் பூட்டி, நாவாகிய ஓங்காரம் பாய்ச்சி, பதார்த்தமாகிய பஞ்சேந்திரியங்களு முடைத்தாய் நிற்கும்.

இந்தச் சரீரத்தில் பதினாறு கதவு பூட்டிய வீணைத் தண்டும், மொழியென்னு முச்சாணெலும்பும், முச்சாண் சதையும், அஞ்சுருவும், ஆறு தெருவும், ஏழு கடலும், எட்டுத் தூணும், நாலுசாண் பருமனும், எட்டுச்சாண் நீளமும், முப்பத்திரண்டு முழக்குடலும் அமைந்துள்ளன.

அன்றியும், சரீரத்தில் (மூன்றரைக் கோடி) ரோமத் துவாரங்களும், நாளொன்றுக்கு (21600) சுவாசமும், (96) தத்துவமும், (360) பலம் தசையும், உழக்கு பித்தமும், ஆழாக்கு சேத்துமமும் கூடி, சரீரத்திலே நாளொன்றுக்கு நடக்கும் பிராணவாயு பன்னிரண்டு விரல் பிரமாணம் புறப் பட்டு நான்கு விரல் பிரமாணம் கழிந்துபோய், எட்டு

அங்குலம் உடம்பூடுருகி சத்ததாதுக் (நாடி) களையும் வளர்க்கும். இதற்கு மிகினும், குறையினும் பிணி சம்பவிக்கும்.

மனிதராகப் பிறந்த ஒவ்வொருவர் சரீரத்திலும், எழுபத்தீராயிரம் நாடிகள் உந்திச் சுழியாகிய (*) கந்தத்திலிருந்து கீழ் மேலாக, பேய்ப்பீர்க்கங் கூடுபோல் யாக்கை முழுவதும் பரந்து நிற்கும்.

## எழுபத்தீராயிர நாடிகள்.

| | | | |
|---|---|---|---|
| தலையில் | ... 7,000 | தொண்டைக்கும் நாபிக்கும் மத்தியில் | 8,990 |
| வலது காதில் | ... 1,500 | | |
| இடது காதில் | ... 1,500 | பிடரியின் கீழ் | ... 8,000 |
| வலது கண்ணில் | ... 2,000 | விலாவில் | ... 3,000 |
| இடது கண்ணில் | ... 2,000 | கால்களின் சந்தில் | 8,000 |
| மூக்கில் | ... 3,330 | பீசத்தின் மேல் | ... 2,000 |
| பிடரியில் | ... 1,000 | பீசத்தின் கீழ் | ... 2,000 |
| கண்டத்தில் | ... 1,000 | பாதத்தில் | ... 1,000 |
| வலது கையில் | ... 1,500 | பிடரிக்குப் பின்னால் | 3,680 |
| இடது கையில் | ... 1,500 | | |

கோசம்-மூலம்-வயிறு-முடிச்சு முதலான தலங்களில் 13,000

ஆக நாடிகள் 72,000.

---

* கந்தத்தினுடைய தானமானது நமது ஞானக் களஞ்சியத்தில் கூறப்பெற்ற குண்டலிசத்திக்குச் சற்று கீழ், நாபிக்கும்-இலிங்கத்திற்கும் மத்தியப் பிரதேசத்தில், நான்கு அங்குல அகலமும்-நீளமுமுள்ள பட்சியின் முட்டை போன்ற வடிவத்துடன், வெண்மையாகவும்-மிருதுவாகவும், சுற்றப்பட்ட வெள்ளிய வஸ்திரத்தின் சொரூபம் போலவும் தோல் முதலியவற்றால் அலங்கரிக்கப் பெற்றிருக்கிறது.

குதத்தானத்திற்கு இரண்டு அங்குலம் மேலும், இலிங்கத்தானத்திற்கு இரண்டு அங்குலம் கீழுமாகிய பாகமானது, சரீரத்தினுடைய நடுமத்தி ஒரு அங்குலமென்றும், இந்த மூன்று அங்குலத்திற்கு மேல் அதாவது, மூலாதாரத்திலிருந்து பன்னிரண்டங்குலப் பிரமாணத்தில் (ஒருசாண் அளவில்) கந்தத்தான மென்றும் கருதப் பெறுகிறது.

நாடிகளின் நிலை

| விபரம் | பெரு நாடி | சிறு நாடி |
|---|---|---|
| மூலாதாரம் முதல் ஆக்ஞை வரையில் ... | 11,000 | 18,000 |
| கை கால்களில் ... | 7,000 | 12,000 |
| உந்தியில் ... ... | 1,000 | 2,000 |
| நவத்துவாரங்களில் ... | 1,500 | 3,500 |
| முதுகில் ... | 3,000 | 6,000 |
| எலும்பிலும், குடலிலும் ... | ...... | 7,000 |
| | 23,500 | 48,500 |

ஆக பெரு நாடிகள், சிறு நாடிகள் 72,000.

அந்த எழுபத்திராயிரம் நாடிகளுள் தசநாடிகள் முக்கியமானவை. சரீரத்திலுள்ள பிரதானமான தசநாடிகளாகிய பத்து இரத்தக் குழாய்களும் ஒன்று சேர்ந்து சரீரத்தை உறுதிப்படுத்தி நடத்துகின்றது. இந்த நாடிகள் அசைதல்-மடக்குதல்-முடக்குதல்-பிறளுதல்-நகருதல்-நடக்குதல் - ஓடுதல்-இழுக்குதல்-நீளுதல்-ஏறுதல் - இறங்குதல்-மாறுதல்-படுத்தல் முதலான செய்கைகளை யுடைத்தாயிருக்கின்றன. அத்தகைய தசநாடிகட்குள் இடகலை-பிங்கலை-சுழிமுனை யென்னும் மூன்று நாடிகளும் பிரதானமானவைகள்.

அகத்தியர் ஆயுள் வேதம் 1200.

சொல்லிய வுந்திக் கீழே சுழித்ததோ ரெழுத்தைப் பற்றி
எல்லையி லெழுந்த நாடி யெழுபத்தீ ராயி ரந்தான்
வல்லவர் வகுத்துச் சொன்ன வளம்பெற நாடி பத்தும்
நல்லதோர் நாடி மூன்று நயந்துகை யறிய லாமே. (53)

மேற்கூறிய மூன்று நாடிகளில் சுழிமுனை நாடியானது மிக்க பிரதானமும்-பிரயோசனமுமானது. ஆகையால் எல்லா நாடிகட்குள்ளும் நடு நாடியாகிய சுழிமுனையே சாலச் சிறந்தது. ஒருவன் பெருத்த இலாபத்தை அடையுங் காலத்தில் ஒரு சிறிய நாணயத்தை அற்பமாக மதிப்பது போல், சுழிமுனை யென்னும் பிரமநாடியின் அரும் பெரும் பயனை அடையுங் காலத்தில் ஏனைய நாடிகள் அற்பமாகவும், பிரயோசன மற்றதாகவும் மதிக்க நேரிடுகிறது.

## தசநாடிகள்.

இடகலை-பிங்கலை - சுழிமுனை - சிங்குவை - புருடன்-காந்தாரி-அத்தி-அலம்புடை-சங்கினி-குகு ஆக நாடிகள் பத்து. மேற்கூறப் பெற்ற நாடிக ளெல்லாம் கந்தத்தினின்றும் அரசிலையின் நரம்புகளைப்போல் கிளை கிளையாகப் பிரிந்து போகின்றன.

தசநாடிகளுள் பின்னதாகிய ஏழு நாடிகள் நீங்கலாக இடகலை - பிங்கலை - சுழிமுனை என்னும் மூன்று நாடிகளும் ஒரே நாடியா யமைந்து, இடகலை வாத நாடியாகவும், பிங்கலை பித்த நாடியாகவும், சுழிமுனை சிலேத்ம நாடியாகவும் நடக்கும். வாதம் மலத்திலும், பித்தம் நீரிலும், சிலேத்மம் விந்திலும் அடங்கும். இடகலை வலது கால் பெரு விரலிலிருந்தும், பிங்கலை இடது கால் பெரு விரலிலிருந்தும் சுழிமுனை மூலாதாரத்திலிருந்தும் உதயமாகி, இடகலையும், பிங்கலையும் சுழி முனையோடு கலந்து, கண்டத்திற் கத்தரிக் கோல்போல் இடகலை இடது நாசியிலும் பிங்கலை வலது நாசியிலுமாக மாறி, துரியாதீதம் வரையிற் சென்று கபாலத்தை முட்டி, குதிரையின் முகங் கவிழ்ந்து கொண்டிருப்பதைப் போல் இரண்டு நாசிவரையில் இயங்கிக்கொண்டு நிற்கும்.

## அகத்தியர் தருநாடி.

மூலமூத லாதார மாறுஞ் சுற்றி
மூர்த்திநின்ற பரவெளியில் முனையி னூடே
பாலமெனு மீதேறிச் சுழினை பற்றிப்
பதிந்துநிற்குங் கத்தரிக்கோல் மாறல் போல
சீலமுடன் தசநாடி பத்து மொன்றாய்ச்
சேர்ந்துநிற்கும் நாடிநிலை தேர்ந்து பார்க்கின்
ஞாலமதி லின்னதென்றே யறிய லாகும்
நாதாந்த குருவருளை நாடிப் பாரே.

## தசநாடிகளின் தொழில்.

1. சுழிமுனை:—முதுகின் நடுவில் வீணாதண்டம் என்னும் ஒரு எலும்புக் கூடானது சிரசு வரையிலும் பொருந்தியிருக்கின்றது. அந்தக் கூட்டின் மேருவின் மத்தியில் சிரசின் நடுவழி புகுந்து புருவ நடுவரையில் பொருந்துகின்ற அதிசூக்குமமாகிய ஊசித்துவாரம் ஒன்றிருக்கிறது. அதுவே பிரம்ம நாடியென்னும் சுழி முனையாம். இந்த நாடியின் உன்னத பாகத்தில் பிரம்மப் பிரகாசம் நிலை பெற்றிருப்பதால் இந்தச் சுழிமுனை நாடிக்குப் பிரம்ம நாடி யென்று பெயருண்டாயது.

2. இடகலை:—சுழிமுனைக்கு இடது பாகத்திலிருப்பது. இது இடது நாசியில் வியாபித்து நிற்கும்.

3. பிங்கலை:—சுழிமுனைக்கு வலது பாகத்திலிருப்பது. இது வலது நாசி வரையிற் பொருந்தி நிற்கும்.

4. சிங்குவை :—இடகலைக்கு முன்னிற்பது ; இது மூலாதாரத்தில் உற்பத்தியாகி அன்னபானாதிகளை விழுங்கும்படிச் செய்யும்.

5. புருடன்:—பிங்கலைக்குப் பின்னிற்பது; இது மூலாதாரத்தில் உற்பத்தியாகி வலது கண்ணளவில் பொருந்தி நிற்கும்.

6. காந்தாரி —இடகலைக்குப் பின்னிற்பது ; இது மூலாதாரத்தில் உற்பத்தியாகி இடது கண்ணளவில் பொருந்தி நிற்கும்.

7. அத்தி :—இது மூலாதாரத்தில் உற்பத்தியாகி வலது காதளவில் பொருந்தி நிற்கும்.

8. அலம்புடை:—இது மூலாதாரத்தில் உற்பத்தியாகி இடது காதளவில் பொருந்தி நிற்கும்.

9. சங்கினி :—இது மூலாதாரத்தில் உற்பத்தியாகி குறியளவில் பொருந்தி நிற்கும்.

10. குகு :—சுழிமுனைக்கு முன்னிற்பது; இது மூலாதாரத்தில் உற்பத்தியாகி அபானன்வரையில் பொருந்தி நிற்கும்.

எழுபத்திராயிரம் நாடிகளுள் தசநாடிகளைப் பற்றியே தமிழ் நூற்களும் - வட நூற்களும் வகுத்துக் கூறப்பெற்றுள்ளன. அன்றியும், வைத்திய நிபுணர்களும் இந்தத் தசநாடிகளின் முறைப்படியே கையாண்டு வருகின்றார்கள். அங்ஙனமிருக்க சில நூற்களில் இருநூற்று நாற்பத்தைந்து நாடிகள் என்றும், நூறு நாடிகள் என்றும், எண்பத்து நான்கு நாடிகள் என்றும் கூறப்பெற்றிருக்கிறது.

சில வட நூற்களில் தசநாடிகளுடன் வேறு அபிதானத்தையுடைய நாடிகளையும் சேர்த்துப் பதினான்கு நாடிகளாக அமைத்து, அந்தப் பதினான்கு நாடிகளுக்கும், இடம்-தேவதை முதலானவைகளும் பின் வருமாறு கூறப்பெற்றிருக்கிறது.

வடநூற்களிற் கூறப்பெற்றுள்ள பதினான்கு நாடிகள்.

1. சுழுமுனை, 2. இடகலை, 3. பிங்கலை, 4. குகு, 5. சரச்சுவதி, 6. யச்சுவினி, 7. பூஷை, 8. விசுவோதரை,

9. வருணை, 10. அத்திசிங்குவை, 11. பயசுவினி, 12. சங்கினி, 13. காந்தாரை, 14. அலம்புடை இந்தப் பதினான்கு நாடிகளும் முக்கியமானவையென்றும்,

சுழுமுனைக்கு அதிதேவதை - சிவன் என்றும், இடகலைக்கு-விஷ்ணு, பிங்கலைக்கு-பிர்மா, குகுவிற்கு - அக்கினி அல்லது பிரிதிவு, சரச்சுவதிக்கு-விராட், யச்சுவினிக்கு-சூரியன் அல்லது பிர்மா, பூஷைக்கு-அட்டதிக்கு அல்லது ஈசுரன், விசுவோதரைக்கு-அக்கினி, வருணைக்கு-வாயு, அத்திசிங்குவைக்கு - வருணன், பயசுவினிக்கு - பிரசாபதி, சங்கினிக்கு-சந்திரன், காந்தாரைக்கு - இந்திரன் அல்லது சந்திரன், அலம்புடைக்கு-வருணன் அல்லது சூரியன் என்றும்,

இவற்றுள் சரச்சுவதி சுழுமுனைக்குப் பின்னிற்பதென்றும், நாவளவு பொருந்தி நிற்குமென்றும்; யச்சுவினி பிங்கலைக்கு முன்னிற்பதென்றும், வலதுகாற் பெருவிரல் வரையிற் பொருந்தி நிற்குமென்றும்; பூஷை பிங்கலைக்குப் பின்னிற்பதென்றும், நேத்திரம் வரையில் பொருந்தி நிற்குமென்றும்; விசுவோதரை அத்திசிங்குவை-குகு என்னும் இரண்டு நாடிகளுக்கும் மத்தியிலுள்ளதென்றும், முகம் வரையில் பொருந்தி நிற்குமென்றும்; வருணை யச்சுவினி-குகு என்னும் நாடிகளுக்கு மத்தியிலுள்ளதென்றும், சரீர முழுவதும் கீழுமேலுமாகப் பொருந்தி நிற்குமென்றும்; பயசுவினி பூஷை-சரச்சுவதி என்னும் நாடிகளுக்கு மத்தியில் உள்ளதென்றும், வலது செவிவரையில் பொருந்தி நிற்குமென்றும், ஏனைய நாடிகள் இந்நூலிற்கூறிய முறைமைப்படியாகவும் கூறப்பெற்றிருக்கிறது.

மேற்சொல்லிய தசநாடிகளானது, சரீரத்தில் அன்னபானதிகள் செல்லவும், நாம்புகளானது ஓடவும், நடக்கவும்,

குனியவும், நிமிரவும் உதவியாகி, கப்பிக்கயிற்றைப்போலும், சூத்திரப் பாவை நடிப்பதற்கு நாம்புகள் இணைக்கப் பெற்றிருப்பது போலும் நமது சரீரத்தை இழுத்துப் பிடித்துக் கட்டி வைத்திருக்கின்றது.

ஞான வெட்டியான்.

விபரஞ்சொல்லுது மிடைபிங் கலைசுழி
மேவுமத்தி சிங்குபுருடன் காந்தாரியும்
அலம்புருடன் குருதன் சங்குனியு
மாகத் தசநாடி யையிரண் டாண்டையே
இபரம் பெரும்விரல் மேலுமிடைகலை
யின்பம் வலதுபெருவிரல் பிங்கலை
சுபரஞ்சுடரொளி மேலுமோங் காரமாய்ச்
சுற்றியே நிற்குஞ்சுழி முனையாண்டையே-விப. (135)

மூலச் சுழிதனி லேமுளைத்தாக்கையு
மீறியே பெருநாடி யுயர்ந்துடன்
மேலைச்சிர மகமேரு முடிவளர்
விற்பனமுங் கருவுற்பனஞ் சொல்வேனன்
கால்கொண்டு நாழிகலை கொண்டுவோய்வதுங்
காரணமாகவே கண்டம தாய்வளர்
வேல்கொண்டு மேகுழல் கொண்டுடல்மூலமே
வித்தாய்முளைத்தொரு பத்திது நாடிகாண்-விப. (136)

கண்டமது நரம்பான குழைதனில்
காந்தாரிநின்று கலந்துநீர் பாய்ந்திடில்
அண்டமதி லத்திசிங்கு வைத்தானும
வற்றையு நாலுமறி விப்பதாகுமே
நின்றிடுஞ் சிங்குவையப்பது வின்மயம்
நின்ற நிறமதுவுப் பதுவேசலம்
விண்டலம் புருடனிரு கண்ணளவு
மேவுகாந் தாரியுங் காதளவாண்டையே—விப. (137)

அத்தியு நின்றதது வலபாரிச
மான தளவாயமைத் தளவாய் பிர்ம
வித்தையு மாருயிரைம் புலனுதிகள்
வேதங்களோது மேலுந் தாள் வாயினி
சுத்திரிற்குஞ் சகாதிதசங்குனி
சுந்தரலிங்கஞ் சுகந்த தாள் பாரிசம்
நித்தமேவுகுகு தானுமானந்தம்
நேருந்தாள் வாயுமே நின்றிடு மாண்டையே—விப (138)

விருத்தம்.

இடகலையும் பிங்கலையும் இரண்டுங் கூடி
இருகாலின் பெருவிரலின் மேலே நின்று
நடுவிலொரு கத்தரிக்கோல் மாற லாகி
நாசிமுனை முட்டிநிற்கும் நயந்து பார்க்கத்
திடமுடைய சுழியின்முனை மூல நோக்கிச்
சிரசளவு மாதார மாறி நிற்கும்
அடைவான சிங்குவைத்தா னுவுக் குள்ளே
அன்னமுடன் தண்ணீரும் அமைத்த தாண்டே (144)

வட்டமிட்ட புவியதனில் குருதானிற்கும்
வலதுதாள் காந்தாரி வாக்கில் நிற்கும்
இட்டவலம் புருடனிடதாள் வாய் நிற்கு
மிருந்திடுசங் கினியும்லிங்கத் தாள்வாய் நிற்கும்
சட்டமுடன் குகுதனிற்கும் பானன்தாள்வாய்
சார்வாகுந் தசநாடி சமைந்தநேர்மை
அட்டதிசை புகழுமுட லுயிரு மாக
ஆதரவா யாவிநின்ற தருள்செய் வேனே. (145)

---

## பத்தாவது அத்தியாயம்.

---

### தசவாயுக்கள்.

கலி விருத்தம்.

*நன்ற தாந்தச நாடிக் குழைக்குளே*
*சென்று மீளுந் திறற்றச வாயுவின்*
*வென்றி குன்றல் வியன்றொழி றன்னையும்*
*ஒன்று மாறு தொகுத்துரைப் பாமரோ.*

பிராணன்—அபானன்—வியானன்—உதானன்—சமானன்—நாகன்—கூர்மன்—கிரிகரன்—தேவதத்தன்—தனஞ்சயன் எனத் தசவித வாயுக்கள் ; இவை யுடலில் நிற்பவை.

**பிராணன்:** இது லலாட மத்தியிற்றோன்றி, சந்திர நாடியிற் கலந்து, மூலாதாரத்தில் ஓம் என்ற மௌனக்காம் தொனிக்கும்படி உதித்து, நாபிச் சக்கரத்தில் ரீம் என்ற தொனி யுண்டாகும்படி மோதி, இட—பிங்கலைகளின் நடுவாய், மணிபூரகம், அனாகதம் முதலான ஆதாரங்களின் வழியாய்ச் சஞ்சரித்து, கபால மண்டலத்தைச் சுற்றித் திரும்பி, கண்டமென்னு மிடத்தில் எட்டங்குலமாகப் பிரிந்து, நாசிகையின் வழியாக வெளியிற் சென்று நான்கு அங்குலம் கழிந்துபோய் எட்டங்குலம் மீந்து தானுதித்த இடத்தில் வந்து தாக்கும். இவ்வாறு தாக்குதல் உத்தம சரீரிக்கு நாழிகை ஒன்றுக்கு முன்னூற்றறுபது சுவாசமாக இராப்பகல் அறுபது நாழிகைக்கும் $(60 \times 360) = 21{,}600$ சுவாசம் கொல்லன் துருத்திக்குள் காற்றேறுவது போல் எறி, பின்வரும் சரலாப நஷ்டம் என்ற தலைப்பின் கீழ் கூறியபடி 7,200 சுவாசங்கள் செலவழிந்தது போக 14,400

சுவாசங்கள் உள்ளடங்கும். இவ்வாறு சுவாசங்கள் செல வழிந்து போவதானது சாதாரண தேகிகளுக்கே யன்றி யோகிகளுக் கன்று.

அபானன்: இது உந்திக் கமலத்தின்கீழ் குதத்தையுங் குய்யத்தையும் பற்றிநின்று, மல, மூத்திரங்களைக் கழிக்கும்.

மேற் கூறப்பெற்ற பிராணன் சரீரத்தில் வெப்பத்தையும், அபானன் தட்பமாகிய குளிர்ச்சியையுந் தருதலால், இவ்விரண்டு வாயுக்களையும் பிராணுயாம யோகாப்பியாசிகள் வெளிச்செல்ல விடாமல் முறையே நாசியினுலும், அபானத்தினுலும் உள்ளடக்க வேண்டுமென்பது கருத்து.

வியானன்: சாப்பிட்ட அன்னபானுதிகளைப் பிரித்து, எழுபத்திராயிரம் நாடிகட்கும் செலுத்தி வைக்கும்.

உதானன்: புசித்த ஆகாரங்களைச் சீரணிக்கும்படி செய்து நிற்கும்.

சமானன்: புசித்த அன்னபானுதிகளை சகல கருவிகளுக்கும் நியாயாதிபதிபோற் சம பாகமாகப் பிரித்து நிரப்பி வைக்கும்.

பிராணன் பித்தத்திலும், அபானன் வாதத்திலும், சமானன் சிலேத்துமத்திலும் நிற்கும். இந்த மூன்று நாடிகளை அனுசரித்தே பண்டிதர்கள் பிணியாளர் காத்தைப் பிடித்து நாடிகளைப் பரீட்சிக்கின்றனர்.

நாகன்: விக்கல், முக்கல், வீங்கல், திமிரல் முதலியவைகளை யுண்டாக்கும்.

கூர்மன்: கண் களித்தல், கண் சிமிட்டல், சிரித்தல், புளகாங்கித முறல், கொட்டாவி விடல், மயிர் விதிர்த்தல் முதலியவைகளை யுண்டாக்கும்.

கிரிகரன்: ஆயாசம், சோம்பல், தும்மல், இரங்கல் (அழுதல்) முதலியவைகளை யுண்டாக்கும்.

தேவதத்தன்: ஓடல், உலாவல், இளைத்தல், வியர்த்தல் முதலியவைகளை யுண்டாக்கும்.

தனஞ்சயன்: பிராணன் உடலைவிட்டு நீங்கிய பின்னரும், தான் மாத்திரம் போகாமல் தங்கி உடலை வீங்கும்படிச் செய்து, இயற்கையில் சுமார் மூன்று நாட்களுக்குப் பின்னர் உச்சி வழியாய்க் கபாலத்தைப் பிளந்துகொண்டு செல்லும்.

பஞ்சவாயுக்கள்.

ஆகாயமுதல் பிரிதிவு ஈறாகவுள்ள பஞ்ச பூதங்களின் இராசத அம்சத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரையாக எடுத்து பஞ்சீகரணப்படுத்தி ஒன்றாகக் சேர்த்தது வியானாதி பஞ்ச வாயுக்களாம்.

வியானன்: ஆகாயத்தின் அம்சமாதலால் ஆகாயத்தின் அம்சம்போன்று சரீரம் முழுவதும் வியாபித்து நிற்கும்.

பிராணன்: வாயுவின் அம்சமாதலால், வாயுவைப் போன்று இருதயத்தினின்று நாசியாதி வரையிற் சஞ்சரிக்கும்.

அபானன்: அக்கினி (தேயுவி)ன் அம்சமாதலால், அக்கினியைப்போன்று சடராக்கினியாக வெப்பம் பொருந்தி குதத்தைப்பற்றி நின்று, புசித்த அன்னபானாதிகளைச் சீரணிக்கச் செய்யும்.

சமானன்: அப்புவி (நீரி)ன் அம்சமாதலால் சரீரத்தின் நடுமத்தியாகிய நாபித்தானத்தில் நின்று, புசித்த ரசங்களை நீரைப்போல் இழுக்கும்.

உதானன்: பிரிதிவி (மண்ணி)ன் அம்சமாதலால், கண்டத்தைப்பற்றி மண்ணைப்போல் கடினமாக நின்று, புசித்த அன்னபானாதிகளைக் கடைந்து பக்குவப்படுத்திக் கொடுக்கும்.

நாகன்-கூர்மன்-கிரிகான் - தேவதத்தன் - தனஞ்சயன் முதலிய ஐந்து வாயுக்களும் பிராணனுடைய தொழிலாத லால் இவைகளைத் தசவாயுவாகப் பிரிக்கப்படா தென்றும் ஐந்து வாயுக்களாகத்தான் கொள்ளவேண்டுமென்றும் சில சாரார் கூறுவர்.

அன்றியும் வைரவன்-முக்கியன், அந்தரியாமி-பிரவஞ் சன் என்று நான்கு வாயுக்களைச் சேர்த்து பதினான்கு வாயுக்களாக, அதாவது:—

1. வைரவன்: காலெலும்பும்-கதிரெலும்பும் கூடின விடத்தில் நின்று, சரீரத்தில் அவத்தையுண்டாக்கி, ஈளை இருமல் முதலான நோய்களை யுண்டாக்கும்.

2. முக்கியன்: கையெலும்பு இரண்டும், கதிரெலும் பும் கூடியவிடத்தில் நின்று சரீரத்தின் யாக்கைகளைச் சிறக்க நிறுத்தும்.

3. அந்தரியாமி: புருடனுக்கு வாகனம்போல் நின்று பிராணவாயுவை உண்டுபண்ணும்.

4. பிரவஞ்சன்: ஓங்கார (பிரணவ) த்துக்கு ஆசனம் போலிருந்து, அந்தரியாமியுடன் சேர்ந்து, சரீரத்திற்கு அச்சாணிபோல் இருக்குமென்றும் கூறப்பெற்றிருக்கிறது.

ஞானவெட்டியான்.

வாய்வு தசபத்தின் வாறும் அறிந்திடில்
வளமையாம் பிராணன பானன்வி யானனும்
சேயு முதானன் சமானன் கூர்ம னுகன்
திரிகா னுகிய சித்திர நாடிதான்
ஆயுநாடி நரம்பதுந் தனஞ் செய
னருள்தரும் தேவதத்த னீரைஞ்சு
பாயுந் தசவாய்வு பத்துட னுனதும்
பார்க்கப் பார்க்கப் பரிட்சைக ளாகிடும் (விபாஞ்) (140)

# தேக தத்துவ படம்.

படத்திலுள்ள எண்.



1. சுவாசக்குழாய் (குரல்வளை)
2. நுரையீரல்கள்.
3. மார்புக் கூட்டிலிருந்து வயிற்றுக் கூட்டைப் பிரிக்கும் சதைப்படலம்.
4. ஈரல்.
6. சிறுகுடல்.
7. பெருங்குடல்.
8. கோக்கிப்பெருங்குடல்.
9. குண்டிக்காய்கள், அதையடுத்து கயிறுபோல் தொங்குவது மூத்திரக்குழாய்கள்.
13. மண்ணீரல்.
14. விலாவெலும்புகள்.
16. இருதயம்—(இரத்தாசயம்.)
17. இரத்தாசயத்திலிருந்து நுரையீரல்களுக்கு அசுத்த இரத்தத்தைக் கொண்டுவரும் இரத்தநாடி.
18. மூல இரத்த நாடி.
19. மேல் பாகங்களிலிருந்து அசுத்த இரத்தத்தைக் கொண்டுவரும் நாளம்.
21. வயிற்று மூலநாடி.
22. ஆசன பாகத்தை குறுக்கே அரிந்தமாதிரி.
23. வயிற்றையும் அரையையும் பிரிக்கும் பாகம்.
24. அரையின் உட்புறத்தோல்.
28. கருத்தரிக்கும் கெர்ப்பப்பை.
29. முட்டைப்பைகள்.
30. முட்டைக்குழாய்கள்.
31. கருப்பைக்குச் செல்லும் வாய்.

இவைகளை முன் பக்கத்தில் அமைத்துள்ள படத்திற் காண்க.

5, 10, 11, 12, 15, 20, 25, 26, 27. இந்த எண்கள் குறிப்பிடவில்லை.

பிராணன் மூலந்தனில் மேல்தொடர்ந் தோங்கியே
பின்னும் பன்னிரண்டு வங்குல மோடிடில்
அறிவது நான்கு பண்டடங்கி நாலோடும்
அபானன் மலசல மறிந்து போக்கிடும்
பிரியும் வியானனு முண்டசா ரந்தனைப்
பிரிந்தெழுந் தெழுபத்தி ராயிர நாடிக்கும்
தரியுமு தானன் செரிப்பித் தேப்பமிட
சமானன் சரியாகத் தானிருக்கும் வாறு (விபரஞ்) (141)

நாகன் களைவிக்கல் சோம்பலுண் டாக்கிடல்
நற்கண்ணிலே நின்று கூர்மனி மைத்திடல்
தேகத்தி ரகாஞ் சோபமுண் டாக்கிடல்
தேவதத்தனுங் கெட்டாவி நகைத்திடல்
வாகச் சிரித்திடல் தனஞ்செய னுச்சி
வாழ்வதுமே லெனுந்தொடங்கி யாத்துமம்
ஆகமடங்கி யப்போதினி லண்ட
மதுபிளந் தாக்கினை யப்பாலோ டிடுங்காண் (விபரஞ்)

விருத்தம்.

பேரான பிராணன்பெரு மூலந் தன்னில்
பெலத்தவீரா றங்குலத்தில் மீள வாங்கி
நேரான கண்டமதி லோரெட் டாகி
நிலைபிசகா நாலுமது வெளியி லோடும்
சீரான அபானனுந்திக் கமலத் தின்கீழ்
திரமாக மலசலத்தைக் கழித்து நிற்கும்
ஈரான வியானனுண்ட வன்னந் தண்ணீர்
எழுபத்தி ராயிரநா டியிலுஞ் சென்றே. (146)

நின்றிலங்கும் நாடியது பிரித்து வைக்கும்
நிகழ்ந்திடுமு தானன்செரிப் பித்தே நிற்கும்
ஒன்றிலங்குஞ் சமானனுண்ட வன்னந் தண்ணீர்
ஒருவருக்கு மேறவொட்டா திருக்கு மாகில்

தன்றிலங்கும் நாகனுமே விக்கல் கக்கல்
தனமிகுத்த கூர்மனிரு விழிநீர் பாய்ச்சல்
அன்றிவிழி சிமிட்டிவிக்குங் கிரிக ரன்றான்
ஆயாசஞ் சோம்பல்தும்ம லசதி யாமே. (147)

வசதிநகைத் திடுவனெனும் வழிலை யாவன்
வதைத்திடுவன் தனஞ்செயனு முச்சியேறி
நிசதிநின்று மேலாகத் துடிக்கச் செய்வன்
நிரந்தரமா யாதார மேலாய் நிற்பன்
நிசதியினல் சரீரத்தில் வாய்வுக் கெல்லாம்
நிஷ்களமா யதிகாய நிலைத்த தாண்டே
இசைத்ததிரு மூலனு ருரைத்த வண்ணம்
இனியதொரு ஞானவெட்டி யியம்பினேனே. (148)

நிரந்தரமாய் மூலமென்ற பாண்டங் தன்னை
நீடுலகி னடித்துவைத்து மோசம் செய்தால்
தரந்தரமாய் கருவியெல்லா மாண்ட பின்பு
தனஞ்செயனு மகண்டவெளி சார்ந்துயேகி
அறுந்துதச நாடியெல்லா மசைவெல்லாம் போய்
ஆதார மாறுமகன் றசைவு மற்று
சிறந்தவுடலுயிர்க் குறிய செயலுஞ் சொன்னேன்
தெரிசனமுங் கண்டுதிரு வுருச்சொன் னேனே. (149)

இந்த வாயுக்களைப் பற்றி அரபி நூற்களில் பின் வருமாறு கூறப் பெற்றிருக்கிறது. சிர்று என்னும் பரம இரகசியத்திலிருந்து நூர் என்னும் ஒளிவுண்டாகி, அவ்வொளிவிலிருந்து ஜலாலிய்யத்து என்னும் உருத்திரப் பார்வையால் அக்கினி யுண்டாகி, அவ்வக்கினிச் சுவாலையிலிருந்து வாயுவுண்டாகி, அந்த வாயுவிலிருந்து நீருண்டாகி, அந்த நீரிலிருந்து மண்ணுண்டாகி, மண்ணிலிருந்து கல் உண்டாகி, கல்லிலிருந்து இரத்தினம், பொன், வெள்ளி, இரும்பு, செம்பு முதலிய உலோகங்களுண்டாயின வென்

றும் ; பின்னர் அம்மண்ணானது இளகி, புல் - பூண்டு-மரம்-செடி-கொடி முதலானவைகளும், மிருகம்-மனிதர் முதலானவர்களும் உண்டாக்கப் பெற்றதென்றும் கூறப்பெற்றுளது.

மற்றொரு அரபி நூலில் இப் பிரபஞ்சத்திலுள்ள வஸ்துக்களெல்லாம் நான்குவகைத்தானதென்றும், அவை (1) ஜமாது (நிர்சவஸ்து அதாவது ரசமற்ற கல் - மண் போன்றவைகள்) (2) நபாத்து (தாவர வஸ்துக்கள்) (3) ஹைவான் (பகுத்தறிவற்ற பிராணிகள்) (4) இன்சான் (பகுத்தறிவுடைய மனிதன்) என்றும் கூறப் பெற்றிருக்கிறது. அன்றியும்,

## பிராணிகளின் தத்துவம்.

மனிதனுக்கு மாமிசத்தினால் அக்கினியும், தாவரங்களினால் வாயுவும், தண்ணீரினால் குளிர்ச்சியும், கனி வர்க்கங்களினால் மண்ணும் உண்டானதென்றும்; இந்த நான்கு வகைத்தான பதார்த்தங்களைப் புசிக்குங்கால் (1) ஜாலிபா என்னும் தத்துவம் ஆகாரங்களை உள்ளே இழுக்கிறது. (2) மாஸிக்கா : அவற்றை வெளியே விடாமல் தடுக்கிறது. (3) முமய்யிசா : சத்தையும் சக்கையையும் பிரிக்கிறது. (4) ஜாதிபா: அந்தச் சத்துக்களை நரம்புகளின் வழியாய் அந்தந்தத் தானத்திற்குச் செலுத்துகிறது. (5) தாபிஆ: அந்தச் சக்கைகளை வெளியில் தள்ளுகிறது. (6) ஹாலிமா : அவற்றைச் சீரணிக்கச் செய்கிறது. (7) முன்மியா : சரீரத்தை வளர்க்கிறது (8) முஸவ்விரா : உருவம் உண்டாக்குகிறது என்று எட்டு தத்துவங்கள் கூறப்பெற்றிருக்கிறது.

## தாவரங்களின் தத்துவம்.

இதற்கு நூஹானியல் நபாத்து என்று கூறுவார்கள். இது மனிததத்துவங்களிலிருந்து ஒரு தத்துவம் குறைவாக

(1) ஜாதிபா: உணவுகளை உள்ளே இழுத்தல். (2) மாஸிக்கா: வெளியே விடாமல் பிடித்தல் (3) ஹாலிமா : சீரணிக்கச் செய்தல் (4) முமய்யிசா : பங்கிட்டுச் செலுத்துதல் (5) முஸவ்விரா : பல நிறங்களாகச் செய்தல் (6) தாபிஆ : தேவையற்றவைகளை வெளியே தள்ளுதல் (7) முவல்லிதா : பலுகச் செய்தல் என்று ஏழு தத்துவமாகக் கூறப்பெற்றுள்ளது. ஆகையால் இவைகளை நன்கறிந்து அனுட்டிப்பவர்கட்கு சரீர சுத்தியும் ஆன்மலாப சோபானமும் சித்திக்கும்.

---

## பதினோராவது அத்தியாயம்.

---

### சுவாசவியல்.

விருத்தம்.

*மாசறு சடத்துட் போக்கும் வரவு மாய்ச் சரிக்கு மூல*
*வாசியி னியலும் வார சரத்துடன் சரத்தை மாற்ற*
*நேசமார் தந்தும் யோக நிலைக்குரித் தான பற்பல்*
*வாசகங் கலையும் பக்கு வர்க்கெடுத் துரைப்பா மன்றே.*

ஒரு சீவனுக்குப் பிரதானமாயுள்ளது சுவாசம். எதைப் பிரிந்தாலும் பிரிந்திருக்கலாம் ; சுவாசத்தை மட்டும் பிரிந்து உயிரோடிருக்க முடியாது.

வலது-இடது என்னும் உபயநாசிகளிலிருந்து இயங்கிக் கொண்டிருக்கும் சரத்திற்கு சுவாசம் என்று பெயர்.

சுவாசம்-சரம்-கலை - வாசி-நாடி-கால்-மூச்சு - வாயு - வளி முதலியன ஒருபொருட் பலபெயர்.

சர நூல் சாஸ்திரத்தில், இடது நாசியில் இயங்குஞ் சுவாசத்தைச் சந்திரகலையெனவும், வலது நாசியில் இயங் குஞ் சுவாசத்தைச் சூரியகலையெனவும், இரண்டு நாசியிலுங்

கலந்து நடக்கும் சுவாசத்தைச் சுழிமுனையெனவும் கூறப் பெற்றிருக்கின்றது; இது ஆரம்ப அப்பியாசிகளுக்கு ஏற் படுத்திய முறையாம்.

ஞானசாநூல்.

பார்க்கிலிடை யிடமதுவே திங்க ளாகும்
பகலவனும் பின்கலையே வலம தாகும்
ஏற்கவுரை சுழிமுனைதா னடுவா மங்கி
இடையான சந்திரனே அமுத மாகும்.

சாநூல் சாத்திரத்திற் கூறியுள்ளபடி இடது நாசியை இடகலையாகவும், வலது நாசியை பிங்கலையாகவும் ஏற் படுத்தி அப்பியாசித்துக் கொண்டே வந்து, திக்றுஜல்லி என்னும் தியானத்தின் வேகமான தாக்குதலினால் சுழி முனை திறந்த யோகாப்பியாசிகள், கத்தரிக்கோல் மாறலின் மார்க்கம் திறக்கப் பெற்று, சுவாசமானது ஊசித் துவாரத் தின் வழியாக சுழிமுனை மார்க்கத்தில் செல்வதால் அவர் களுக்கு வலது புறம் சந்திர நாடியாகவும், இடது புறம் சூரிய நாடியாகவும் ஏற்படுகிறது. இதை அனுசரித்தே,

விஞ்ஞானதீபம்.

வலங்கொண்ட இடகலையைப் பற்றி யேறி
வாகான சுழிதனிலே நின்று யானால்
சலங்கொண்டு பொழிவதுபோ லுள்ளே மாறும்.

தூயரவி ஞாயிர்செவ்வாய் சனிவி யாழந்
துலங்குபுதன் வெள்ளிதிங்கள் மதியா மென்றே
தாயகமாய்ச் சிவனுமையாள் தனக்குச் சொன்னார்
தப்பிதென்று வுணராமல் அவளுங் கேட்டாள்
வாய்ஞான மல்லவிது யோக மார்க்கம்
வழுவாதே கலையதனை வசமாய் மாற்று
காயமதாய்ச் சிவன்மொழிபோற் கலையை மாற்றிக்
கலக்கினு லுனைக்கலக்குங் கருத்தாய் நில்லே.

ஞானமணிமாலை.

இடப்புற மியங்கும் போது இறையவ னொளியைக் காட்டுங்
கடற்பெறு வலது பாகங் கக்கிற சூலைக் காட்டும்

என்று கூறியிருத்தலால், ஞானசரநூலில், இடது நாசியில் நடக்கும் சரம் சந்திரகலையெனவும், வலது நாசியில் நடக்கும் சரம் சூரியகலையெனவும் கூறியிருப்பதை யோசிக்குமிடத்தில், சுருதி - யுத்தி - அநுபவம் இம்மூன்றிற்கும் முரண்படுகிறது. இவ்வாக்கியத்தைச் சரசாஸ்திரத்தில் பூரண அநுபவமும், பாண்டித்துவமு முடையவர்கள் ஒப்புக்கொள்வார்களென்பதற் கையமில்லை.

ஞானவெட்டி.

கத்தரிக்கோல் மாறல் கனகசபை வீட்டினுள்ளே
வித்தாய் விளைந்ததுகாண் விந்து.

இடது காற்பெரு விரலிலுள்ள சுவாசம் வலது நாசியிலும், வலது காற்பெரு விரலிலுள்ள சுவாசம் இடது நாசியிலுமாக மூலாதாரத்திலுதித்த சுவாசம், கண்டத்திற் கத்தரிக்கோல் போன்று மாறி விட்டபடியால், இங்கு சரநூலுக்கு விரோதமாகவே வலது நாசியில் நடக்கும் சுவாசம் சந்திரகலையாகவும், இடது நாசியில் நடக்கும் சுவாசம் சூரிய கலையாகவும் பெயர் பெறும்.

வடலூர் திருவருட் பிரகாசவள்ளற் பெருமானவர்கள் தமது திருவருட்பா சுத்த சன்மார்க்க திருநெறிக் குறிப்பில் ஜலபேதமென்ற தலைப்பின் இறுதியில்—

சூரியன் ஆணாகவும், சந்திரன் பெண்ணாகவும், வலம் இடம் சத்தி சிவமாகவுமுடையது. இது சத்தியம். வலம் சந்திரனாகிய சத்தியாகியும், இடம் சூரியனாகிய சிவமாகியுமிருப்பது அனுபவம். கிரியானுபவத்திலுள்ள இடம்

வலமாகவும், வலம் இடமாகவும் அனுபவம் தோன்றும் என்று திருவாய் மலர்ந்துள்ளார்கள்.

கலைகளுக்கு பால் - திணை - இராசி இவைகள் கூறுமிடத்து, சந்திரகலை - பெண்பால் ; சூரியகலை - ஆண்பால் ; சுழிமுனை-அலியாகும். சந்திரன்-சூரியன் இரண்டும் உயர்திணை ; சுழிமுனை-அஃறிணை. இராசியில் சந்திரன்-சராசி ; சூரியன்-திராசி; சுழிமுனை-உபயராசி. இவைகள் முறையே-சோம - சூரிய - அக்கினியெனப் பெயர்பெறும். ஒவ்வொரு நாடிகளுக்குள்ளும் ; பிரிதிவு - அப்பு - தேயு-வாயு - ஆகாயம் என்னும் பூதியங்களுண்டு ; அவைகட்கு முறையே - மண்-நீர்-நெருப்பு-காற்று-வான் என்று பெயர்.

சந்திரகலை நடக்கும் பொழுது தூதனுப்புதல், தானே தூது செல்லல், புதிய ஆடை தரித்தல், ஆபரணுதி அணிதல், விவாகம் செய்து கொள்ளுதல், அடிமை கொள்ளுதல், கிணறு-குளம் வெட்டுதல், வீடு-மனை வாங்குதல், குடி புகுதல், பொருள் விற்கிரையம் செய்தல், புதிதாய் அரசரைக் காணல், தனக்கு மேலானவர்களாய் இருந்தாலும் உண்மையாகிய வஸ்துவைத் தெரிந்து சார்தல், சாந்தி கழித்தல், தெய்வப் பிரதிட்டை செய்தல், சுரம் தீர்த்தல், சமாதானம் செய்தல், கல்வி கேட்டுக் கொள்ளுதல், பாப விமோசனம் செய்தல் இவைகள் யாவும் நன்மையாக முடியும்.

சூரியகலை நடக்கும்போது குருவுபதேசம் பெறுதல், உபதேசம் செய்தல், செய்து வைத்தல், எதிரியை விரட்டல், பயிர் விளைவித்தல், வியாபாரஞ் செய்தல், தீரா வழக்கைத் தீர்த்தல், யானை – குதிரை – தேர் – தண்டிகை யூர்தல், சங்கீதம் பாடல், பேசத் தொடங்கல், பகைமை யுண்டாக்கல், ஒருவனைப் பங்கஞ் செய்தல், பசாசு ஓட்டல்,

மந்திரநிட்டை சாதித்தல், மருந்தருந்தல், கொல்லும் விடத்தைத் தீர்த்தல், கொடிய வியாதியைப் போக்கல், தம்பன யோகஞ் செய்தல், ஸ்நானஞ் செய்தல், போசனம் புசித்தல், நித்திரை செய்தல் இவைகள் உத்தமம். ஆனால் சூரியகலை யியங்கி வருகிற மட்டும் போசன மில்லாமல் காத்திருக்க வேண்டியதில்லை. சந்திரன் நடக்கும்போதும் சாப்பிடலாம். உஷ்ணமான வஸ்துக்களையும், உப்பு, கசப்பு, காரலாகியவைகளையும் வைத்துக் கொண்டு தாகபானத்தை நிறுத்தி யுண்ணவேண்டியது. சூரியன் நடக்கும்போது நெய்-பால்-புளித்தல்-தித்தித்தல்-துவர்த்தலாகிய வஸ்துக்களுடன் அப்போதே தாகபானமும் செய்யலாம். சந்திரனில் கூடாதாயினும் சூரியனில் சாப்பிடலாம். இது மாறினும், சூரியனுக்காகக் காத்திராமல் அவாவினால் அடுத்தடுத்து சந்திரனில் சாப்பிட்டு வந்தாலும் கெடுதலாம். அரை பாகம் உணவும், கால் பாகம் தண்ணீரும் கொண்டு தச நாடிகளையும் பிராணயாம முன்னிலையில் சுத்தி செய்து ஏகாக்கிர சித்தனாய் சரம் பார்க்கவேண்டியது.

சந்திரகலை, சூரியகலை இரண்டுஞ் சேர்ந்து சுழிமுனையாக நடக்கும்போது சமாதி யோகஞ் செய்தல் (கருவி கரணங்களோயச் சும்மா விருக்கும் நிலைமட்டும்) கைகூடும். வேறு உலகத்தின் நன்மையான காரியம் ஒன்றேனும் கைகூடாது ; கெட்ட காரியங்களெல்லாம் பலிக்கும். சரம் எந்தப் புழையில் ஓடுகின்றதோ அந்தப் பக்கம் பூரணமென்றும், சரம் ஓடாத பக்கம் சூனியமென்றும் பெயர். பூரண பக்கத்தில் நின்று வழக்குப் பேசுகிறவர்களை, தர்க்கம் பண்ணுகிறவர்களை, சண்டை செய்பவர்களை, அரசனை அல்லது தமக்கு மேற்பட்டவர்களை காணலாம். மேற் கூறியுள்ளவர்களைத் தனக்குச் சமோடாத சூனிய பக்கத்தில் நிறுத்தினால் எளிதில் வெல்லலாம்.

மேற்கும், தெற்கும் இந்த இரண்டும் சந்திரன் திசை. கிழக்கும், வடக்கும் சூரியன் திசை. இவைகளில் யாத்திரை செய்ய நாடியவன் சந்திரனில் சந்திர திசையும், சூரியனில் சூரிய திசையுமே செல்லவேண்டியது. சுமார் 20 காத வழிகளுக் கப்பால் செல்லவேண்டுமானுல் சந்திரனில் புறப் பட்டுச் சூரியனில் போய்ச் சேரவேண்டும். அப்படி சேருவதற்கு தருண பேதமாயும், சரமும் இசைபிசகாயும் மாறி யோடி, சூரியகலையிற் செல்லவேண்டிய பிரயாணத் திற்கு சந்திரகலையாக இருந்தால், சந்திரகலையை உள்ளே இழுத்துப் பூரணமாக்கி, இந்தக் காலையே இரண்டுதா முன் னிட்டு வைத்து, பின்பு சுதாவாய் நடந்து வழியில் நிற்கா மல் கொஞ்சதூரம் செல்லவேண்டியது. இதனுல் சந்திர பலன் கெட்டுப்போகும் ; தீமை யில்லை.

சூரியகலையிற் செல்லவேண்டிய பிரயாணத்திற்கு சந் திர கலையா யிருந்தால் மேற்கூறியவாறே செய்தல் வேண் டும். இதற்கு எதிரிடையாக சந்திரகலையில் சூரியன் திசை யும், சூரியகலையில் சந்திர திசையும் சென்ருல், செல்லுமிடத் தில் விரோதமும், அபசெயமும், தண்ணீர் அல்லது மழை முதலியவற்ருல் உயிர்ச் சேதமும் ஏற்படும்.

சந்திரனுடைய திசையும், பக்கமும் அது பூரணமாகு லும் கிஞ்சித்து மத்திபம்.

சூரியனுடைய திசையும், பக்கமும் சூனியமானுலும் திரணமாயினும் நன்மை யுண்டாகுமே யன்றி வியர்த்த மாகாது.

பஞ்சபூத நடை.

மூக்கிலிருந்து வருஞ்சுவாசம் மூக்குத்தண்டைச் சார்ந் தோடினுல் பிரிதிவியின் கூறு. கீழ்நோக்கி யோடினுல் அப் புவின் கூறு. மேற்புறமாகப் பாய்ந்தோடினுல் தேயுவின்

கூறு. மூக்குத்தண்டிற்கு நேராகிய மற்றொரு புறத்தைச் சார்ந்தோடினால் வாயுவின் கூறு. நான்கு பக்கமும் கலந்தோடினால் ஆகாயத்தின் கூறென்றறிக.

### பஞ்சபூத நிறமும்-சுவையும்.

பிரிதிவு சாம் பொன்னிறம், அப்பு வெண்மை, தேயு செம்மை, வாயு கறுமை, ஆகாயம் படிகம் அல்லது புகை. அப்போது சாம் பார்ப்பவர் கண்டத்தில் எவ்வித வுணர்ச்சி தோன்றுமெனில், பிரிதிவுக்குக் கண்டந் தித்திக்கும், அப்புவுக்குத் துவர்க்கும், தேயுவுக்கு உவர்க்கும் அல்லது அழற்சியாயிருக்கும், வாயுவுக்குப் புளிக்கும், ஆகாயத்துக்குக் கசக்கும்.

### பஞ்சபூதக் குறி-குண-தெய்வம்.

பிரிதிவிக்கு வச்சிரம், அப்புவுக்குத் தாமரை, தேயுவுக்கு அசுவத்திகம், வாயுவுக்கு ஆறுபுள்ளி, ஆகாயத்துக்கு அமுதவிந்து.

பிரிதிவி கடினம், அப்பு நெகிழ்வு, தேயு சுடுகை, வாயு திரட்டல்; ஆகாயம் நிரந்தரம்.

பிரிதிவிக்குப் பிரமன், அப்புவுக்கு விண்டு, தேயுவுக்கு உருத்திரன், வாயுவுக்கு மகேசன், ஆகாயத்திற்குச் சதாசிவன்.

### பஞ்சபூத வடிவம்.

பிரிதிவு நாற்கோணம், அப்பு அட்டமி (அர்த்த) சந்திரன், தேயு முக்கோணம், வாயு அறுகோணம், ஆகாயம் வட்டம்.

சாம் ஓடுகின்ற நீட்சியைக் கூறுமிடத்து :—பிரிதிவு 12 அங்குலம் ஓடும், அப்பு 16, தேயு 8, வாயு 4, ஆகாயம் 1 என்றறிக.

வேத புராணம்.

பிரிதிவிக் கோடும்போது பிலத்த இல்லல்லாகுவென்
றுறுதியாய் நூறுவட்ட முரைக்கப் பொன்ஞெளி போற்றேற்றும்
பொருதி நீரோடும்போது பொருளல்லா நூறு வட்டம்
அறுதியா யுறைந்து வந்தா லருட் பளிங்கியைப் போற்றேற்றும்.

தேய்வதுக் கோடும்போது திருவொளி குவல்லா வென்றே
ஆய்ந்தொறுநூறு வட்ட மூருக்கம்பூப் போலத் தோற்றுந்
தோய்வாய்வுக் கோடும்போது துலங்கியே நிலவுதோற்றும்
சேய்வெளிக் கோடும்போது திருவொளி காணுந்தானே.

பஞ்சபூத உட்பிரிவு.

ஐந்து வகையாகச் சொல்லப் பெற்ற ஒவ்வொரு பூதியத்திலும் ஐந்தைந்து பூதியங்களாக இருபத்தைந்து பூதியங்கள் நடக்கும். அதாவது: பிரிதிவியில்-பிரிதிவு, பிரிதிவியில் அப்பு, பிரிதிவியில் தேயு, பிரிதிவியில் வாயு, பிரிதிவியில் ஆகாயம்.

அப்புவில்-பிரிதிவு, அப்புவில் அப்பு, அப்புவில் தேயு, அப்புவில் வாயு, அப்புவில் ஆகாயம்.

தேயுவில்-பிரிதிவு, தேயுவில் அப்பு, தேயுவில் தேயு, தேயுவில் வாயு, தேயுவில் ஆகாயம்.

வாயுவில்-பிரிதிவு, வாயுவில் அப்பு, வாயுவில் தேயு, வாயுவில் வாயு, வாயுவில் ஆகாயம்.

ஆகாயத்தில்-பிரிதிவு, ஆகாயத்தில் அப்பு, ஆகாயத்தில் தேயு, ஆகாயத்தில் வாயு, ஆகாயத்தில் ஆகாயம் என்பனவாம். இவையே பஞ்சபட்சியாக ஒவ்வொரு பட்சிக்குள்ளும் ஐந்து பட்சிகள் வீதம் இருபத்தைந்து பட்சிகள் ஏற்படுகின்றன. இவற்றின் விபரம் அதிக இரகசியமாதலாலும், அப்பியாச மில்லாதவர்கட்குச் சொன்னல் விளங்காததாதலாலும் குருமுகத்திற் கேட்டுணர்க.

இவ்விதமான குணங்குறியுள்ள சுவாசத்தை ஒவ்வொரு நாளிலும் அருணோதயத்திற்கு ஐந்து நாழிகைக்கு முன், அதாவது காலை 4 மணிக்கே எழுந்திருந்து, சூரியோதயமாகிற வரையிற் பின்வரும் வாரசர நிர்ணய அட்டவணையின்படி சரியாக நடந்து வருகிறதா! என்பதை யோகாப்பியாசிகள் எச்சரிக்கையுடன் கவனித்தல் வேண்டும்.

வளர்பிறைப் பிரதமை-துதிகை-திருதிகை இவைகளில் சந்திரகலை யுதித்து நடக்கவேண்டும். தேய்பிறைப் பிரதமை-துதிகை-திருதிகை இவைகளில் சூரியகலை யுதித்து நடக்கவேண்டும். உதயத்திற்கு ஐந்து நாழிகையிலுதித்த சரம் மற்ற ஐந்து நாழிகையும் கலங்காதோடவேண்டும்.

வார சர நிர்ணயம்.

ஞாயிறு-செவ்வாய்-சனி இந்த மூன்று நாட்களில் வலது நாசியிலும், திங்கள்-வெள்ளி-புதன் இம்மூன்று நாட்களில் இடது நாசியிலும், வளர்பிறை வியாழனில் இடது நாசியிலும், தேய்பிறை வியாழனில் வலது நாசியிலும் சரம் உதித்து நடக்கவேண்டும். வியாழக்கிழமையானது சாத்தினுடைய சோதனை நாளாதலால், எந்த வாரத்தில் சரமானது தவறி நடந்தாலும் வியாழக்கிழமையில் மாத்திரம் சரியாக நடைபெறவேண்டும். வியாழக்கிழமையில் தவறாமல் நடந்தால் சிறந்த பேறுண்டாகும். சிவன் முத்தனுகித் தளர்வின்றி வாழ்வான். இஃதன்றி, சனியில் இரவிலும்-பகலிலும் சந்திர சூரிய சரங்கள் மாறாமல் நடந்தால் உலகெலாம் மெச்சத்தக்க கீர்த்தி வந்துசேரும். மேற்கூறிய வாரங்களில் காலசரம் தவறி நடந்தால், ஞாயிறு-வியாதி; திங்கள்-சுற்றத்தாருக்குக்கேடு; செவ்வாய்-சண்டை-அல்லது சாவு, புதன்-அவ்வூரதிகாரிக்குக் கேடு; வியாழம்-தன் மன்னனுக்கு கேடு; வெள்ளி-தான் வசிக்கும் இடத்தைவிட்டு

விலகிப் போகவாவது, அவ்வெல்லையைவிட்டு மற்றோர் எல்லையை அடையவாவது வேண்டும், தேகநலி யேற்படும், மனைவிக்குச் சாவுவரும், சதிபதிகளுக்குள்ள பொருத்தம் போய்விடும் ; சனி வறுமை முதலியவைகள் ஏற்படும்.

திருமந்திரம்.

வெள்ளிவெண் டிங்கள் விளங்கும் புதனிடம்
ஒள்ளிய மந்த னிரவிசெவ் வாய்வலம்
வள்ளிய பொன்னே வளரும் பிறையிடம்
தெள்ளிய தேய்பிறை தான்வல மாமே.

வெள்ளிவெண் டிங்கள் விளங்கும் புதன்மூன்றுந்
தள்ளி யிடத்தே தயங்குமே யாமாகில்
ஒள்ளிய காயத்துக் கூன மிலையென்று
வள்ளல் நமக்கு மகிழ்ந்துரைத் தானே.

ஔவை குறள்.

(1) வெள்ளி புதனொடு திங்க ளிடமெனத்
தள்ளுமின் கால சரம்.

(2) செவ்வாய் சனிஞா யிறுவல மாகவே
கொள்ளிலிவ் வாறிடரு மில்.

(3) வளர்பொன் னிடம்பிறைத் தேய்வு வலமாம்
வளர்பிறை யென்றே மதி.

(4) வலத்திற் சனிக்கே யிராப்பகல் வாயு
செலுத்துபே ராது செயல்.

மேற்கூறிய செய்யுட் கருத்தை இன்னுஞ் சுலபமாகத் தெரிந்துகொள்ள வேண்டுமாகில், அடியிற் காட்டியிராநின்ற வார சர நிர்ணய அட்டவணையிற் பார்த்துணர்க.

வார சர நிர்ணய அட்டவணை.

| வாரங்கள். | காலங்கள். | நாசிகள். |
|---|---|---|
| செவ், சனி, ஞாயி. | காலைமணி 4-முதல் 6-வரை | வலது. |
| வெள், புத, திங். | ,, ,, | இடது. |
| வளர்பிறை வியாழன். | ,, ,, | இடது. |
| தேய்பிறை வியாழன். | ,, ,, | வலது. |
| சனி. | இராப்பகல். | வலது. |

மேற்காட்டிய அட்டவணையின்படி சரம் நடக்காமல் மாறுதலாக ஓடத்தொடங்கினுல், காலை 4-மணிக்கே நித்திரையை விட்டெழுந்துட்கார்ந்து, மாறுதலாக நடக்கும் சரத்தை, இதன் பின், சரத்தை மாற்றும் வகை என்ற தலைப்பின்கீழ் கூறியிருக்கும் விபரப்படி மாற்றிவிட்டு அப்பியாசஞ் செய்யவேண்டும்.

சரம் தவறினுல் சாந்தி.

பிராத காலத்தில் அருணோதயத்திற்கு முன்னெழுந்து தவறிய சரத்தைப் பூரணமாக்கி, அக்காலையே முன்னிட்டுக் கொண்டு, ஞாயிறு - செவ்வாய்க்கிழமைகளில் மூன்றடி தெற்கே போகவும். இவ்வாறு சனி-வியாழனில் மூன்றடி மேற்கேயும், திங்கள்-வெள்ளியில் நான்கடி வடக்கேயும், புதனுக்கு இரண்டடி கிழக்கேயும் போய்வந்து, சுத்தமாகிய ஆசனத்தமர்ந்து, குருபிரான் உபதேசப் பிரகாரம் துதித்து எங்கு சென்றுலும் முற் கூறிய யாதொரு துன்பங்களு மணுக மாட்டா.

இடது-வலது பக்கங்களில் மாறி மாறி நடக்கும் இச் சாமானது தேகத்துடன் இலயப்பட்டுப் போகுமானல் பிராணனுக் கழிவில்லை ; மனமுதலிய அந்தக் கரணங்களும் வேலையின்றி அசைவற்று நிற்கும் ; எமபயமே இல்லை. ஒவ்வொரு பக்கமும் மாறி யோடுகிற சரம் ஐந்து நாழிகை யோடும். பிரிதிவியில் $1\frac{1}{2}$ நாழிகையும், அப்புவில் $1\frac{1}{4}$ நாழிகையும், தேயுவில் 1 நாழிகையும், வாயுவில் $\frac{3}{4}$ நாழிகையும், ஆகாயத்தில் $\frac{1}{2}$ நாழிகையுமாக நிறைந்தோடும். பூதியங்கள் கூறுகொண்ட ஐந்து கடிகைகளும் சரியாய் சிதையா தோட வேண்டியது. இதனளவில் கூடினும், குறையினும் திரேக நலியாம்.

அயனசரம்.

யோகாப்பியாசிகள் தனக்குச் சென்ற ஆயுள்போக எஞ்சிய ஆயுள் எவ்வளவு இருக்கிறதென்று அறிந்து கொள்ள தைமீ முதற்றேதி உத்தராயன காலத்தினும், ஆடிமீ முதற்றேதி தட்சணாயன காலத்தினும் ( * ) அயன சரம் பார்ப்பதுண்டு. ஒரு நாளைக்கு முன்னதாகவே ஒரு வேளை அரைவயிறு பால் அன்னமுண்டு, தத்துவங்களாகிய கருவிகாணாதிகளைப் பரிசுத்தமாக்கி, தேகமெலிவதனல் மனதிற்கும்-மற்ற வாயுவாதி கரணங்களுக்கும் வருமிடையூறினை நிறுவி, பொழுது விடிய ஐந்து நாழிகை (காலை 4 மணி)யில் சரத்தைக் கவனிப்பார்கள். வாரம்-திதி-நட்சத்திரங்களைத் தள்ளி, தைமீ முதற்றேதியில் சரம் இடது பக்கத்திலுதித்து ஐந்து நாழிகை (2 மணி) நேரம் சிதருமல் ஒரே படித்தாய் ஓடவேண்டும். இதே பிரகாரமாய் ஆடி மாதம் முதற்றேதியிலும் வலது பக்கத்தில் இரண்டு மணி நேரம் ஓடவேண்டும். அப்படியோடியசரம் ஐந்து நாழிகைகளும் சிதருமல் ஓடினல், சரம் பார்க்கிறவன் தான் செய்யும்

(*) அயனம் என்பது ஆறுமாதங்கொண்ட கால அளவு.

பிராணுபாம உதவியினுல், அன்று முதல் நூறு வருட காலம் வரையில் வாழ்ந்திருப்பான். நாழிகை குறைந்தால், அந்த ஐந்து நாழிகையை நூற்றெருமா ஐந்தாக நூருக்கி, குறைந்த நாழிகையை ஒருமாவோ இரண்டுமாவோ அல்லது அதன் மேற் பட்ட தொகையோ, அதற்கு ஒவ்வொரு வருடத்தைக் கழித்துப் பார்த்து, குறைந்த ஒவ்வொருமா நாழிகையின் பேரில், அதாவது ஒன்றரை நிமிடத்திற்கு ஒரு வருடமாகக் கணித்துக் கொள்ளவும். முழுவதுமே தப்பி இடத்திற்கு வலமாகவும், வலத்திற்கு இடமாகவும் சரம் ஓடினுல் அபாயம் என்றுணர்ந்து சதாப்பியாசம் செய்யத் தொடங்குவார்கள்.

உத்தராயன காலமாகிய தைமாதத்தில் அப்பியாசந் தொடங்குபவர்கள் இருவினையிற் சிக்கி யுழலமாட்டார்கள். தட்சணுயன காலமாகிய ஆடி மாதத்தில் அப்பியாசந் தொடங்குபவர்கள் அவதாரத்தைப் பொருந்துவார்கள்.

பகவற்கீதை.

அங்கியொளி பகல்வெண்மை யாங்காலத் தேவதையா
மவைக ளோடு
தங்கியறு திங்களுடை யுத்தரா யனஞ்சார்வர்
மறித்துஞ் சாரார்
கங்குல்புகை கறுப்பென்னுங் காலத்தே வதையடைந்து
பிறக்குங் கண்டா
யெங்குமறு திங்களுடைத் தெட்சணு யனத்திறந்த
யோகி யென்பாம்.

உரோமர்.

பண்ணுன தெரிசனைதான் வகையாய்க் கேளு
பண்பாக வுதயத்தி லைந்து நாழி
நண்ணுக விரண்டெழுத்தங் குலத்திற் றூக்கி
நயந்ததைநீ வெகுவாக எடுத்துப் பாரு

விண்ணோடு கடந்துவிடுஞ் சோதி யப்பா
விள்ளார்கள் மகத்தான பெரியோ ரையா
அண்ணலெனும் அரனுமைக்குச் சரநூல் சொன்னார்
அக்குறியு மிக்குறியு மொக்கும் பாரே.

சரமானது உரோகணி, பூரம், உத்தரம், அத்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுடம், கேட்டை, மூலம், சதயம், உத்தரட்டாதி இந்த 12 நட்சத்திரங்களில் சூரியகலையாகவும், ஏனைய 15 நட்சத்திரங்களில் சந்திரகலையாகவும் தவறாமல் நடைபெறுகிறதா என்பதை அடியிற் கண்ட காலசர நட்சத்திர அட்டவணையின்படி பரிசோதித்தறிய வேண்டும். அந்தந்த நட்சத்திரத்திற்கு நேரே குறிக்கப்பெற்றுள்ள அந்தந்தக் கலை யோடாதிருந்தால் தீமையென்றறிந்து சரத்தை மாற்றி அப்பியாசஞ் செய்யவேண்டும்.

காலசர நட்சத்திர அட்டவணை.

| நட்சத்திரம். | கலை. | நட்சத்திரம். | கலை. |
|---|---|---|---|
| 1. அசுபதி | சந்திரன் | 14. சித்திரை | சூரியன் |
| 2. பரணி | சந்திரன் | 15. சுவாதி | சூரியன் |
| 3. கார்த்திகை | சந்திரன் | 16. விசாகம் | சூரியன் |
| 4. உரோகணி | சூரியன் | 17. அனுடம் | சூரியன் |
| 5. மிருகசீரிடம் | சந்திரன் | 18. கேட்டை | சூரியன் |
| 6. திருவாதிரை | சந்திரன் | 19. மூலம் | சூரியன் |
| 7. புனர்பூசம் | சந்திரன் | 20. பூராடம் | சந்திரன் |
| 8. பூசம் | சந்திரன் | 21. உத்தராடம் | சந்திரன் |
| 9. ஆயிலியம் | சந்திரன் | 22. திருவோணம் | சந்திரன் |
| 10. மகம் | சந்திரன் | 23. அவிட்டம் | சந்திரன் |
| 11. பூரம் | சூரியன் | 24. சதயம் | சூரியன் |
| 12. உத்தரம் | சூரியன் | 25. பூரட்டாதி | சந்திரன் |
| 13. அத்தம் | சூரியன் | 26. உத்தரட்டாதி | சூரியன் |
| 27. இரேவதி—சந்திரன் | | | |

19

இஃதன்றியும், வளர்பிறை காலத்தில் பிரதமைக்கு—யாதேனும் இடர்வரும்; துதிகைக்கு—கலகம்; திருதிகைக்கு—பொருட் சேதம்; சதுர்த்திக்கு—போக்குண்டாகும்; பஞ்சமி—பந்துக்களுக்கு வியாதி; சஷ்டி—அத்தேசத்தார்க்கும், அரசனுக்கும் வருத்தம்; சத்தமி—நலி, அரசனுக்கும், தேசத்தாருக்குமே யுண்டு. (தனக்கில்லை யென்று ஏமாந்திருத்தல் கூடாது. தன்னாலே யவர்களுக்கும் வருத்தம் வந்ததென்று அவதூறான பொச்சாப்பினாலாவது தான் வருத்தப்பட வரும்.)

சரத்தை மாற்றும் வகை.

முன்கூறிய கிரமப்படி சுவாசம் நடக்காமல் தவறி நடந்தால், வலது நாசியில் நடக்கும் சுவாசத்தை இடது நாசிக்கும், இடது நாசியில் நடக்கும் சுவாசத்தை வலது நாசிக்கும் மாற்றி அப்பியாசித்து ஆயுள் நீட்சி பெறலாம்.

வலது நாசியில் நடக்கும் சுவாசத்தை இடது நாசிக்கு மாற்றவேண்டுமானால், வலப்புறமாக ஒருக்கணித்துச் சாய்ந்துட்கார்ந்து, வலது காலின்மேல் இடது காலை பெருவிரலோடு பெருவிரலும், முழந்தாளோடு முழந்தாளும் பொருந்தும்படியாக வைத்து, வலக்கரத்தைப் பூமியிலூன்றிக் கொண்டு, இடதுகாற் பெருவிரலின் பெரிய நரம்பைக் கணுக்காலென்று சொல்லுமிடத்திற்குச் சமீபத்தில், இடக்கரத்தின் நடுவிரலினாற் சற்றுநேரம் அசைத்து வருடிக்கொண்டிருக்கின் சரம் இடது நாசிக்கு வந்துவிடும்.

இடது நாசியில் நடக்கும் சுவாசத்தை வலது நாசிக்கு மாற்றவேண்டுமானால், இடப்புறமாக ஒருக்கணித்துச் சாய்ந்துட்கார்ந்து, முன் சொல்லியபடியே இடதுகாலின் மேல் வலதுகாலைப் பெருவிரலோடு பெருவிரலும், முழந்தாளோடு முழந்தாளும் பொருந்தும்படியாக வைத்து, இடக்

கையைப் பூமியிலூன்றிக் கொண்டு, வலதுகாற் பெருவிர லின் பெரிய நரம்பைக் கணுக்காலின் சமீபத்தில், வலக் கரத்தின் நடுவிரலினுற் சிறிதுநேரம் வருடிக்கொண்டிருக்கின் சரம் வலது நாசிக்கு வந்துவிடும்.

சுவரனுபவ விளக்கம்.

வலதுநா சியிலோடுஞ் சுவாசந் தன்னை
மறுநாசி தனிற்செலுத்த மனமுண் டானல்
வலப்புறமா யொருக்கணித்துச் சாய்ந்துட் கார்ந்து
வலக்கான்மே லிடக்காலைப் பொருந்தச் சேர்த்து
வலக்கரத்தை நிலத்தூன்றி யிடது காலின்
மணிநரம்பை யிடக்கரத்தால் வருடி நோக்க
வலதுநா சியில்நடந்த சுவாச மப்போ
மறுநாசி தனிலியங்கும் வகையாப் பாரே.

இஃதன்றி, வலப்புறமாக ஒருக்கணித்துப் படுத்து, வலக்கையைச் சிரசின்கீழ் வைத்துச் சயனித்திருந்தாலும், வலக்கரத்தைப் பூமியிலூன்றி வலது பக்கத்து முதுகு சுவர், அல்லது தூண் முதலியவைகளிற் படும்படி சாய்ந்து கொண்டிருந்தாலும் இடப்புறத்திற்குச் சுவாசம் மாறி விடும். இங்ஙனமே இடப்புறத்திற் செய்ய இடது நாசியி லோடிய சுவாசம் வலது நாசிக்கு வந்துவிடும்.

சுவாசமானது ஒரு நாசியிலிருந்து மற்றொரு நாசிக்கு மாறவேண்டுமாகில் மேற்கூறிய மாதிரியன்றி மற்றொரு விதமுஞ் செய்யலாம். அஃது சாமானியர்கட்கு இயலாது. அஃதாவது :—

ஒரு சுவரின்மீது சுமார் ஒரு ரூபா யகலமுள்ள சாந் துத் திலதத்தைத் தீட்டி, மனத்தை ஏனைய விடயங்களிற் புகவிடாமல் அந்தத் திலதத்தின்மீதே செலுத்திக்கொண்

டிருக்க, அஃது ஒருரூபா யகலத்திலிருந்து முக்கால்ரூபாய் வடிவாகவும், சிலநாளில் அரை, கால், அரைக்கால் ரூபாய் வடிவாகவுந் தோன்றி முடிவிற் சூனியமாகிவிடும். இவ்வித மான சித்தி கைவல்யமான பின்னர் தமது மனோபீஷ்டப்படி நினைத்த மாத்திரத்தில் எந்த நாசியிலிருக்கும் சுவாசத்தை எந்த நாசிக்கு மாற்றவேண்டுமோ அங்ஙனமே மாற்றி விடலாம். அதற்கு முன் சொன்னமாதிரி கை, கால் முத லிய அவயவங்களின் ஒத்தாசை தேவையில்லை. அந்தத் தில தம் உண்மையில் ஒரு ரூபாய் வடிவினதா யிருந்தும், அப்பி யாசஞ் செய்தவர்களுடைய மனோ சத்தியின் முதிர்ச்சியால் அஃது சூனியமாகிவிட்டது. அது போலவே, தனது எதார்த்த வடிவத்தைச் சிந்தித்து பாவனைமுற்றிய அநுஷ் டானிகள், தன் அபிப்பிராயம் போல் நினைத்த மாத்திரத்தி லேயே ஒரு நாசியிலிருந்து மற்றொரு நாசிக்காவது, அல் லது இடகலை, பின்கலையென்னும் உபய நாடிகளைச் சூனி யம்பண்ணி, சுழிமுனை நாடியின் சிறிய ரந்திரத்திலாவது சுவாசம் மாறிச் செல்லும்படி செய்வார்கள்.

* எதார்த்த வடிவம் இஃதென்பதற்குப் பிரமாணம் :—

ஞானவாசிட்டம்.

உன்னுருவை நீகாணும் ஞானக் கண்ணில்
ஒன்றலா ஆசையெனுங் காச மூறும்
அன்னதுதீர்த் துளக்கமலத் துள்ளே நொய்ய
அறிவுடைய வுன்மனத்தா லுன்னு லுன்னை
இன்னபடி யெனநோக்கி மயக்க மெல்லாம்
இறையுமற வொழித்தின்ப மெய்தி நிற்பாய்
பின்னவனே யெனமுன்னே னுரைத்தா னென்று
பெருந்தகைக்கு வசிட்டமுனி பேசி னனே.

* எதார்த்த வடிவத்தின் முழு விபரம் நமது ஞானக்களஞ்சியம் ஆன்மஞான அத்தியாயத்திற் காண்க.

கைவல்ய நவநீதம்.

உன்முகம் போற்கண் ணுடிக் குள்ளொரு முகங்கண் டாற்போற்
சின்மய வடிவின் சாயைச் சித்துப்போற் புத்தி தோன்றும்
நின்மனோ விருத்தி யந்த நிழல்வழி யாயு லாவும்
தன்மநன் மகனே யித்தைத் தானன்றோ ஞான மென்பார்.

சிவஞான வள்ளல்

(1) காரிருளோ மைக்குழம்போ காரோ வெனக்கலுழ்ந்து
பேரிருளா மாணவத்தைப் பின்னிட்டே—யோர்வரிய
மன்னுருவே நாமென்று வள்ளலரு ளாலறிதல்
நின்னுருவ மாணு நினை.

(2) ... ... ... — பிஞ்சாத
வோரெழுத்தே நின்னுருவ மொண்பொருளே நீயாமென்
றோரிடத்தி னில்லையுனக் கூழ்.

நடக்கும்போது துணியைப் பந்துபோற் சுருட்டியாவது, அல்லது குடைமுதலிய வஸ்துக்களையாவது கமுக்கட்டில் வைத்தழுத்திக் கொண்டு நடந்தாலும், மற்றொரு பக்கத்து நாசிக்குச் சுவாசம் வந்துவிடும். இதை யுத்தே சித்தே யோகாப்பியாசிகள், வாசிக்கோலென்னும் யோக தண்டத்தைச் சதா தமது கக்கத்தில் வைத்து, சுருதி அநுபவப்படி சரத்தை மாற்றிக்கொண் டிருக்கின்றார்கள். முற்கூறிய அட்டவணையின் விபரப்படி வாரங்கள்தோறுங் கண்ணுங் கருத்துமாயிருந்து, சரத்தை நிதானித்து அப்பியாசித்து, சந்தேகமானவைகளைக் குருமூர்த்தியின் கருணையால் நிவர்த்தி செய்துவாநின்ற அநுபவிகள், காயசித்தியும், மனோல்லாசமும் பெற்று முடிவில் சிவேசுர ஐக்கியம் அடைந்துய்வார்கள்.

பாலையானந்தர்.

மடைவாயிற் பட்சிபோல் நடைபார்த் திராமலே
மற்றென்ன கற்றறிவையோ.

துணங்குடியார்.

பன்னிரு கால்வெளி மானே—வெளி
பாயாம லுள்ளே மடக்கிடத் தானே
சென்னியி லூறுஞ்செந் தேனே—என்று
சிந்தைவைத் துக்கட்டித் தந்தரு ளித்தான். (எங்கள்)

கட்டுப் படாஅச்சு மட்டங்—காலைக்
கட்ட வறியாரைக் காலினல் வெட்டும்
வெட்டிய கால்களை வெட்டும்—என்று
வேகத் துடனே விதித்தரு ளித்தான். (எங்கள்)

எட்டெட்டை யோரெட்டுக் கட்டும்—அந்த
எண்ணுன்கை யுமந்த வோரெட்டுக் கட்டும்
முட்டுமீ ரெட்டையுங் கட்டும்—என்று
முன்னுன்கைக் கட்டி முடித்தரு ளித்தான். (எங்கள்)

என்று கூறிவருவதாற் சகல சந்தேக விபரீதங்களையுஞ் குருமூர்த்தியை யடுத்து, அவருக்கு மனது வரும்படி நடந்து, அவராற் சொல்லக்கேட்டுணர்க.

சரலாப நஷ்டம்.

இப்பிரபஞ்சத்தின் கண்ணுள்ள சகல சீவாசிகட்கும், ஒரு நிமிஷத்திற்குப் பதினைந்து (15) சுவாசங்கள் வீதம், தினமொன்றிற்கு இருபத்தோராயிரத்து அறுநூறு (21,600) சுவாசங்கள் நடக்குமென்று முன்னமே கூறியிருக்கின்றோம். அந்தச் சுவாசங்கள்

சாதாரணமாக இருக்கும்போது, 12 அங்குல சுவாசம் வெளியில் வந்து, 8 அங்குல சுவாசம் உட்செல்வதால், 4 அங்குல சுவாசம் செலவாகின்றது.

பேசும்போது 16 அங்குலம் வெளியில் வந்து, 8 அங்குலம் உட்செல்வதால், 8 அங்குலம் நஷ்டமாகின்றது.

நடக்கும்போது 20 அங்குலம் வெளியில் வந்து, 10 அங்குலம் உட்செல்வதால், 10 அங்குலம் நஷ்டமாகின்றது.

கடினமான வேலை செய்யும்போது 24 அங்குலம் வெளியில் வந்து, 12 அங்குலம் உட்செல்வதால், 12 அங்குலம் நஷ்டமாகின்றது.

சண்டையில் 36 அங்குலம் வெளியில் வந்து, 24 அங்குலம் உட்செல்வதால், 12 அங்குலம் நஷ்டமாகின்றது.

நித்திரையில் 48 அங்குலம் வெளியில் வந்து, 30 அங்குலம் உட்செல்வதால், 18 அங்குலம் நஷ்டமாகின்றது.

வேகமாய் ஓடும்போது 56 அங்குலம் வெளியில் வந்து, 28 அங்குலம் உட்செல்வதால், 28 அங்குலம் நஷ்டமாகின்றது.

மாதர் சையோகத்தில் 64 அங்குலம் வெளியில் வந்து, 24 அங்குலம் உட்செல்வதால், 40 அங்குலம் நஷ்டமாகின்றது.

இவ்விதம் தினமொன்றிற்கு 7,200 சுவாசங்கள் செலவழிந்ததுபோக, எஞ்சிய 14.400 சுவாசங்கள் உள்ளடங்கும். ஆகையால், எச்செயலுமின்றி பேசாமல் சும்மாயிருக்கும்போதும் 12 அங்குல சுவாசம் நாசிவழியாக வெளியிற் சென்று, 4 அங்குலம் கழிந்து, எட்டங்குலமே உட்செல்லுமென்னுங் கருத்தை மேற் கூறி யிருப்பதால், ஆகாய மின்றிய நான்கு பூதமென்னும் கள்வர்களினால் கொள்ளை யிடப்பெற்று, சுவாசக்களஞ்சியமானது நாளுக்கு நாள் குறைந்து போகிறது. ஆனது பற்றி யோக தற்பரர்களாகிய குருபிரான் உபதேசித்தபடி, முன் பிராணாயாமயோக அத்தியாயத்திற் கூறிய கற்பசாதனையுடன் அப்பியாசித்து, உச்சி வெளி சென்று, தீபப்பிரகாசத்தைக் கண்டு, இரண்டு நேத்திரங்களையும் உட்குவியும் படிக்கான பரம இரகசிய நிலையிற்

பொருந்தினுல், சுவாச நட்ட மின்றி அரோகதிடகாத்திர மும்- ஆன்மலாபமும் பெறுவார்கள்.

மெய்ஞ்ஞான சாநூல்.

விதமாக வுடலுக்குள் அடைந்த மூச்சு
வீர்த்தியொடு சூத்திரமா யிருக்கும் போதே
இதமாக வீராறங் குலமே யோடும்
இருநான்கா மங்குலமே யேறு முள்ள
துதியாகப் பேசுகையிற் பதிஞ ரோடும்
துடியாக விருநான்கு துடித்துள் ளேறும்
கதிநடையி லிருபதுபோய்ப் பத்து மீளும்
கடும்வேலைக் கறுநான்கில் மூந்நான் கேறும்.

முன்னேறுஞ் சண்டையிலே யாறு ரேடி
மூவெட்டா மங்குலமே முறையிற் செல்லும்
கண்மூடிச் சயனமிடி லாறெட் டோடிக்
கருதிவரு மையாறு கருதிப் பாராய்
உன்னியுன்னி யோடுகையி லைம்பத் தாறு
ஒன்றுக்குப் பாதியடா வுயர வேறும்
இன்மூலையாள் சேர்க்கையிலே யெட்டெட் டோடி
யெண்மூன்று மங்குலமே யேறும் பாரே.

துணங்குடி வள்ளல்.

பாயுமீ ராறுகலை பாயாது பக்குவம்
பண்ணிவைப் பதுசமாதி
பழவினை யிறக்கவுஞ் சுழிமுனை திறக்கவும்
பழகிவரு வதுசமாதி
ஓயாத கருவிகா ணதி யோய்ந் தொழியவிழி
யொளிகொடுிப் பதுசமாதி
ஒன்றிரண் டென்றுமன முற்றுமுள றுதலைவிட்
டொன்றுபடு வதுசமாதி.

ஈயெறும் பாதிக டமக்குடல் குழைந்துமு
　　னின்புறு வதுசமாதி
என்றருள் பிரானேயடி யேனுமுமை நம்பினே
　　னிதுவேளை யாளுதற்கே
வாயுவினு மதிவேக முள்ளநீர் பின்ரொடா
　　வள்ளலிற சூல்வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　　மணியே முகியித்தீனே.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்.

---

### சாதனத் திரயம்.

விருத்தம்.

புசித்தழி கின்ற பண்பும் பூரண மாயுண் ணுமற்
பசித்திருப் பதனு லுள்ள பலனுமப் பலனுற் ருக்க
முசித்தருந் தவமுஞற்று முறையும்வீண் மனிதர் கூட்ட
நசித்துமெய்ப் போதஞ் சேரு நலனேயு நவிலு வாமால்.

சாதனத்திரயமாவது உணவைக் குறைத்து, பசித்திருத்தல்-விழித்திருத்தல்-தனித்திருத்தல் என்னும் மூன்று சாதனங்களாம். அன்னபானுதிகளைக் குறைத்தும் தனது கருவிகாணுதிகளைப் பரிசுத்தப்படுத்தி, அதன்மேல் யோகஞானுனுபவங்களை யுணர்ந்துகொள்ள வேண்டுமென்ற ஆசையு (இஷ்கு) டையவர்கட்கு பசித்திருத்தலானது சிரமமாகத் தோற்ருது. என்? குமுகுமென அதிரசத்தேனுெழுகு கனி யென்னும்படி எல்லாரையும் மருட்டும் யோனியாசையினும் தினியாசைபானது மனிதர்களைப் பேய்கொள்ளும்படிச் செய்துவிடுகிறதனுலேயாம். அவ்வாறு

பசித்திருப்பவர்கட்கு விழித்திருத்தல் தானே யேற்படு மாதலால், விழித்திருத்தல் என்னும் பதமானது பசித் திருத்தலுக் குள்ளடங்கும். பின்னர் தனித்திருக்க முயற் சித்தல் வேண்டும்.

### பசித்திருத்தல் (உணவைக்குறைத்தல்)

நாள் ஒன்றுக்கு ஒரு வேளை, அரை வயிறு ஆகாரமும்- கால் வயிறு நீருமாக அருந்தி, கால் வயிறு வாயு சஞ்சரிக் கும்படி செய்பவர்களுக்கு ஏற்படும் நன்மையானது அள விடற் பாலதன்றும். இதனாலேயே யோக கைவல்யத்திற் பிரசித்தி பெற்ற,

பதஞ்சலியார்.

*அரைவயி றொருபொழு துணுமவர் மவுனமும்*
*அவர்களும் அறிவாரே*

என்று திருவாய் மலர்ந்துள்ளனர். அன்றியும், உணவைக் குறைத்தலாகிய இந்த உபவாசத்திலிருக்கும் ஏராளமான நன்மையைக் கருதியே, நமது பெரியோர்கள் முப்பது நோன்பு என்றும், பத்து நோன்பு என்றும், ஆறு நோன்பு என்றும், அமாவாசை உபவாசம், பௌர்ணமி உபவாசம், ஏகாதசி உபவாசம், செவ்வாய்-வெள்ளி சனிக்கிழமைகளின் உபவாசம் முதலான அனேக உபவாச நோன்புகளை ஏற் படுத்தியுள்ளார்கள். (மீதூண் விரும்பேல்) என்றனர் நமது ஔவைப் பிராட்டியார்.

பசித்திருப்பதானது இருதயம் பரிசுத்தம் பெற்று, கருவிகரணாதிகளிலுள்ள சகல மலினங்களையும் அகற்று கிறது. மனோ சத்தியை அதிகப்படுத்தி உறுதியாகச் செய் கிறது. செகப்பார்வையைக் குறைத்து அகப்பார்வைக்குத் தெளிவு பிறக்கச் செய்கிறது. இருதயத்தின் கடினத்தை

யகற்றி இளகச் செய்கிறது. அதனுலேயே கருணைமடை திறந்து, ஜீவராசிகளின் மீது இரக்கமும், கடவுள் மீது தைல தாரைபோல் அன்பு விசுவாசமும், அவர்மீது தியானம் ஆராய்ச்சி (திக்று-பிக்று) முதலானவைகளில் இன்பமும் உண்டாக்கி, அதையே சதா காலமும் புரியும்படி தூண்டு கிறது. அந்தக்காரணச் சேட்டையைக் குறைத்து தாழ்மை யான குணத்தை யுண்டாக்கும். பெருமை மகிழ்ச்சி முத லான தீயகுணங்களை அகற்றும். நாம் பசித்திருப்பதனுல் பிறருடையபசி, கஷ்டநஷ்டங்கள் இத்தன்மைத்தானதென் றுணரும்படிச் செய்யும். பாவச் செய்கைகளையும், இச்சை களையும் அடக்கும். பூதாதி அகங்காரமாகிய நபுசு அம்மாரு வின் தீய குணங்களை ஒடுக்கும். நித்திரையைக் குறைத்து விழிப்பை அதிகரிக்கச் செய்யும். உணவுப் பதார்த்தங்களைத் தயாரிப்பதிலும், அவைகளை அடிக்கடி சமைப்பதிலும், புசிப் பதிலும் செலவாகும் நேரத்தை வணக்கத்திற்கு உபயோக மாக்கும். அடிக்கடி மலசல உபாதைகளை நிவர்த்திக்கச் செல்லுவதால் வணக்கத்திற்கு வேண்டிய அங்கசுத்தி (ஒலு) கெட்டுப்போய், மறுபடியும் அங்கசுத்தி செய்வதனுல் தியானத்தின் நேரமானது அனுவசியமாகக் கழிந்து போவது மன்றி, தண்ணீர்ச் செலவும், அதைக்கொண்டு வரும்படி யான தொந்தரவும் ஏற்படாதபடி செய்யும்: பசித்திருப்ப தானது தேகாரோக்கியத்திற்கு மிக்க அனுகூலமாகும்.

பசிதீர (வயிறு நிறைய) உணவு புசித்திருந்தால் மேற் கூறிவந்த நன்மையான காரியங்களை ஒன்றுமே செய்ய முடியாமல், சோம்பலுக்கும்-நித்திரா தேவிக்கும் அடிமை யாகி, அசீரணத்தால் அபானவாயுவின் உபத்திரவம் ஏற் பட்டு, சுத்த ஆகாயத்தைக் கெடுத்து, பக்கத்திலுள்ளவர் கள் அருவருக்கும்படியான துர்க்கந்தம் ஏற்பட்டு, மலசல

உபத்திரவத்தைக் கொடுக்கும். நீரை அதிகமாய்ப் பருகுவதாலும் அதிக நித்திரையும் அதிமூத்திரமும் ஏற்படுமென்பது கவனித்தற் பாலதே.

உணவைக் குறைப்பதால் விலக்கப்பெற்ற (ஹறுமான) சம்பாதனையை விட்டு நீங்குதலும், அதிகமாகச் சம்பாதிக்க வேண்டுமென்ற பேராசையின் சங்கடக் குறைவும் ஏற்படும். பிறருக்கு அடங்கி நடத்தல், கூலிக்கு வேலை செய்தல், கடன் வாங்குதல், வட்டிக்கு வாங்குதல், பாப்பர் மனு (Insolvent petition) கொடுத்தல், பொய் சொல்லுதல், களவாடல், கவருடல், நியாய (Court) தலத்திற்குச் செல்லுதல், வாரண்டுக்குப் பயப்படுதல், சிறைச்சாலையில் இருத்தல் முதலியவை நிகழாவாம்.

ஒரு அறிஞர் கூறி யிருப்பதாவது ;—என் உதர போஷணையின் நிமித்தம் பிறரிடம் கடன் வாங்க நேரிட்டால், நான் என்னுடைய பூதாதி அகங்காரத்தி (நபுசு அம்மாருவி)னிடம் ஏ! நபுசே ஏ! அகம்பாவமே!! நான் உன் நண்பனல்லவா ? நீ யென்னைக் கடன் என்னும் பொறியில் மாட்டிக்கொள்ளும்படி செய்யாதே. நீ இந்த ஆசையை விட்டுவிடு. நமக்குக் கடவுள் கொடுத்தனுப்புவார், நீ பொறுமையாய் இரு என்று கூறுவேனென்பதாம்.

திருவருட்பா.

வட்டாலுங் கேளய லென்பாரை நான்சிரித்
  தென்னை வெட்டிப்
போட்டாலும் வேறிடங் கேளேனென் னுணைப்
  புறம் விடுத்துக்
கேட்டாலு மென்னை யுடையா னிடஞ்சென்று
  கேட்ப னென்றே
நீட்டாலும் வாயுரைப் பாட்டாலுஞ் சொல்லி
  நிறுத்து வனே.

பல்குதேசத்துச் சக்கரவர்த்தியாகிய சுல்தான் இபுறுஹீம் அதுஹம் அவர்கள் தமது இராச்சியபாரத்தையொழித்து, பரதேசி (பக்கீர்) வேடத்துடன் அன்னிய தேசத்தில் சஞ்சரிக்குங் காலத்தில், ஒரு கடைவீதியிலுள்ள மாம்பழத்தின்மேல் அவர்களுக்கு இச்சையுண்டாயிற்று. அப்போது இச்சையை (நபுசை) நோக்கி, ஏ நபுசே! நீ மாம்பழத்தின்மேல் ஆசைப்பட்டு என்னைத் தொந்தரவு செய்கிறாய்; என்னிடத்திலோ, அதை வாங்குவதற்குப் பணமில்லை, நீ இதை விரும்பாதே என்று பலவாறு சமாதானம் கூறியும் இச்சை கேட்கவில்லை. நீ கூலிவேலை செய்து, பணம் சம்பாதித்து வாங்கித் தின்னுகிறாயா? என்றனர். இச்சை உடன்பட்டது. தெருத்தெருவாய்ச் சென்று கூலியுண்டா, கூலி! என்று கூறினர். அதைக் கேட்ட ஒரு வீட்டுக்காரன் இவரைக் கூப்பிட்டு, இவருடைய திருமேனியின் அழகைப்பார்த்து மருண்டு, உம்மைக் கூப்பிடவில்லை; நீர் போம் என்றான். அதற்கு சுல்தான், நானென்ன வேலைசெய்ய முடியாதவனா? ஏன் என்னைப் போகச்சொல்லுகிறீர்; வேலையைச் சொல்லும், நான் செய்கிறேன் என்று பலதடவையும் சொன்னார். அதற்கந்த வீட்டுக்காரன், நீர் செய்யத்தகாதவேலை அது என்றான். நான் எல்லாவேலையும் செய்வேன். வேலையைக் காண்பியும் என்றார் சுல்தான். வீட்டுக்காரன் மனங்கலங்கி, என் வீட்டுக் கக்கூசை அள்ளுவதற்கு 4 நாளாக தோட்டி வரவில்லை. அதற்காகத்தான் கூப்பிட்டேன் என்று சாஞ்சலியத்தோடு சொல்ல, அந்த வேலையை நான் நன்றாய்ச் செய்வேன் என்று கூறி, ஒரு கூடையை எடுத்து அந்தப் பழமலங்களை அள்ளி, ஊருக்கு வெளியே கொண்டு போகும்போது மழைபெய்ய ஆரம்பித்து, கூடையிலிருக்கிற மகா துர்க்கந்தமுடைய மலங்கள் கரைந்து, சுல்தானவர்கள்

இரண்டு கன்னத்தின் வழியாக வடிய ஆரம்பித்தது. அப்போது சுல்தானவர்கள், மாம்பழம் விரும்பிய தன் இச்சையை (நபுசு அம்மாருவை) நோக்கி, நபுசே! இதோ வடிகிற மலத்தைச் சிறிது நக்கிப்பார்! நீ கேட்ட மாம்பழத்தினும் பன்மடங்கு மதுரமாயிருக்கும் என்று கூற முகம் சுழித்துக்கொண்டது. மாம்பழம் புசிப்பது சும்மா தானு! என்று இச்சையை அலக்கழிவு படுத்தியபின் அந்த மலத்தைக் கொண்டுபோய்க் கொட்டிவிட்டுவந்து கூலியைப் பெற்று மாம்பழத்தை வாங்கிக்கொடுத்து, இனிமேல் நீ உனக்குக் கிட்டாத வஸ்துவைக் குறித்து ஆசைப்படாதே, ஆசைப்பட்டால் மலக்கூடை தூக்கியதை மறந்துவிடாதே என்று புத்தி போதித்து அடக்கினர்கள் என்று கூறப்பெற்றிருக்கிறது.

கத் அப்லஹ மன்த ஸக்கா—அதாவது இச்சையை அடக்கியவனே செயம்பெறுவான் என்பது வேதவாக்கியம்.

இதைப்பற்றி நபிகள் பெருமான் முஹம்மது (சல்) அவர்கள், அளவுக்கு மிஞ்சிய போனகத்தாலும், பானகத்தாலும் உங்களுடைய இருதயங்களைக் கொன்று விடாதீர்கள். நா. வா. 90.

பசித்திருப்பதனுல் உங்களுடைய இருதயங்களைப் பிரகாசப் படுத்திக்கொள்ளுங்கள். பசியாலும், தாகத்தாலும் உங்களையே நீங்கள் வென்றுகொள்ள முயலுங்கள். பிர்தௌசென்னும் (ஆன்ம) சுவர்க்கத்தின் வாயிலைப் பசியென்னுங் கருவியால் தண்டிக்கொண்டே யிருங்கள். நா. வா. 92. என்று திருவாய் மலர்ந்திருக்கிறுர்கள்.

நாள் ஒன்றுக்கு ஒருபொழுது உண்பவன் யோகி, இருபொழுது உண்பவன் போகி, முப்பொழுது உண்பவன் ரோகி, நான்குபொழுது உண்பவன் உடலைவிட்டு உயிர்

போகி என்று பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். ஒரு பொழுது உண்பதனால் சரீரத்திலுள்ள கொழுப்பு உருகி, போகசத்தி தவிர்ந்து, யோகசத்தி முதிர்ந்து, கருவிகரணம் பரிசுத்தம் அடைந்து, நாடி நரம்புகள் தூய்மையாவதால் யோகிகளுக்கு சோதிப்பிரகாசம் தோன்றும். இருபொழுது உண்பதனால் சரீரத்தில் கொழுப்பு அதிகரித்து போகசக்தி ஏற்படுகிறது. காலைவேளையைச் சேர்த்து மூன்றுபொழுதுண்பதனால் சடராக்கினி குறைந்து அசீரணம் ஏற்பட்டு பற்பல ரோகங்களை வருத்துகிறது. காலைவேளையில் பசிப்பது பித்தத்தினால் ஏற்படுகிற உஷ்ணமேயன்றி உண்மையான பசியன்று. அப்படி உஷ்ணம் ஏற்படும்போது சுத்த ஜலமாவது, நீராகாரம் அல்லது பசும்பால் போன்ற திரவ பதார்த்தத்தைக் கொஞ்சமாகச் சாப்பிட்டு சாந்திசெய்து கொண்டு பகல் 12-மணிக்கு அரைவயிறு போசனமும், கால்வயிறு நீரும், புசித்து, கால்வயிறு வாயு சஞ்சரிக்கும்படி விடவேண்டும். இராத்திரியில் மிளகுத்தூளிட்ட பசும் பாலாவது, கஞ்சியாவது திரவ ரூபமாகப் புசிக்கவேண்டும். இஃதன்றி காலையில் இட்டலி, தோசை, பழைய சோறு முதலான திடபதார்த்தங்களைச் சாப்பிடக்கூடாது. அவ்வாறு சாப்பிடுவது சில சமயங்களில் தொந்தரவு செய்யாததுபோல் தோன்றினாலும் ரோகத்தை உற்பத்திசெய்து கொண்டேயிருக்கும்.

பஅம்மாமன்தஹா — வஆதரல்ஹயாத்தத்துன்யா — பஇன்னல்ஜஹீம ஹியல்மவ் வா = எவன் வரம்பை மீறினானோ! எவன் உலக வாழ்க்கையையே (சதமென்று) தேர்ந்து கொண்டானோ! அவனுக்கு நிச்சயமாக நரகமே ஒதுங்கு மிடம்.

வஅம்மாமன்ஹாப மக்காமறப்பிகி வனஹன் நப்சஅனில்ஹவா—பஇன்னல் ஜன்னத்த ஹியல்மவ்வா = எவன்

தன்னை இரட்சிக்கப் பெற்ற கடவுள் சன்னிதானத்துக்காகப் பயந்து ஆன்மாவை (உலக) ஆசையை விட்டு விலக்குகிறானோ—அவனுக்கு நிச்சயமாக சுவர்க்கமே ஒதுங்குமிடம் (30–80) என்பது வேதவாக்கியம். ஆகையால் அதிகமான வீணாசையைப் பற்றறக்களைய வேண்டு மென்பதே சகல வேத சம்மதம்.

பிரபுலிங்கலீலை.

ஆசை யறுதல் வீட்டின்ப நேரே யடையக் காரணமாம்
ஆசை யறுத லலதில்லைப் பலநூ லனைத்தும் ஆய்ந்திடினும்
ஆசை யறுவோன் சிவனாதல் திண்ண மெனநன் றறிந்திருந்தும்
ஆசை யுறுத லென்கொண்டோ அந்தோ மனித ரறியோமே.

பகுதாது (Bagdad) தேசத்து சக்கரவர்த்தியா யிருந்த சுல்தான் ஹாறூன் றஷீது என்பவர் மிக்க கீர்த்தி பெற்ற நான்கு வைத்தியர்களை வரவழைத்து, பண்டிதர்காள்! எவ்வித நோயுமுண்டாகாத மருந்து எது? என்று கேட்டார். இந்தியா தேசத்து வைத்தியன் ஒரு மருந்தையும், உரோம் தேசத்து வைத்தியன் ஒரு மருந்தையும், இருக்தேசத்து வைத்தியன் ஒரு மருந்தையுமாகச் சொன்னார்கள். இவர்கள் மூவரும் இவ்வாறு கூற, அந்தப் பகுதாது தேயத்து வைத்தியன் கூறுவான்:—இவர்கள் கூறிய மருந்துகள் சில பிணிகளுக்கு ஔடதமாயினும், இன்னின்ன மருந்து இன்னின்ன நோய்களை யுண்டாக்கும். இலங்கணம் பரம ஔடதம் என்னும் முதுமொழிபோல் ஆகாரத்தைக் குறைப்பதே ஒரு பிணியையும் உண்டாக்காத சிறந்த மருந்தாம் என்று கூறினான். அதை அந்த மூன்று வைத்தியர்களும் சரிதான்! சரிதான்!! என்று அங்கீகரித்தார்கள்.

பசித்திருப்பதால் சரீரத்திலுள்ள சத்துக்கள் அதிகமாயிறங்குவதில்லை. அதி மூத்திர (நீரிழிவு) ரோகத்தால் மிக்க

துர்ப்பலமுடையவர்கட்கு வாரத்தில் ஒரு நாள் உபவாசம் இருக்க வேண்டுமென்று துரைத்தன வைத்தியர் (Doctor) களும் வற்புறுத்துகின்றனர். பசித்திருப்பதனுல் இன்னும் ஏராளமான நன்மைகளிருக்கின்றன; விரிவஞ்சி அவைகளை இங்கு எழுதாது விடுத்தனம்.

புசிக்கும் ஆகாரத்திற்கு சுருக்கமான கறிபதார்த்தங்களை அமைத்துக்கொள்ள வேண்டுமேயன்றி பல வகைத் தான பதார்த்தங்களிருத்தல் கூடாது. ஒரு காலத்தில் எனது பிதா அவர்களும், நானுமாக இராமநாதபுரம் சில்லாவிலுள்ள கமுதி யென்னும் ஊருக்குப்போயிருந்தோம். அவ்வூர் வாசியும், "விழுமியோர் போற்றும் மெய்க்கலைகற்றோர்க்கு உழுவலன்புடைய உத்தம நண்பரு"மாகிய மு. கா. நாகலிங்க ஆச்சாரியார் என்பார் எங்களை வரவேற்று, விருந்து சமைத்து ஒருபெரிய வாழையிலையில் விதவிதமான அநேக கறிபதார்த்தங்களுடன் அமுது படைத்தனர். அந்தப் பெரிய இலையையும், அளவற்ற கறிபதார்த்தங்களையும் எனது பிதா அவர்கள் நோக்கி "விதுரமகாராசனுக்கு கிருட்டினன் சதுர்ப்புஜ தரிசனம் கொடுத்தாரென்பது போல், இவ்வளவு ஆகாரங்களையும் புசிப்பதற்கு எனக்கு நான்கு கைகள் வேண்டுமே"! என்று கூறிவிட்டு அதில் வைக்கப்பெற்ற கீரையைமட்டும் சேர்த்துக்கொண்டு சிறிது ஆகாரம் புசித்தார்கள்.

பின்னர் ஒருகாலத்தில் ஷை கமுதிக்குச்சென்று ஷை ஆச்சாரியார் இல்லத்தில் தங்கிய ஞான்று, அவ்வூர் வாசியும், இரங்கோனில் அண்டாப்போட்டு மேஸ்திரி யென்னும் பட்டம் வாய்ந்தவருமாகிய அசன் முஹம்மது ருவுத்தர் என்பார் எங்களுக்கு விருந்துசொல்லி தமது இல்லத்திற்கு அழைத்துச் சென்றனர். அவருடைய மேன்மாடியில் உயர்ந்த விரிப்புகள் விரித்து, நளபாகமாய்ச் சமைக்கப்

பெற்ற சித்திரான்னமு (நெய்யிற் பக்குவப்படுத்திய புலவுச் சோறு)ம், அதிக விலை யேறப்பெற்ற பீங்கான்களில் பல வகைத்தான கறிவகைகளும், தாகத்திற்குப் பரிமளமிக்க சர்பத்துகளும், பால்வகைகளும், அநேக தினுசு கனிவர்க்க முதலானவைகளும் வரிசை வரிசையாக வைக்கப்பெற்றிருந்தது. இவைகளைக் கண்ணுற்ற எனது பிதா அவர்கள் இஃதென்ன சலதரங்க வாத்தியம்? என்னலும், இருவுத்தரவர்கள் இந்தக் கோப்பையிலிருப்பது பால், இந்தக் கோப்பையிலிருப்பது சர்பத்து என்று ஒவ்வொன்றையும் விபரமாகச்சொல்ல ஆரம்பிக்க, அதை எனது பிதா அவர்கள் கேட்டு புன்முறுவலுடன் இவைகளைத் தாங்களும், எனது புதல்வனுமாகச் சாப்பிடுங்கள். எனக்கு வேண்டியது சாதாரணச்சோறும், உரித்த தேங்கா யத்தனை உப்பில்லாமலறைத்த மிளகாய் விழுதும், சுமார் அரைக்கால் வீசை மிளகாய் வற்றலும், நன்றாய்க் கொதித்த ஒரு குவளை வெந்நீரும் தேவை; மற்றொன்றும் தேவையில்லை என்று கூறி, அங்ஙனமே மிளகாய் விழுதை அன்னமாகவும், அன்னத்தையும், மிளகாய் வற்றலையும் கறிபதார்த்தமாகவும் அமைத்துப் புசித்தார்கள். இருவுத்தரவர்கள் இதைப்பார்த்து அளவிலா இறும்பூதெய்தி இந்த ஆகாராதிகளைப் புசிக்கவில்லையே யென்று தாழ்ந்த குரலுடன் சொன்னார்கள். அதற்கு எமது பிதா அவர்கள் இருவுத்தரவர்களுக்கு நல்லாசி கூறி, "நான் சிலகாலமாக இவ்வாறு தான் புசிக்கிறேன்; ஏனென்றால் அறுசுவையிச்சையில் ஆழ்ந்து விடுபவர்களுக்கு ஆன்மலாபம் கிடைப்பது துர்லபம். அதற்காகத்தான் என் நபுசுக்கு மாறுதலான உணவைக்கொடுத்துப் பழக்குகிறேன். ஆயினும் எனது குழந்தை புசித்தது நான் புசித்தது போலல்லவா?" என்று இன்னுரைபகர்ந்து பின்வரும் சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கினார்கள்.

ஒரு மஸ்தான் (ஆரிபு) அவர்கள் தன்னை இன்னாரென்று பிறர் தெரிந்து கொள்ளாத வண்ணம் ஒரு நகரத்தில் ஏகாலித்தொழில் புரிந்துகொண்டிருந்தார்கள். சூரியன் மேகத்துள் மறைந்திருந்தாலும் அதன் ஒளியானது உலகத்தில் பிரகாசிப்பது போல், அவர்கள் ஒரு இழிவான தொழிலைப் புரிந்து கொண்டிருந்தும், அவர்கள் ஞானப் பிரகாசமானது ஒரு அன்பனுக்குத் தோற்றமாக அவன் வந்து வணங்கி "பாவா! அடியேன் கிரகத்தில் இன்றையதினம் நபிகள் பெருமான் மீது மௌலிது ஓதி, விருந்தும் நடைபெறுவதால் தாங்கள் வந்து அமுது புசிக்கும் படி பிரார்த்திக்கிறேன்" என்றனன். மகான் "நான் ஒரு இழிதொழிலைச் செய்து கொண்டிருக்கிறேன்; நான் வருதல் தகாது" என்று மறுத்தார்கள். எவ்வளவு சொல்லியுங் கேளாமல் அவன் பிடிவாதமாக "தாங்கள் வந்தால்தான் என் மௌலிது நிறைவேறும்" என்று பன்முறை கெஞ்சினன். அதற்கு மகான் சொன்னதாவது: "நான் உன் வீட்டுக்குவந்து அமுது புசிப்பதாயிருந்தால் எமது நான்கு அபிப்பிராயத்திற்கு நீ இணங்குவையாயின் நின் இல்லத்திற்கு யாம் அமுது புசிக்க வருவோம்." அதாவது :—

1. "யாம் உன் வீட்டுக்கு வந்து எமக்கிஷ்டமான விடத்தில் இஷ்டப்பட்டபோது இருப்போம். இன்ன விடத்தில் உட்காருங்கள் என்று சொல்லக்கூடாது".

2. "நீ வைத்த உணவில் எமக்கிஷ்டமானதைப் புசிப்போம். இன்னதைப் புசியுங்கள் என்று சொல்லக்கூடாது".

3. "இன்னபொருள் வேண்டுமென்று கேட்போம். அது எதற்காகவென்று கேளாமல் உடனே கொண்டுவந்து கொடுக்கவேண்டும்".

4. "எமக்கிஷ்டமானபோது எழுந்து வெளியிற் செல்லுவோம். சற்று இருங்கள், போகலாம் என்று சொல்லக் கூடாது" என்பதே.

அன்பனுனவன் அக்கருத்துக் கிணங்கினமையால் அங்ஙனமே சென்று விருந்தினர்கள் உள்ளே செல்லும் வரையில் வெளியில் நின்று கொண்டிருந்தார்கள். பின்னர் எல்லோரும் உள்ளே சென்றபின் விருந்தினர்கள் பாத ரட்சை கழற்றிய விடத்திலுட்கார்ந்தனர். முன் கொடுத்த வாக்குத் தத்தத்தால் வேறிடத்தில் உட்காரும்படி அன்பன் சொல்ல முடியவில்லை. பின்னர் நளபாகமாய்ச் சமைத்த பதார்த்தங்களை ஒரு பாத்திரத்தில் கொண்டுவந்து வைத்தான். வழக்கப்படி அதில் வைக்கப்பெற்றிருந்த கீரையுடன் தமது ஜோலிணுப்பையிலிருந்து உலர்ந்த ஒரு ரொட்டித் துண்டை யெடுத்துப் புசித்துவிட்டு, ஒரு அகலமான இரும்புத் தகட்டைப்பழுக்கக் காய்ச்சிக்கொண்டு வரச்செய்து வாசற்படியில் வைத்துக்கொண்டு, அமுது புசித்துவிட்டு வெளியேறுகிறவர்களை நோக்கி "அன்பர்காள்! நில்லுங்கள்! இந்த நெருப்புத் தகட்டின்மேல் நின்றுகொண்டு நீங்கள் புசித்தவைகளைச் சொல்லிவிட்டு இறங்குங்கள்". ஏனென்றால் நாளைத்தீர்ப்பு (கியாம) நாளில் ஆண்டவன் இவ்விதமாகத் தான் கேள்வி கேட்பான். ஆனால், நான் புசித்தவைகளை இதோ சொல்லிவிடுகிறேன் பாருங்கள் என்று தகட்டின் மேல் ஏறி, ரொட்டியும், கீரையும் என்று சொல்லி இறங்கி விட்டார். மற்றவர்கள் அவ்வாறு செய்யமுடியாமல் திகைத்தார்கள். நபிகள் பெருமான் அவர்களும் விருந்துக்குச் சென்றால் இரண்டொரு பதார்த்தங்களை மட்டும் புசிப்பதே யன்றி முற்றிலும் புசிப்பதில்லையாம். ஆகையால் தாங்கள் அமைத்த பதார்த்தங்களை நான் புசிக்கவில்லையென்று

ஆயாசப்படவேண்டாம் என்று எனது பிதா அவர்கள் இருவுத்தர் அவர்களுக்கு சமாதானம் சொன்னார்கள்.

இந்துக்களுடைய கலியாண முதலான விசேட காலங்களிலும், கிருத்திகை-ஏகாதசி முதலான விரதாதிகாலங்களிலும், தனவந்தர் வீடுகளிலும் மிக்க விசித்திரமாக அன்னம் புசிக்கிறார்கள். அஃதாவது முதலில் சாதத்துடன் பருப்பும்-நெய்யுமாகவும், பின்னர் பொறித்த குழம்பு, பின்னர் புளிக்குழம்பு இவைகளைப் போட்டு இஷ்டப்படி சாப்பிடுகிறார்கள். இனி இந்தக் குழம்பினால் சாதம் செல்லாது என்று தெரிந்து பாயசம், வடைபோட்டு சாப்பிடுகிறார்கள். இனி தித்திப்பான ஆகாரம் செல்லா தென்று இரசமும், சாதமும் சாப்பிடுகிறார்கள். அப்புறம் மோரும், சாதமும் சாப்பிடுகிறார்கள். பலவிதமான பழவர்க்கங்களும், பலகாரா திகளும் சாப்பிடுகிறார்கள். இவ்விதம் நாவின் வழவழப்பை மாற்றி மாற்றிச் சாப்பிட்டு பூரண கர்ப்ப ஸ்திரீ போல் வயிறு பருக்கத் தின்று,

பருத்திப் பொதியினைப் போலே வயிறு
பருக்கத் தங்கள்
துருத்திக் கறுசுவை போடுகின்றார்

என்னும் பட்டினத்தடிகள் வாக்கியத்திற் கிலக்காகிறார்கள்.

இஸ்லாமானவர்களுடைய விசேடங்களிலும், தனவந்தர் வீடுகளிலும் மாமிசம் முதலான ஆகாரங்களை அளவு கடந்து புசிக்கிறார்கள். றம்லான் மாதத்திய முப்பது நோன்பு வந்து விட்டால், சிலர் பகலெல்லாம் மீன் பிடிக்கிறதும், மாலையில் அதிக மீன்களை வாங்குகிறதும், காய்-கறி, பால்-பழங்களைச் சேகரிக்கிறதும், கோழிகளை அறுக்கிறதுமே வேலையாயுழன்று இரவு 3 மணி சுமாருக்கு நோன்பு வைக்கும்போது நாளைப் பகல் முழுவதும் பட்டினியாக யிருக்க

வேண்டுமே, இப்போதே வயிறு நிரம்பப் புசித்துக் கொள்வோம் என்று பலவிதமான கறி-இரசம்-பால்-பழம் முதலானவைகளைச் சேர்த்து அளவு கடந்து புசிக்கிறார்கள். சிலர் ஆகாரத்தோடு தேங்காய்ப் பால் சேர்த்துப் புசித்தால் எளிதில் சீரணமாகாதென்றும், அதனால் பசியினுடைய உபத்திரவம் ஏற்படாதென்றும் கருதி வயிறு நிறையப் புசிக்கிறார்கள். அப்படிப் புசிப்பதனால் சிலருக்கு சீரணிக்காமல் வாந்தி பண்ணி, நோன்பு முறிந்து போகும் படியும் ஏற்படுகிறது. ஒரு பேரீத்தம் பழத்தை மட்டும் புசித்து விட்டு நோன்பிருந்த பெரியோர்கள் சரிதங்களை இந்தப் போசனப் பிரியர்கள் கேட்டறியார்கள் போலும். இப்படிப் புசிப்பவர்கள் நோன்பு காலத்தில் சாமான்கள் சேகரிப்பதையும், அதை விலாப்புடைக்கத் தின்பதையுமே நோன்பு என்று நினைத்திருக்கிறார்களே யன்றி, பசியைச் சகிப்பதும், அந்தப் பசியினால் கருவிகாணங்களைப் பரிசுத்தமாக்கி ஆண்டவனை விசுவசித்து வணங்குவதும், பசிப்பிணியானது இன்ன தன்மையை யுடையதென்றுணர்ந்து பிறருடைய பசியை நிவர்த்திப்பதும், தான-தரும முதலானவைகள் செய்வதுமே நோன்பின் பிரயோசனம் என்று உணர்ந்திருப்பதாகத் தெரியவில்லை. ஏ! மோக்ககாமிகளே! நீங்கள் பலவிதப் பதார்த்தங்களினால் படிப்படியாக ஆகாரத்தை வயிறு நிரம்பச் செலுத்தி, அதன் மூலமாக நோன்பிருந்து கடவுள் திருவடியைப் பெற நாடுகிறீர்கள். தூராதகுழியாகிய வயிற்றுக்குள் படிப்படியாக சோற்றைச் செலுத்த முயலாமல், படிப்படியாக கடவுள் திருவடியில் மனதைச் செலுத்த முயலுங்கள். அளவுகடந்து புசித்து அசீரணத்தினால் பலவியாதிகள் ஏற்பட்டு வைத்தியனுக்குப் பாத காணிக்கை வைத்து வணங்க உங்களுக்கு இஷ்டமா? கடவுள் திருவடிக் கமலங்களை வணங்க இஷ்டமா? எது உங்க

ளுக்கு இஷ்டம்? நாக்கைச் சப்பிச் சப்பிப்பார்த்து அதன் மீதே முழு நோக்கமாய்ப் புசிப்பவர்களுக்கு ஒரு காலத்திலாவது மோட்சம் கிடைக்கும் என்று சொல்வதற்கிடமில்லை.

இதுவரையில் ஆகாரத்தைக் குறைக்கும் படி கூறி வந்தோமேயன்றி, ஆகாரத்தை முற்றிலும் விட்டு பசியின் கொடுமையைச் சகிக்கும்படியாகக் கூறவில்லை. ஏன்? அன்னம் ஒடுங்கினுல் ஐந்தும் ஒடுங்கும்.

*நாழி அரிசியை நாய் கொண்டு போனுல்*
*ஞானமும் கல்வியும் பேய் கொண்டு போகும்*

என்பதனுலேயாம். பசியின் அதிக உபத்திரவமானது கடவுளுடைய வணக்கத்துக்கு இடையூறுகும். கோபம் முதலானவைகளை அதிகரிக்கச் செய்யும். இதை உத்தேசித்தே பெரியோர்கள்,

*"கனியேனும் வறிய செங் காயேனு முதிர்சருகு*
*கந்தமூ லங்களேனுங்*
*கனல்வாதை வந்தெய்தின் அள்ளிப் புசித்துநான்*
*கண்மூடி மௌனியாகித்*
*தனியே யிருப்பதற் கெண்ணினேன்"*

என்று கூறியுள்ளார்கள்.

பெரியோர்கள் ஆகாரத்தைப் படிப் படியாகக் குறைத்து, அதாவது வளர் பிறைப் பிரதமையிலிருந்து பௌர்ணமி வரையில் ஒவ்வோர் திதிக்கும் ஒவ்வோர் பிடி அன்னமாக பதினைந்து பிடிவரையில் ஏற்றியும், தேய்பிறைப் பிரதமையிலிருந்து அமாவாசை வரையில், ஒவ்வோர் திதிக்கும் ஒவ்வோர் பிடி அன்னமாக ஒரு பிடி வரையில் இறக்கியும் பசிப்பிணியை மீற விடாமல் அடக்கி வந்திருக்கிறுர்கள். அவர்களுக்குப் பசியானது அவ்வளவு நொந்தரவைக் கொடாது. எவ்வாறெனில்:—நாம் ஒரு அவசரமான காரி

யத்திலாவது, அல்லது அதிக இலாபம் தரத்தக்க வியாபாரத்திலாவது, நமது உற்றார்-உறவினர் நண்பர் முதலானவர்களின் ஆபத்துச் சம்பத்துக் காலங்களிலாவது நமது பசியும், தேகத்தின் கஷ்ட-நஷ்டங்களும் எங்கேயோ ஓடி மறைந்து விடுகின்றன. அதுபோல, தியான ஆராய்ச்சியாகிய திக்று-பிக்றுகளில் பராக்காகி விட்டால் பசியின் வேகம் குறைந்து விடும்.

ஒரு காலத்தில் எனது பிதா அவர்களுக்கு ஒருவர் உயர்ந்த சித்திரான்னஞ் செய்துகொண்டு வந்து கொடுத்தார். அதை அவர்கள் உடனே புசிக்காமல் வைத்திருந்தார்கள். பின்னர் பசி வந்தபோதும் "மனமே உனக்காகத்தான் இதோ ஆகாரம் வைத்திருக்கிறேன். அவசரப்படாதே தருகிறேன்" என்று சமாதானம் சொன்னார்கள். பிறகு அதற்கு நீர் பூட்டிவைத்திருந்து இரண்டு தினத்திற்குப் பின்னர் சிறிது சிறிதாகப் புசித்ததைப் பார்த்திருக்கிறேன்.

பசித்தவுடன் ஆகாரத்தைக் கொடுத்து அதனிஷ்டப்படி நடப்பின் அதற்கு நாம் அடிமையாகிப் போய்விடுவோமாதலால், நமது இஷ்டப்படி பசியை அடக்கிக்கொண்டே வர அதிக தூக்கம் வாராதபடி விழிப்பை அதிகப்படுத்தும்.

## 2. விழித்திருத்தல்.

பசியானது தவம்புரியும் கண் விழிப்புக்கும், கருவி-காரணங்களின் பரிசுத்தத்திற்கும் அடிப்படையாதல் போல் * கண் விழிப்பானது தவத்திற்கு அடிப்படையாகும்.

* கண் விழிப்பானது தவத்திற்கு அடிப்படையாதல்போல் சிலருக்கு சூதாட்டத்திற்கும், மதனலீலைக்கும், திருடல் முதலான பல துர்க்கிருத்தியங்களுக்கும் அடிப்படையாகிறது. ஆனால் அது மதுவுண்ணும் வண்டானது மலமுண்ட தன்மையை யொக்கும்.

மனிதனுடைய வாணாளானது கடவுள் கொடுத்தருளிய பொற் புதையலை நிகர்க்கும். அந்தப் புதையலிலும் பன் மடங்கு மாட்சிமை தங்கிய மறுமை (ஆகிறத்து)க்கு அவசிய மான பொருட்களைச் சேகரிக்க வேண்டியது உண்மையான மனிதனின் முக்கிய கடமையாயிருக்கிறது. அங்ஙன மிருப்ப, மனிதன் பகற்காலமெல்லாம் பிரபஞ்சப் பராக்கில் காலத்தைத் தொலைத்துவிட்டாலும், இராக்காலத்திலாவது கண் விழித்து மறுமைக்கான தவத்தைப் புரியாமலும்,

கண்மூடிச் சயனமிடி லாறெட் டோடிக்
கருதிவரும் ஐயாறு கருதிப்பாராய்

என்றபடி நித்திரையில் சுவாசம் இறங்குகிற ஒவ்வொரு தடவைக்கும் 18 சுவாசம் வீதம் குறைந்து வாணாள் வீணாளாகக் கழிந்துபோவதை ஆராய்ச்சி செய்யாமலும், "இன்னும் கெட்டுப்போகிறேன் என்ன பந்தயம்"! என்று ஒருவன் பந்தயம் கட்டியதுபோல், சூரிய அத்தமய கால முதல் சூரியன் உதயமாகி ஒரு சாமம் வரையிலும் குரோக் கை (குறட்டை) யிட்டுத் தூங்குகிறார்களென்றால் இவர்கள் கதி எவ்வாறாகும்? அதோகதிதான்.

விழிப்பானது ஆயுள் நீட்சியைக் கொடுக்கிறது. தேவர்கள் கண் இமைக்கிறதில்லையென்றும், அதனாலேயே அவர்கள் நித்திய சிரஞ்சீவிகளா யிருக்கிறார்களென்றும் கேள்விப் படுகிறோம். தமயந்தி சுயம்வரத்தில் நளச்சக்கரவர்த்திக்கு மணமாலை சூட்டச் சென்ற ஞான்று, தமயந்தியின் வனப்புக் காகத் தேவர்களும் நளவடிவம் எடுத்து வீற்றிருக்க, கண்ணிமையாமை-கண்ணிமைத்தல் என்னும் பேதத்தை யுணர்ந்தே தனது காதலனாகிய உண்மையான நளனுக்கு மாலை சூட்டினாளென்று சரிதங்களில் வாசித்திருக் கிறோம். அன்றியும் கண்ணிமையாம லிருப்பதானது

நமது யோக ரகசியத்தில் கூறப்பெற்ற நவமுத்திரைகளி லொன்ருகிய சாம்பவி என்னும் முத்திரையைச் சேர்ந்ததாயு மிருக்கிறது. மூடுதலும், திறத்தலுமில்லாத சமபார்வையை யுடைய சாம்பவி முத்திரையினுல் மறைவான ஆலமாகிய சூக்கும லோகத்தின் அற்புதங்களும், காட்சிகளும் வெளி யாவதால் நித்திரையானது வாரமல் தடுக்கப்பெறுகிறது. விழி யிமையாமலிருப்பதே ஒரு பெரிய தவமாகும். அவ் வாறு விழித்திருக்கும்போது தான் செய்யவேண்டிய அப் பியாசங்கள் பிறருணரா திருப்பதற்குத் தனித்திருக்க வேண்டியதும் அத்தியாவசியமாகிறது.

### 3. தனித்திருத்தல்.

தனித்திருப்பதனுல் நமது சீவகாந்த சக்தியுடன் பிறருடைய சீவகாந்த சக்தி கலவாமல் ஆன்மசக்தியை அதிகப்படுத்துகிறது. அதாவது அப்பியாசிகளுடைய சீவ காந்த மென்னும் சோதிப் பிரபையுடன் பிறருடைய பிரபை வந்து கலந்து மாசடைவதில்லை. நம்முடைய சரீரத்தி லிருக்கும் இந்தப் பிரபைக்குத் தமிழில் நெறியென்றும், ஸம்ஸ்கிருதத்தில் **தேஜஸ்** என்றும், இங்கிலீஷில் ஆரு (Aura) என்றும் சொல்வார்கள். ஒரு பாத்திரத்தில் நிறைய சலம்பெய்து அதில் விரல்களை ஒரு அங்குலம் நனைத்துக் கொண்டு மனதினுல் தேகத்திலிருக்கிற தேஜஸைத் தள்ளி நகக்கண் வழியாய் விழுவதாகப் பாவனை செய்துகொண் டிருந்தால் தேகத்திலிருக்கிற தேஜஸ் சில நேரத்தில் நீரில் இறங்கும். இதனை எறும்பூறுவதுபோல் பரிசத்தால் தெரிந்து கொள்ளலாம். மந்திரிப்பதின் இரகசியமும் இதுவே. அந்த தேஜஸ் சம்பந்தப்பட்ட திரவத்தை வயி றெடுப்பு முதலிய வியாதிக்குக் கொடுத்தால் உடனே சௌக்கியமாகும். இவ்வாறு நாம் அநேக பிணிகளுக்கு

ஔடதம் கொடுத்திருக்கிறோம். ஆனால் ஒருநாளைப்போல் பலநாளைக்கு மந்திரித்தால் தேகத்திலிருக்கின்ற தேஜஸ் எல்லாம் வெளியேறி பலஹீன முண்டாகும். அவ்வித முள்ளவர்கள் பால், தயிர், நெய் முதலியவைகளைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். நாம் சாப்பிடும் ஆகாரமே தேஜஸாய் மாறுகிறதேயொழிய வேறன்று. ஆகையால் சத்துவமான ஆகாரத்தையே புசிக்கவேண்டும்.

ஞானிகள், தபசிகளுக்கு அந்த தேஜஸ் சோதிசொரூபமாகவும், பாவ புண்ணியம் இரண்டைச் செய்கின்ற தபசிகளுக்கு கறுப்பும்—வெளுப்பும் கலந்த நிறமாகவும், சுத்தப் பாவிகளுக்கு கறுப்பு நிறமுள்ளதாகவும் அவரவர் தேகத்தைச் சுற்றி ஒரு முழத்தில் பரவிநிற்கும். நம்மாழ்வார் சரித்திரமே இதற்குப் போதுமான சான்று பகரும்.



கர்மரோக முடையவர்கள் சமீபத்தில் போகலாகாதெனக் கூறுவதும் அதற்குத்தான். தேள் கொட்டினால் விஷத்தைக் கண்டவுடன் தேஜஸ் ஒருபக்கத்தில் கட்டிக்கொள்ளுகிறது. அதைத்தான் நெறி கட்டிக்கொள்ளுகிறதென்று சொல்லுகிறோம்.

மரணமான வீடு, பிரசவித்த வீடு, சந்தைக்கூட்டம், ரயில்ப்பிரயாணம், பற்பல கூட்டம், புணர்ச்சி, பிரவிடை முதலானவைகளால் தேஜஸ் அசுத்தமடைகிறது. உடனே குளித்து வஸ்திரத்தை நனைத்துவிட்டால் அசுத்த தேஜசுகள் நீங்கிவிடுகின்றன. அசுத்தமுடையவர் (நீசர்)கள்

கண்ணுல்பார்த்த பதார்த்தங்களில் அவர்களுடைய மனோ தந்தி மூலமாக அசுத்த தேஜஸ் சென்று விழுவதால், அந் தப் பதார்த்தங்கள் மலினமடைந்து தள்ளுபடியாகின்றன.

தோட்டத்திலுள்ள காய், கறி, பயிர்கள் முதலியவை களைப் பார்த்தால் தேஜஸ் போய்ச் சென்று பூச்சி விழுந்து விடுகிறது. அதைத்தான் கண்திருஷ்டியென்று சொல்வார் கள். அதற்குப் பரிகாரமாக பானையில் சுண்ணும்பு தடவி புள்ளிகுற்றி பயிரைப் பார்க்காமல் இருக்கவேண்டி வைப்ப துண்டு. இவ்வித ஞாயங்களினுல் நீசர்கள்தொட்ட பதார்த் தமும், பார்த்த பதார்த்தமும் தள்ளுபடியான தாகின்றது.

நீசர்களிடத்தில் தேஜஸ் அசுத்தமாய் இருக்குமாகை யால் அவர்கள் ஒரு பதார்த்தத்தைத் தொட்டால் அவர் களுடைய தேஜஸ் அந்த பதார்த்தத்தில் சேர்ந்துவிடும். ஆதலால் நல்லோர்கள் அதைச் சாப்பிடுவது கூடாது.

ஒரேவித மருந்தை ஒரேவிதமான வியாதிக்கு இரண்டு வைத்தியர்கள் கொடுக்கின்றுர்கள். ஒருவர் கொடுப்பது சௌக்கியமாகிறது. மற்றவர் கொடுப்பது சௌக்கியமாகிற தில்லை. இதற்குக் காரணம் தேஜசும், சீரக் கூறுமே யாம். ஜீவகாருண்ணிய முடையவர்களுக்கு நல்ல தேஜஸ் இருக்கு மாதலால் பிணி உடனே சௌக்கியமாகும் ; மற்ற வைத் தியர்களுக்கு அஃதில்லாமையால் சௌக்கியமாகாது. இதைத்தான் கைராசி யென்று சொல்வது.

ஐரோப்பியர்கள் இந்தச்சாத்திரத்தைக் கண்டுபிடித்து அனுபவத்தில் வைத்துக் கொண்டிருக்கிறுர்கள். அந்த சாஸ்திரத்திற்கு மெஸ்மெரிசம் என்று பெயர்.

இந்துக்கள் கைக்கொண்டுவரும் சாதியாசார மென்பது மெஸ்மெரிசம் (Mesmerism) என்ற சாஸ்திரத்தைக் கொண்டு பார்க்கும்போது பெரும் நன்மையைத் தாத்தக்க

தென்று கர்னல் ஆல்காட் துரை நாகப்பட்டணத்தில் பிரம்ம ஞான சபை ஸ்தாபித்தபோது தான் செய்த பிரசங்கத்தில் விஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறூர். அன்றியும் தனித்திருப் பதால் உலகப்பராக்குகள், உலகப்பேச்சுகள் வராமல் கட வுளைப்பற்றி ஆராயுஞ்சிந்தனையானது அதிகப்படுகிறது. உல கப் பேச்சுகளில்லாமல் தன்னுளே ஆராய்ச்சிசெய்யும் ஏகாக் கிர சித்தமுடைய மெய்யன்பர்கட்கு கடவுளின் தொனி யானது கேட்கப்பெறுகிறது. நாம் ஒரு மனிதனிடம் அழுத்தமாகப் பேசிக்கொண் டிருக்கும்போது வேறொரு மனிதன் நம்மிடத்தில் ஒரு அவசியமான செய்தியைச் சொன்னாலும் அந்த வார்த்தைகள் நமது காதில் கேட்ப தில்லை. அதுபோல் உலகப்பராக்குகளிலிருக்கும் போதும், பேசும்போதும் கடவுளுடைய தொனியானது நமக்குக் கேட்பதில்லை. இது பற்றியே ஆன்றோர்,

பேசிடா திருப்பீராகில் ஈசன் வந்து பேசுமே

என்று கூறியுள்ளார்கள். ஆகையால் நாம் உண்மையாகக் கடவுள் மார்க்கத்திற் செல்லவேண்டுமானால், கூடிய மட்டில் இனவாசங்களை விட்டு விலகுதல் வேண்டும். மனிதர்கள் மீது வைத்திருக்கிற நம்பிக்கையையும், பந்தபாசத்தை யும், அவர்களுடன் கூடியிருக்கிற பழக்கவழக்கங்களையும், அவர்களுடன் பேசுவதையும் தவிர்த்தல்வேண்டும். மனிதர் கள் சகவாசத்தினால் அனுவசியமான வார்த்தைகள், கதை காவியங்கள், ஊர்ப்புறணிகள் முதலானவைகளைப் பேச இடங்கொடுக்கும். நாம் பேசக்கூடாதென்று வைராக்கியமா யிருந்தாலும் பேசாமடந்தையைப் பேசவைத்த விக்கிர மாதித்தன் கதையைப்போல் நம்மைப் பேசும்படிச்செய்து விடுகிறூர்கள். இப்படிப் பேசுவதைத் தடுப்பதற்காகவே நபிகள் பெருமான் அவர்கள் நான்கு கலீபாக்களில் முதன்மை பெற்றவர்களாகிய அபூபக்கர் சித்திக்கு றலியல்

லாகு அன்கு அவர்கள் பெரும்பாலும் வாயில் கல்லை அடக்கிக் கொண்டு பேச்சையொழித்திருந்தார்கள் என்று கூறப்பெறுகிறது. ரயில்ப்பிரயாணத்தில் எட்டுமணிக்குப்போய்ச்சேர வேண்டிய வண்டி 7-மணிக்குப் போய்ச்சேர்ந்து விடுமென்ருவது, 9-மணிக்குத் தான் போய்ச்சேருமென்ருவது ஒருவன் தவறுதலாய்ச் சொல்லிவிட்டால், மற்ெருருவனுக்கு அகங்காரம் உதயமாகி 8-மணிக்குத் தான் போய்ச்சேரும்; என்ன பந்தயம் என்று தர்க்கம் கிளம்பிவிடுகிறது. இது போல் பேசாமடந்தையைப் பேசவைக்குங் கதைகள் உலகத்தில் அனேகம் நிகழ்கின்றன.

சில வருடங்களுக்குமுன் யான் திருவாரூரிலிருந்து சென்னைக்குச் செல்லும்போது எனக்கு அறிமுகமுள்ள சிலர் அந்த அயாதத்திலிருந்தார்கள். அவர்கள் என்னைக் கண்டதும் பலவாறு முகமன்கூறி, "சுவாமிகள் திருவாக்கைக் கேட்டுவெகு காலமாகிறது. ஏதாவது பாடல் சொல்லுங்கள். நல்ல பொழுதாய்ப் போகட்டும்" என்று ஏகோபித்துக் கூறினுர்கள். அவ்வமயம் எனக்கு நடு நாடியாகிய சுழிமுனை நிகழ்ந்து கொண்டிருந்தபடியால், அவர்களுடன் பேசாமல் என்னுடைய காரியத்தில் கண்ணுங் கருத்துமாயிருந்தேன். நான் மௌனமா யிருந்ததைக்கொண்டு ஏதோ பாடப் போகிறேனென்று எண்ணிக்கொண்டிருந்தார்கள் போலும். வெகு நோத்திற்குப் பிறகு, "சுவாமி! நாங்கள் மாயவரத்திலிறங்கி கும்பகோணத்திற்குப் போகிறோம். வண்டியும் போளம் தாண்டிவிட்டது. ஏதாவது பாடுங்கள்! பாடுங்கள்!!" என்று பாபரப்புடன் கூறினுர்கள். நான் ஒரு வியாகூலமா யிருக்கிறேன். அதனுலேதான் பாட்டுப்பாடத் தாமதம் என்றேன். அஃதென்ன வியாகூலம் என்று ஆவலுடன் கேட்டார்கள். செலவுக்குப் பணம் குறைகிறது. யாரிடத்திலாவது ஐந்து ரூபாய் கைமாற்று வாங்க வேண்டுமே என்ற

கவலைதான் என்றேன். அவர்கள் அதைக் கேட்டு, சிவ ! சிவ !! எங்களிடத்திலும் அதிகப் பணமில்லையே ; கணக் காகத்தான் கொண்டு போகிறோம் என்று வருந்துபவர்கள் போல் அபிநயித்தார்கள். அவர்களை நோக்கி நான் சொன்னதாவது :—

ஒரு பலகாரக் கடைக்காரன் ஏமாந்த சமயம் பார்த்து காக்கை யொன்று ஒரு வடையைக் கௌவிக்கொண்டு வந்து ஒரு மரத்தின் மேலுட்கார்ந்தது. அதை ஒரு நரி அபகரிக்க நினைத்து அந்த காக்கையை நோக்கி, " என் அருமை நண்பனே ! நீ எவ்வளவு அழகாயிருக்கிறாய் ! சரி வரப் பார்க்காதவர்கள்தான் நீ கருப்பாயிருக்கிறாயென்று பரிகசிக்கிறார்கள். உன் உருவமே இவ்வளவு அழகா யிருக்கும்போது உன் குரலோசை எவ்வளவு அழகா யிருக்குமோ" என்று புகழ, காக்கை கருவம் படைத்து கா, கா என்று பாட ஆரம்பித்தது. உடனே வாயிலிருந்த வடை கீழேவிழ நரி கௌவிக்கொண்டு சந்தோஷமாய் ஓடிற்று. காக்கை வடையைப் பறிகொடுத்து ஏங்கி யிருந்தது என்ற கதைபோல், நீங்கள் எனக்குத் தோத்திரம் பேசி எனது மூச்சைத் தொலைக்க வழி தேடுகிறீர்கள். நீங்கள் கும்பகோணத்துக்கு கணக்காகக் கொண்டுபோகிற பொருளைச் செலவிட முடியாததுபோலவே, நாங்கள் வெளிப் பாளையத்திற்கு கொண்டுபோகிற அரும் பெரும் பொருளைச் செலவு செய்ய எங்களால் முடியவில்லை யென்று அவர் களுக்குக் குறிப்புத் தோன்றும்படி இனிமையாகக் கூறி னேன். அவர்களிற் சிலர், " சுவாமிகள் சொன்னது சரி தான் " என்று ஒத்துக்கொண்டார்கள்.

ஒரு மனிதனை நீ யோக்கியனுவெனில் அவன் ஒன்றும் சொல்லாமல் மௌனமாக விருக்கவேண்டியதுதான். ஏன் ? அவன் தன்னை அயோக்கியனென்று ஒருபோதும் சொல்

விக்கொள்ளான். யோக்கியனென்று சொல்லிக்கொண்டால் கர்வியென்று பிறர் நினைப்பர். ஆகவே அவன் செய்வது யாது? மௌனமாயிருப்பதுதான். அதுபோல் ஒரு பெரியோரை, யாரேனும் ஒருவன் உமக்குப் பக்தியுண்டோவென்றால் அவர் என்ன செய்வார்? பக்தியில்லையெனில் நீர் பெரியோரல்லவென்பான். பக்தி உண்டெனின் கர்வம் அதிகமென்பான். சும்மா விருந்தாலோ பக்தியில்லை போலும்; அதனாற்றான் வாய்திறவாமலிருக்கிறானென்பன். இந்தச் சங்கடங்களெல்லாம் ஏகாந்தத்தில் இல்லை. ஆதலின் ஏகாந்தம் இனிதாயிற்று. எந்த விஷயத்தில் மனிதன் கர்வமடைந்தாலும் கடவுளை வணங்கும் விஷயத்தில் மாத்திரம் கர்வம் கொள்ளத்தகாது. அனேக மகரிஷிகள் இலட்சம், பத்துலட்சம் என்று நூற்றாண்டுக் கணக்காய்த் தபசுசெய்து, உடம்பில் புற்றுவைத்திருப்பதும் தெரியாமலுட்கார்ந்திருப்பதாகப் புராணங்கள் கூறுகின்றன. ஆதலின் நம்முடைய பக்தி எம்மாத்திரம்? அதைப் பிறரிடம்தான் சொல்லிக்கொள்ளத் தகுமோ? ஆதலின் வம்புவளராத ஏகாந்தமான விடத்திலிருந்து கடவுளைத் தியானிக்கவேண்டுமென பெரியோர் கட்டளையிட்டிருக்கிறார்கள். எவன் திவ்ய ஞானத்தையடைய எண்ணுகிறானோ அவன் கூடியமட்டும் மனிதர்களின் கூட்டுறவைவிட்டு சுயாதீனனாய்த் தனியனாயிருக்கவேண்டும். காற்றடித்து சலம் கலங்கினால் அதில் நிழல் தெரியாததுபோல் சித்தமாகிய ஏரி கலங்கினால் ஆன்மாவாகிய நிழல் தெரியாது. இதெல்லாம் மனிதர்கள் சங்கத்திற் சேருவதனாலுண்டாகும் வீண் காலப் போக்காம். ஆகலால் சன சங்கத்தைத்தணந்து தனித்திருந்து தான் மனிதராகப் பிறந்ததின் பயனையுணர்ந்து நம்பெருமான் திருவடிக் கமலங்களில் அன்பு செலுத்தி இரண்டற்ற மோக்கத்தை யடைவோமாக.

## பதின்மூன்ருவது அத்தியாயம்.

## அன்பும்—ஆன்ம லாபமும்.

விருத்தம்.

என்புதோல் நரம்பு சேர்ந்த யாக்கையே தானென் றெண்ணித்
துன்புரு ததனுள் வாழும் சுயம்பிர காசந் தன்னை
அன்பினுற் பொருந்தி மேலாம் ஆன்மமெய்ஞ் ஞான மோக்க
இன்பெலாம் பெறுதற் கான்ற வியல்பினைப் பகர்வா மன்றே.

### அன்பின் மகிமை.

அன்பு என்னும் பதத்திற்கு பக்தி, நம்பிக்கை, விசுவாசம், ஆசை, காதல், நேசம், தயை முதலான பற்பல பரியாய நாமங்களுண்டு; அவையனைத்தும் ஒரு பொருட் பல பெயர்.

அன்பு நானுவிதமாகும். நாயகன் நாயகிகளுக்கிடையில் பிரகாசிக்கும் அன்பிற்கு காதல் என்றும், சிநேகர் உறவினர் களுக்கிடையி லுண்டாகும் அன்பிற்கு நேசமென்றும், ஏழைகள், மிருகங்கள், பட்சிகள் முதலான ஏனைய பிராணி கள்மீதுண்டாகும் அன்பிற்கு தயை, கிருபை, காருண்ய மென்றும், கடவுள்மீதும், சற்குருபிரான்மீதும், ஏற்படும் அன்பிற்கு பக்தி என்றும் பெயர். அன்பு முளைக்கும் ஆரம் பத்திற்கே பக்தியென்று கூறுவார்கள்.

பக்தியின் முதிர்ச்சியாகிய அன்பானது, பூரண நம் பிக்கை விசுவாசத்துடன் கடவுளைத் தரிசித்து, அவருடன் இரண்டறக்கலத்தலாகிய சிவப்பிரமைக்கியம் அடையும் பொருட்டு இடைவிடாத தியானசொரூபமாகப் புரியும் அரிய பெரிய முயற்சியாம். அத்தகைய முயற்சியானது தைலதாரைபோல் இடைவிடாமற் கடவுளைப்பற்றிச் சிந்தித்

துக்கொண்டிருக்குமாகில், சர்வ பாச பந்தங்களும் நீங்கப் பெற்று மோட்சம் அடைவதற்கும் ஏற்ற சாதனமாகும். அது தலையன்பு, இடையன்பு, கடையன்பு என மூவகைத் தாம்.

தலையன்பு:—தமிழுலகத்தில் பிரசித்திபெற்ற கண்ணப்ப நாயனுருடைய அன்பையும், தன் பிராணநாயகன் உயிர் நீங்கினனென்று காதிற்கேட்டவுடனே தன்னுயிரை இழக்கின்ற நாயகியின் அன்பையும் தலைமையான பேரன்பு என்று கூறத்தகும்.

இடையன்பு:—அரக்கும் மெழுகும், அனலைக்கண்ட போது சிறிதுசிறிதாக மெல்ல உருகுதல்போல, தமக்கன்பாயுள்ள ஒரு வஸ்துவை நேரில் காணுங்காலத்தில் மாத்திரம் மனமானது உருகிப் பரவசமடையும். அவ்வஸ்து பார்வையைவிட்டு நீங்கினல் அந்த அன்பும் அங்ஙனமே நீங்கிவிடும். அதையும், தன் நாயகன் மரித்தபின் உடன்கட்டையேறுபவளுடைய நடுத்தரமான அன்பையுமே இடையன்பு எனப்பெறும்.

கடையன்பு:—ஓர் ஆயுதத்தை நெடுநேரந் தீட்டத் தீட்டக் கூர்மையுண்டாவதுபோல் அன்பனும், அன்பிற்குரிய வஸ்துவும் நெடுங்காலம் பழகியபின்னரே அந்த அன்பு உதயமாகும். அஃது எவ்வளவுக்கெவ்வளவு பிரிவேற்படுகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு அந்த அன்பும் நீங்கிவிடும். அதையும், நாயகனது பிராணன் பிரிந்தபின் சில மாதம் வரையில் நினைப்புவந்த சமயத்தில் அவனை நினைந்து நினைந்து அழுதுகொண்டிருக்காநின்ற நாயகியின் மந்ததரமான அன்பையுமே கடையன்பு என்று சொல்லப்பெறும்.

முதன்மையான தலையன்பு என்பதை இக்காலத்திற் காணுவது மிகவும் அருமை. தலையன்பு என்னும் பிரதம

அன்புவாய்ந்த உண்மையான பக்திமானுயிருப்பவர்கள் பிரபஞ்சத்தோற்றமான வீண் விவகாரங்கட்கெல்லாம் முற்றிலும் விலகியேயிருப்பார்கள். உலக விவகாரத்தில் பற்றுள்ளவரையில், அன்பு என்னும் பயிரானது கதிர்வாங்கிப் பூரணமாய் விளைவது அருமை.

கடவுளை நோக்கி நிட்காமியமாய் பக்தி செலுத்துபவர்களே பூரண ஆனந்த கோசரமுடையவர்கள். அவர்கள் எப்போதும் மலர்ந்த முகத்துடன் (*) காம குரோத லோப மோக மதமாற்சரியமென்னும் சட்கருமங்களிற் சிக்கியுழலாமல் சதா சந்தோஷகாத்துடனேயே இருப்பார்கள். கிரியை, யோகம் இவைகளைப் பார்க்கிலும் அன்பு பல்லாயிரமடங்கு பெருந்தன்மையை யுடையது. எங்ஙனம் உயிரில்லாவிடின் உடம்பினுற் பிரயோசனமில்லையோ, அங்ஙனமே அன்பில்லாவிடின் எத்தகைய யோக ஞானங்களும் சோபிக்கமாட்டா. கிரியை, யோகம் இவைகள் புறத்தோற்ற

---

(*) காமம்:—மாதர்களின்மீது அதிக விருப்பம் வைத்தல்.

குரோதம்:—கோபாவேசத்தால் ஒருவருக்குக் கெடுதி விளைவித்தல்.

உலோபம்:—தனது திரவியத்தை எவ்வித நல்லறங்களுக்கும் செலவிடாமல் பூதத்தைப்போல் காத்துக்கொண்டிருத்தல்.

மோகம்: தன தானிய புத்திர பௌத்திராதிகளின்மீது அதிக விருப்பம்வைத்துத் தனக்குண்டாயிருக்கும்பொருள் போதாதென்று மேன்மேலும் சம்பாதிக்க விரும்பிப் பேராசைப் பட்டலைதல்.

மதம்: செல்வச்செருக்கினுல் பிறரை மதியாமல் தன் மனம் போன போக்காய் நடத்தல்.

மாற்சரியம்: பிறர் அனுபவிக்கும் சுகத்தைக்கண்டு பொறாமை கொண்டு மனம் அழுங்கல்.

மாகிய அதிசயானந்தமுடையது. அன்பானது அகத் தோற்றமாகிய நிரதிசயானந்தத்தை விளைவித்து, வாசாம கோசர வாழ்க்கையாகிய ஆனந்தசாகரத்தைத் தன்னுள்ளே அடக்கிக்காட்டுவதாதலால் அன்பிற்குமேலான முத்திமார்க்கம் எக்காலத்திலுமில்லை.

தாயுமானவள்ளல்.

அன்பாற் கரைந்துகண்ணீ ராறுகண்ட புண்ணியருக்
குன்பால் வரவழிதா னுண்டோ பராபரமே.

சிறு குழந்தைகளுக்கு, இது சுத்தம்-இது அசுத்த மென்றும், இவர் பகைவர்-இவர் உறவினரென்றும், இவர் பெரியவர்-இவர் சிறியவரென்றும், பேதாபேதந் தெரியாததுபோலவே, அன்பு செலுத்துபவர்களும் அவ்விதமே பேதாபேதநீங்கிய களங்கரகிதமான வஞ்சகமற்ற இருதயத்தினல் கடவுளைக்காண முயற்சிக்கவேண்டும். பேராசை, கோபம், வஞ்சகம், பொறுமை முதலியவைகள் எவ்வளவு காலம்வரையில் நம்மிடத்தைவிட்டு நீங்காமலிருக்குமோ அவ்வளவு காலம்வரையில் நாம் கடவுள் காட்சியைத் தரிசிக்க முடியாது. கடவுள் சுதந்தரமில்லாதவர். அவர் உண்மையான தலையன்பு என்னும் இரும்புவலையிற் சிக்கிக்கொள்பவர். எவ்விதமான முகாந்தரத்தைக்கொண்டும், அந்த அன்பு வலையினின்றும் அவர் தப்பித்துக்கொள்ள முடியாது ; தப்பிக்கவும் நினையார். ஏனைய கிரியாவலையில் ஒருபோதும் அகப்படார். அகஸ்மாத்தாக அகப்படினும் அதில் நிலைபெற்றிரார். அன்றியும் அந்த வலையைக் கிழித்து பின்னப்படுத்திவிட்டு வெளியேறிவிடுவார்.

கடவுளானவர் தமது வேதாகமங்களில், "உண்மையான எனது அன்பர்கட்கு நான் கட்டுப்பட்டிருக்கிறேன்"

என்று திருவாய் மலர்ந்திருக்கின்றனர். இதற்கு உதாரணமாவன :—

ஸ்ரீகிருஷ்ணன் சகாதேவனை நோக்கி, பாரதயுத்தம் நடைபெறுதிருப்பதற்கும், எல்லோரும் பிழைத்திருப்பதற்கும் ஏதாவது உபாயம் உண்டாகில் சொல் என்று கேட்க, சகாதேவன் கண்ணீர் ததும்பி நின்று, சுவாமி! துரியோதனன், தருமராசன் என்னும் இருவரையும் நாட்டைவிட்டு காட்டிற்கு விரட்டி விட்டு, இப்பூமண்டலத்தைக் கர்னனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்து, கர்னனைப் பகைத்திருக்கும் அர்ச்சுனனை முந்தி சங்கரித்து, பின்பு பந்துமித்திரர் பலருடைய தலையை வாங்கக் கூந்தலை விரித்திருக்கும் துரோபதையைத் தலை மொட்டை செய்து காலில் விலங்குமிட்டு, என்னெதிரில் நிற்கும் உம்மையும் கைப்பிடியாகப் பிடித்துக் கட்டி விடுவேனாகில் இப்பாரத யுத்தம் நடவாமல் செய்யலாமென்றான். இதைக்கேட்ட கிருஷ்ணன், நீ சொல்லிய காரியங்களை யெல்லாம் எளிதிற் செய்து விடலாம். ஆனால் என்னைக் கைப்பிடியாகப் பிடித்துக் கட்டிப்போட வேண்டுமென்றாயே! அது உன்னால் இயலுமா? என்றார். அதற்கு சகாதேவன், சுவாமி! உமது உருவத்தை உண்மையாய்க் காட்டினால் உமது அடியார்க்கடியாரில் ஒருவனாகிய யான் உம்மைக் கட்டுவது உண்மையென உறுதியாக மொழிந்தான். கிருஷ்ணன் அவனது மொழியைச் சோதிக்க நினைத்து, "சகாதேவ! நல்லது, கட்டு பார்ப்போம்" என மொழிந்து, தமதிச்சையினால்பதினாயிரம்வடிவுகொண்டு அந்த ரங்கமண்டபம் முழுதும் வியாபித்து நின்றனர். பரிசுத்த மனமுடைய சகாதேவன் அந்த ரூபங்களுக்குள் உண்மையான வடிவத்தைத் தனது மெய்யறிவினாலறிந்து அவரை தனது இருதய மென்னும் கயிற்றினால் இறுகக் கட்டினான். அனந்தரூபமாய் நின்ற கிருஷ்ணன் ஒரே உருவமாய்ப் பிரத்தி

யட்சமாகி, சகாதேவனை நோக்கி, "பத்தி என்னும் வலியுள்ள கயிற்றினால் என்னைக் கட்டிய மைந்தனே! என்னைக் கட்டவிழ்த்து விட்டு விடு" என்று சொல்ல, சகாதேவன் அவரை மிகத் துதிசெய்து நோக்கி, சுவாமி கொடிய இப்பாரத யுத்தத்தில் தங்களைத் தஞ்சமென்று அடைக்கலம் புகுந்த எங்கள் ஐவரையும் கடாட்சித் தருளவேண்டு மென்று வணங்க, "ஐவரையும் இரட்சிக்கிறேன்" என்று கிருஷ்ணன் சொல்ல சகாதேவன் கட்டவிழ்த்து விட்டனனும்.

பாரதம்.

அன்பாலின் றென்னை யறிந்தே பிணித்தமைந்தன்
றென்பாதந் தன்னையினி விடுக வென்றுரைப்ப
வன்பார தப்போரில் வந்தடைந்தே மைவரையு
நின்பார்வை யாற்காக்க வேண்டு நெடுமாலே.

திருப்பனந்தா ளென்னும் திருப்பதியில் சிவலிங்கம் சாய்ந்திருந்தமையால் அதனை நிமிரப்பண்ணி கும்பிடுதற்கு விரும்பி, சோழமஹாராஜன் தம்முடைய யானைகளெல்லாவற்றையும் பூட்டி இழுப்பித்தனன். இழுப்பித்தும் அது நிமிராமையால் அகோராத்திரம் தீராத கவலையுற்றிருந்தான். குங்குலியக்கலய நாயனார் தற்செயலாய் அச்சமயம் சுவாமி தரிசனம் செய்யும் பொருட்டுத் திருப்பனந்தாளை அடைந்தார். அங்கே சிவலிங்கத்தை நிமிரப்பண்ணவேண்டு மென்கிற ஆசையால் அரசன் வருத்தமுறுதலையும், சேனைகள் யானைகளோடு சிவலிங்கத்தை இழுத்துத் தங்கள் கருத்து முற்றாமையால் பூமியின் மேலே வலிகுறைந்து விழுந்து இளைத்தலையுங் கண்டு, மனது வருந்தி, "அடியேனும் இளைப்பைத் தருகின்ற இந்தத் திருப்பணியைச் செய்யவேண்டும்" என்று விரும்பி, சிவலிங்கத்திலே கட்டப்பெற்ற கயிற்றைத் தம் கழுத்திலே கட்டிக்கொண்டு இழுத்தார். உடனே சிவ

லிங்கம் நிமிர்ந்தது. அப்படி நிமிர்ந்தது அவர் புறத்திலே கட்டி யிழுத்த அக் கயிற்றினாலோ? அன்று; அகத்திலே கட்டி யிழுத்த அன்புக் கயிற்றினாலேயாம், என்பது பெரிய புராணத்தின் கூற்று.

ஆகையால் ஒரு மனிதன் உள் அன்பென்னும் வழி காட்டியின் மூலமாகவே கருணையங்கடலாகிய கடவுள் தெய்வீக சன்னிதானத்தை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் நன்குணாமுடியுமே யன்றி, அன்பில்லாத பல புறக்கிரியைகளால் ஒருபோதுங் காண்டற்கியலா தென்பது சாதம்.

## அன்பும்-அச்சமும் (பயபக்தி)

நாம் நமது முழுமுதற் கடவுளாகிய பரம கருணாநிதியின் திருவருளைப் பெற்றுய்வதற்கு அன்பும், அவ்வன்பு முளைப்பதற்கு அச்சமும் அத்தியாவசியமாகிறது. அன்பு ஒன்றிருந்தால் போதுமே? அச்சம் எதற்காக? எனச் சில சாரார் கேட்பார்கள். அன்பென்னும் வித்தை அச்சம் என்னும் பூமியில் பதித்து, ஆனந்தக் கண்ணீரென்னும் தண்ணீர் வார்க்கப் பெறுவிடின், அங்குரமாகிய முளை தோன்றி அருளென்னும் மணிபிடித்து விளையமாட்டா.

அன்பிற்கு உப பலமாகிய அச்சம் நமக்கு ஏற்பட்டு, அவ்வச்சமேலீட்டால் சரீரத்திலுள்ள உரோமக்கால்கள் சிலிர்க்க, சரீரமானது வாட்டமுற்றுக் குழைய, எலும்புகளெல்லாம் நெக்கு நெக்காக நெகிழ்ந்து உருகியுடைய, மனமானது அக்கினியிலிட்ட மெழுகுபோல் இடையறுதுருகி, இருகண்களிலு மிருந்து விடா மழையைப்போலும், மணற் கேணியைப் போலும் ஆனந்த பாஷ்பமானது வெதும்பிச் சொரிய, ஆண்டவனுடைய கலியாண குணங்களைப் பலகால் சிந்தித்து மனமானது படபடத்து நடு நடுங்கி, பாவசமேலீட்

டால், கண்ணே-கருத்தே! எண்ணே-எழுத்தே! பொன்னே-பொருளே! அன்னே-அரசே! முத்தே-முதலே! சித்தே-திருவே! என்று பலவாறு துதித்துப் பாடி ஆடி ஆரவாரித்துக்குதித்து அன்பினால் மூர்ச்சை யடைந்த மெய்யன்பர்களுக்குக் கடவுள் சன்னிதானம் அதிக தூரமில்லை. ஆகலின், அன்பு செலுத்துவதற்கு பயபக்தி என்று வழங்காநின்ற அச்சமும் வேண்டற் பாலதே.

காக மோடுகழு கலகை நாய்நரிகள்
சுற்று சோறிடு துருத்தியைக்
காலி ரண்டுநவ வாசல் பெற்றுவளர்
காம வேணடன சாலையை
மோக வாசைமுறி யிட்ட பெட்டியைமு
மலமி குந்தொழுகு கேணியை
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை
முடங்க லார்கிடை சாக்கினை
மாக விந்த்ரதனு மின்னை யொத்திலக
வேத மோதிய குலாலனார்
வினைய வெய்யதடி கார னையமன்
வந்த டிக்குமொரு மட்கலத்
தேக மானபொய்யை

என்று ஆன்றோர்களால் இகழ்ந்துரைக்கப்பட்ட இம்மானிட சரீரமானது, பரிசுத்தமடைந்து எல்லோர்களாலும் வியந்து பாராட்டத் தக்க அரும்பொருளாவது யாதினாலென்று ஆராய்ந்துணருமிடத்து, 'அன்பு' என்னும் அரும்பெருஞ் செல்வத்தினாலென்பது செவ்வனே விளங்குகின்றது.

ஆதாவில்லாத ஏழை எளியவர்களிடத்தில் எவ்விதப் பிரதி பிரயோசனத்தையுங் கருதாமல் மனமிரங்கி, அவர்கட்கு உணவு முதலியவைகள் கொடுத்து நாம் உபசரிக்கும் போது, ஒருவகையான உள்ளக்கிளர்ச்சி நமதிதயத்தில்

தோன்றக் காண்கின்றோம். அஃது, கல்வி, கேள்வி, சற்சங்கமுதலிய நல்லொழுக்கங்களால் உண்டாகும் ஓர் அருமையான அன்பென்னும் அறப்பொருள்.

நெல்மணியுடன் பிறந்த கருக்காயை வித்தின்மைபற்றி நெற்பதரென்று சொல்லுகின்றோம். அதுபோற், கடவுளிடத்தில் வைக்கவேண்டிய அன்பென்னும் வித்தில்லாத மனிதர்களை மனிதப்பதரென்று சொல்லப்படும்.

தலையன்பானது ஒருவருக்குத் திடீரெனவுண்டாவது அருமையானதுபற்றி, அவரவர் தாய், தந்தை, மனைவி, மக்கள், பந்து, மித்திரர்கள் மூலமாய் இயற்கையிலேயே யுண்டாகும் அன்பை, இல்லறதர்மத்தின் வழியாகக் கடவுள் திருவடியைநாடி மெல்ல மெல்லச் செல்வதற்காகவும், அன்பென்னும் பயிரைப் பூரணமாய் வளர்ப்பதற்காகவுமே, நமது முன்னோர்கள் இன்றியமையாத இல்லற தர்மத்தை ஏற்படுத்தியிருக்கின்றார்கள். இதுகாரணம் பற்றியே, ஔவைப்பிராட்டியாரும், "இல்லறமல்லது நல்லறமன்று" எனக் கூறியுள்ளார்.

அன்பின் பெருமையோ அளவிடற்கரியதாய்த் திகழ்கின்றது. அன்பினாலேயே கடவுளுடைய கிருபையுண்டாகிறது. மனம் சாந்தியடைகிறது. பந்துக்கள் அகமகிழ்கின்றனர். நேசர்கள் விசுவாசம் கொள்ளுகின்றனர். மனிதனும் அன்பினாலேயே பிறக்கிறான், அன்பினாலேயே வளருகிறான். எங்ஙனமெனின், ஸ்திரீ புருஷர்களாகிய தம்பதிகள் ஒருவர்மீதொருவர் அன்பு பாராட்டி இணங்குவதால் மனிதன் குழந்தையாய்ப் பிறக்கிறான். அப்போது அவனுடைய அன்பை ஒரு இளங்கொடிக்கு உவமானிப்போமாயின், அக்கொடி படருகிறதற்காகக் கடவுள் தாய், தந்தையென்ற இரண்டு கழிகளை நடுகிறார். அவ்விரண்டு கொம்புக

ளின் ஆதரவால் அது வளருகிறது. பின்னர் சகோதரன், சகோதரியென்ற வேறிரண்டு கொழுக்கொம்புகளைக் கடவுள் போடுகிறார். அவற்றை யாதாரமாகக் கொண்டு அக்கொடி படர்ந்து, மனையாள், மக்கள் முதலிய கொம்புகளிற் தாவி முடிவில் கடவுளையே நாடுகிறது. கடவுள் மனிதனிடம் அன்பையுண்டாக்கி அதைப் பல வழிகளாலும் தம்மிடம் இழுத்துக் கொள்ளுகிறார். ஆகையால் சகல காரண காரியங்கட்கும் அன்பே மூல காரணமாயிருக்கிறது.

சிங்கம், புலி, காடி முதலிய துஷ்டப்பிராணிகளும், தன் தன் குட்டிகளிடத்தில் அன்பு செலுத்திப் பாலுணவு கொடுத்துக் காப்பாற்றுவதைப்போலும், ஆற்றுச்சலமானது பல கிராமங்களிலுள்ள கழனிகள்தோறும் பாய்ந்து, முடிவில் சமுத்திரத்தைச் சேர்வதுபோலும், முதலில் நமது தாய், தந்தை, மனைவி, மக்கள், விருந்தினர், சுற்றத்தார், நண்பர் மூலமாக அன்பென்னும் பயிர் முளைத்துத் தலைகாட்டும்படிச்செய்து, ஏனையோரிடத்திலும் அதன் மேல் சகலவுயிர்கள்மீதும் பாவி, முடிவில் கடவுள் திருவடியை நாடும்.

எலும்பில்லாத புழுவை வெய்யில் காய்ந்து கொல்லுவதுபோல், தருமதேவதையானது அன்பில்லாதவரைக் கோபித்துத் தண்டனைசெய்யும் என்னுங் கருத்தை யடக்கிப் பொய்யாமொழிப்புலவர்,

என்பி லதனை வெயிற்போலக் காயுமே
அன்பி லதனை யறம்

என்று தமது திருக்குறளில் திருவாய் மலர்ந்திருக்கின்றார். அன்பிலவரை, அல்லது அன்பிலவனை என்று சொல்லாமல், அன்பிலதனை என்று கூறியமையால், அன்பில்லாதவரை உயர்திணைப்பொருளாகக் கூறப்படாதென்று, அது—அதனை என்று அஃறிணைப்பொருளாக இழிவுதோன்றக் கூறியுள்ளார்.

மூன்று லோகங்களிலும் பரீட்சிக்கமுடியாத அருமையான அன்பென்னும் வித்தானது, மனமென்னுங் கழனியில் முளைக்க ஆரம்பிக்கும்போது, சாந்தகுணமென்னும் தண்ணீர் விட்டுப்பாய்ச்சி, சுயப்பிரயோசனமென்னுங் களை முளைகளைக் கல்வி கேள்வியின் பயனாகிய நல்லொழுக்கமென்னும் கருவியாற் கிண்டியெறிந்து, மாயையென்னும் பல மிருகங்கள் அணுகிப் பயிரைத் தின்று விடாதபடி வைராக்யமென்னுங் காவலேற்படுத்தி, அருளென்னுங் கதிர்வாங்கிப் பாளைப்பருவமுற்றிய ஞானானந்தமென்னும் நெல்மணியைச் சூக்கும, காரண சரீரமென்னும் களஞ்சியத்திற்போட்டு நிரப்பிவைக்க ஒவ்வொருவரும் முயற்சிக்கவேண்டியது அத்தியாவசியம்.

சில பிராணிகளைச் சில பாதகர்கள் வருத்தும்போது அதைக் கண்டு ஆனந்தமடையும் கன்னெஞ்சகர்களைக் கை, கால் முதலிய மனித அவயவம் இருப்பதைக்கொண்டு, அவர்களை இரண்டுகால் மனித மிருகமென்றே சொல்லவேண்டும்.

தலைமையான பேரன்பே ஒரு வடிவமாகவந்த கண்ணப்ப நாயனார், சீகாளத்தி மலையில் எழுந்தருளியிருக்கும் சீகாளத்தியப்பரைத் தரிசித்தபோது, அப்பெருமானின் திருநேத்திரங்களிலிருந்து இரத்தம் பீரிட்டோடுவதைக் கண்டு, "ஆட்டுகின்ற கயிறு அற்றபொழுது வீழ்ந்து விடுகின்ற நாடகப் பாவையைப் போன்று" பதைபதைத்து, நெடுநேரம் உள்ளுயிர்த்தலின்றி இறந்தவர்போலக் கிடந்து, ஒருவாறு தெளிந்தெழுந்து, பன்முறை தமது கையினால் உதிரத்தைத் துடைத்தும் மாறாததைக் கண்டு, மீட்டும் விழுந்து புரண்டெழுந்து, தமது முகமெல்லாம் உதிரஞ்சோரவும், மார்பு வீங்கவும், கைகளாலறைந்து கொண்டும், தலைபிளந்துபோகும் விதமாய்க் கற்களில் மோதிக்கொண்டும், எமது பெருமானுக்கு இத்தீங்கு விளைந்தது எனக்குப் பகை

வர்களாகிய வேடுவர்களாலோ? அல்லது இம்மலையிற் சஞ்சரிக்கும் கொடிய மிருகங்களினாலோ? தெரியவில்லை. அப்பகையைக் காண்பேனாயின் கொல்லாமல் விடுவேனோ? என்று நெடுந்தூரம் ஓடித் தேடியும் பகையைக் காணாமையால் மனம் வருந்தி, மீண்டும் வந்து தோத்திரஞ் செய்யலாயினர்.

திருக்காளத்திப்புராணம்.

மலையிடை எனக்கு வாய்த்த மரகத மணியே! செம்பொன்
இலகொளிக் குன்றே! யெந்தா யெம்பிரா னின்கண் புண்ணீர்
கலுழ்தரற் கென்னை கொல்லோ! காரணந் திருவாய் சற்றும்
அலர்கிலை யென்கொ லென்றான் ஆவிசோர்ந் தருகு சென்றான்.

கையினாற் றுடைத்தான் பல்காற் காலுதல் தவிரா தாக
வையினைத் தழுவிக் கொண்டான் அலறினான் நெடும்போ தெல்லாம்
பையென விடுத்துப் பின்பு பச்சிலை மருந்து தந்து
பெய்யினோய் தீரு மென்று பெயர்ந்தனன் மருந்து கொய்ய.

மேற்கூறிய விதமாகத் தோத்திரஞ்செய்து, கண்ணினது புண்ணுக்கு மருந்து பிழிந்தாற் சௌக்யமாகி விடுமென்று அடவி முழுதுந்திரிந்து, கண்ட இலைகளை யெல்லாம் பிடுங்கி ஓடிவந்து பிழிந்தும் குருதி நிற்காமையைக்கண்டு ஆவிசோர்ந்து, இனி, இதற்கு யானென் செய்வேன்! என்று நெடுநேரம் ஆலோசித்து, "ஊனுக்கு ஊனிடல்வேண்டும்" என்னும் பழமொழி ஞாபகத்திற்குவர, உடனே தன் கண்ணைத் தன் கையிலிருந்த அம்பினால் தோண்டி, இறைவர் கண்ணிலே அப்பினார். உடனே இரத்தம் நின்றுவிட்டதைக் கண்டு அடங்காத ஆனந்தமென்னும் சந்தோஷசாகரத்தில் மூழ்கி, ஆனந்தநிர்த்தனம் ஆடினார், நான் செய்த பாக்கியமே பாக்கியம்! நல்லவுபாயஞ் செய்தேன்! என்று வியந்தார்.

திருக்காளத்திப் புராணம்.

ஓடினன் றிசைக ளெல்லாம் உடம்பெல்லாங் குலுங்க நக்கான்
பாடினன் வாயில் வந்த படியெல்லாங் கைகள் கொட்டி
யாடினன் றுள்ளித் துள்ளி யாரவா ரித்தா னின்று
நாடினன் செய்த செய்கை நன்றுநன் றென வியந்தான்.

அப்படிக் குதூகலம் அடைந்துகொண்டிருக்கும் வேளையில், இடக்கண்ணிலிருந்து இரத்தம் வடியக்கண்டு, "அக்கினி நரகத்தில் வீழ்ந்து நெடுங்காலந் துன்புற்று, அதனினின்றும் நீங்கிச் சுவர்க்க இன்பத்தை அடையுமொருவன் மீண்டும் அந்நரகத்தில் வீழ்ந்துவிட்டாற்போல," திண்ணனார் மகிழ்ச்சிமாறிக் கங்குகரையில்லாத துயர்க்கடலில் அழுந்தி ஏங்கி, ஒருவாறு தெளிந்து, "மருந்தைக் கண்டுகொண்டேன்! மருந்தைக் கண்டுகொண்டேன்!" அதாவது எனக்கு இன்னுமொரு கண்ணிருக்கிறது. ஆகையால் இதற்காக அஞ்சமாட்டேன் எனத்துணிந்து, தன் கண்ணைத் தோண்டியபின் இறைவர்கண் இன்னவிடத்திலிருக்கிறதென்று தெரியும்பொருட்டு, தன் ஒரு செருப்புக்காலைப் பெருமான் கண்ணினருகே ஊன்றிக்கொண்டு, அம்பைத் தனது கண்ணிலே வைத்தார்.

கிருபாசமுத்திராகிய பெருமான் அதைச் சகித்தற்கியலாதவராகி, கண்ணப்ப, நிற்க! என்று மூன்றுமுறை வெகு துரிதமாகச் சொல்லி அவர் கையைப் பிடித்துக்கொண்டார் என்று கூறப் பெற்றிருக்கிறது.

திருக்காளத்திப் புராணம்.

மறைமொழி பிறந்த தம்வாய் மலர்திறந் தருட்பே ராழி
யிறைவர்கண் ணப்ப நிற்க! வெனமுக்கால் மொழிந்து கொண்டே
கறையணற் கங்கணத்த கையினாற் பிடித்தார் செங்கை
யுறுநறைப் பொலம்பூ மாரி யும்பர்மண் புதையப் பெய்தார்.

மதுரையிற் கடைச்சங்கத்துத் தலைமைப் புலவராகிய நற்கிரதேவர் பாடியருளிய திருக்கண்ணப்பதேவர் திருமறத்துள்,

நில்லுகண்ணப்ப! நில்லுகண்ணப்ப!வென்
அன்புடைத்தோன்ற! நில்லுகண்ணப்ப!வென்
றின்னுரையதனொடு மெழிற்சிவலிங்கந்
தன்னிடைப்பிறந்த தடமலர்க்கையால்
அன்னவன்றன்கையம் பொடுமகப்படப்பிடித்தருளினன்.

எனவும், ஸ்ரீ மணிவாசகப்பெருமான் தமது திருவாசகத்துள்,

கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்
என்னப்ப னென்னொப்பி லென்னையுமாட் கொண்டருளி.

கண்ணப்ப னொப்பதோ ரன்பதனைக்—கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யாரறித லல்லதுமற்
றோரறியும் அன்பன் றது

எனவும் வியந்து கூறியிருக்கின்றார்கள். கண்ணப்பனுக்குமோரன்பு என்று கூறவேண்டியதிருக்க, அவ்விதங் கூறாமற், "கண்ணப்பனொப்பதோரன்பு" கூறிவியந்ததாற், கண்ணப்பர் வேறு, அன்பு வேறு என்னும் விகற்பமின்றி, கண்ணப்பரே அன்பு! அன்பே கண்ணப்பர்! என்று நன்கு விளங்குகின்றது. இத்தகைய பேரன்பின் வடிவமா யவதரித்த மகானுபாவர்கட்கே கடவுள் திருவடி எளிதிற் கிடைக்குமல்லாது, விடயாதிகளில் இச்சைப்பட் டுழல்பவர்கட்கு யாது பிரயோசன முண்டாகும்.

அன்பில்லாதவன் * முதலேழுவள்ளல்களைப் போன்று எவ்வளவு பெரிய தியாகங்கொடுத்தாலும், அஃது பொரு

* முதலேழுவள்ளல், இடையேழுவள்ளல், கடையேழுவள்ளல் என 21 வள்ளல்கள். முதலேழுவள்ளல் குறிப்பறிந்து கொடுப்போர்; இடையேழுவள்ளல் கேட்டன கொடுப்போர்; கடையேழு

ளுக்கு அழிவும் சரீரப் பிரயாசையுமேயன்றி உண்மையான தர்மமாகாது. அன்புள்ளவன் ஓரணுவளவு தர்மஞ்செய்பினும், அஃது தர்மங்கட்கெல்லாம் முதன்மை பெற்றுப் புண்ணியத்தை வளர்க்கும். இதுபற்றியே ஔவைப் பிராட்டியாரும்,

> காணக்கண் கூசுதே கையெடுக்க நாணுதே
> மாணொக்க வாய்திறக்க மாட்டாதே—வீணுக்கென்
> என்பெல்லாம் பற்றி யெறியுதே! யையையோ!
> அன்பில்லா ளிட்ட வமுது.

எனக் கூறியுள்ளார்.

இல்லறம், துறவறம், தானம், தவம், கல்வி, நல்லோருறவு, நோன்பு, வணக்கம் முதலியயாவும் அன்பில்லையேயானற், காட்டில் வீணுக முளைத்திருக்கும் விழலுக்கு, முத்துலை யேற்றமிட்டுத் தண்ணீர் இறைத்ததைப் போலாகும். அன்புடையவன் செய்த தீமையும் நன்மையாகும்; அன்பில்லாதவன் செய்த நன்மையுந் தீமையாகும்.

திருக்குறள்.

> பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
> மெய்ம்மை பயக்கு மெனின்.

சிவஞானசித்தியார்.

> அரனடிக் கன்பர்செய்யும் பாவமு மறமதாகும்
> பரனடிக் கன்பிலாதார் புண்ணியம் பாவமாகும்
> வரமுடைத் தக்கன்செய்த மாவேள்வி தீமையாகி
> நரரினிற்* பாலன்செய்த பாதகநன்மை யாய்த்தே.

---

வள்ளல் பலமுறையுங் கேட்க மறுத்துக்கொடுப்போர். இவர்கள் பெயர் முதலானவை நமது ஞானக்களஞ்சியத்தில் விபரமாகக் கூறப் பெற்றுளது.

* பிராமணச் சிறுவனுகிய தண்டியடிகள் தனது பிதாவின் தாள்களையெறிந்த பாபம் புண்ணியமானது.

ஒருவன் தந்தை, தாய், தாரம், பிள்ளை, சுற்ற முதலிய யாவரும் வந்து கூடிக் கலைந்துபோகின்ற சந்தைக் கூட்டத்திற்கு நிகர்த்ததென்று எண்ணிச் சகல பற்றுக்களையும் நீக்கினாலும்; தோட்டம், துறவு, வீடு, வாசல், ஆடு, மாடு, பூமி முதலிய பொருட்சார்புகளையும், தேகாபிமான முதலிய இந்திரிய வாசனைகளையும் ஒருங்கே விட்டுவிட்டாலும், சர்வ கலைஞானங்களையும் வாசித்து, அதனது முடிவாகிய எண்ணிறந்த வேதாந்த சாஸ்திரங்களையெல்லாம் கரைதலைப்பாடமாக மனனஞ்செய் திருந்தாலும், அதிலுள்ள திட்பநுட்பங்களை ஐயந்திரிபறவுணர்ந்தாலும்,

விடப்படு மோவிப் பிரபஞ்ச வாழ்க்கையை விட்டுமனம்
திடப்பட மோநின் னருளின்றியே

என்று கூறிய பட்டினத்தடிகள் வாக்கியம்போல், விட்டு நீங்குவதற்கரிதான இந்த உலகவாசனையைப் பொய்யென்றறிந்து, சுட்ட சட்டியைக் கைவிட்டுவிடுவதுபோல் ஒழித்தாலும், தத்துவஞானம் பெறுவதற்கேதுவாகிய சந்நியாச ஆச்சிரமத்தைப் பெற்றுக்கொண்டாலும், அந்தச் சந்நியாசத்தின் பெருமையைக் கண்டு பலபேர் வணங்கினாலும், மேற்சொல்லியவைகளாற் புகழ் மாத்திரம் ஏற்படுமேயன்றி, அவனுள்ளத்திற் பூரணமான அன்பு இல்லாதவரையில் அவனுக்கு ஒருபோதும் நன்மை பயக்காது.

திருமந்திரம்.

என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்போன் மணியினை எய்தவொண் ணாதே.

திருவிளையாடல்.

பத்தி செய்தா னருட்பெரும் பத்தருக் கன்றி
முத்தி யெய்தரி தெனமறை மொழிவதப் பொதுநூல்
சத்தி யப்பொருட் டெளிவெலாஞ் சத்திநி பாதர்க்
குய்த் துணர்த்திய தாகம மென்பர்மெய் யுணர்ந்தோர்.

சுந்தரமூர்த்திகள் தேவாரம்.

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது.

அறிவானந்த சித்தியார்.

விரிந்தநல் வேத புராணங்க ளாகம மிக்ககலை
தெரிந்து படித்துப் பொருள்செப்பித் தானிலை சேர்ந்துநில்லா
திருந்தசண் டாளரி னேற்றங் கழுதை யெழிற்குங்குமம்
பரிந்து சுமந்தும்பின் வஞ்சம்பண் ணுத பயனெழிலே.

மனித சுபாவம், அடிக்கடி மறதியும் அசிரத்தையு முடையதா யிருத்தலால் சிரத்தை யுண்டாகும்பொருட்டு முற்கூறிய அன்பும்-அச்சமும் என்ற கருத்தை மற்றொருமுறை அடியிற் கூறப்போந்தது மிகையாகாவெனக் கருதுகின்றனம்.

கனிந்த ஞானசிரியரால் அநுக்கிரகிக்கப் பெற்ற நிலையில் நின்று, அன்பென்னும் பாவசத்தினால் உடல்குழைந்து, உள்ளத்தில் இடையறாது நெகிழ்ச்சியுண்டாகவும், உரோமஞ் சிலிர்க்கவும், மனமானது மிகுந்த கனலைக்கண்ட மெழுகு, அரக்கு இவைகளைப்போன்று அதிகமாகவுருகவும், இரண்டு நேத்திரங்களிலிருந்து மலையருவிபோல் தாரைதாரையாக ஆனந்தபாஷ்பம் சொரிந்துகொண்டிருக்கவும், சிரக்கம்பம் கரக்கம்ப முண்டாகி, கன்றைப் பிரிந்த பசு, அல்லது பசுவைப் பிரிந்த கன்று கதறுவதுபோற் பேரோலமிட்டுத் தேம்பித் தேம்பி யழவும், வாய்ச்சொற்கள் தடுமாறி, மெய்சோர்ந்து தன் வசமற்று, ஆனந்த நிர்த்தனஞ் செய்து,

தனது எதார்த்த சொரூபத்தைத் தரிசிப்பவர்களே பிரம்ம சொரூபத்தில் இரண்டறக் கலப்பார்கள்.

திருவாசகம்.

ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன் றறியேனே.

திருவிளையாடல்.

தொழுத கையினர் துளங்கிய முடியினர் துளும்ப
அழுத கண்ணினர் பொடிப்புறு மியாக்கையர் நாக்குத்
தழுத ழுத்தவன் புரையினர் தமையிழந் தழல்வாய்
இழுதை யன்னமெய் யினர்பணிந் தேத்துவ ராஞர்.

திருமந்திரம்.

புணர்ச்சியு ளாயிழை மேலன்பு போல
வுணர்ச்சியு ளாங்கே யொடுங்கவல் லார்க்குக்
குணர்ச்சியில் லாது குலாவி யுலாவி
அணைத்தணைத் தின்பம் அதுவிது வாமே.

திருவருட்பா.

நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்துநெகிழ்ந் தன்பே
நிறைந்துநிறைந் தூற்றெழுங்கண் ணீரதனு லுடம்பு
நனைந்துநனைந் தருளமுதே! நன்னிதியே! ஞான
நடத்தரசே! என்னுரிமை நாயகனே! யென்று
வனைந்துவனைந் தேத்துதுநாம் வம்மினுலகியலீர்!
மரணமில்லாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாங் கண்டீர்!
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்றேன்
பொற்சபையிற் சிற்சபையிற் புகுந்தருண மிதுவே.

தாயுமான சுவாமிகள்.

உடல்குழைய என்பெலாம் நெக்குருக விழிநீர்கள்
ஊற்றென வெதும்பியூற்ற
ஆசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
யோருறவு முன்னியுன்னிப்
படபடென நெஞ்சம் பதைத்துண் ணடுக்குறப்
பாடியா டிக்குதித்துப்
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பியார்த் தார்த்தெழுந்து
மடலவிழு மலரனைய கைவிரித் துக்கூப்பி
வானே! யவானிலின்ப
மழையே! மழைத்தாரை வெள்ளமே! நீடூழி
வாழியென வாழ்த்தியேத்துங்
கடன்மடை திறந்தனைய அன்பரான் புக்கெளியை
கன்னெஞ்ச னுக்கெளியையோ
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

ஆடுவதும் பாடுவதும் ஆனந்த மாகநின்னைத்
தேடுவதும் நின்னன்பர் செய்கை பராபரமே.

பட்டினத்துப்பிள்ளை.

காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தைசுற்றி
ஓடே யெடுத்தென்ன வுள்ளன்பி லாதவர் ...

பிரபுலிங்க லீலை.

ஆசறு மனத்தெழும் அன்பை யன்றியே
பூசனை யுவக்கிலென் புராரி சென்னிமேல்
வீசுறு திரையினு மிக்க தோசொலாய்
ஊசல்செய் மனமுடை யொருவ னுட்டுநீர்.

அன்பினால் அன்பர்பெறற் கெளியனா மெனைச்சூழொன்
றறைந்து வந்து
வன்பினாற் பெறவேண்டி நின்றழிந்தா யிதுதகுமோ
மாயை மாதே.

திருக்குறள்.

(1) அன்பிற்கு முண்டோ அடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூசல் தரும்.

(2) புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு.

(3) அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு.

திருமந்திரம்.

அன்பும் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே.

அன்பின் வழி.

முத்து வியாபாரிகள், முத்துச் சலாபங் குளிக்குமிடத்திற்குப் போய்ச் சிப்பிகளை மொத்தமாய் வாங்கி ஒவ்வொன்றாக அறுத்துப் பார்ப்பார்கள். அதில், சுமார் நூறாயிரம் சிப்பிகளுக்கு மேல் அறுத்தால் தான் அதிலிருந்து அகஸ்மாத்தாய் முத்துக் கிடைக்கும். அதுபோல, மனமானது மாயப்பிரகிருதியிற் சிக்கியிருக்கும்போது திடீரென்று அன்புண்டாவது அருமை. ஆனதுபற்றி, பக்தியில்லாத வேளையிலும், அப்பா! அரசே! முத்தே! முதலே! கண்ணே! பொன்னே! திருவே! செல்வமே! தேனே! வானே! யென்று தோத்திரம் பண்ணவேண்டும். அதனால், அரக்கானது உஷ்ணம் அதிகரிக்க, அதிகரிக்க உருகுவதைப்

போல, நாம் கடவுள் மீது தோத்திரம் பாடிக்கொண்டே யிருக்க மனமானது அறிவிற் கலந்து அன்போதயமாகும். அன்பில் கரைந்து கரைந்துருகிக் கண்ணிலிருந்து ஆனந்த மாரி பொழிந்தால் அதி சீக்கிரத்தில் ஆனந்த நிலை கைவல்ய மாகும். தானென்னும் தற்போத விழப்புண்டாகிய நிலையில் நிருவிகற்ப நிருவாண பதமும் வந்தெய்தும்.

தாயுமானவர்.

துன்பக் கடலிற் றுளைந்ததெல்லாந் தீர்ந்ததே
இன்பக் கடலி லிருமென்ன—அன்பிற்
கரைந்து கரைந்துருகிக் கண்ணருவி காட்ட
விரைந்துவரும் ஆனந்த மே.

கரைந்து கரைந்துருகிக் கண்ணீரா ருக
விரைந்தே நிருவிகற்ப மெய்த—நிரந்தரமும்
நின்னையே சிந்திக்க நீகொடுத்தாய் மோனுநான்
என்னைமுழு துங்கொடுத்தே னே.

அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தாற்
கல்லு முருகாதோ கன்னெஞ்சே—பொல்லாத
தப்புவழி யேனினைந்தாய் சந்ததமும் நீயிறந்த
எய்ப்பிலே ஆனந்த மே.

நிக்கிரகானுக்கிரகம்.

இவ்விதமாக ஆனந்த நிர்த்தனம் புரிந்து கொண்டிருக் கும் அன்பர்கட்குப் பெரும்பாலும் விடயவாழ்க்கை நீங்குத லென்னும் இன்பமாகிய துன்பமே சம்பவிக்கும். அதைத் துன்பமென்றெண்ணுமல் இன்பமாகவே கருத வேண்டு மென்பது தீர்க்கதரிசிகளாகிய நபிமார்கள் பட்டிருக்கிற மாதிரிகளையும், பெரிய புராணத்தில் 63 நாயன்மார்கள் பட்

டிருக்கிற விதங்களையும், அந்நூலைப் பார்த்தவர்கட்காவது, கேட்டவர்கட்காவது நன்கு விளங்கும்.

தன் குழந்தையின்மீது பட்சமாயிருக்கின்ற தாய் தந்தையர்களிடத்திலேயே அக் குழந்தையானது, தன் குறைவு, நிறைவுகளை அந்தப் பையன் அடித்தான், இந்தப் பையன் வைதான், இன்ன வஸ்துவை இன்னான் கொடுத்தான் என்றும், தன் வயிறு பசித்தால், பாச்சி, சோச்சி வேண்டு மென்றும் சொல்லிக் கொள்கிறது. அப்போது, "குழலினிது யாழினிது என்பதம் மக்கள் மழலைச் சொற் கேளாதவர்" என்னுங் கருத்துக் கிணங்க, அக்குழந்தையின் மழலைச் சொல்லுக்காக மகிழ்ந்து வேண்டியதைக் கொடுக்கிறார்கள். அங்ஙனங் கொடுக்கத் தாமதித்தால் அவர்களை அடிக்கவும், உதைக்கவும், வாயில் வந்தபடி நாயே! பேயே! கழுதையே! குரங்கே! என்று வையவுஞ் செய்கின்றது. அதாவது, தன்மீது அன்பாயிருப்பவர்களிடத்திற் சொல்வதன்றி அன்பில்லாதவர்களிடத்தில் சமீபத்திலாவது நிற்குமா? நிற்காது. நாம் ஓர் ஊருக்குப் போயிருக்கும்போது நமக்கு அறிமுகமும் அன்பும் உள்ளவர்கள் கண்டு உபசரிக்கா விட்டால் அவர்கள் மீது வருத்தப்பட்டுக் கொள்ளுகிறோமே யன்றி ஏனையோர்கள் உபசரிக்கவில்லை யென்று விசனமடைவதில்லை. அதுபோல், கடவுளானவர் தன்மீது பூரணமான அன்பு செலுத்துபவர்களிடத்திலேயே (எதிர் காலத்தில் நன்மையைத் தருவதான) பல துன்பத்தைக் கொடுத்து அநுபவிக்கச் செய்கிறார்.

ஒருநாள் ஒரு மாது, பத்ரகாளி விக்கிரகத்திற்கு முன்னே காலை நீட்டிக்கொண்டிருந்தாள். அது அவளை யாதொன்றுஞ் செய்யாமல் தன்னைப் பூசிக்கும் பூசாரி வீட்டிற்குப் போய், அடே! பயலே! ஒரு ஸ்திரீ வந்து அஞ்சாமல் என்

முன்னே காலை நீட்டிக்கொண்டிருக்கிருள்; காலை மடக்கு வாள் மடக்குவாள் என்று வெகுநேரம் சகித்திருந்தேன்; அவள் இது வரையிலும் மடக்கவேயில்லை; நீ! இப்போதே போய் அவள் காலை மடக்கச் சொல்கிருயா? இல்லையா? அங்ஙனஞ் செய்யாவிடில் உன்னைக் கொன்றுவிடுவேன் என்ற தாம். அது போலவே விக்கிரகத்தின் மீதிருக்கும் ஆபா ணுதிகளைத் திருடன் திருடினுல் யாதொன்றுஞ் செய்யாது. அன்பனுனவன் திருடினுல் அவனை தண்டிக்காமல் விடாது. ஏனென்ருல் திருடனுக்குப் பாவமென்னும் மூட்டையைக் கட்டிவிடுகிறது. அன்பனுக்கு அந்த மூட்டையைக் கரைக் கிறது. ஆகையால் " குழந்தையும் தெய்வமும் கொண்டா டிய விடத்தில் " என்னும் பழமொழியானது மேற்கூறியவை களை மெய்ப்பித்து நிற்கின்றதல்லவா?

தாயும், தந்தையும் தன் அருமை மக்களுடைய நன் மைக்காகவே அவர்களிடத்தில் துர்ச்செய்கைகளைக் கண் டால் உடனே கண்டனஞ்செய்கிருர்கள். அப்போது, அக் குழந்தைக்கு அவர்கள் செய்வது தமது நன்மைக்காகவென் றெண்ணப் போதிய சக்தியில்லாததனுல், தமது அருமைத் தாய் தந்தையராகிய இருமுது குரவர்கள்மீதும் வெறுப் படைகின்றது. அதுபோல், சகல சீவராசிகட்கும், பாம கருணுநிதியும், அருட்டாயுமாகிய கடவுளானவர், தமது அருமை மக்களாகிய நம்மிடத்தில் ஏதாவது குற்றங்குறை கள் காணப்படின் அவைகளை நிவர்த்தித்தற்பொருட்டு, பற் பல துன்பமென்னுந் தண்டனையைப் புரிந்து, அவைகள் மீட்டுந் தொடாமல் நம்மை அனுபவித்துத் தீர்க்கும்படிச் செய்கின்ருர். மழலைப்பிள்ளையை நிகர்த்த நாம், அதை ஆய்ந்துணரச் சக்தியின்றி, அடே! சண்டாளத் தெய்வமே! உனக்கு இரக்கமில்லையா! கண்ணில்லையா! காதில்லையா! என்று அறியாமையாற் பிதற்றுகிறோம்.

சிவஞான சித்தியார்.

நிக்கிர கங்க டானு நேசத்தா லீசன் செய்வ
தக்கிர மத்தாற் குற்ற மடித்துத்தீர்த் தச்சம் பண்ணி
யிக்கிர மத்தி ஞலே யீண்டற மியற்றி டென்பன்
எக்கிர மத்தி ஞலு மிறைசெய லருளே யென்றும்

தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்க டஞ்சொ லாற்றின்
வந்திடா விடிலு றுக்கி வளாறிஞ லடித்துத் தீய
பந்தமு மிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவே யாகு
மிந்தநீர் முறைமை யன்றோ யீசஞர் முனிவு மென்றும்

மண்ணுளே சிலவி யாதி மருத்துவ னருத்தி யோர்டுந்
திண்ணமா யறுத்துக் கீறித் தீர்த்திடுஞ் சிலநோ யெல்லாங்
கண்ணிய கட்டி பாலுங் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்
அண்ணலு மின்ப துன்ப மருத்தியே வினைய றுப்பன்.

---

## பதினைன்காவது அத்தியாயம்

---

## மனோ வாயு.

விருத்தம்.

வாசி யொருத்தன் வசப்படுமேல் மனமும் அவனின் வசமாகும்
நேச மனமா னதுஒருவன் நெறியிற் கட்டுப் படுமானல்
பேசும் வாசி மீருமற் பிரம்ம ரந்தி ரஞ்செல்லும்
மாசில் மோக்க நிலையும்வரும் மார்க்க மிஃதென் றறைவாமால்.

மனமானது விடயாதிகளில் எவ்வளவு விரைவாகச் செல்லுகின்றதோ அவ்வளவுக்கு வாயுவும் சரீரத்திலிருந்துவெளியேறுகின்றது. மனம் எவ்வளவுக்கு அடங்கி நிற்கின்றதோ அவ்வளவுக்கு வாயுவும் அடங்கி நிற்கின்றது. மனமானது எல்லாருக்கும் அடங்காது. ஆதலால், வாயுவை

நிறுத்தி அதன் மூலமாய் மனத்தை நிறுத்த முயலவேண்டும். இயற்கையிலேயே மனோ நிக்ரகமாயிருப்பவர்கள் வாயுவை இரேசக, பூரகஞ் செய்யவேண்டிய அவசியமேயில்லை.

பிராணவாயு கட்டுப்பட்டால் மனமும் கட்டுப்பட்டதாகின்றது. மனம் கட்டுப்பட்டால் பிராணனும் கட்டுப்பட்டதாகின்றது. இதனால் இவ்விரண்டி லொன்றைக்கட்டிவிட்டால் இரண்டையுங் கட்டப்பட்டதாகி விடுகிறது. ஆனால் பிராணன் கட்டுப்பட்டால் மனம் கட்டுப்பட்டதாகிறது என்பது கனிட்டத் தன்மையையும், மனம் கட்டுப்பட்டால் பிராணன் கட்டுப்பட்டதாகிறது என்பது சிரேட்டத் தன்மையையும் பொருந்துகிறது. அன்றியும் சித்தமானது பிரவிருத்தியாவதற்கு வாசனை, பிராணசலனம் என்று இரண்டு காரணங்களிருக்கின்றன. இதனால் சித்தத்தையும் சேர்த்து மூன்று விடயங்களாகின்றன. இந்த மூன்றில் ஏதாவது ஒன்று நசித்தால் மற்றிரண்டும் நசிக்கும். அதாவது சித்தம் நசித்தால், வாசனை—வாயு என்னும் இரண்டும், வாசனை நசித்தால் சித்தம்—வாயு என்னும் இரண்டும், வாயு நசித்தால் சித்தம்—வாசனை என்னும் இரண்டும் நசிக்கும். அன்றியும், மனம் அடங்காத வரையில் வாசனையும், வாசனை நசியாதவரையில் சித்தமும் நசியாவாம். தத்துவஞானம் பிரகாசிக்காத வரையில் சித்தமும், வாசனையும் நசியாது. சித்தநாசமும், வாசனைக்ஷயமும் ஏற்படாத வரையில் தத்துவஞானம் சோபிக்காது. தத்துவஞானம், வாசனைக்ஷயம், மனோநாசம் என்பவைகள் ஒன்றற்கொன்று ஏதுவாயிருந்து, சாதிப்பதற்கு அரியனவாயிருக்கின்றன. ஆகையால் இம்மூன்றும் சமமாக அப்பியாசிக்கப் படாவிட்டால் தத்துவஞானத்தின் மாட்சிமை பிரகாசிக்காது. இவற்றுள் ஒன்றின்

நாசத்தால் மற்றதின் நாசமும், ஒன்றின் பிரவிருத்தியால் மற்றதின் பிரவிருத்தியும் ஏற்படும்.

எதனுள் மனது பிரவிருத்திக்கின்றதோ அதனுள் வாயு பிரவிருத்திக்கின்றது. எதனுள் வாயு பிரவிருத்திக்கின்றதோ அதனுள் மனது பிரவிருத்திக்கின்றது. ஆதலால் மனமும் வாயுவும், உடலும் உயிரும்போல் கலந்து சமானக் கிரியை யுடைத்தாயிருக்கிறது. இதனாலேயே இவ்வத்தியாயத்திற்கு மனோவாயு என்று பெயர் புனையப் பெற்றது.

வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் நீரிற் செல்கின்ற துரும்பானது நீரோட்டம் நின்றவுடன் தானும் நின்றுவிடும். அதுபோல், பிராணவாயுவைப் பூரித்து நிறுத்திவிட்டால் மனமும் உடனே நின்றுவிடும்.

விரைந்தோடுகின்ற குதிரையை நிறுத்தவேண்டுமானால் குதிரையின் வாயிலிட்டிராநின்ற கலினத்தை யிழுத்துப் பிடிப்பார்கள். அதுபோல், விடயாதிகளில் தாவுகின்ற மனக்குரங்கை அப்படிக்கு ஓடாமல் நிறுத்தக் கருதினால், இயங்கிக்கொண்டிரா நின்ற வாயுவைப் பூரித்துக் கும்பிக்க மனமும் நின்றுவிடும். ஆயினும், இடைகலை, பிங்கலை, சுழுமுனையென்னும் மூன்று நாடிகளை ஏற்றல், நிறுத்தல், இறக்கல் என்னு முத்தொழிலாலாவது அல்லது கேவல கும்பகத்தினாலாவது வாயுவை அசைவற நிறுத்தித் தன் வசப்படுத்திக்கொண்டால் மனம் வசப்படும். மனம் வசப்பட்டால் பிராணனும், சித்தமும் இலயமாகும். சித்தம் இலயமானால் மோட்சம் வெகு தூரமில்லை. கையிலிருக்கிற வெண்ணெய்க்குச் சமானமே.

ஆன்மாக்களுக்கு இன்றியமையாதனவாகிய சித்தமும் பிராணனும், பூவும் மணமும் போற்கலந்தவைகள். இவைகள் மோட்சத்தைத் தரத்தக்கனவாம். இவ்விரண்டும் இலயமாகா

விட்டால் இந்திரிய வர்க்கங்களின் விருத்தியும், இலயமானால் மோட்ச கைவல்யத்தின் சித்தியும் ஏற்படும். மனம் திரமடைந்தால் பிராணன் திரமாகும். பிராணன் திரமானால் பிராண வாயுவினால் விந்து (சுக்கில) திரமும், சுக்கிலம் திரமானால் வச்சிர சரீரம் ஏற்படும். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஞானேந்திரியங்களுக்கு மனமானது நாதன். மனதிற்குப் பிராணன் நாதன். பிராணனுக்கு மனோலயம் நாதன். மனோலயம் நாதத்தை ஆசிரயித்து அதில் ஒடுங்குகிறது.

சித்தலயமானது சுழுத்தியினு மிருத்தலால் பிராணன், மனம் என்னும் இரண்டும் இலயமாகுங்காலத்து ஆனந்த சிற்சுகோதய சீவன் முத்திச்சுகம் நிச்சயமாக ஏற்படும். வெளிவாயு உள்ளேசெல்வதாகிய உசுவாசமும், உள்ளிருக்கும் வாயுவை வெளியே விடுதலாகிய நிசுவாசமும் இல்லாததும், சேஷ்டை, விகார முதலானவைகள் நீங்கியதுமான இலயமே யோகிகட்கு மேலான மோட்ச பதமாம்.

எவர்களுக்கு பிரமத்தில் அந்தக் காண திருஷ்டியின் விருத்தியிருக்கின்றதோ அதிலேயே இலயமும் ஏற்படுகிறது. ஆனால் இலயம்! இலயம்!! என்று பலபேர் சொல்லிக் கொள்வார்கள். இலயத்தின் தன்மையாகிய சொரூபம் இத்தன்மைத்தானதென நன்குணர்ந்திருப்பது அருமையினும் அருமை. மறுபடியும் வாசனையானது உதயமாகாமல் சத்தமுதலிய விடயங்களையாவது, தியானிக்கப்படும் பொருளாகிய விடயங்களையாவது முற்றிலுமறத்தலே இலயம் என்று கூறத்தகும்.

ஒருவனுக்கு ஆகாயத்தைப் பார்க்க இஷ்டமில்லாவிட்டால் தன் கண்களை மூடிக்கொள்ளவேண்டியதிருக்க, வஸ்திர முதலியவைகளைக்கொண்டு ஏன் ஆகாயத்தை மறைக்க எத்தனிக்கவேண்டும்? வேண்டியதேயில்லை. அது

போல், மனத்தை யடக்கிவிட்டால் மனோவாயு வடங்குவதுடன் பஞ்சேந்திரியங்களும் அடங்கிவிடும். அவ்விதமிருக்க, வாயுவைப் பூரிப்பதால் யாது பிரயோசனம் என்னுங் கருத்தையடக்கிப் பின் வரும் செய்யுட்கள் கூறுகின்றன. ஆனால் அது இரத்தின வியாபாரஞ் செய்து அதிக இலாபத்தை அடைபவர்கள் கத்தரிக்காய் வியாபாரியை நோக்கி இஃதென்ன வியாபாரம் என்று (சொற்ப இலாபத்தைக் குறித்து) இகழ்ந்த பாவனையை ஒக்குமேயன்றி முற்றிலும் இகழ்ந்ததாகக் கருத இடமில்லை.

கந்தரலங்காரம்.

திருத்தி யெனும்படிக் கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை வருத்திலென் னாஞ்சிவ யோகமெனுங்
குருத்தை யறிந்து முகமா றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங்கண் டீர்முத்தி கைகண்டதே.

ஒழிவிலொடுக்கம்.

உபதேசப் பித்தோ உவமானப் பித்தோ
விபரீத மோபழக்கோ வேறோ—தபசிநீ
கண்மூடா விண்மூடத் தேடுங் கவசனைபோல்
எண்மூடா யோகமிது வென்.

தேவிகாலோத்திரம்.

வாயுவென மருகுகின்ற மனமடங்கும் வகைதடுப்பா
னியாவனவ னரிபிரம னிந்திரன்சண் முகன்குருவும்
ஏயபல தேவதைக ளியோகிதபோ தனனறிஞன் [யாய்.
ஆயினெல்லா முடையானும் அவன்வணங்கும் நுணங்கிடை

பிரபுலிங்கலீலை.

இந்திய மோரொன் றுவிட் டிடின்மற்றை யொன்று சாரும்
முந்திய மனம ழிப்ப முற்றும்போ மணியப் பாம்பின்
ஐந்தலை களினு ளொன்றை யரிந்திடின் மற்றொன் றுலஞ்
சிந்திடு மிடற ரிந்தாற் றீர்ந்திடு மொருங்கு மாதோ.

அகஸ்தியர்.

மனமது செம்மை யானால் மந்திரஞ் செபிக்க வேண்டாம்
மனமது செம்மை யானால் வாயுவை யுயர்த்த வேண்டாம்
மனமது செம்மை யானால் வாயுவை நிறுத்த வேண்டாம்
மனமது செம்மை யானால் மந்திரஞ் செம்மை யாமே.

இடைக்காடர்.

மனமென்னும் ஆடடங்கில் தாண்டவக் கோனே—முத்தி
வாய்த்ததென்று நினையடா தாண்டவக் கோனே.

மன மடங்கினால் போதும், வாயுவை என் தடுக்கவேண்டும் என்பது மேற்கூறிய செய்யுட்களின் கருத்து. ஒருவாறு அஃது உண்மையே எனினும், மனமானது அடங்கினாலன்றோ சர்வமும் சித்தியாகும்; வாயுவும் அடங்கும்; பஞ்சேந்திரியங்களும் நசிக்கும். மன மடங்காவிட்டால் என்ன செய்கிறது? வாயுவைத் தானே அடக்கி, அதன் மூலமாய் மெல்ல மெல்ல மனத்தை நிறுத்த முயலவேண்டியதாயிருக்கிறது.

மனம் அடங்குவதென்றாற் சாமான்யமா? மனமானது கிளைகள் தோறுந் தாவிக்கொண்டு சஞ்சரிக்கின்ற குரங்குக்குச் சமானமான தல்லவா? குரங்கு தாவிக்கொண் டலைவதைப்போல, இந்த மனமும் ஒரு கண்ணிமைப் பொழுதிற்குள் காசி, இராமேஸ்வரம், இங்கிலாந்து, அமெரிக்கா, வானலோகம், பாதாளலோகம் முதலிய ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் புகுந்து விளையாடுமே! வாயுவை நிறுத்தாமல் மனமே அடங்கி விடுவதா யிருந்தால் பருத்தி புடவையாய்க் காய்த்ததுபோலே யாம்.

ஒருவன் வாயுவை நிறுத்தாமல் மனத்தையே நிறுத்தி விடுவானே யானால், அவன் கண்ணப்ப நாயனார், மணி

வாசகப் பெருமான், வடலூர் இராமலிங்கப் பெருமான் இவர்கள் போன்ற தலையன்பு வாய்ந்து, பிறவியிலேயே ஞானச் செல்வமுடைய மகானாகப் பிறந்திருக்க வேண்டும். அப்படி யில்லாவிடில் வாயுவை நிறுத்தினா லன்றி மனம் ஒருபோதும் அடங்காது.

சில மனிதர்களைப் பார்த்து, நீங்களேன் கோவிலுக்கு சுவாமி தரிசனஞ் செய்ய வரவில்லை? என்று ஒருவர் கேட்டால், அதற்கவர்கள் எல்லாம் மனந்தானே காரணம்; வீட்டிலிருந்தாலென்ன? கோவிலுக்கு வந்தாலென்ன? நான் இங்கிருந்தே சுவாமியைத் தியானஞ் செய்துகொண் டிருக்கிறேன்; எல்லாம் ஒன்று தானே என்று மனதின் சொரூபத்தை கோடியில் ஒரு பங்காவது அறியாதவர்கள் வெளிக்கு மாத்திரம் வாய்ஞானம் பேசிவிட்டு, அந்தரங்கத்திற் காம பஜனையாகிய மதனலீலா விநோதக் கடலில் மூழ்கிக் கொண்டிருப்பார்கள். அவர்களைப்போல், ஒருவன் எதார்த்தத்தில் தன் மனத்தை வசப்படுத்தாமல், கேட்பவர் திருப்தி யடையும்படிக்குச் சொல்லிக் கொள்வதனால் யாது பிரயோசன முண்டாகும். தான் பசியாயிருக்கும் போது வேறொருவர் வந்து, "சாப்பிட்டாய் விட்டதா?" என்று கேட்டால் சாப்பிட்டு விட்டேனென்று சொல்வதால் தன் பசிப்பிணி தீருமா? சாப்பிட்டா லன்றோ தீரும்.

தணங்குடியார்.

... ... மனக்குரங்கைக்
கட்டிவைத்தாலுங் காட்டும்பல்லை எனவும்,

உபநிடதம்.

பொன்போல விலங்குமனம் சஞ்சலத்தாற் குரங்காம் எனவும்,

தாயுமானசுவாமிகள்.

கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாங்
கரடிவெம் புலிவாயையுங்
கட்டலா மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாங்
கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணம லுலகத் துலாவலாம்
விண்ணவரை யேவல்கொளலாம்
சந்ததமு மிளமையோ டிருக்கலா மற்றொரு
சரீரத்தி னும்புகுதலாஞ்
சலமே னடக்கலாங் கனன்மே லிருக்கலாந்
தன்னிகரில் சித்திபெறலாம்
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

எனவுங் கூறியிருத்தலால் அனல்கண்ட அரக்கைப்போல் மனங் கசிந்து உருகாதவர்கள் இயமம், நியமமுதலிய அட்டாங்க யோகத்தைச் செய்தே மனத்தை இணக்க முயல வேண்டும்.

---

# பதினைந்தாவது அத்தியாயம்.

## மனமே மாட்சி.

எழுசீர் விருத்தம்.

மனமது அசைந்தால் வையகம் பிறக்கும்
மாயைதன் கிளையுடன் சனிக்கும்
மனமொரு வருக்கு வசப்படு மானால்
மாதவம் செய்யவே றுளதோ
மனமதை யிணக்க வேண்டியே அறிஞர்
வகுத்தனர் பற்பல மார்க்கம்
மனமதை யிணக்கு பாயமீ தென்று
வகைவிப ரமதுடன் வரைவாம்.

மனமானது நமது சரீரத்திற்குள்ளிருந்து அதை ஒரு சூத்திரப் பாவையைப் போல் ஆட்டிவைக்கின்ற ஒப்பற்ற சூக்குமப் பொருளாம். அந்தமனம் அசைந்தால் நமது சரீரமுழுதும் அசைகின்றது. மனம் ஒடுங்கினால் நமது சரீரத்தையு மறந்து, நாம் இன்ன விடத்திலிருக்கிறோம், இன்னது தான் செய்து கொண்டிருக்கிறோம் என்ற பிரக்ஞையற்று சுழுத்தி யவத்தையைப் பொருந்தி விடுகிறோம். மனம் அடங்க, அதனால் மனோவாயும் அடங்க நேர்ந்தால் பிரேதா வத்தையைக் கூடப்பொருந்தி விடுகிறோம். இத்தியாதி காரணங்களால் மனமே சகலத்திற்கும் காரணமாயிருகிற தென்பதைத் தெள்ளிதில் உணருகிறோம். மனமானது ஒருவனுக்கு வசப்படும் பாக்கியம் ஏற்படுமே யானால் அவன் செய்ய வேண்டிய யோகம், ஞானம் யாதொன்றுமே தேவையில்லை. பெரியோர்களெல்லாம் தன் மனதை வசப்படுத்துவதற்கே பிரயாசைப் பட்டார்கள்; பிர

யாசைப் படுகிறார்களேயன்றி வேறில்லை. எத்தகையயோக ஞானங்களும் மனோலயமாகிய ஏகாக்கிர சித்த மின்றேல் சோபிக்கமாட்டா. நமது தியான அப்பியாசங்கள் பூர்த்தியாகும் வரையில் மனதினுடைய பரிசுத்தமானது அத்தியாவசிய மாகிறது. ஆதலால் மனதை இணக்கி நமது வசப்படுத்தி நமது மனோரதத்தைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டுமேயன்றி மனதை முற்றிலும் அடக்கிவிடப் பிரயத்தனப்படக் கூடாது. என்? மனமானது அடங்கிவிட்டால் ஒரு காரியமும் நடைபெறாது என்பதனாலேயாம்.

மனமானது சுத்தமனம், அசுத்தமனம் என இருவகைத்தாகும். காம, குரோத, லோப, மோக, மத, மாச்சரியமென்னுஞ் சட்கர்மங்களிற் சங்கற்பமென்னும் விருப்பமுள்ள மனம் அசுத்தமனம்; அவைகளில் வெறுப்படைந்து பிரகாசியா நிற்பது சுத்தமனம். சுத்த மனதைத் தான் "அறிவு" என்று சொல்வார்கள்.

இந்நிலவுலகிற் காணப்படாநின்ற அநித்தியமான சகல வஸ்துக்களையும் அடையும்படிச் செய்து தாழ்த்தவல்லதும்: அவைகளில் வெறுப்புற்று நீங்கி ஆன்மஞானத்தைப் பெறச் செய்து உயர்த்தவல்லதும் இந்த மனமே! மனத்தினாற் செய்யப்பெற்ற தொழிலே தொழிலாகும்; மனத்தினால் விடுபட்டதே விடுபட்டதாகும். மனோசாஞ்சல்யத்தை விட்டு நீங்கியவர்களே உத்தமமான ஆன்மஞான நிஷ்டையையுடையவர்கள். மனமானது நசித்தால் சனன மரணமென்னும் பெரிய கானகம் நாசமாகும். மனமயக்கமென்னும் வித்தின் முளையால் மாயாமலமென்னும் கொடிய விடவிருட்சம் பற்பல துன்பமென்னும் கிளைகளுடன் செழித்தோங்கி வளரும்.

இச்சிக்கப்படாநின்ற சகல வஸ்துக்களையும் விரும்பாமல் நீக்கினவர்களே மனத்தைச் செயித்தவர்கள். ஏனெனில், தீனியாசை, யோனியாசை என்னும் இரண்டனுள், யோனியாசையைச் சிலகாலம் வரையில் நீத்திருக்கினும் இருக்கலாம்; தீனியாசையையோ, அங்ஙனம் நீத்திருப்பது மிகவும் அருமை. ஏதாவது ஒரு மருந்து சாப்பிடும்போது உப்பில்லாப்பத்தியமிருந்தால், அப்போது தீனியின்பேரிலிருக்கின்ற இச்சையை இவ்வளவென்று வரையறுத்துச் சொல்ல எவராலும் இயலாது; அதை, அங்ஙனம் பத்தியமிருந்தோர் தெற்றென வுணர்வார்கள். வைராக்ய ஞானம் பெறுதவர்கள், மானிடத்தோற் சட்டையைப் போர்த்த விலங்கினத்துக்கு நிகர்த்திருப்பார்கள். மகான்களாற் போதிக்கப்பெறும் நல்லுபதேசத்தினுலும், சுருதி முடிவாகிய மஹா வாக்கியார்த்தத்தினுலும், பழக்கமென்னும் ஆத்மாநு சந்தானஞ்செய்து, நானென்னும் தற்பாவம் தணந்த நெஞ்சத்தால் நிகரற்ற மெய்ஞ்ஞான சுகம் உதயமாகும். 'நான்', 'என்னுடையது' என்னும் அகங்கார, மமகாரங்களைத் தொலைக்காதவரையில் உண்மையான ஞாஞேதயமாகாது. ஞாஞேதயமாகாவிட்டாற் பிரபஞ்சந்தோன்றும்; அப்போது பிரம்மந்தோன்றுது. காங்கென்னுங் காற்ருடிபோற் சுழலா நின்ற மனமானது நசித்தாலன்றி அகந்தை நீங்காது. 'நான் கொடுப்பேன்', 'நீர் கொடுப்பீர்' என்னுங் கருத்துள்ளவர் முத்தியை விரும்புவதானது இருளைத் துணையாகக்கொண்டு சூரியனைப் பார்க்க விரும்பியதுபோலாகும்.

திருக்குறள்.

யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

சிவஞான சித்தியார்.

யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியா னென்னு
மிக்கோணை ஞானவெரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செய்வே நின்றிடவத் தத்துவன்று னேரே
தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட் டோடு
நான்செய்தே னெனுமவர்க்குத் தானங் கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்ம
மூன்செய்யா ஞானந்தா னுதிப்பி னல்லா
லொருவருக்கு மியானெனதிங் கொழியா தன்றே.

சிவஞான தீபம்.

விரும்புற்ற தவம்விரதஞ் சீல மெல்லாம்
மேல்விழைவென் றறிந்தெவையும் விமலன் கூத்தென்
றிரும்புற்ற மனமழலின் மெழுகா யென்று
மியான்செய்தேன் பிறர்செய்தார் எனுங்கோள் நீக்கி
யரும்புற்றங் கெண்ணுதியா னென்னும் பாசத்
தவாமருவும் புறப்பற்றோ டகப்பற் றுன
பெரும்பற்றை யகன்றருளைப் பெறுவோர் ஞானம்
பெறும்பற்றப் புலியூரைப் பிரியார் தாமே.

விரிந்த மனமுடையவர்களை அனிலமென்னுங் கொடிய சர்ப்பம் துரத்தித் துரத்திக் கடிக்கும். சுருங்கிய மன முடையவர்களைப் அந்தச் சர்ப்பம் தீண்டாதபடி அரு ளென்னும் நகுலனும் கருடனும் பாதுகாத்து நிற்கும்.

வஸ்திரத்திலுள்ள அழுக்கை மலினம் பொருந்திய உவர்மண் என்னும் அழுக்கினல் நீக்குவதுபோலவும், இரும்பை அரமென்னும் இரும்பினுலிராவிச் சுத்தப்படுத் துவது போலவும், சன்மார்க்கவழியில் மிகமுயற்சி செய்யா நின்ற சுத்தமான மனத்தினுல் அசுத்தம்பொருந்திய மனத் தைத் திருத்தவேண்டும். மனத்தைக் கொண்டே மனத் தைக் கெடுத்து அறிவின் வடிவத்தையடையச் செய்யின்

பேரானந்த அருளாழியானது "கடன்மடை திறந்தனைய அன்பரன்புக் கேளியை" என்று பகர்வதுபோல் கங்குகரை யின்றிப் பரிபூரணமாய்ப் பெருகிக் கற்பனையற்ற மோட்ச கைவல்யத்திற் செலுத்திவைக்கும். அப்போது பிரம்ம சைதன்ய வாழ்வென்னும் நிரதிசயானந்தமுண்டாகும்.

கைவல்ய நவநீதம்.

இம்பரி னஞ்சை நஞ்சா விரும்பினை யிரும்பா லெய்யும்
அம்பினை அம்பாற் பற்றும் அழுக்கினை யழுக்கால் மாய்ப்பர்.

பிரபுலிங்கலீலை.

மனத்தை யடக்க மனந்துணை யாகும்
பினைத்துணை யின்றது பெற்றன னுயிற்
றனிச்சிவ மேயொரு தானென வாழ்வன்
நினைத்து மறந்தும் நிலத்துழ லானே.

இப்பிரபஞ்சத்தவர்களால், இனிமை இனிமையென்று கருதி அநுபவிக்கா நின்ற விடய வாழ்க்கைகளியாவும் எட்டிக்கனிபோற் கசப்பாக எப்போது தோன்றுகின்றதோ அப்போது தான் மனம் நசித்ததென்று அறியவேண்டும். திரண்ட மேகக் கூட்டங்களனைத்தும் சண்டமாருதக் காற்றினாற் சிதறியோடிச் சூனியமாகி விடுவதுபோல, கற்பனை நாசத்தால் மனமானது நசிக்கும். நிறைவு-குறைவு, பெரிது சிறிது நீங்கிய சமபாவனையினால் ஆனந்தத்தைத் தரும் பிரம்மபதமானது சதா நித்தியமானதாகும். வெப்பமானது அக்கினியினின்றும் நீங்காதிருப்பதுபோல், தாழ்வைத்தரா நின்ற சஞ்சலமானது மனத்தைவிட்டு நீங்குவது மஹா துர்லபம். சஞ்சலத்தினாற் சலிக்கின்ற மனமே உலகமென்று சொல்லப்படும்.

பத்திரகிரியார்.

செஞ்சலத்தி னாற்றிரண்ட செனனமோட் சம்பெறவே
சஞ்சலத்தை விட்டுன் சரணடைவ தெக்காலம்.

நித்தியமான பிரம்மத்திற்கும், அநித்தியமான பிரபஞ்சத்திற்கும் நடுவிலிருந்துகொண்டு சலிப்பைத்தந்து நிற்பதே மனமாகும். இத்தகைய மனமானது அறிவின் தீட்சண்யத்தினுற் சிற்சொரூபத்தையும், அறியாமை யென்னும் அந்தகாரத்தினுற் பிரபஞ்சத்தையும் அடைகின்றது.

தாயுமானவர்.

இமையளவு போதையொரு கற்பகா லம்பண்ணும்
இவ்வுலகம் எவ்வுலகமோ
என்றெண்ணம் வருவிக்கும் மாதர்சிற் றின்பமோ
என்னின்மக மேருவாக்கிச்
சுமையெடுமி னென்றுதான் சும்மாடு மாயெமைச்
சுமையாளு மாக்கினாளுந்
துர்ப்புத்தி பண்ணியுள நற்புத்தி யாவையுஞ்
சூறையிட் டிந்த்ரஜாலம்
அமையவொரு கூத்துஞ் சமைந்தாடு மனமாயை
அம்மம்ம வெல்லவெளிதோ ?
அருள்பெற்ற பேர்க்கெலா மொளிபெற்று நிற்குமீ
தருளோ! வலாதுமருளோ!

மனமானது சதா எந்தப் பொருளைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கின்றதோ அந்தப் பொருள் சித்திக்கும். ஒரு கடிகாரத்தைப் பலநாள் வரையிலும் விடாமல் அதையே பார்த்துக்கொண்டு வந்தால் கடிகாரத்தைப் பாராமலே மணி யிவ்வளவென்று சொல்வதற்கு வலிமை யுண்டாகும். அதனுல் மனம் அந்தக் கடிகாரத்தின் அம்சத்தைப் பொருந்தி யிருக்கிறது. எந்தப் பொருளையும் மேன்மையாகப் பாவித்தால் மேன்மையையும், கேவலமாகப் பாவித்தாற் கேவலத்தையுந் தருகின்றது. எப்படியெனில், பரம துஷ்டனுகிய ஒருவனை நாம் நல்ல சாதுவாகப் பாவித்தால் அவன் நம்மளவிற் சாதுவாகவே யிருப்பான். நல்ல

சாதுவையும் துஷ்டனுகப் பாவித்தால் அவன் நமக்கு மட்டும் பிரபல துஷ்டனுகவே யிருப்பான். அதுபோல, ஒரு கேவலமான வஸ்துவையும் கடவுள் (சர்வம் பிரம்ம மயம்) ஆகப் பாவித்தால் அது கடவுள் தன்மையைப் பெற்றுச் சகல வரப்பிரசாதங்களையும் கொடுக்கின்றது. அங்ஙனங் கருதாவிட்டால் அவர்களை விட்டு விலகிவிடுகின்றது. எவனெவன் எதை எப்படி முற்றிலும் பாவிக்கிருனே அது அப்படியே முற்றுப்பெற்று நிற்கின்றது. ஆகையாற், சகலத்திற்கும் மனமே காரணம். இதைப்பற்றி ஹிந்துஸ்தான் பாஷையில் "கேய்ஸா நிய்யத் அய்ஸா பரக்கத்" என்று ஒரு பழமொழி வழங்குவதுண்டு. அதன் தாற்பரியம், "எண்ணம் எப்படியோ அப்படியே வாழ்வு" என்பதே.

திருக்குறள்.

வெள்ளத் தனைய மலர் நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு.

கைவல்ய நவநீதம்.

மனைவி லங்கறு மைந்தனே கற்பக மாங்கனல் புனல்மூன்றும்
தனைய டைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர்த்தாளும்
அனைய வீசனும் அடைந்தவர்க் கருள்செய்வான் அகன்றவர்க் [கருள் செய்யான்
இனைய குற்றங்க ளெவர்குற்ற மாகுமென் றெண்ணிநீ யறிவாயே.

தாயுமானவர்.

சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது
தான்வந்து முற்றுமெனலால்
சகமீ திருந்தாலு மரணமுண் டென்பது
சதாநிட்டர் நினைவதில்லை
சிந்தையறி யார்க்கிது போதிப்ப தல்லவே
செப்பினும் வெகுதர்க்கமாந்
திவ்யகுண மார்க்கண்டர் சுகாதி முனிவோர்கள்
சித்தாந்த நித்யரலரோ ?

ஒருநாள் இரண்டு சிநேகிதர்கள் ஒரு நகரத்திற்குட் பிரவேசித்தார்கள். அவர்களில் ஒருவன் ஒரு வேசிவீட்டிற் குள் நுழைந்தான்; மற்றொருவன் ஒரு பஜனை மடத்திற்குள் நுழைந்தான். பஜனை மடத்திற்குள் நுழைந்தவன், தனது நண்பன் வேசிவீட்டிற்குச் சென்றதையும், வேசியுடன் அநு பவிக்கும் சிற்றின்ப சுகத்தையும் நினைந்து வாயூறிக்கொண்டி ருந்தான். வேசி வீட்டிற்குள் நுழைந்தவனோ, அவளுடன் சுகிக்கும்போதே, தனது நண்பன் பஜனை மடத்திற்குள் நுழைந்ததையும், அவன் பகவத் நாமத்தைக் கேட்டு ஆனந் திப்பதையும் சிந்தித்துக் கொண்டிருந்தான். அதனால், வேசி யைப் புணர்ந்தவன் பஜனை மடத்திற்குச் சென்ற பலனை யும், பஜனைமடத்திலிருந்தவன் வேசியைப் புணர்ந்த பலனை யும் அடைந்தார்கள்.

ஆகையால், சரீரம் எங்கே யிருந்தாலும் மனமானது துறவடைந்திருக்க வேண்டுமே யன்றி, மனத்துறவைப் பெறாமல் மலைக்குகைகளிலும்-சிங்கம்-புலி, கரடிகள் வசிக்கும் வனமுதலான விடங்களிலும் சரீரத்தைக் கொண்டுபோய் வைப்பது ஏகதேச பிரயோசனமேயாம். ஆனதுபற்றி, மாயப்பிரகிருதியிற் சிக்கி வருந்தாநின்ற மனத்தை ஆன்ம ஞான வழியிற் செல்லும்படி பழக்கவேண்டும்.

சிவவாக்கியர்.

மனத்தகத் தழுக்கறாத மௌனஞான யோகிகள்
வனத்தகத் திருக்கினு மனத்தகத் தழுக்கறார்.

ஒரு ஸ்திரியின் பக்கத்தில் அவள் நாயகனும், அவள் மைந்தனும் படுத்திருப்பதில், அவள் தனபாரத்தை குமாரனானவன் ஆவலுடன் பிடிக்க அதிலிருந்து இனியபால் சுரக்கின்றது. நாயகன் ஆசையுடன் பிடிக்க அவள் தேக மெங்கும் புளகித்து விரகவேதனை அதிகரிக்கின்றது. அவ்

விரண்டிற்கும் மனமே காரணமாயிருந்தது. அஃதெப்படி யெனில் :—மகனுடைய மனோசக்தியானது அவளுடைய மனோசக்தியைத் தூண்டி இனிய பாலை வருவித்தது. நாயகனுடைய காமிய மனோசக்தியானது அவளுடைய மனோசக்தியைத் தூண்டினதினால் விரகவேதனையுண்டாயது.

ஐந்துபேர்கள் சேர்ந்து தூக்கவேண்டிய பாரமான சுமையை ஒவ்வொருவனாகத் தூக்கிப்பார்த்தால் தூக்க முடியுமா? முடியாது. ஐந்துபேர்களும் சேர்ந்து தூக்கினால் இலகுவாய்த் தூக்கி விடலாமல்லவா? அதுபோல், பஞ்சேந்திரியங்களை ஒருவழிப்படுத்தி அதனால் பிரம்மஞான மென்னும் அரியபெரிய நிலைமையை அடையவேண்டுமே யன்றி, இந்திரியங்களைப் பற்பல வழியில் அலையவிட்டு ஞானத்தையடைய முயற்சித்தால் ஒருபோதும் கைவல்ய மாகாது.

இடைக்காடர்.

நாய்போற் பொறிகளை நாண விதம்விட்டோர்
பேயரென் றூதுகுழல்—கோனே
பேயரென் றூதுகுழல்.

கொல்லனானவன், வாள்—கத்தி—மண்வெட்டி முதலிய கருவிகளை இன்னதொழிலுக்கென்று குறிக்காமற் பொதுவாக நாம் கொடுக்குங் கூலிக்காகவே செய்துகொடுக்கிறான். அக்கருவிகளை ஒருவன் கையிலெடுத்துக் கொண்டு ஒரு மிராசுதாரின் அபிப்பிராயப்படி, மரம்வெட்டுதல், நெற்கதிரறுத்தல், புல்லறுத்தல், மண்வெட்டுதல் முதலிய தொழில்களைச் சரிவரச் செய்தால், அதனால் தகுந்தகூலியும், மிராசுதாருடைய விசுவாசத்தையும் பெறுகிறான். அங்ஙனஞ் செய்யாமல், அந்த வாள், கத்தி, மண்வெட்டி முதலிய கருவிகளைக்கொண்டு ஒரு மனிதனை வெட்டி விட்டானானால்,

பல பேர்களுடைய நிந்தனையும், அடியும், உதையும் பெறுவதுடன் மரண தண்டனையையும் அடைகிறான். மேற் கூறிய மேன்மையையும், தாழ்வையும் அடையச் செய்தது மனத்தின் தொழிலேயன்றி வாள் முதலிய கருவிகளின் குற்றமேயன்று. அதுபோல, மனமானது பொதுத்தானத்திலிருக்கின்றது; அதை உபயோகிக்கு மாதிரியிலிருந்து சுத்தமனமென்றும், அசுத்தமன மென்றும், பெயர் தாங்கி நிற்கின்றது.

மனத்தை அடக்கிவிட்டேன் என்று வாய்ஞானம் பேசுகிறவர்கள், ஒரு யுவதிப் பெண்ணின் அதாவது பதினறு வயது வாலிபக் கன்னிகையின் திரண்ட தனபாரம் கச்சைவிட்டு விலகித் திறந்திருக்கக் கண்டால் அதை மறுபடியும் பாராமலாவது, தமது கண்களை மூடிக்கொள்ளவாவது வன்மையுடையவர்களா யிருப்பார்களா? அங்ஙனமிருக்க எண்ணினல், "பித்தம் பிடித்த மனத்தை யோடுக்கவும்" என்று குணங்குடியார் கூறிய தேவாமிர்த வாக்கியம் போன்று, அந்த மனத்துடன் எவ்வளவு நேரம் போராட வேண்டும் என்பது ஒவ்வொரு விவேகிகட்கும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெரிந்த விஷயமே. அப்படிக் கொஞ்சங்கொஞ்சமாக அசுத்தமான மனத்தை யடக்கிப் பரிசுத்தமான மனதாக்கி விட்டாலும், "என் மனம் பரிசுத்தமாகி விட்டது" என்று உறுதியாகச் சொல்லவே முடியாது. ஏனெனில், ஒரு வாலிப ஸ்திரீயானவள் வலிந்து ஒருவனைப் புணர எண்ணி அவனுக்குச் சமிக்கை பண்ணி விட்டால் உடனே தன் வசமற்று அவள் வசமாகி விடுவானே யன்றி, எவ்வளவு வைராக்யசாலியாலும் அதைத் தவிர்ப்பது மஹா அருமை. விஸ்வாமித்திரர், பட்டினத்தடிகள் முதலிய பெரிய மஹரிஷிகளின் இதயப் பொக்கிஷத்தை யெல்லாம்

மடந்தையர்கள் ரூபலாவண்யம் கொள்ளைகொண்டு விட்டதென்றால், கேவலம் மற்றவர்களைப் பற்றிச் சொல்வானேன்.

தனிப்பாடற்றிரட்டு.

நடந்தா ளொருகன்னி மாராச கேசரி நாட்டிற்கொங்கைக்
குடந்தா னசைய வொயிலா யதுகண்டு கொற்றவருந்
தொடர்ந்தார் சந்யாசிகள் யோகம்விட் டார்சுத்த சைவரெல்லாம்
மடந்தா னடைத்துச் சிவபூசை யுங்கட்டி வைத்தனரே.

ஆகாயத்தினிடமிருந்து உற்பத்தியாகும் சண்டமாருதத்தைப்போன்று மனத்தினின்று உதயமாகிற ஆசாபாசங்களைத் தவிர்த்துவிட்டேன், இனி மோட்சவீட்டைத் திறப்பதற்குத் திறவுகோலைத் தான் காணோமென்று பிதற்றுகிறவர்கள், எங்கேனும் ஒருபைசா கீழே கிடக்கக்கண்டால் அதையெடுக்காமல் கல், ஓடு முதலியவைகளைப்போலவே எண்ணி வறிதே சென்றுவிடுவார்களா? அல்லது, கனவிலாவது அப்படிக் கீழே கிடக்கக்கண்டால் அதை எடுக்கிறது போற் கனவு காணமாட்டார்களா? அங்ஙனம் செய்யாமலிருப்பார்களேயானால், அவர்கள் ஆசையையும், மனத்தையும் செயித்தவர்கள் தான். ஆனால், நிராசையுடையவர்கள் ஒருவருமே இல்லையென்று நாம் சொல்லவில்லை. இருப்பது அருமையென்றே சொல்லுகின்றோம். அத்தகைய மஹாநுபாவர்களிருந்தார்களென்பதற்குப் பின்வருஞ் செய்யுட்களும், அதைப் பாடியவருடைய சரித்திரமுமே போதிய சான்றாகும்.

திருவருட்பா.

(1) செறிவதின் மனத்தேன் காசிலே யாசை
செய்திலே னிந்தநா ளன்றி
அறிவதில் லாத சிறுபரு வத்தும்
அடுத்தவர் கொடுத்தகா சவர்மேல்

எறிவது மேட்டி லெறிந்தது மெனக்கு
விருக்கின்ற நீயறிந் ததுவே
பிறிவதில் லாநின் னருட்பெரும் பொருளைப்
பெற்றனன் பேசு வதென்னே.

(2) பணத்திலே சிறிதும் ஆசையொன் றிலைநான்
படைத்தவப் பணங்களைப் பலகால்
கிணற்றிலே யெறிந்தேன் குளத்திலு மெறிந்தேன்
கேணியி லெறிந்தன னெந்தாய்
குணத்திலே நீதான் கொடுக்கின்ற பொருளை
எறிகலேன் கொடுக்கின்றேன் பிறர்க்கே
கணத்திலே யெல்லாங் காட்டுநின் னருளைக்
கண்டன னினிச்சொல்வ தென்னே.

மனமென்னும் பரிசுத்தமான முத்தை அறிவென்னும் கருவியால் தமரிட்டு, அநுபவமென்னும் நூலிற் கோர்த்து மாலையாகத் தரித்துக்கொள்ளல் வேண்டும். அங்ஙனம் கோர்க்காவிடில் அந்த மனோநித்திலம் பிரயோசனமற்றதாகும்.

மனத்தினுற் சங்கற்ப விகற்பங்கள் முழுவதையும் கைவிடுவதே பிரம்ம சைதன்யத்தை வசப்படுத்தியதாகும். மரத்தினுற்செய்த உருவைக் கட்டையென்றறியாதபோது கள்வன் தோன்றுவதுபோல், சர்வம் பிரம்மமயமென்றறிந்து தெளிவடையாதபோது பிரபஞ்சந்தோன்றும்.

சதானந்த சாகரமாகிய பேரின்பக்கடலில் மூழ்கி, நீச்சு நிலையற்றிருக்கும் மஹான்களுடைய மனமானது சர்வசக்திகளையுடையதாயும், பரிபூரணமாயுமிருக்கும். அழிவில்லாத பிரம்மபதமென்பதும் அதுவே. பிரம்மபதமாகிய அதனிடத்தில் இல்லாதவைகள் ஒன்றுமேயில்லை. வித்துக்களிற் சிறியதாகிய ஆலம்விதையிலிருந்து அந்த மரந்தோன்றி, இரத-கஜ-துரக-பதாதியென்னும் சதுரங்க சேனைகளுடன்

மன்னுதிமன்னர்கள் தங்கியிளைப்பாறும்படி நிழலைத் தருவது போலவும், ஆகாயத்தில் சூனியசத்தியும், நீரில் திரவசத்தியும், இரும்பு முதலிய உலோகங்களில் திடசத்தியும், காற்றிற் சலனசத்தியும், நெருப்பில் உஷ்ணசத்தியும் அமைந்திருப்பதுபோலவும் மனமானது மிகச்சிறியதும், மிகப்பெரியதும், ஆயிரத்தெட்டு அண்டங்களைக் கைந்நொடிப்பொழுதிற்குட் சுற்றவல்லதும், சர்வசத்திகளையுடையதுமாயிருக்கின்றது.

ஆற்றங்கரையின் அருகில் நின்ற மரம் வேரற்று விழுந்து நீரில் ஓடும்போது வேறொரு உயிர்மரத்தினால் தடையுண்டு நின்றாற்போல, சஞ்சரிக்காநின்ற மனத்தை சுத்தமனத்தினால் தடைப்படுத்தி நல்வழியில் நிற்கும்படி முயற்சிக்கவேண்டும்.

பிறவியென்னுந் துக்கசாகரத்தில் ஆசையென்னும் பெரிய வாயையும் கூறிய பற்களையுமுடைய முதலையானது பற்றியிழுக்க, மரணமென்னும் சுழலிற் சிக்கி வருந்துகின்றோமே எனத் தனக்குத்தானே ஆன்மவிசாரமுண்டானால், அப்போதுதான் பரிசுத்தமான மனமென்னுங் கப்பல் கிடைக்கப்பெற்று மோட்சமென்னுங் கரையைச் சேரலாம்.

சதாகாலமும் மாயாரூபமாகிய பிரபஞ்சத்தையே நினைந்துகொண்டிருந்த இந்த மனமானது, அதைத் தவிர்த்துவிட்டு அழிவற்ற ஆத்மஞான நெறிக்கு முயற்சிப்பதென்றால் அது சாமான்யமல்ல. அதற்கும் முழுமுதற் கடவுள் திருவருட்சகாயமிருந்தாலன்றி மனிதப் பிரயத்தனத்தால் ஒருபோதும் இயலாது.

தாயுமான சுவாமிகள்.

(1) அவனன்றி யோரணுவு மசையா தெனும்பெரிய
வாப்தர்மொழி யொன்றுகண்டால்
அறிவாவ தேதுசில வறியாமை யேதிவை
யறிந்தார்க ளறியார்களார்

மௌனமொ டிருந்ததா ரென்போ லுடம்பெலாம்
வாயாய்ப் பிதற்றுமவரார்
மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்துவரும்
வன்மையொ டிரக்கமெங்கே
புவனம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்
பூதபே தங்களெவிடம்
பொய்மெயித மகிதமேல் வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையுமெவ்விடம்
எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
யாதுமுனை யன்றியுண்டோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

(2) பொய்யா ருலகம் நிலையல்ல கானற் புனலெனவே
மெய்யா வறிந்தென்ன என்று விதனை விடப்படுமோ.

பட்டினத்துப்பிள்ளை.

(1) என்செய லாவ தியாதொன்று மில்லை யினித்தெய்வமே
உன்செய லென்று வுணரப்பெற்றேன்.

(2) விடப்படு மோவிப் பிரபஞ்ச வாழ்க்கையை விட்டுமனந்
திடப்படு மோநின் னருளின்றியே.

திருவருட்பா.

நினைப்பித்தா நித்தா நிமலாவென் றென்னுள்
நினைப்பித்தா லியானும் நினைப்பேன்—நினைப்பின்
மறப்பித்தா லியானும் மறப்பேன்மற் றுங்கே
பிறப்பித்தா லென்னலென் பேசு.

அங்ஙனமின்றி நான் மனத்தை யடக்கிவிட்டேன். ஆசையை விட்டுவிட்டேன் என்று நானென்னும் ஆணவத்தினால் உபந்நியாசஞ் செய்வதானது வெளியைத் திரட்டி விழுங்கிவிட்டேனென்று சொன்னதுபோலாகும். ஆனால், இக்காலத்தில் அமெரிக்கர்கள் இந்தியர்கள் முதலிய எல்லோ

ரும் சாமான்யமாய் மனோவசியம் செய்து பற்பலவிதமான சித்துகளைச் செய்யவில்லையா? சிற்சில வியாதிகளைக் கபால லட்சண வித்தையால் மாற்றிவிடவில்லையா? எனக் கேட்கப் படுமாயின்: அந்த அப்பியாசிகள் நாமரூபமுள்ள பாவனை களைப் புரிந்து "நீர்மேற்குமிழி" போன்றதும் பிள்ளை விளை யாட்டைப் போன்றதுமாகிய சில அநித்தியக் கிருத்தியங் களைச் செய்ய வன்மையடைந்திருப்பார்களேயன்றி, மஹாநு பாவர்களைப்போல் நாமரூபமற்ற தனது எதார்த்தவடிவ பாவனையைப் புரிந்து நித்தியத்தை அடைய வன்மையுடைய வர்களாகார்.

"வினையை விதைத்தவன் வினையை அறுப்பான், தினையை விதைத்தவன் தினையை அறுப்பான்" என்னு முதுமொழி யைப்போல், காமிய மனத்துடன் "காணப்பெற்றவையெல் லாம் அழியப்பெற்றவை" என்னும் அநித்தியப் பொருளைச் சிந்தித்து அதில் மனவலிமைபெற்றவன் அந்த அநித்தியத் தையே அடைவான். நிட்காமிய மனத்துடன் நித்தியத் தைச் சிந்தித்தவன் ஞானானந்த முதிர்ச்சியால் நித்தியத் தையே அடைவான். "ஆற்றைக் கடந்துபோக எண்ணி னால் யானைவாலைப் பிடித்தாற் கரையேறலாமா? ஆட்டு வாலைப் பிடித்தாற் கரையேறலாமா?"

மக்கா, மதீனா, காசி, இராமேஸ்வரம், லண்டன், அமெரிக்கா என்று ஒரு விநாடிக்குட் சொல்லிவிடலாமே யன்றி, அவ்விடங்களுக்குச் செல்வதானால் அதிக பொருட் செலவும், பலநாட்களும் செல்லும்; அதிகப் பிரயாசையு முண்டாகும். அதுபோல், மனத்தையடக்கிவிடலாம், ஆசையை வெறுத்துவிடலாம், இது பிரமாதமல்லவென்று வாய்க்குப் பிடித்தகேடாகச் சொல்லிக்கொள்ளலாமேயன்றி அங்ஙனஞ் செய்து காண்பிப்பது அருமையிலும் அருமை.

திருக்குறள்.

சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்.

கிணறு தோண்டுவதற்கு முன்னே அவ்விடத்தில் நமது கட்புலனுக்குத் தோன்றாத ஆகாயம், கிணறு தோண்டியபின் தோன்றுகிறது. அதுபோல, மனமாயையால் நமக்குத் தெரியப்படாதிருந்த கடவுள், ஆசிரியானுக்கிரகத்தால் மனமானது அறிவிற் கலந்து அறிவு ரூபமாகிக் கடவுளைக் காண்பிக்கும்.

களங்கரகிதமான ஆகாயத்தில் மேகங்கள் உண்டாவதற்கும்; மேகமில்லாமற் போவதற்கும் வாயுவே காரணமாகவிருக்கின்றது. அதுபோல், மனிதர்கட்கு ஆசையுண்டாவதற்கும், நிராசையாய் மோட்சமடைவதற்கும் மனமே காரணமாகவிருக்கின்றது.

நித்திரைசெய்வது சுகமாகவிருக்கிறதென்று சொல்வது, பஞ்சேந்திரியங்களின் வழியே நிகழ்ந்துழலாநின்ற மனம் இல்லாததினாலல்லவா? ஆதலால், மனம் உலக வியாபாரங்களில் வியாபித்துச் சஞ்சரிக்கின்ற * சாக்கிராவஸ்தையிற் சுகமுண்டென்பது கிஞ்சிற்றேனுமில்லை.

ஒருவன் ஐஸ்வரியங்களை அடைவதற்கும், இன்பத்தைப் பெறுவதற்கும், அளவிறந்த சாஸ்திரங்களை வாசித்து அதன் பயனையுணர்ந்து கல்விமானாவதற்கும், வீரத்தன்மைக்கும், கீர்த்திக்கும், ஞானமடைவதற்கும் துணையாகவிருப்பது இந்த மனமே.

ஒருவன் மனமானது கடவுள் திருவடியை யடையுமாகில், அவன் செய்த பாவங்கள் நூறுகோடிக்கு மேற்பட்

* சாக்கிராவத்தை:—இது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, தூரியம், தூரியாதீதம் என ஐந்தவத்தைகள். இந்த அவத்தைகளின் விபரம் நமது யோக ரகசியத்திற் காண்க.

டிருப்பினும், நெருப்புப்பட்ட பஞ்சுப்பொதிபோல ஒருகண நேரத்தில் ஒழிந்துபோகும். ஒருவனைக் கெடுப்பதும், கெட்டவனை அக் கெடுதியினின்று அப்புறப்படுத்துவதும் இந்த மனந்தானென் றுணர்ந்து அறிவிற் சிறந்த முமுட்சுக்கள் தத்தம் மனத்தை உலகவிடயங்களிற் புகாமல் தடுத்துவிடுவார்கள்.

சிவவாக்கியர்.

அஞ்சுமூன்று மெட்டடா யஞதியான மந்திரம்
நெஞ்சிலே நினைந்துகொண்டு நூறுருச் செபிப்பிரேல்
பஞ்சமான பாதகங்க ளூறுகோடி செய்யினும்
பஞ்சுபோற் பறக்குமென்று நான்மறைகள் பன்னுமே.

ஒரு மேட்டு வயலுக்குத் தண்ணீர் பாய்ச்சவேண்டுமானால் பல வாய்க்கால்களிலும் சலத்தைப் போகவொட்டாமல் தடுத்துப் பாய்ச்சுவார்கள். அதுபோல, மனோவாக்குக் காயங்களுக்கு அதீதமாகிய பிரம்மத்தில் மனத்தை நிறுத்த வேண்டுமானால், பிரபஞ்ச விவகாரமாகிய பல வாய்க்கால்களிலும் மனமென்னும் நீரைப் போகவிடாமல் தடுத்து பிரம்மமென்னும் மேட்டு வயலுக்குச் செலுத்தவேண்டும்.

திருவருட்பா.

உடம்புவரு வகையறியீ ருயிர்வகையை யறியீர்
உடல்பருக்க வுண்டுவித முறங்குதற்கே யறிவீர்
மடம்புகுபேய் மனத்தாலே மயங்குகின்றீர் மனத்தை
வசப்படுத்தீர் வசப்படுத்தும் வழிதுறைகற் றறியீர்
இடம்பெறுபொய் வாழ்க்கையிலே இன்பதுன்ப மடுத்தே
எண்ணியெண்ணி யிளைக்கின்றீர் ஏழையுல கீரே
நடம்புரியென் றனித்தந்தை வருகின்ற தருணம்
நண்ணியது நண்ணுமினோ புண்ணியஞ்சார் வீரே.

சமுத்திர சலத்தையெல்லாம் பருகினாலும் பருகலாம், மகாமேருவை அடியோடு பிடுங்கினாலும் பிடுங்கலாம், வெப்

பம் பொருந்திய அக்கினியை விழுங்கினுலும் விழுங்கலாம், சிங்கம், புலி, கரடி முதலிய துஷ்டமிருகங்களையும் சாந்தமுள்ள பிராணியாகப் பழக்கிவிடலாம், இந்த மனத்தை மட்டிலும் அடக்குவதரிது. உலக விடயங்களெல்லாம் உண்டாவதற்கு மனமே காரணம். இந்த மனமே நமக்குச் சத்துருவும், மித்துருவுமாக இருக்கின்றது. ஆகையால், மனோநிக்கிரகமானுலன்றி யீடேறுவதரிது. மனோநிக்கிரகமே மோட்சத்தின் எல்லை. அதுவே சாயுச்சியத்தைக் கொடுக்கும்.

பணத்தைச் செலவிட்டாலும்
மனத்தைச் செலவிடாதே!

---

## பதினுருவது அத்தியாயம்

---

## சீவகாருணியம்.

விருத்தம்.

பூவினிற் சனனம் போந்த புழுமுத னரீ ரான
சீவகா ருணிய மொன்றே சென்மசா பல்ய நல்குந்
தேவரா னுலுங் கோற றின்றலாற் றுயர நண்ணிப்
பாவமே பெறுவ ரென்னும் பண்பெலாம் விளக்கு வாமால்.

கடவுளை அடையும் நெறிகளெல்லாம் அன்பையே பிரதானமாகக் கொண்டுளது. அதனுலேயே "அன்பின் வழிய துயிர்நிலை" என்றனர் ஆன்றோர். அத்தகைய அன்பானது சீவகாருணிய மில்லாதவர்கட்குப் பிரகாசிப்பதில்லை. ஒருவாறு பிரகாசிப்பினும் அது ஏகதேசமேயன்றிப் பூரணமாய்ப் பிரகாசித்ததன்று. ஆனுல் சீவகாருணியம்! சீவகாருணியம்!! என்று சிலர் ஒரு பாடமாகச் சொல்லிக் கொள்கிறுர்களே யன்றி, சீவகாருணியம் என்று சொல்லிக் கொள்வது புலாலைத் தின்னுமலிருப்பது மட்டுமல்ல. ஆடு,

மாடு, கோழி, எறும்பீருகவுள்ள சகல சீவன்களையும் தன்னுயிரைப்போல் வாஸ்தவத்தில் எண்ணி, அவ்வுயிர்களை வருத்தாமலிருப்பதும், தம்மாலியன்ற வுதவியைப் புரிவதுமே சீவகாருணியமாகும். சிலர், மாமிசாதிகளைத் தின்னுமலிருப்பதே சீவகாருணியமெனக் கருதி, சிலசமயங்களில் ஆடு மாடுகள் தன்னுடைய பயிர், கொடி, செடிகளையும், இதர பொருட்களையுந் தின்னக்கண்டால் அவைகளைத் தூரத்தி விடாமலும், இராச ஆக்ஞைப்படி வாடியிற் கொண்டுபோய் அடைக்காமலும், கோபாவேசத்துடன் தன் கையிலிருந்த மண்வெட்டியோ! அரிவாளோ! தடிக்கொம்போ! மற்றெதுவிருந்தாலும் அதைக்கொண்டு அம்மிருகத்தின் உயிர் நீங்கும் விதமாய் நையப்புடைக்கின்றூர்கள். இத்தன்மையையுடையவர்கள் மாமிசத்தைச் சாப்பிடாமல் தமது முன்னோர்கள் கொண்டிருந்த வழக்கத்தைக் கைக்கொண்டு, அந்த மாமிசத்தின் சுவை இவ்வாறிருக்குமென அறியாமலிருக்கிறூர்களேயன்றி, உண்மையில் மாமிசத்தைப் புசிக்கக்கூடாதென்று எண்ணி நீக்கியவர்களல்லர்.

சீவகாருணியமுள்ள பெரியோர்கள், மன்னுயிரால் தன்னுயிர்க்குத் துன்பம் நேர்ந்தகாலத்தினும் மன்னுயிரைக் கொல்லக் கருதமாட்டார்கள்.

திருக்குறள்.

(1) சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றூர் கோள்.

(2) கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றூர் கோள்.

(3) செய்யாமற் செற்றூர்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமந் தரும்.

(4) தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.

பிரபுலிங்கலீலை.

தன்னைக் கொல்லினுந் தான்பிறி தொன்றினைக் கோறல்
பன்னிற் பாவமென் றறைகுவர் கற்றுணர் பழையோர்.

ஆகையால் தவத்திற் சிறந்தவனும், சகல வுயிர்கள் மீதும் கருணைபாலிப்பவனும் எவனோ அவனே அந்தண னென்னும் வாக்கியத்திற்கு இலக்கானவன். இதை விட்டு விட்டுப் பார்ப்பன வருணத்தவர்களே அந்தணர்கள்; மற்ற வர்கள் எத்துணைச் சிறப்புடையராயினும் அந்தணரல்ல வென்று கருதுவது அறியாமையேயாம்.

திருக்குறள்.

அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.

வம்ச பரம்பரையாக ஆடு கோழிகளைத் தின்று வரு பவர்களில் ஒருவன் கல்வி, கேள்வி, சாதுசங்கச் சார்பு முத லிய நல்லொழுக்கத்தால் பிராணிகள் மீது கிருபை வைப் பானேயானால், எந்தச் சாதியாயிருந்தாலும் அவனே சீவகாருணியமுடைய மஹான். மாமிசம் புசிக்குமொருவன் பரம்பரையாகத் தமது முன்னோர்கள் புசித்து வந்த வழக் கத்தை அநுசரிக்கிறானே யன்றி, அவனால் அந்த வழக்கம் ஏற்படவில்லை. அதை அவன் நீக்கவேணுமென்று கருதினா லும், அவன் இனசனத்தார்கள் அங்ஙனம் நடக்கவிடாமல் கலியாண முதலியவற்றின் பந்திபோசனங்களில் மாமிச பட் சணம் செய்யும்படி நிர்ப்பந்திக்கின்றார்கள். அப்படி நடந்து கொள்ளாவிட்டால், அது பலபேர் கேள்விகட்கு இடங் கொடுத்து, சரியான முகாந்தரஞ் சொல்லா விட்டால், சாதியை விட்டு விலக்கவும் நேரிடுகிறது. என்ன செய்வான் பாவம்! குடும்பத்திலிருக்கிறவரையிற் குலாசாரப்படி நடந்து தானே தீரவேண்டியிருக்கிறது. புலால் புசிக்காத சில

ஏனைய மதஸ்தர்கள் இஸ்லாமிய மதத்திலும், அம்மதத்தினரிடத்திலும் சீவகாருணியமில்லை யென இகழவாரம்பிக்கிறார்கள். ஆனால்,

திருக்குறள்.

தேரான் றெளிவும் தெளிந்தான்கணையுறலும்
தீரா விடும்பை தரும்

என்றபடி இஸ்லாமிய மதத்திலுள்ள உண்மைகளை அம்மதத்தின் மேலான நூல்களை வாசித்தறியாமலும், வாசித்துத் தெளிந்தவர்களைக் கேட்டறியாமலும், சிற்சில மனிதர்கள் பேருக்கு மாத்திரம் இஸ்லாமியரென்று சொல்லி, சட்டை, குல்லாய்களை அணிந்துகொண்டு மதுபானம், பிறர்மனை நயத்தல், அபினி, கஞ்சா முதலிய லாகிரி வஸ்துக்களை உபயோகித்தல்போன்ற பல கொடிய செய்கைகளைச் செய்துகொண்டு, படுகேடாய்த் திரிவதைக் கண்ட அன்னிய மதஸ்தர்கள், இதுதான் இஸ்லாமிய மதத்தின் ஒழுங்கென்று, கருதி இகழ்வது கூடவே கூடாது. முஸ்லிம் சமயத்தில், கொடிய பாதகமாகிய கொலை, களவு, கள், காமம், பொய், பொறாமை, வெகுளல் முதலிய சர்வ அநீதிகளையும் நீக்கும்படிச் சொல்லப்பட்டிருப்பதுபோல எந்தச் சமய நூற்களிலும் அவ்வளவு தெளிவாய்ச் சொல்லவில்லை யென்றே சொல்லலாம். * இஸ்லாம் மதத்தில் சீவகாருண்யத்தைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கின்ற தென்பதையும் சொல்லப்படவில்லை யென்பதையும் பின்வரும் சரித்திரத்தாலறியலாம்.

* முஹம்மது நபி அவர்கள் அவதரிப்பதற்கு முன் அரபிதேசத்தவர்கள் எத்துணைத் தீய காரியங்களைப் புரிந்து கொண்டிருந்தார்கள் என்பதையும், அவர்களை ஒட்டகம் ஆடு மாடு கோழிகளைப் புசிக்கும்படி கூறியது எதற்காக என்பதையும், அவ்வாறு கூறியது காருணியமேலீட்டினலா? அல்லவா? என்பதையும் நமது "சர்வமத சீவகாருணியம்" என்னும் நூலில் விளக்கமாகக் காணலாம்.

முற்காலத்தில் அரபிதேசத்தில் ஷெய்கு சிபுலி றகுமத்துல்லா என்றொரு மகானிருந்தார். அவர் வெகுகாலம் தவம் புரிந்து சூக்கும காரண சரீரத்தை யடைந்தபின், "ஆனாலு மிந்த வுடலோடிருப்ப தருவருப்பே" என்னுங் கருத்தை யுணர்ந்து, இந்தத் தூல சரீரத்தை நீக்கக் கருதிச் சமாதி யடைந்துவிட்டார். பின் பொருகாலத்தில் ஓர் அசுகாபி யுடைய கனவில் தோன்றினர். அப்போதந்த அசுகாபி பெரியவரை நோக்கி, "தாங்கள் கடவுள் சமுகத்தை நாடிச் சென்றீர்களே! அவர் சமுகத்தில் என்ன சம்பாஷணைகள் நடந்தது! அதனை அடியேனுக்குத் தயைபுரிந்து திருவாய் மலர்ந்தருள வேண்டும்" என மன்றாடிக் கேட்டார்.

கேளும் அசுஹாபியே! கடவுளானவர் என்னைக் கூப்பிட்டு, நீர் செய்த பாவங்களையெல்லாம் நான் பொறுத்தாட் கொண்டேன்; ஆனால், என்ன காரணத்திற்காகப் பொறுத்தேனென்பதை அறிந்து சொல்லும் என்றார். அப்போது நான் செய்த தவத்திற் (அமல்) காகப் பொறுத் திருப்பீரென்றேன். அதற்கவர் நகைத்து அதற்கு மல்ல வென்றார். நான் புண்ணியஸ்தல (ஹஜ்ஜு) யாத்திரை செய்ததற்காகவா என்றேன். அதற்கு மல்லவென்றார். அப்படியானல், நான் பலதேயங்கட்குஞ் சென்று சற்குருவைத் தேடி மெய்க்கல்விகளைக் கற்றுக்கொண்டதற்காகவா? அல்லது பல நாள் வருந்தி விரதம் (நோன்பு) அநுஷ்டித்த தற்காகவா? அல்லது தானதருமஞ் செய்ததற்காகவா? என்று கேட்டேன். அதற்குமல்லவென்றார். ஆனால் வேறெந்தக் காரணத்திற்காக எனது பாவங்களைப் பொறுத் தாட்கொண்டீர்? அதைத் தேவரீரே சொல்லல் வேண்டு மென்றேன். அப்போது கடவுளானவர் சொல்கிறார்:—

நீர் ஒருநாள் பகுதாதுப் (Bagdad) பட்டினத்தின் கடைவீதி வழியாய் நடந்துகொண்டிருக்கும்போது ஒரு

பூனைக்குட்டியானது குளிர் தாங்காமல் உடல் நடுங்கி வருந்தி ஒரு சுவரோரத்தில் ஒதுங்குவதைக்கண்டு மனமிரங்கி அப்பூனைக்குட்டியை மார்போடணைத்து உமது கைச் சட்டைக்குள்ளே வைத்தீர். அதனாலும் அதற்குக் குளிர் நீங்காததை யுணர்ந்து வைக்கோல் முதலிய உஷ்ணமான படுக்கையில் படுக்கவைத்து அதன் நடுக்கத்தை நீக்கி வைத்தீர். அந்தச் சிவகாருணியத்தின் பலனுக்காகவே உமது தீமைகளை மன்னித்தேனென்றார். இஃதிங்ஙன மிருக்க, இஸ்லாமிய சமய சம்பந்தமான தமிழ் நூற்களில் பிரதமமான பொன்னரிய மாலையென்னும் ஒசியத்தில்,

தாங்கு சந்தூக்குத் தாங்கி னாலும்
தனியே யிரவெல்லாம் வணங்கி னாலும்
வாங்கு சொல்லுமுன் ஒலுச்செய் தாலும்
வகுலி சுவர்க்கந்தான் புகுவ தில்லை

எனவும் "இரக்கமில்லாதவனுக்கு சுவர்க்கமில்லை" எனவும் பிரசித்தமாகக் கூறுகின்றது. ஆதலால், எந்த வாக்கியத் திலும் விசேடார்த்தமிருந்தால் அதை ஒப்புக்கொள்ள வேண்டுமேயன்றி பேரைக் கேட்ட மாத்திரத்திலேயே வெறுத்து இகழ்ந்துவிடக் கூடாது. இதனாலேயே ஞான வாசிட்ட நூலார் "ஊகமுளதேற் சிறுவ ருரையுங் கொள்க" என்றனர்.

திருக்குறள்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

அறநெறிச்சாரம்.

காய்த லுவத்த லகற்றி யொருபொருட்கண்
ஆய்த லறிவுடையோர் கண்ணதே—காய்வதன்கண்
உற்ற குணந்தோன்றா தாகும் உவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும்.

முற்காலத்தில் சிபி என்ற ஓர் அரசன் மனுநெறி தவறாது அரசு புரிந்து வந்தான். ஒரு நாள் அவன் தன் உத்தியான வனத்தில் உலாவிக்கொண்டு அங்குள்ள சிருட்டி விநோதங்களை நோக்கி மெய்ம் மறந்து, சிருட்டி கர்த்தாவினிடம் தன் மனதைச் செலுத்துங் காலத்தில், வல்லூறு பட்சியினால் துரத்தப்பட்ட மாடப்புறு வொன்று பறந்து வந்து சோர்ந்து அவன் மடியில் விழுந்தது. வல்லூறுக்குப் பயந்து, அது தன்னிடம் சரண் புகுந்ததென்றே சிபிக்குத் தோன்றிற்று. உடனே பின் தொடர்ந்து வந்த வல்லூறை, மாடப்புறுவின் அருகில் வரவொட்டாது தடுத்து விட்டான். அப்பொழுது வல்லூறு மனிதக்குரலினால், " எனக்கு இயற்கையாக இரையாய் ஏற்பட்ட இந்தப் பிராணியை நான் தொடக்கூடாதென்று தடுப்பது நியாயமோ?" என்று ஆட்சேபித்தது. புறுவையும் காப்பாற்றி, வல்லூறுக்கும் நியாயம் பகர வேண்டிய அரசன், புறுவின் நிறை எவ்வளவோ அவ்வளவு தன் தேகத்திலுள்ள மாமிசத்தைக் கொடுப்பதாக வல்லூறுக்கு வாக்களித்தான். அதற்கு வல்லூறு இசைய, அரசன் ஒரு பெரிய தராசைக் கொண்டு வரச்செய்து, ஒரு தட்டில் புறுவை வைத்து, மற்றொரு தட்டில் தன் தொடையிலிருந்து கொஞ்சம் மாமிசத்தை அறுத்து வைத்தான். புறு கனமாக இருந்தது. அதற்கும் மனம் வருந்தாது மிகுந்த சந்தோஷத்துடன் சிபி தனது மாமிசத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக அறுத்து வைத்தான். எவ்விதம் செய்தும், புறுவிருந்த தட்டு கனமாகவே தாழ்ந்திருந்தது. சிபி சற்று யோசித்து, சீவகாருணியத்தால் தூண்டப்பட்டு, தானே அந்தத் தராசில் ஏறினான். இந்தச் சீவகாருணிய முயற்சியைக் கண்டதும், வல்லூறும் புறுவும் தமது நிசரூபமாகிய தேவ உருவத்தைக் காட்டிச் சிபியின் சீவகாருணியத்தைப்பற்றி மிகப் புகழ்ந்து பேசி, சிபிக்கு

முன் நிலைமையும், தீர்க்காயுளும், சிறந்த செல்வமுமுண்டாகுமாறு அனுக்கிரகித்து மறைந்தன. (மகா பாரதம்.)

குறள்.

'மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற் கில்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை.

ஆகையாற் சர்வசமயத்தினரும் கொலைபுலைகளை அவசியம் நீக்கவே வேண்டும் என்பது தான் அறிவுடையோர் கருத்து.

---

## பதினேழாவது அத்தியாயம்.

---

### நிராசையே துறவு.

விருத்தம்.

இனத்துற வான மனைவிசேய் முதலா
மிடர்தரும் பந்தமே தணந்து
வனத்துற வடைந்தும் பின்னரு மனைவி
மக்களை விரும்புதல் கான்ற
அனத்தினை யருந்த விரும்பிய தாகு
மாதலாற் சகல தியாக
மனத்துற வொன்றே முத்தியை நல்கும்
வகைகளை விபரமாய் வரைவாம்.

அகம்புறத்துறவு.

துறவு என்பது அகத்துறவு—புறத்துறவு என இரு வகைத்தாகும். மனைவி, மக்கள், வீடு, வாசல், ஆடு, மாடு முதலானவைகளைத் துறந்துபோய் வனத்தி லிருந்துகொண்டு, வாந்தி பண்ணிய ஆகாரத்தை மறுபடியும் புசிக்க விரும்பியதுபோல் கைவிட்ட பிரபஞ்சக் கிரியைகளை

மீட்டும் நினைந்து சிந்தித்துக் கொண்டிருப்பதைத் துற வென்றே சொல்லக்கூடாது. அவ்வாறு சிந்திக்காமல் ஆரணியத்திற் போயிருந்தாலும், அது புறத்துறவேயன்றி அகத்துறவாகாது. வனத்திலிருந்தாலும் நகரத்திலிருந்தாலும் எவ்விதக் கருமமும் இல்லாமல் காணமௌனத்துடன் பற்றற்றிருப்பதுவே மெய்யான அகத்துறவாகும்.

தாயுமான வள்ளல்.

அந்தக் கரணம் அடங்கத் துறப்பதுவே
எந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே.

சிவவாக்கியர்.

மனத்தகத் தழுக்கறுத மௌனஞான யோகிகள்
வனத்தகத் திருக்கினு மனத்தகத் தழுக்கறார்
மனத்தகத் தழுக்கறுத்த மௌனஞான யோகிகள்
முலைத்தடத் திருப்பினும் பிறப்பறுத் திருப்பரே.

இதைவிட்டு நான் துறந்துவிட்டேன் என்று வாய் ஞானம் பேசி, பேய் ஓட்டுகிறேன், பிள்ளைவரங் கொடுக்கிறேன், நோய் தீர்க்கிறேன் எனப் பிரஸ்தாபித்து அதே விருப்பமாக இருப்பவர்கள், இரும்பு விலங்கை வேண்டாமென்று பொன் விலங்கைத் தன் கையிற் போட்டுக் கொண்டது போலாகும். ஆகையால் மாயா சம்பந்தமுடைய சன சங்கத்தைத் தணந்து நிராசையாய் வன சஞ்சாரம் புரிந்தவர்களை ஞானவீரர் என்றே சொல்ல வேண்டும்.

சிவஞானவள்ளல்.

தாயரையும் தந்தையையும் தற்சார்ந்த கேளிரையும்
மாயு மயல்காட்டும் மனைவியையும்—சீயென்று
சொப்பனம்போற் கண்டெட்டாத் தூரம்போ யோகநிலை
நிற்பவனை ஞானியென நேர்.

காயசம் பந்த மனைவிதாய் தந்தை கான்முளை யென்னுமிங் கிவரை
மாயசம் பந்த மெனத்துறந் தொழிந்தோன் மாநிலம் பரவுமெய்ஞ் [ஞானி
தேயசம் பந்தத் தவரொடு மருவிச் செனித்தவர் நகரிடை மருவான்
றூயசம் பந்தத் தவரொடு மருவித் துறவியா யவாவெல்லாந் துறப் [பான்

குடும்பத்தை யென்னுட் குலைப்பேனோ பொல்லா
விடும்பையினை யெஞ்ஞான்றீர் வேனோ—குடம்பையினிற்
புட்பறந்தாற் போலேயான் பொய்யுடல்விட் டேகுவனோ
நுட்பசிவ னுனவே னோ.

## புத்தர் சன்னியாசம்.

சிவகாருண்ய மூர்த்தியான கௌதம புத்தர் துயிலும் போது ஒரு பெரியவர் கனவில் தோன்றி, "நீ சக்கரவர்த்தி யாக விரும்பினாலும், சந்நியாசியாக விரும்பினாலும் இதுவே ஏற்ற தருணம்" என்றார். அந்தக் கனவு கண்டு, கௌதமர் திடுக்கிட்டு எழுந்தார். சக்கரவர்த்தியாவதா ?— சந்நியாசி யாவதா ? என்று யோசித்தார். உலகம் துக்க மயமாக இருப்பதை உன்னினார். மன்னரானாலும் மாணம் விடுவதில்லை என்பதை எண்ணினார். "துறவிக்கு வேந்தன் துரும்பு" என்னும் உண்மையை உணர்ந்தார். ஆகையால், துறப்பதே நலம் என்று தேர்ந்தார். துக்க நிவர்த்திக்கு வழியைக் கண்டு பிடிக்க வேண்டும் என்று தீர்மானித்தார்.

ஒரு நாள் தன் தந்தையைக் காணுதற்குச் சிவிகை யூர்ந்து செல்லுகையில் தம் எதிரே வந்த முதியோன் ஒருவனைக் கண்ணுற்று, அவன் உடல் வலி குன்றித் தளர் நடையுற்று, ஊன்றுகோல் மேல் கவிந்து செல்லுதற்குக் காரணம் யாதெனத் தம்முடன் போந்த சந்தகன் என்னும் சாரதியை வினவினார்.

அவன் 'மாந்தர் யாவரும் இளமை கழிந்து முதுமை எய்தித் தளர்நிலை உறுவது திண்ணம்' என உரைத்தனன். அது கேட்டுச் சிந்தனை மேற்கொண்டார். பின்னர் ஒருகால் அங்ஙனம் செல்லுகையில் தம் எதிரே வருந்தி வந்த பிணியாளன் ஒருவனைக் கண்டு அவன் வருந்திக் குலைவதற்குக் காரணம் யாதெனச் சந்தகனைக் கேட்டனர். அதற்கு அத்தேர்ப்பாகன், 'ஐய! உலகில் வாழ்வார் யாவரும் பல நோய்களால் பலகால் பீடிக்கப்பட்டுச் சொல்லொணாத் துயருறுவர்; நோய் கொண்டக்கால் பிறர் உதவி செய்வதற்குப் பின்னிடுதலால் அவர் எண்ணில்லாத துன்பங்கள் அடைவார்' என்று கூறினன். மற்றொரு நாள் அவ்வாறு செல்லுங்கால் அழுகிக் கிடந்த பிணம் ஒன்றைக் கண்டு அது யாதென வினவினர். சந்தகனும் அரசகுமாரர் ஐயம் அகற்றற்கு மரணம் இன்னதென்பதையும், உயிர்கள் யாவும் அதனை ஒருகால் அடையவேண்டுமென்பதையும் விளங்க உரைத்தனன். இவைகளைக் கேட்ட சித்தார்த்தர், மாந்தர் பிணி, மூப்பு, சாக்காடு ஆகிய இவற்றால் துன்பம் எய்துதலையும், வாழ்வு அநித்தியமாதலையும், இன்பநிலையின்மையையும் கண்டு இவற்றை ஒழிப்பதற்கு உரிய வழி ஏதேனும் உண்டோ? என ஆராய்ந்து சிந்தனை கொண்டார். இவ்வாறு உலகியற்கையினை மேலும் மேலும் சிந்திக்க, அவருக்கு வெறுப்பு மேலும் மேலும் வளர்வதாயிற்று. சித்தார்த்தர் இங்ஙனம் சிந்தனையில் ஆழ்ந்து வேறுபட்டிருப்பதை உணர்ந்த அரசன் அவர் மனநிலையை மாற்றப் பல முயற்சி செய்தான். செய்தும் அவருடைய உள்ள நிலை மாறுபடவில்லை. பின்பு ஒரு நாள் அவர் வெளிச்சென்றபோது வழியின் இருபுறங்களிலுமுள்ள நன்செய் புன்செய்களில் உழவர்களும் எருதுகளும் உழைத்தலையும் அவ்வுயிர்கள் அடையும் வருத்தங்களையும் கண்டு மனம் வருந்தி ஒரு நாவல் மரத்

தின் கீழே தங்கிக் கண்களை மூடிக்கொண்டு துக்கமாகிய, பிறப்பு, பிணி, மூப்பு, இறப்புக்களையும் அவைகளுக்குரிய சாதனங்களையும் ஆராய்ந்து கொண்டிருந்தார். அப்போது துவர் ஆடையணிந்த துறவி ஒருவர் வந்து 'சித்தார்த்தர்' என்று அழைத்தார், அவர் உடனே விழித்துப் பார்த்து, "நீர் யாவர்" என்றார். அத்துறவி "துக்கத்தை நினைந்து நினைந்து என் உள்ளம் வருந்துகின்றது. அதினின்றும் நீங்கி என்றும் அழியாத இன்ப நிலையை அடைய என் மனம் விழைகின் றது; ஆதலால் ஊர்ப்புறத்தே தங்கிப் புலப்பகையை வென்று உயிரைப் பாதுகாத்தற்கு உரிய அளவே உணவை இரந்து உண்டு வாழும் பிட்சுக்களின் நிலைமையை விரும்பி னேன்" என்று கூறி அந்த பிட்சுக்களின் பெருமையையும் சொல்லிவிட்டுச் சென்றனர். இதனைக் கேட்டவுடன் சித் தார்த்தர் துறத்தற்குத் துணிந்து தம் அரண்மனை சென்று தாம் துறவுமேற் கொள்ள விரும்பியதைத் தம் தந்தைக்குத் தெரிவித்தனர். அரசர் மனம் கலங்கிக் கண்ணீர் பெருக்கி, 'ஐயனே! துறத்தற்குரிய காலம் இது அல்ல; நெடுநாள் அரசாண்டபின்னரே அது மேற்கொள்ளத்தக்கது' என்று கூறவும், அதனை எற்றுக்கொள்ளாமல், "பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு ஆகிய இந்தத் துக்கங்களைக் போக்குதற்குரிய வழியை அறிந்து கொண்டாலன்றி இங்கு நில்லேன்" என்று உறுதியாகக் கூறிவிட்டுத் தம் மாளிகைக்குச் சென்றார். அரசன் அவர் மனவுறுதியை மாற்றப்பின்னரும் முயன்றான்; சிறிதும் பயன்படவில்லை. ஒரு நாள் சித்தார்த்தர் ஆற்றில் நீராடிய பின் தம் மாளிகைக்கு ஏகுங்கால், ஒருவன் அவர் முன் போந்து, 'ஐயனே! உமக்குப் புதல்வன் பிறந்தனன்' என்றனன். அதனைக் கேட்டு அவர் பற்றின்மேற் பற்று யிற்றே; இந்தத் துக்க சாகரத்தைக் கடத்தல் எவ்வாறு? என்று கவலையுற்று அரண்மனை யடைந்தார். அங்கு

நிகழ்ந்த நாடகம் முதலிய இன்பக் காட்சிகளுள் ஒன்றையும் பாராட்டாமல் இரவின் முற்பகுதியில் அயர்ந்து உறங்கி நடு இரவில் திடீரென்று விழித்துத் துறத்தற்குற்ற திண்ணிய மனத்துடன் வேற்றிடம் செல்லத் துணிந்தார். அப்போது அங்கு விழித்துக்கொண்டிருந்த சந்தகனை அழைத்துத்தமது கண்டகம் என்னும் குதிரையை விரைவிற் கொண்டுவருப்படி கட்டளையிட்டார். சந்தகன் சிறிது திகைத்துச் சென்றபின், அவர் பற்றறத்துறக்கத் துணிந்தன ராயினும் மனவலிசிறிது பின்னிட்டதால்,

"கடந்த ஞானியும் கடப்பரோ மக்கண்மேற் காதல்"

என்றபடி குழந்தையை விட்டுப் பிரிய மனமியலாதவராய்க் குழந்தையைக் கையால் எடுத்துப் பார்க்க நினைத்தார். அங்ஙனமே சென்று, அன்னையுடன் அணைந்து உறங்கும் பச்சிளங் குழந்தையைக்கண்டு, 'இக்குழந்தையைக் கையால் எடுத்தால், இவள் விழித்துக் கொள்ளுவாள்; விழிப்பின் நாம் வெளிச்செல்லுதல் இயலாது' என எண்ணிச் சிறிது நின்றார். பின்னர் தெளிவுகொண்டு புறப்பட்டார். சந்தகனும குதிரையைக் கொணர்ந்து நிறுத்தினன். அதன் மீதேறி அசையா உள்ளத்துடனும் ஊக்கத்துடனும் செல்வாராயினர். அப்போது அவருக்கு வயது இருபத்தொன்பது என்பர்.

இங்ஙனம் சென்ற சித்தார்த்தர் கோலிய தேசத்துக்கு அப்பாலுள்ள அநோம நதிக்கரையை விடியுமுன் அடைந்தார். ஆங்கு தம் கழுத்திலணிந்திருந்த கண்டசரத்தைக் கழற்றிச் சந்தகனுக்கு நன் கொடையாகக் கொடுத்தனர். பின்னர் தமது முடிமணியை அவன் கையில் வைத்து, "இதனை நான் அன்புடன் கொடுத்ததாக அரசனிடம் கொடு; அவருக்கு என்பால் உள்ள வாற்சல்யத்தை மறக்கும்

படி தெரிவி" என்று கூறினர். சந்தகன் உடன் படாமல் மறுத்துக் கூறியும் அவனுக்கு வற்புறுத்திச் சொல்லி விடை கொடுத்தார். அவனும் கண்ணீர் வடித்து மனம் புழுங்கிக் குதிரையுடன் திரும்பினன்.

பின்னர் அந்நதிக் கரையில் உடைவாளால் தமது மயிர்முடியை அறுத்து எறிந்துவிட்டுச் சிந்தித்து நின்றனர். அப்போது ஒரு தேவர் வேட வடிவத்தோடு தோன்ற, அவ்வேடனுக்குத் தம் பட்டாடையைக் கொடுத்து விட்டு, அவனுடைய துவராடையைப்பெற்று அணிந்துகொண்டு, தமக்குத் துக்க பரம்பரையைப் போக்குதற்குரிய மார்க்கத்தை உபதேசிக்கவல்ல பெரியோரை நாடிச்சென்றார். ஆங்கு காய், கனி, கிழங்கு முதலியவற்றை உண்டு திரிந்து, பலமுனிவர் தவச்சாலைகளை அணுகி, அங்கே தவஞ் செய்து கொண்டிருந்த அநேகமுனிவர்களை அடுத்து, "துக்க நிவர்த்திக்கு ஏற்ற வழிஎது?" என்று கேட்டார். அவர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகச் சொல்லினர். அவர்கள் சொன்னபடியெல்லாம் அநுட்டித்துப் பார்த்தார். எதுவும் பயன் தருவதாக ஏற்படவில்லை. அதனுல், கௌதமர் மனதிற்கு நெடுங் காலம் சமாதானம் உண்டாகாமலே இருந்தது.

பின்னர் அவ்விடத்தைவிட் டகன்று, அருகிலிருந்த ஒரு சிற்றூரில் தங்கி துக்க நிவர்த்திக்கு ஏற்ற வழியைக் கண்டு பிடிக்கச் சதா சிந்தித்துக்கொண் டிருந்தார். சில சமயங்களில் உணவும் கொள்ளாமல் ஊகித்துக்கொண் டிருந்தார்; சிறிதும் சித்த சமாதானம் ஏற்படவில்லை. கடைசியில் கயா என்னும் நகரத்தை யடைந்து, அங்கே இருந்த ஒரு போதி விருட்சத்தின் கீழே உட்கார்ந்து யோகம் செய்து கொண்டிருந்தார். அப்போது அவருக்கு ஞானம் உதயமாயிற்று. துக்க நிவர்த்திக்கு மார்க்கம் ஏற்பட்டது.

அது முதல் தம் பெயரை புத்தர் என்று மாற்றி வைத்துக் கொண்டார். அதனால் இவரைக் கௌதமபுத்தர் என்று சொல்லுவது வழக்கம்.

புத்தர் தமது நூதன மதத்தைப் பரவச் செய்ய விரும்பி, பலருக்கும் போதிக்கலானார் "சகலரும் சமானர். தன்னைப்போல் பிறரையும் நேசிக்கவேண்டும். சீவவதை செய்யக்கூடாது. பெரியோருக்கு அடங்கவேண்டும். பொய் பேசுதல், மதுபானம் செய்தல் முதலிய துரப்பியாசங்களை முற்றும் நீக்கவேண்டும். சதா சந்தோஷமாக இருக்க வேண்டும்" என்று போதித்து உண்மையான துறவு மார்க்கம் பெற்றார்.

ஒழிவிலொடுக்கம்.

கன்னனைப்போற் றன்னை யறிவனோ காக்கையுடன்
மன்னு குயில்போன வாறுபோ—லன்னியமாய்ப்
பேசாது போன துறவி பிறப்பறுப்பார்க்
காசானு மென்றே யறி.

விளையாட்டுச் சன்னியாசம் மெய்யானது.

ஒருநாள் ஒருவீட்டில் அழுகைச்சத்தம் கேட்டது, அப்போது வெளியிற் சென்றுவந்த தெய்வசிகாமணி முதலியார் தன் மனைவியாகிய ஞானம்பாளை நோக்கி, அஃதென்ன தொனியென்று வினவினார்.

ஞானம்:—குமாரசாமி பிள்ளை நாளையதினம் காஷாயம் பூண்டு சந்நியாசம் பெற்றுக்கொள்ளப் போகிறாராம், அதற்காக அவர் தந்தை தாய் முதலிய உறவினர்கள் அவர் பிரியும் தன்மைக் காற்றாமல் வருந்தி, "உம்மைப்பிரிந்து நாங்கள் எப்படி உயிரோடு வாழ்வோம்" என்று அழுகிறார்கள் என்றாள்.

தெய்வ :—(தலையைச் சிறிது அசைத்துக்கொண்டு) குமாரசாமி பிள்ளை துறவறமா அடையப்போகிறார்? அடைவார்! அடைவார்!! என்று ஏளனமாகச் சொன்னார்.

ஞான :—என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? அவரென்ன துறவியாகமாட்டாரா?

தெய்வ :—அவர் ஒருபோதும் துறவடையமாட்டார், இது உண்மை.

ஞான :—நீங்கள் என்ன முகாந்தரத்தைக்கொண்டு அவர் துறவடையமாட்டார் என்கிறீர்கள்? துறவடைபவர் எப்படியிருப்பார்?

தெய்வ :—துறவடைபவர் எப்படியிருப்பார் என்பதை நீ தெரிந்துகொள்ள விரும்புகிறாயா? ஆனால் உனக்கு நான் நிதரிசனமாகக் காண்பிக்கிறேன் என்று கூறித் தன்மேற் போட்டிருந்த அங்கவஸ்திரத்தை எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு, தனது நாயகியாகிய ஞானம்பாளை நோக்கி, இங்கே பார்! துறவடைபவன் இந்த வஸ்திரத்தைக் கழிப்பான்; அதை இப்படித்தான் கௌபீனம் கட்டுவான்; இப்படித்தான் முன்பின் யோசியாமல் ஓடுவான் என்று ஒரே ஓட்டமாக ஓடிவிட்டார். ஓடிப்போன நாயகன் வருவார் வருவாரென்று ஞானம்பாளுக்குப் பார்த்தகண்ணும் பூத்துவிட்டதுபோலாயிற்று. அவர் திரும்பி வரவேயில்லை. இப்படிப் பல நாட்களாயின; நாட்கள் சேர்ந்து மாதமாயின; மாதங்கள் சேர்ந்து வருடமாயின அவர் வரவேயில்லை. துறந்துபோகும் பாவனை இத்தன்மைத்தெனச் செய்து காண்பித்த தெய்வசிகாமணி முதலியார் உண்மையிலேயே துறவியாகிவிட்டார். இஃதன்றோ துறவிலட்சணம்?

சிவஞானவள்ளல்.

தந்தைதாய் முதலிய தமரைக் காண்குறில்
வெந்துயர் விளைதலால் விருப்பு மேவலால்
அந்தநன் னிலமகன் றைம்பதி யோசனை
மைந்தனே நீபர தேயம் வைகுவாய்.

ஊன்பி றந்த வுடலைச் சுமப்பதற்
கேன்பி றந்தமென் றெண்ணி யறிஞர்கள்
தான்பி றந்த விடத்தைத் தணந்துபோய்
வான்பி றந்த வனத்தில் வசிப்பரே.

துறவடைய நினைத்த அந்த நேரத்திலேயே சகல பற்றையும் விட்டுத் துறந்துபோகாதவன் மறுபடியும் துறவடைவான் என்று கருதுவது, மலடியும் பிள்ளை பெறுவாள் என்று எண்ணியிருப்பதை நிகர்க்கும்.

சக்கரவர்த்தியும்—சன்னியாசமும்.

பல்கு தேசத்தரசராகிய சுல்தான் இபுறுஹீம் அதுகம் அவர்கள் தமது விசாலம் பொருந்திய சிம்மாதனத்திலிருந்து கொண்டே கடவுளை வணங்க, அவர் தன்னிற்றனே விக்காவை (சந்திப்பை) ஆதாவுவைத்தார். அப்போது அவர் மாளிகை மேன்மாடியில் மனிதருடைய காலடிச்சத்தம் கேட்க, யாரங்கே! என்றனர். அதற்கு ஒருவர் "நான் பக்கீர். என்னுடைய கோவேறு கழுதை தவறிவிட்டபடியால் இம் மாடியில் நிற்கிறதா வென்று தேடிப்பார்க்கிறேன். வேறு விசேடமில்லை" என்றனர். அதை சுல்தான்கேட்டுச் சிரித்து, "அடே! ஜாகிலானவனே! இந்த அரண்மனை மாடியில் கோவேறு கழுதை வருமா? என்றார். அதற்கு பக்கிர், "அடே! மறதியாளனான இபுறுஹீமே! நீ இதைப்பற்றி ஆச்சரியப்படவேண்டாம். உயர்ந்த உடுப்புக்களை உடுத்திக் கொண்டும் நிறைந்த உலகப் பந்தபாசங்களை வைத்துக்

கொண்டும், சிம்மாதனத்திலிருந்து கொண்டே ஆண்டவனுடைய கிருபைக்குப் பாத்திரனாகும்போது எனக்கிந்த மாளிகையில் கோவேறு கழுதை அகப்படாதா?" என்று கூறக்கேட்டு சுல்தான் சகலமும் துறந்து ஆன்மலாபம் அடைந்தார் என்று ததுக்கிறத்துல் அவுலியாவில் கூறப் பெற்றிருக்கிறது.

அகஸ்தியர் மதிவெண்பா.

*சொல்லாமல் நீங்கத் துணிந்தவர்க்கே யல்லாது*
*பொல்லாத மாய்கைவிட்டுப் போகாதே—சல்லாப*
*லீலையிலே தான்மயங்கி நின்றவுயிர் கெட்டுவிடும்*
*வாலையவள் சொன்னாள் மதி.*

ஒழிவிலொடுக்கம்.

*நித்திரைசெய் வீட்டி னெருப்பும் பெரும்படையு*
*முற்றிப் புறப்பட்டார் முற்றத்தே—பித்தரைப்போல்*
*நில்லென்று சொன்னாலு நிற்பரோ! வப்படிகாண்*
*இல்லறத்தை நீத்தா ரியல்பு.*

*கட்டு நெகிழ்த்துவிட்ட கள்ளனைப்போற் கங்குவிற்பேய்*
*வெட்டு களத்தின் வெருவினர்போல்—முட்டத்*
*தொடர்ந்த படைபிழைத்துத் தோன்றப்போ வார்போ*
*லடங்கத் துறந்தேகு வார்.*

சழக்கர் சன்னியாசம்.

சிலர், தான் துறவடையப் போவதாகவும், ஆனால் இத்தனை நாட்களாகத் தன்னை நம்பிக்கொண்டிருந்த தந்தை, தாய், மனைவி, மக்கள் முதலிய குடும்பத்தினரை இது சமயத்திற் கை விட்டுவிட்டால் அவர்கள் பரிதபிப்பார்களென்றும், என்மகன் இப்போது குழந்தையாயிருக்கிறான் அவனுக்குப் பருவகாலம் வரும்வரையிற் பாதுகாத்து, அதன் பின் ஒரு பெண்ணைத்தேடிக் கலியாணம் செய்துவிட்டால்

இவனைப்பற்றிய கவலை எனக்குக் கிடையவே கிடையா தென்றும், அப்படிச் செய்யாவிட்டால் ஆதாவின்றி வருந்துவானென்றும் சொல்லிக்கொள்கிறார்கள். சிலர் என் மனைவி சிறுவயதுடையவள், என்னைக் காணவிட்டால் அதே வியாகுலமாய் ஏங்கி இறந்துபோவாள், என்னை நீங்கிய சோகத்திற்கு ஒரு குழந்தையிருந்தால் அது முகத்தைப் பார்த்துக்கொண்டே காலங்கழித்து விடுவாள். ஆதலால் எனக்கு ஒரு குழந்தை பிறந்தவுடன் சந்நியாசம்பெற்று விடுவேனென்றும், சிலர் என்னுடைய வம்சவிர்த்தியின் பொருட்டு ஒரு குழந்தை பிறந்தவுடன் துறவியாகிவிடுவேனென்றும், சிலர் துறவியாகிவிட்டால் என் மனைவி வேறு வழியின்றி மயங்குவாள், அதற்காக அவள் ஜீவனம்சத்திற்கு ஏதாவது மார்க்கம் செய்துவிட்டு அப்புறம் துறவியாக வெளியேறிவிட்டால் வியாகுலமே கிடையாதென்றும் வாசாலமாகச் சொல்லிக்கொள்கிறார்கள்.

திருக்குறள்.

(1) அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

(2) அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்.

ஞானவாசிட்டம்.

இச்சையாம் விறகு மாண்டா லெண்ணமாம் வன்னி மாளு
நிச்சய மாகுந் தேயத் தியாகமா னெடுந்தே ரேறி
மெச்சிய வுதாரக் கண்ணால் வேட்கையான் மிகவும் வாடுங்
கொச்சைஞா லத்தை நோக்கிக் குறைவற விருப்பாய் தீரா.

ஆசை யறுமின்க ளாசை யறுமின்க
ளீசனோ டாயினு மாசை யறுமின்க
ளாசை படப்பட வாய்வருந் துன்பங்க
ளாசை விடவிட வானந்த மாமே.

பிரபுலிங்கலீலை.

ஆசை யறுதல் வீட்டின்பம் நேரே யடையக் காரணமாம்
ஆசை யறுத லலதில்லைப் பலநூ லனைத்து மாய்ந்திடினும்
ஆசை யறுவோன் சிவனுதல் திண்ண மெனநன் றறிந்திருந்தும்
ஆசை யுறுத லென்கொண்டோ அந்தோ மனித ரறியேமே.

சகல பற்றுக்களையும் பற்றறவிட்டதே துறவு. அங்ஙன மிருக்க, "குளிக்கப்போனவன் சேற்றைப் பூசிக்கொண்டு திரும்பினான்" என்பதுபோல பந்தபாசங்களைவிட்டு நீங்க வேண்டு மென்னும் எண்ணமுள்ளவன், மனைவிக்குச் சீவனம்சத்திற்கு நிலமும், உடுத்துவதற்குப் புடவையும், இரவிக்கையும், வம்சவிர்த்திக்குக் குழந்தையும், குழந்தைக் குக் கலியாணமும் தயாரித்து வைத்துவிட்டுப் போகவேண்டு மென்று எதற்காக எண்ணுகிறான். இப்படி எண்ணமுள்ள வன் எக்காலத்திலாவது துறவியாவானா? ஏனெனில், அவ னுக்கு மேன்மேலும் ஆசை வளர்ந்துகொண்டே யிருப்ப தால், "நெருப்பு மிஞ்சினால் தண்ணீரைக்கொல்லும் தண் ணீர் மிஞ்சினால் நெருப்பைக் கொல்லும்" என்பதுபோல் மனைவி மக்கள்மீதுண்டான பற்றுக்களை விடாதபோது அறிவானது கெடும். அறிவு மேலிட்டபோது ஆசையானது கெடும். ஆகையால், தேகாபிமான முதலிய எல்லாப் பற்றுக்களையும் அறவே விட்டுவிடுவது துறவாகும். அங்ங னம் தான்தேடிய பொருள், பூமி, ஆடு, மாடு, பெண்டு பிள்ளையாதிகளைக் கைவிட எண்ணினால் சாமான்யத்தில் இந்த மனம் இணங்குமா? இணங்குவது மஹா அருமை. கைவிடுவதென்றால் தூக்கிக்கொண்டுபோய்க் குளம் குட்டை களிற் போட்டு விடுவதல்ல. என்னுடையதென்னும் பற் றில்லாமல் தாமரைத் தண்ணீர்போல் ஒட்டியும் ஒட்டாம லிருப்பதுவே.

நீதிவெண்பா.

இன்னல் தரும்பொருளை யீட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—அன்ன
தழித்தலுந் துன்பமே அந்தோ! பிறர்பா
லிழத்தலுந் துன்பமே யாம்.

திருக்கடைக் காப்பு.

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேயச்
செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே.

சிவதருமோத்திரம்.

மண்ணினுந் தனத்தினும் மனைக்கு வாய்த்தநற்
பெண்ணினு மகவினும் பெரிய பேரினும்
துண்ணென விழைவினைத் துறந்த தூயரே
விண்ணினு மின்புடன் விளங்கி மேவுவார்.

மஹாராசா துறவு.

பொருளுண் டாகிற் காப்பதனாற் பொருந்துந் துன்பம் அரசாகின்
ஒருதம் மிகுந்த வரசரா லுதவுந் துன்ப மொருகுடைக்கீழ்
நிருப னாகி நோய்மரண நேரு முன்னும் பயத்தாலும்
வருவ தெனையோ மறுமையினி லென்றும் வாடித் துன்புறுமே.

எத்துணை அகத்துறவு உடையாராயினும் புறப்பற்றோ டிருப்பின் ஒவ்வொரு சமயத்தில் அப்பற்றானது அறிவை மயக்குமாதலால் புறத்துறவும் வேண்டியது அவசியமாகத் தானிருக்கிறது. தம்மால் சம்பாதிக்கப் பெற்ற திரவியங் களை நியாயமான வழியில் செலவழிக்காமல்,

பாடுபட்டுத் தேடி பணத்தைப் புதைத்துவைத்து
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் யாரே யனுபவிப்பார்
பாவிகா ளந்தப் பணம்

என்ற வெண்பாவிற் கிலக்காக, பணம் காத்த பூதம்போல் தானும் செலவழித் துண்ணுமல், சற்பாத்திரமான நல்லோர்களுக்கும் கொடுத்து வாழாமல் பத்திரமாகப் புதைத்து வைத்து, இரவும் பகலும் அதே கவலையாகவும், பாதி தூக்கத்திலுங் கூட தாம் புதைத்த பணம் அவ்விடத்தி லிருக்கிறதா? அல்லது திருடர்கள் அதை எடுத்துக் கொண்டுபோய் விட்டார்களா? என்று அடிக்கடி போய் தோண்டிப் பார்த்து மூடிவைத்து விட்டு வரும் பேராசைப் பேயர்கள், தான் உடலை விட்டுப்போங்காலை ஒரு விஞடியேனும் அவ்வுடலிலிருக்க வேண்டியதற்காக கோடிப் பொருளை பிறர் கையில் கொடுத்தாவது ஆயுளை வாங்கிக்கொள்ள முடியுமா? அவ்வாறு செய்து கொள்ளக் கூடாமல்,

"பொல்லாப் புழுமலி நோய்புன் குரம்பை"

என்று இகழ்ந்துரைக்கப்பட்ட இந்த சரீரத்தோடு வாணுளை தவத்திற் கழியாமல் அவத்திற் கழிக்கும் பேதை மானிடரைப் போல், மெய்ஞ்ஞானிகள் தேகாதி பிரபஞ்சங்களை மெய்யாகக் கருதி மயங்காமல், காணப்பெற்றவையெல்லாம் அழியப்பட்டவை யென்று, சுருதி-யுத்தி அனுபவங்களால் தேர்ந்து தெளிந்து அவற்றைப் பொய்யாகக் கருதித் துறப்பார்கள்.

கோழியானது தன் குஞ்சுகளைச் சீவன்போல காப்பாற்றுகிறது. குஞ்சுகளும் தாயையே தன் உயிராகக் கருதுகிறது. குஞ்சுகளுக்குத் தக்க பருவம் வந்தபின் தானே சத்துருவைப் போல கொத்தி வெருட்டி விடுகிறது. அதுபோல ஒரு காலத்தில் மனைவி மக்களோடு புளியங்காயைப் போலச் சேர்ந்து வாழ்ந்தாலும், ஆன்ம லாபங் காரணமாக ஒரு காலத்தில் புளியம்பழத்தைப் போல்

விட்டுவிலகி ஏகாந்தம் அடையவேண்டியது அத்தியாவசிய மாகும். ஒருவன் நன்மையை அனுபவிக்குங் காலத்தில் அவனது தாய், தந்தை, மனைவி, மக்கள், சுற்றம், நட்பு முதலியோர் உறவாயிருந்து இதஞ்செய்வார். அவன் தீமையை அனுபவிக்கும் காலத்து அங்ஙனம் உறவா யிருந்தவர் தாமே பகையாய் அகிதஞ்செய்வார். ஆகலின், இவர் இருவினைக்கீடாய் வந்தவரென்று அறிந்து துறக்கும் படிக்கு அவைகளை உவமை கூறப் பெற்றது.

குடும்பத்தவர்களுக்கும் பந்தபாசம் நீங்கி சாதுக்கள் தெரிசனமாகி துறவிலக்கணம் வந்து பொருந்தும்படி ஹஜ்ஜுயாத்திரை என்றும், தீர்த்தயாத்திரை யென்றும் பெரியோர்கள் நேமித்துள்ளார்கள். அன்றியும் ஹஜ்ஜுக் குப் பிரயாணமாகிறவன் திரும்பத் தன் சுதேசத்திற்கு வர வேண்டுமென்ற பந்தம் நீங்கும்பொருட்டு, பிரயாணமாகும் போதே திரும்ப வருவோமென்ற நம்பிக்கை யில்லாமல், மரணத்தையும்-ஆகிரத்தையும் சிந்தித்தவனாகவும், உலக பந் தங்களை முற்றிலும் விட்டவனாகவும், இஃறாம் உடைதரிக்க வேண்டுமென்று கூறப்பெற்ற கருத்தும் துறவடைய வேண் டியநோக்கமே. ஆனால் இக் காலத்தில் ஹஜ்ஜுயாத்திரை புரிபவர்கள் அந்த நோக்கத்தோடு மக்காஷரீபுக்குச் செல்ப வர்களாகத் தெரியவில்லை. தான் ஹஜ்ஜுக்குப் போய் விட்டு வந்து, தன் பெயருக்குமுன் * ஹாஜி (Hajee) என்ற ஒரு பட்டத்தையும் சேர்த்து, ஹாஜி (Hajee) இன்னார் என்று உலகப் பிரசங்கம் செய்வதற்காகவும், மக்கா-மதினவி லுள்ள வர்த்தமானங்களை அரபிகயிட் (Thousand nights)

---

* ஒருவர் ஹஜ்ஜுக்குப் பிரயாணமாகி பம்பாய் சென்ற வுடனே வீட்டுக்குக் கடிதமெழுதினர். அதில் ஹாஜி......ருவுத்தர் என்று கையெழுத்திட்டிருந்தார். அதுவே போதிய சான்றாகும்.

கதையைப்போல் தெருத்தெருவாய்ப் போகிற சனங்களை வலியக் கூப்பிட்டுச் சொல்வதற்காகவும், எளிய சனங்களைக் கொள்ளையடித்த தன்னுடைய பாவங்களெல்லாம்தொலைந்து விட்டதென்று மனப்பால் குடித்துக்கொண்டிருக்கவும், இன்னுமிவைபோன்ற காலாதீதமான கிரியைகளைப்புரிவதற்காகவும் இடம்பாச்சாரியாக நடிக்கிறார்களே யன்றி, உண்மையில் ஹஜ்ஜுக்குப் போகவேண்டும். அதனால் இன்ன பலன்! இன்ன விசேடம்! ஹஜ்ஜுக்குப் போவதற்கு முன் எவ்விதமாய் நடந்திருக்கவேண்டும்; ஹஜ்ஜுக்குப் போகிறவர்களுக்கு என்னென்ன குணங்கள் இருக்கவேண்டும்; ஹஜ்ஜுக்குப்போய் வந்துவிட்டால் என்னென்ன விதமாய் நடந்துகொள்ள வேண்டும் என்பதை உள்ளபடி நன்குணர்ந்து ஹஜ்ஜுக்குப் போகிறவர்கள் பெரும்பாலும் இல்லை யென்றே நான் சொல்வேன். ஆனால் பதினாயிரத்திலொருவர், ஹஜ்ஜுடைய ஏவல் விலகலின்படி நடந்தவர்களுமிருக்கிறார்கள். அவர்களைப் பற்றி யாம் இங்கு குறிப்பிடவில்லை.

### ஹஜ்ஜு (புண்ய) யாத்திரை ஒழுங்குகள்.

ஹஜ்ஜு யாத்திரையானது தமது ஆயுளில் ஒரு முறை அவசியம் செய்ய வேண்டிய தவமும், சன்னியாசமும் ஆகிறது. யாத்திரை ஆரம்பித்து விட்டால் தன் சரீரமானது பாவக்கிரியைகளைச் செய்யாமலும், நாவானது தகாத (அனாவசிய) வார்த்தைகளை உச்சரிக்காமலும் காத்துக் கொண்டவர்களுக்குத்தான் ஹஜ்ஜு நிரப்பமாகிறது; அன்று பிறந்த பாலனைப்போல் பரிசுத்தனும் ஆகிறான்.

அலியிபுனுல் முவப்பஹு என்ற ஒரு பெரியவர்கள் கூறுவதாவது:—நான் ஒருமுறை ஹஜ்ஜு செய்தேன். அறபாவுடைய இரவில் இரண்டு மலக்கு (தேவதூதர்) களைக்

கனவிற் கண்டேன். அவர்களில் ஒருவர் ஒருவரை நோக்கி இவ்வருடம் ஹாஜிகள் எத்தனை பேர் என்றார். அதற்கவர் தெரியாதென்னலும், ஆறு லட்சம் (600000) பேர்கள் வந்திருந்தார்கள். அவர்களில் 6 பேர்களுடைய ஹஜ்ஜு தான் கபூலாயிற்று என்றார். நான் பதறி விழித்து அந்த 6 பேர்களில் நாம் சேர்ந்திருக்கமாட்டோம் என்று கவலை அடைந்தேன். பின்னர் மஷ் அருல் ஹறும் என்னுமிடத்தில் நித்திரை செய்தேன். அப்போதும் 2 மலக்குகள் கனவில் தோன்றி, அந்த 6 பெயரின் பொருட்டால் ஆறு (600000) லட்சம் பேர்களையும் கடவுள் மன்னித்து விட்டார் என்று பேசிக்கொண்டதைக் கேட்டு என்னுடைய கவலை யொழிந்தேன் என்பதாம்.

## ஹஜ்ஜின் இரகசியம்.

ஹஜ்ஜுடைய காலம் ஷவ்வால், துல்கஃதா மாதங்களும், துல்ஹஜ்ஜு பிறை 9-வது நாள் முடிய ஈதுப்பெருநாள் சுபுஹு உதயமாகிற வரையிலுமாம். இக்காலங்களிலே தான் இஃறாம் கட்டவேண்டும்.

இமாம் ஹஸ்ஸாலி றஹ்மதுல்லா அவர்கள் கூறியிருப்பதாவது:—

ஹஜ்ஜின் வெளியுறுப்பான ஒவ்வொரு அமலிலும் ஒரு இரகசியம் இருக்கிறது. ஹஜ்ஜைக் கொண்டு நாடப்பட்டதென்னவென்றால், மனிதன் உற்றுணர்ந்து ஆகிறத்துடைய காரியங்களை நினைவு கூறவேண்டுமென்பதேயாம். ஹஜ்ஜின் பிரதான இரகசியம் யாதெனில், இஸ்லாமுடைய உனுவானில் கூறியபடி மனிதன் தன்னுடைய இக்தியாரை (சுயதந்திரத்தை) அல்லாவினிடம் ஒப்புவிக்காத வரையில் பூரண பதவியை அடையமாட்டான். இத்தகைமையாய் அவனைப் படைக்கப்பட் டிருக்கிறது. அவன் தன் மனோ

இச்சையின்படி நடப்பது அவனுடைய கேட்டுக்குக்காரண மாகும். அவன் சுயதந்திரனு யிருக்கிற வரையில், இன்னும் எதையும் மார்க்க விதிப்படி செய்யாத வரையில் அவன் தன் இச்சையைப் பின்பற்றினவனுயிருக்கிறுன். அவனின் நடவடிக்கை அடிமையின் நடவடிக்கை போலாகாது. ஆனுல் அவனின் நற்பதவியோ அடிமைத்தனத்தில் தானிருக்கிறது. இதனுலேயே முந்தின மார்க்கங்களில் ஒவ்வொரு உம்மத்துக்கும் சன்னியாசமும், துறவறமும் அருளப் பட்டிருந்து, அம்மார்க்கங்களின் ஆபிதுகள் மலைகளிற் போய் வாழ்நாள் முழுவதும் தவம்புரிகின்றவர்களாயிருந் தார்கள். பின்பு ஜனங்கள் ஹலரத்து ரசூல்சல்லல்லாகு அலைகிவ சல்லமவர்களிடத்தில், யாரசூலல்லாஹ்! நம்முடைய மார்க்கத்தில் சன்னியாசமும், துறவறமும் இல்லாத காரண மென்னவென்று கேட்டதற்கு, அதன் தானத்தில் *ஜிஹாதையும், ஹஜ்ஜையும் விதிக்கப்பட்டதென்று உத்தரங் கூறினுர்கள். ஆதலால் அல்லாகுத்தாலா, சன்னியாசத்திற்கு பதிலாக இந்த உம்மத்தோர்க்கு ஹஜ்ஜை அருளியிருக் கிறுன். ஏனென்றுல் ஹஜ்ஜில் தவமும் உண்டாயிருக்கிறது. அதனேடு உற்றுணர்ந்து அச்சமடைவதற்குரிய சாதனங் களுமிருக்கின்றன.

## ஹஜ்ஜின் ஹக்கீக்கத்துகள்.

ஹஜ்ஜின் பிரயாணத்தை ஒருவாறு ஆகிரத்துடைய பிரயாணத்துக்கு ஒப்பிடப் பட்டிருக்கிறது. ஏனென்றுல் இந்தப் பிரயாணத்தில் நாடப்பட்டது கஃபாவும், அந்த சபரில் நாட்டம் கஃபாவின் நாயனுமேயாம். ஆதலால்

---

* ஜிஹாதுல் அஸ்கர் என்றும் ஜிஹாதுல் அக்பர் என்றும் இருவகைகளாகும். அவை முறையே பீசபீலையும், நபுசுடன் யுத்தம் செய்தலையும் குறிக்கும்.

இந்த சபரின் காரியங்களையும், நிலைமைகளையும் கொண்டு அந்த சபரை நினைவு கூரவேண்டும்.

எப்பொழுது தன் இன ஜனங்களையும், இஷ்டர்களையும் விட்டுப் பிரிகின்றானோ அப்பொழுது இந்தப் பிரிதல் மவுத்துடைய சக்றுத்தின்போது உண்டாகிற பிரிதலுக்குச் சமானமா யிருக்கிறதென் றுணரவேண்டும். இன்னும் எப்படி இந்த சபருக்கு முன்னே எல்லாப் பற்றுகளையும் விட்டு மனம்பிரிந்து புறப்பட நேரிடுகின்றதோ அப்படியே அந்திய வயசில் துன்யாவின் எல்லாப் பற்றுகளையும் விட்டு மனதை ஒழிக்கவேண்டுமென்றும், இல்லாவிட்டால் ஆகிறத்தின் சபர் தன் பேரில் கஷ்டமாகுமென்றும் உணரவேண்டும்.

இன்னும் இந்தசபரில் வனாந்தரங்களில் ஆகாரத்திற்கு மிடைவராதிருக்கும்படி எச்சரிக்கையாயிருந்து வழிக்கு வேண்டிய பலவகையான உணவு முதலியவைகளைத் தயார் செய்கிறபோது, கியாமத்துடைய மைதானம் மிகப் பெரியதென்றும், அதிக பயங்கரமானதென்றும், அதற்குத்தக்க தங்கரிப்பான இபாதத்துகள் மிகத்தேவையாகுமென்றும் உணரவேண்டும். இன்னும் இந்த சபரில் சீக்கிரம் கெட்டுப் போகிற பண்டங்கள் தன்னோடிராதென்றும், அவை வழிக்கு உதவாவென்றும் அறிந்திருப்பதினால், அப்படியான பண்டங்களைத் தன்னோடு கொண்டுபோகிறதில்லை. இதேவிதமாய் முகதாட்சண்ணியமாகிய ரியாவும், குற்றங்குறைகளுமுள்ள எந்த இபாதத்தும் ஆகிறத்துடைய வழிக்கு உதவாதென் றுணரவேண்டும்.

இன்னும் சவாரியின்மேல் உட்காரும்போது ஜனாஸாவை நினைக்கவேண்டும். ஏனென்றால் ஆகிறத்துடைய சபருக்குள்ள சவாரி இதுதான் என்பதை அவன் நன்றாய் அறிந்திருக்கிறான். ஒருக்கால் சவாரியைவிட்டு இறங்குவதற்கு முன்னே ஜனாஸாவில் ஏறுகின்ற நேரம் வந்து சம்பவிக்கவும்

கூடும். ஆதலால் இந்தசபர் அந்தசபரின் வழிக்கு உதவக் கூடிய தங்கரிப்பா யிருக்கவேண்டும்.

இன்னும் இஹ்ருமுடைய உடையை (அதாவது மக்கத் தினருகே சென்றவுடன் வழக்கமான உடையைக் களைந்து விட்டு உடுத்திக்கொள்ளப் போகிற இரண்டு வெள்ளைத் துப்பட்டிகளை) தயார் செய்யும்போது கபனை ஞாபகம் செய்யவேண்டும். ஏனென்றால் அதுவும் இந்த உலகத்தின் வழக்கமான உடைக்கு மாற்றமானதா யிருக்கிறது. காடுக ளுடையவும், கணவாய்களுடையவுமான பயங்கர அபாயங் களைக் காணும்போது, முன்கர் நகீர்களையும், கபுறுடைய பாம்பு தேள்களையும் நினைக்கவேண்டும். ஏனெனில் கபுறில் நின்றும் மஹ்ஷர்வரையில் ஒருபெரிய காடாயிருக்கிறது. அதில் கணவாய்கள் அனந்தமுண்டு. இன்னும் எப்படி வழி காட்டியாகிய துணைவன் இல்லாமல் காட்டின் அபாயங்களி னின்று தப்பமுடியாதோ, அப்படியே வணக்கமென்னும் துணைவனில்லாமல் கபுறுடையபயங்கரங்களினின்றும் தப்ப முடியாது. இன்னும் எப்படிக் காட்டில் மனைவிமக்களையும் இஷ்டர்களையும் விட்டுத் தனிக்கின்றானோ, அதேகதியாய் கபுறிலும் ஒண்டியாகின்றான். இன்னும் எப்போது (*) லப் பைக்க சொல்லுகிறானோ அப்போது அல்லாகுதாலாஉடைய கூப்பிடுதலுக்கு ஜவாபு சொல்லுகிறேன் என்று நினைக்க வேண்டும். இப்படியே கியாமத்து நாளில் இவனைக்கூப்பிடப் படும். அதனாலுண்டாகும் பயத்திலும் அந்தக் கூப்பிடுதல் எப்படியாகுமோ என்கிற கவலையிலும் ஆழ்ந்திருக்கவேண் டும். அலியுபுனுல் ஹுஸைன்றலியல்லாகு அன்குமா அவர் கள் இஹ்ரும் கட்டுகிற வேளையில் முகநாடி வேறுபட்டு மெய் நடுக்கமுற்று லப்பைக்க சொல்ல அவர்களால் முடியா

(*) லப்பைக்க = அடிபணிந்தேன்.

மற்போயிற்று. அப்போது ஜனங்கள் அவர்களிடத்தில் தாங்கள் என் லப்பைக்க சொல்லாமலிருக்கிறீர்கள் என்று கேட்டதற்கு, நான் லப்பைக்க சொன்னால் லாலப்பைக்க வலாசஃதைக்க என்று ஜவாபு வருமோவெனப் பயப்படுகிறேன் என்று சொல்லி ஒட்டகையின் மீதிருந்து கீழே விழுந்து உணர்வுமாறிப் போனார்கள்.

அபூசுலைமான் தாரானியவர்களின் முரீதாயிருந்த அஹ்மதிபுனுல் ஹவாரிமீ என்பவர்கள் ரிவாயத்து செய்கிறதாவது. அபூசுலைமான் அந்த நேரத்தில் லப்பைக்கு சொல்லவில்லை. ஒரு மைல்தூரம் வரையில் உணர்வு மாறிப்போனார்கள். பின்பு உணர்வு தெளிந்தபோது அல்லாகு தாலா மூசா அலைகிஸ்ஸலாமுக்கு, அய் மூசா! உம்முடைய உம்மத்திலுள்ள அக்கிரமக்காரர்கள் என் நாமத்தை நாவிலெடுக்க வேண்டாமென்று நீர் அவர்களுக்குச் சொல்லும். ஏனென்றால், எவன் என்னை நினைக்கின்றானோ அவனை நானும் நினைக்கின்றேன். ஆனால் அக்கிரமக்காரர்களை நான் முனியுதல் கொண்டு நினைப்பேன் என்று வஹீ அனுப்பினான் என்றும், ஷுபுஹத்தான (சந்தேகமான) பொருளில் நின்றும் ஹஜ்ஜுடைய செலவுக்கு எடுத்துக்கொண்ட ஒருவன் லப்பைக்க சொன்னால், அவனுக்கு, † லாலப்பைக்க வலா ஸஃதைக்க ஹத்தா துறத்த மாபீ யதைக்க என்று ஜவாபு கொடுக்கப்படுமென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேனென்றும் சொன்னார்கள் என்பதே.

இஸ்லாமியர்கள் ஹஜ்ஜுயாத்திரை செய்யவேண்டுமென்ற விதியைப் போலவே இந்துக்களுக்கும் காசி யாத்

---

† லாலப் பைக்க, வலாசஃதைக்க ஹத்தா துறந்த மாபீயதைக்க = உலக ஆசையைத் துறக்காதவரையில் நீர் அடிபணிந்தவரு மல்ல, சிறப்படைந்தவரு மல்ல.

திரை, இராமேஸ்வர யாத்திரை என்று விதிக்கப் பெற்றிருக்கிறது. காசிக்குச் செல்பவர்களும் திரும்ப சுதேசத்திற்கு வருவோமென்ற நம்பிக்கையை இழந்துவிட வேண்டுமென்றே "காசியில் இறக்க முத்தி" என்று கூறியுள்ளார்கள். இதனால் காசிக்குச் செல்பவர்கள் திரும்பவும் வரவேண்டுமென்ற பந்தம் நீங்கி, துறவு மேற்கொள்ள வேண்டுமென்பது கருத்து. காசி யாத்திரைக்கு ஆரம்பிப்பவர்கள், "நான் காசிக்குப் போகிறேன்" என்று சொல்லவேண்டுமே யன்றி, "நான் காசிக்குப் போய் வருகிறேன்" என்று அதாவது திரும்பி இவ்விடத்துக்கு வருவேன் என்ற நம்பிக்கையோடு செல்லுதல்கூடாது. இங்ஙனமே இஸ்லாமியர்களும் ஹஜ்ஜு யாத்திரையிலும் சொல்லுதல் கூடாவாம். இராமர் தீர்த்த யாத்திரை, அருச்சுனன் தீர்த்தயாத்திரை என்று புராணங்கள் முழங்குவதும் இதை யுத்தேசித்தே யாம்.

மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே

என்ற தாயுமானவர் வாக்கியம்போல இஸ்லாமியர்களுக்கும் அல்லாஃ என்ற மூர்த்தியும், மக்கா என்ற தலமும், ஸம்ஸம் என்ற கிணற்றின் சிவ தீர்த்தமும் இருக்கிறது. இவைகளை அந்தக்கரண சுத்தியுடன் முறையாக அனுட்டித்து மெய்த்துறவு வந்து பொருந்தியவர்களுக்கு, ஒரு மொழியாகிய ஒப்பற்ற கலிமா அல்லது பிரணவ மகா வாக்கியார்த்தங்களை உணர்த்தி, ஆன்மலாப மடையும்படி சற்குருவானவர் தேடிவந்து ஞானோபதேசம் செய்வார்.

தந்தை-தாய்-தமர்-தாரம்-மகவு-நட்பு-வீடு-நாடு-நகர்-ஆடு-மாடு-சாதி முதலான உடம்பு வாதனைகளாகிய எனதென்னும் போகப்பற்றை நீத்து தவம் செய்வோர்க்கு, யானென்னும் தேகப்பற்றும் அறும். இத்தேகப்பற்று

அறவே இவற்றை யான், எனதென்று அகங்கரித்து புறத்து நின்றபோதம் அறும், இப்போதம் அறவே உள்நின்ற போதம் அசுத்தவாசனை பண்ணுமல் சுத்தவாசனைபண்ணும். இவ்வாசனையால் ஞானமும், இஞ்ஞானத்தால் வீட்டின்ப மும் வந்தெய்தும்.

மயக்கத்தைத் தரும் மனைவியாதிய பற்றுக்களைத் துறந்து, பொருளை மாத்திரம் வைத்துக்கொண்டு தவம் செய்யக் கூடாதா என்றால், விடமானது தலைக்கேறிவிட்டாலும் மணி மந்திர ஔடதங்களால் நிவர்த்தியாகிவிடும்; பொன் னுசையோ அவ்வாறன்று. பொன்னென்றால் பூதமும் காத் துக்கொள்கிறது. பணத்தைக்கண்டால் அறியாக் குழந்தை கூட அழுகையை நிறுத்தி ஆனந்தம் அடைகிறது. பண மென்றால் பிணமும் வாயைத்திறக்கிறது என்பது முது மொழி. பணத்தைக் காத்தாற் பற்றுமலும், வாக்காற் கூறு மலும் மனத்தால் நினைத்த மாத்திரத்திலேயே ஆசையும், செருக்கென்னும் மமகாரமும் மூடிக்கொள்கிறது. இதனு லேயே,

பல்லவி.

பணமே உன்னுலென்ன குணமே—தண்டம்
பண்ணினேன் சற்றும் என் கண்ணின்முன் நில்லாதே (ப)

அனுபல்லவி.

மணமில்லாத மோகம் குரோதந்துன்
மார்க்கமும் மூர்க்கமும் யார்க்குமே போதிக்கும் (பணமே)

என்று முன்னோர்களால் இகழ்ந்து கூறப் பெற்றுள்ளது. சகலத்தையும் விட்டு சந்நியாசம் புனைந்தவர்கள் திரும்பவும் பொன்னுசைப் பேயைப்பிடித்து தன்னிடம் வைத்துக் கொண்டால் அந்தப் பொன்னை வைத்துக் காத்தற்கு இடம் வேண்டும். அதை மேன்மேல் விருத்தி செய்வதற்கு ஆசை

தோன்றி, அபக்குவர்க்கும் ஞான சாத்திரங்களைக் கூறி, பொன் கொடுத்தார்மேல் விழைவும், கொடாதார்மேல் வெகுளியும் தோன்றும். இவைதோன்றவே துறவால் வரும் தவப் பயனும் இன்றி, முன் பெண்ணோடு கூடிச்செய்த இல்லறப் பயனுமின்றிக் கேடுவரும். சூரியோதயத்தைத் தெரிசிக்கச் செல்வோர்க்கு உள்ளும்-புறம்பும் இருள் மறைய ஒளிவீசும் தன்மைபோல, மனைவி-மக்கள் முதலிய பற்றுக்கள் எல்லா வற்றையும்விட்டு, ஆசையை அகற்றி, விடயங்கள்மீது பற்றும் இந்திரியங்களை அடக்கி, உள்ளும்-புறம்பும் ஆசையாகிய அந்தகாரம் நீங்க நிராசையாகிய ஒளி பிரகாசிக்கும்படி நிற்பதுதான் துறவினது முடிவு. நிராசை யுடையோர்களைக் கருவிகள் தொழிற்படுத்தாமல் நீங்கும்—கருவிகள் நீங்கவே திருவருள் தோன்றும். திருவருளால் போதத்தை ஒளித்து ஞான சூரியனாக விளங்குவார்கள். கல்லையும்-மண்ணையுமே கடவுளென்று கட்டிக்கொண்டழும் விக்கிரக ஆராதனைக் காரர்கள்போல, மனைவி-மக்களையே தெய்வமென்று மதித்து மருண்டுழலும் மக்கட்பதடிகளுக்கு, மனைவி மக்களே துணையன்றி ஞானமென்பது சூனியமே யாம்.

மனைவி, மக்களென்று உயிரை விடுகின்ற நாம், ஒரு காரணத்திற்காகத் தகப்பனென்றும், பிள்ளையென்றும் ஏற்பட்டதே யன்றி, தகப்பனுக்குப் பிள்ளை பிறந்ததுபோல பிள்ளைக்குத் தகப்பனானவன் எத்தனையோ தடவை (*) பிறந்

(*) பிறவி உண்டென்றும், இல்லையென்றும் சில மதஸ்தர்கள் தர்க்க மிடுகின்றனர். பிறவி உண்டென்பதற்கும், இல்லையென்பதற்கும் பல நியாயங்க ளிருக்கின்றன. பிறவி உண்டென்றால்! பிறவி தானிருக்கிறதே! இப் பிறப்பில் தான தருமம் முதலானவைகளைச் செய்யாவிட்டாலும், அடுத்த சென்மத்தில் பார்த்துக் கொள்வோ மென்று அசட்டையாக இருப்பார்களெனக் கருதி, "பிறவியே இல்லை" என்று பெரியோர்கள் கூறியதாகவும், பிறவி

திருக்கின்றனென்று சிற்சில தமிழ்ச் சுருதிகள் முழங்கிக் கொண்டிருக்கின்றன.

பட்டினத்தடிகள்.

அன்னை எத்தனை எத்தனை அன்னையோ
அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ
பின்னை எத்தனை எத்தனை பெண்டிரோ
பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ
முன்னை எத்தனை எத்தனை சென்மமோ
மூட னாயடி யேனு மறிகிலேன்
இன்னும் எத்தனை எத்தனை சென்மமோ
என்செய் வேன்கச்சி யேகம்ப நாதனே.

பாரதம்.

வந்துபிற வாதமனை யில்லைமுலை மாறித்
தந்துபரி யாமலொழி தாயர்களு மில்லை.

---

யென்பதே கிடையாது என்றால், பிறவிதான் கிடையாதே! நாம் தான தருமம் செய்து எந்தப் புண்ணிய போகங்களை அநுபவிக்கப் போகிறோம்! என்று அசட்டையாக இருந்து விடுவார்களென்று கருதிப் பிறவி யுண்டென்று கூறியதாகவும் வைத்துக் கொள்வோம். ஆனால் சிலருடைய கூற்றால் உலகத்தில் பிறப்பதில்லை, தீர்ப்பு நாளையில் உயிர்ப்பிக்கப்பெற்று சுவர்க்க நரகங்களை அநுபவிக்கிறார்களென்று தெரிவதால் அஃதொரு விதமான பிறப்பாகும். மற்றும் சிலருடைய கூற்றால் உலகத்தில் வினைக்குத் தக்கபடி பிறக்கிறான், இன்ப துன்பங்களை அநுபவிக்கிறான் என்பது இஃதொருவகைப் பிறப்பென விளங்குகிறது.

இந்த இரண்டு விவாதங்களால் என்ன விளங்குகிற தென்றால், மனிதர்கள் பிரபஞ்சப் பராக்கில் இருந்து விடாமல், எப்படியாவது ஆன்மலாபம் அடையட்டும் என்று காலத்திற்குத் தக்கவாறு பெரியோர்கள் சொல்லிப் போந்ததே யன்றி உண்மை விளங்காமல் அவர்கள் சொன்னதன்று.

சில மதஸ்தர்கள், அடுத்த பிறவிதா னிருக்கிறதே! அப்போது பார்த்துக்கொள்வோம்! என்று காலத்தைப் போக்கி விடுவார்களெனக் கருதியே, "இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ,

பிரபுலிங்கலீலை.

வினைப்ப யன்கொள வேண்டுன ரோரிடந்
தனைப்பொ ருந்துறச் சம்பந்த மாத்திரத்
தெனக்கி னுரிவர் என்றபி மானமொன்
றனைப்பொ ருந்தி யழிவ ரறிவிலார்.

தனைய ராகியுந் தந்தைதா யாகியும்
உனையு ரூத வுயிரிலை யாதலால்
இனையர் கேளி ரினைய ரயலென
நினையு றேன்மிளிர் நெட்டிலை வேலினுய்.

மனைவி, மக்கள் முதலிய குடும்பத்தினரை நான் காப்பாற்றுகிறேன் என்கிற நான் நான் என்னும் ஆணவமுள்ளவரையில் அவனுக்கு ஞானோதயமாகாது. ஒரு எளிய குடும்பத்தன் நாலைந்து சிறிய குழந்தைகளையும், வேறு

---

ஏது வருமோ அறிகிலேன்" என்பது முதலான அநேக பயங்கரமான வசனங்களையும்; "அரிதரிது மானிடராய்ப் பிறந்த லரிது" என்பதனுல் மனிதப் பிறவி அருமையானதென்றும் அத்தகைய அருமையான பிறவியினுல் 'காற்றுள்ள போதே தூற்றிக் கொள்' என்னும் நியாயம்போல் மனிதராகப் பிறந்ததின் பயனுகிய முத்தியை அடைய வேண்டுமென்றும், வேறு எவ்வித போக பூமியின் போக சரீரத்தினுலும், ஏனைய உலகப் பிறப்புக்களினுலும் முத்தியை அடைய முடியாதென்றும் வரையறுத்துக் கூறியதானது, எப்படியாவது இந்தப் பிறவியில் ஆன்ம லாபம் அடையவேண்டுமென்று ஒவ்வொரு அவதார புருஷர் (தீர்க்க தரிசி)களும் அந்தந்த காலத்து ஜனங்களின் புத்திகோசரத்திற்கேற்ப கூறி வைத்துவிட்டுப் போனுர்களே யன்றி, அடுத்த சென்மம் இருக்கிறது, அப்போது பார்த்துக் கொள்ளலாம், இப்போது நீங்கள் உலக இன்பத்திலேயே ஆழ்ந்து காலத்தைக் கழியுங்கள் என்று சொல்லிப் போகவில்லை.

எல்லா அவதார புருஷர்களுடைய கருத்தும் என்னவெனில், படிப்படியாக ஏறி எப்படியாவது மோட்ச மடையட்டும் என்ற காருண்யத்தின் மேலீட்டால் சொல்லிப் போனதே யன்றி வேறில்லை.

துணையின்றி நோயால் மெலிந்த தன் மனைவியையும் விட்டு விட்டுத் திடீரென விஷபேதி (Cholera) கண்டு இறந்து போகிறான், அப்போது அந்தக் குழந்தைகளும், அவன் மனைவியும் வயிறு வளர்க்கிறார்களா? பட்டினியாய்க் கிடந்து செத்துப் போகின்றார்களா? அல்லது இறந்து போனவன் மறுபடியும் உயிர்த்தெழுந்து வந்து அவர்களைக் காப்பாற்றுகிறானா? அவனுக்குயிர் நீங்கியபின் இவர்களைப் பற்றிய கவலையுண்டா? ஆனால் இதற்குமுன் மனைவி மக்களை விட்டு நீக்கியவர்களுக்குக் கூர்மையான புத்தியில்லையா? இதுபோன்ற வாக்கியங்களை ஆராய்ந்துணர்ந்தாவது சர்வ சீவராசிகளையும் பரிபாலனஞ் செய்யத்தகுந்த அருட்டா யாகிய கடவுள் என்பவர் ஒருவரிருக்கிறார், அவரே சகலத்

---

பிரபுலிங்கலீலை.

போகபூ மியினிற் போக தனுவினாற் பொருந்த லாகா
தேகமா மின்ப சித்தி யியம்புறிற் கரும பூமி
யாகமா னதுகொண் டன்றி யாதலான் ஞாலத் தெய்தி
யோகுக நெறியி னின்றே ருண்மைசா தித்துத் கொள்வர்.

ஆகையால் அதனுண்மை எப்படி யிருந்தாலும் இருக்கட்டும் என்று எண்ணி, தன்னை யறிந்து தலைவனையும் அறியப் பாடுபட வேண்டுமே யன்றி, தர்க்கமிட்டுக் காலத்தை வீணிற் கழிப்பதில் எட்டுணைப் பிரயோசனமும் இல்லை என்பதை நன்குணர்வார்களாக.

இவ்விதமாகவே சிலர் விதி பெரியதா? மதி பெரியதா? என்று தர்க்கமிட்டு வாணாளை வீணாளாக்குகிறார்கள். பிறவியின் விஷயத்தைப்பற்றி குர்ஆனில்,

என்றும்,

இதில் முஜ்றி முன நாக்கிஷு

என்றும்,

நுன்ஷி அக்தும் பீமாலா தஉலமுன்

கூறப் பெற்றிருக்கிறது. இதன் கருத்தானது சாலச் சிறந்த கல்விமான்களுக்கும், அப்பியாசிகளுக்கும் விளக்கமாகுமே யன்றி சாமானியர்கட்கு நன்கு விளங்காது. சாமானியர்கட்குக் கூறப் பெறின் அதை அவர்க ளுணரும் ஆற்றலின்மையால் விபரீதங் கொண்டு மருண்டு விடுவார்கள்.

தையும் உண்டாக்கிக் காத்தளிக்க வல்லவர் என்று துணிவு கொள்ள வேண்டாமா?

### வைராக்கியசதகம்.

நவிலி னிம்மனை மக்களுக் கொருதுணை நாமல திலையென்றே
கவலை யுற்றரன் றுள்மறந் தனைநினைக் காலனூர் கொடுபோயிற்
குவலயத்தடைந் திவரைநாடொறும்புரந் திடுவையோகுறிக்குங்காற்
சவலை நெஞ்சமே சிவனலா துயிர்க்குயிர் தானுமோர் துணையாமே.

கெடுவ தாம்பொருள் செல்வமே பல்வகைக் கிலேசமற் றதுதன்னை
விடுவதேசுக மெனவுமோர்ந்திலைமுனம் விடுத்தவர்க்குனைப்போலும்
நெடிய யூகம தில்லையோ சொல்லுதி நெஞ்சமே யினிப்பற்றற்
றடைது மேலரு னருளையே பொருளென அருஞ்செல்வமது
[தானே.

### சிவானந்தபோதம்.

அவரெல்லா மிருக்கவிப்போ துன்னை யேமன்
அழைத்துவிடி லியாதுசெய்வா யழகு நெஞ்சே
இவர்களுக்குப் பிழைக்கும்வகை திரும்பி வந்தே
ஏதுவாய் முடிப்பதுண்டோ எண்ணிப் பாரு
தவறிநீ கடம்விட்டுப் போகும் போது
தான்கூட மாண்டாரோ பிழைப்பில் லாமல்
அவரவர்க்குச் சிவன்றுணையென் றெண்ணி டாமல்
ஐயத்தா லிப்படியே யலைவுற் றுயே.

### ஔவை.

இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பார மவன்றலையில்
நெஞ்சமே! அஞ்சாதே நீ.

உப்பை.

அத்தி முதலெறும்பீ ருனவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகன்—முற்றவே
கற்பித்தான் போனுனே காக்கக் கடனிலையோ
அற்பனே வன்ன யரன்.

அதிகமான்.

கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கு மெய்யன்—உருப்பெற்ருல்
ஊட்டி வளர்க்கானே வோகெடுவா யன்னய்கேள்
வாட்ட முனக்கேன் மகிழ்.

திருவள்ளுவர்.

எவ்வுயிருங் காக்கவொரு ஈசனுண்டோ வில்லையோ
அவ்வுயிரில் யானொருவ னல்லவோ—வவ்வி
யருகுவது கொண்டிங் கலைவதே னன்னே
வருகுவது தானே வரும்.

ஒருவன் ஒரு குடும்பத்தை யாதொரு குறைவுமின்றி அன்புடன் பரிபாலனம்செய்து வருகிருனென்றும், அவனை அக்குடும்பத்தாரெல்லாம் நேத்திரத்தைப்போல் எண்ணிப் போற்றிப் புகழ்ந்து வருகிருர்களென்றும் நாம் தீர்மானித்துக் கொள்வோம். அவன் பல நாள் வியாதியால் பீடிக்கப் பட்டு வருந்தினுல், அக்குடும்பத்தார் எல்லாம் இராப்பகலாய்க் கண்விழித்து ஊழியம்செய்து வருந்தி, என்றைக் கப்பா தொலைந்துபோவான்! நாம் அலுப்பின்றிச் சௌக்கியமாய் என்றைக்குத் தூங்குவோமோ! ஆ கடவுளே! அவனுடைய வியாதியைச் சௌக்கியப்படுத்து அல்லது, இயமனுக்காவது ஆளாக்கிவிடு. இஃது இரண்டிலொன்றைச் செய்யாமற் புண்படுத்துகிருயே எனத் தனிமையிற் புலம்புவார்கள்.

தாயாரு மக்களும் பெண்டிருங் கைவிட்டுத் தாழ்ந்திடுநாள்
நீயாரு நானு ரெனப்புகல் வாரந்த நேரத்திலே
நோயாரும் வந்து குடிகொள்வ ரேலந்த நோயுமொரு
பாயாரு நீயுமல் லாலேது வேறுநட் பாமுடலே.

நாவார வேண்டும் விதஞ்சொல்லு வாருன்னை நான்பிரிந்தாற்
சாவேனென் றேயிருந் தொக்கவுண் பார்

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கிற் கிலக்காயுள்ள மனைவியும் சலிப்படைந்து விடுகிறுள். "கடந்துள்ளோர்களும் கடப்பரோமக்கண்மேற் காதல்" என்னும் அருமை மக்களும் வெறுப்படைகிறுர்கள். விதிவசத்தால் அவனுக்கு உயிர் நீங்கிவிட்டாற் சுற்றத்தார்கள் இன்றைக்குப் பிரேதமெடுக்க நேரமில்லை, நாளையதினந்தான் எடுக்கவேண்டும் என்று நிச்சயிக்கப் பெற்றுவிட்டாலோ! அருமையாயுள்ள மனைவியும், மக்களும் பிரேதத்தருகில் இராக்காலத்தில் (பகற்காலத்திலுங்கூட) தனித்திருக்கவாவது, பிரேதத்தைப் பார்க்கவாவது மிகவும் அஞ்சுகிறுர்கள். பார்த்தவர்கள், இவனுக்கென்ன கல்மனமா என்பார்களே என நினைந்து சிலர் பிரேதம் எடுக்கும்போது காக்கையைப்போல் "கா கூ" என்று பேரோலமிடுகிறுர்கள். * மயான வைராக்ய

---

* மயான வைராக்கியம், பிரசவ வைராக்கியம், புராண வைராக்கியம் என முப்பாற்று :—

மயான வைராக்கியம் :—ஒருவன் இறந்துவிட்டால் அதைக் கண்ட மற்றொருவன் பிரேதம் எடுக்கிறவரையிலும், என்ன மனிதர் வாழ்க்கை, அநித்தியமான வாழ்வு, கழுதை வாழ்வைத் தள்ளு எனச்சிறிதுநேரம் பயித்தியம் கொண்டவன்போற் புலம்பிவிட்டுச் சிறிது நேரத்திற் கெல்லாம் ஆட்டைப்பார்த்தியா, மாட்டைப் பார்த்தியா என்று சொல்லுவது.

பிரசவ வைராக்கியம் :—ஒரு ஸ்திரீ பிரசவவேதனைப்படும் போது நமது நாயகனென்னும் சண்டாளனுலல்லவா? இவ்வருத்த

மென்னும் பழமொழியை உலகம் மறந்துவிடாதபடி நினைப் புண்டாக்குபவரைப் போலும், "பணிதுநடந்து சுடலை யடைந்து மானிடவாழ்வென வாழ்வென நொந்து" என் னும் பட்டினத்தடிகள் வாக்கியத்தை மறவாத விசுவாசிகள் போலும், ஈமக்கிரியைகள் நடக்கும்போது இந்தப் பிரபஞ்ச வாழ்க்கையானது நீரிற்குமிழிபோலத் தோன்றி உடனே அழியப்பட்டது; இவ்வாழ்க்கையால் யாதொரு பிரயோ சனமுமில்லை என்று சமயத்துக்குத் தக்கவாறு புலம்புவார் கள். இதை யுணர்ந்தே பொய்யாமொழிப் புலவரும்.

நெருந லுளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

உறங்குவது போலும் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

---

மடைகின்றோம்; இனி, அந்தப் பாவிமுகத்தை ஒருபோதும் பார்க் கவேகூடாது எனத் தனக்குள் வெறுப்படைந்து, பிரசவவேதனை நீங்கியவுடன் (தன் மாமியாரை நோக்கி) அத்தே! உங்கள் மகன் சாப்பிட்டார்களா? இல்லையா? கவனித்துப் பாருங்கள் எனக் கூறுதல்.

புராண வைராக்கியம்:—புராணப் பிரசங்கத்திற் சொல்லப் படும் புண்ணியசரிதங்களைக் கேட்குந்தோறும், அந்தநாயனார் அப் படிப் பரமபதமடைந்தார், இந்த ஆழ்வார் இப்படி வைகுந்தமடைந் தார், ஆகையால் நாமும் இனிக் கடவுளை வழிபட்டுய்யவேண்டும் என்று சிறிதுநேரம் பேதைப்பெண்கள் மெய்க்கும்படிப் பிதற்றி விட்டு, வீட்டுக்குப் போனவுடன் அவனுக்குப் பதினாயிரம் ரூபாய் ஆஸ்தி இருக்கின்றதே, இவனுக்குப் பத்துவேலி நிலமுண்டாகி விட்டதே எனப் பொறாமைப்பட்டு, கணேசா! அவனைக் கெடுத்து விட்டால் உனக்கு நான்கு சிதறுதேங்காய் உடைக்கிறேன் என்று வழிப்பிள்ளையாரைப் பிரார்த்திப்பது.

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு

என்று தமது திருக்குறளிற் கூறியிருக்கின்றனரென்று சிறிது நேரம் வாய்க்குப் பிடித்த கேடாக வாசாஞானம் பேசுவார்கள். ஈமக்கடன் முடிந்ததோ? இல்லையோ? ஸ்நானம் பண்ணியவுடன்,

திருக்குறள்.

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல

என்பதற் கிணங்க வீட்டிற்குச்சென்று (பெண்சாதியை நோக்கி) ஆட்டைப் பிடித்துக் கட்டினியா? மாட்டைப் பிடித்துக் கட்டினியா? இப்படித்தானா கூட்டாமற் பெருக்காமல் வீடுகிடக்கிறது! நல்ல குடும்பம்பண்ணி வாழ்ந்தே! சீ! நீ கெட்டாயே என்று தாறுமாறாய் வைதுவிட்டு, (காரியக்காரனைப் பார்த்து) சம்பா வயலுக்குத் தண்ணீர் பாய்ந்து விட்டதா? குறுவைநெல் அறுவடையாகிறதா? அதையெல்லாம் கவனமாய்ப் பார்த்துவா, நாராயணக் கோனான் பணம் கொடுத்தானா? பணம் கொடுக்காவிட்டால் வட்டி முதல் கூடியது ரூபாய் 159–14–6 ஆகின்றது; நாளைத் திறந்த கோர்ட்டில் தாட்சணியமில்லாமற் பிரியாது பண்ணிவிடு; அவன் தாட்சணியம் நமக்கு இருந்தாலென்ன இல்லாவிட்டாலென்ன; கோர்ட் செலவுக்கு இதோ பணமிருக்கிறது எடுத்துக்கொள்! என்பதுபோன்ற அநேக சம்பாஷணைகளைப் பேசி, உலக வியாபாரமென்னும் சேற்றிற் சிக்கிக்கொண்டு, இறந்தவனுக்குக் கருமாதி முதலிய கிரியைகளைக் கூடச் சரிவரச் செய்யாமற் செலவைச் சுருக்கி, சில கருமங்களைச் செய்தும், செய்யாமலும் இருந்துவிடுகிறார்கள். அதுவுமன்றி ஆன்மார்த்தமாயிருந்து இறந்துபோனவனுடைய

ஆவியானது திரும்ப வீட்டிற்கு வந்தால் ஏதாவது நம்மை இம்சிக்குமோ எனப் பயந்து,

தேசம் பொருள்கள்தேடிச் செத்தபின் சுடுகாடு
திரும்பி வருவாயென்று சுற்றத்தார் தன்வீடு
வாசலிற் சாணிச்சட்டி விளக்குமார் கொள்ளியோடு
வைப்பார் இதையறிந்து மாயூரந் தன்னைநாடு.

என்னும் ஆன்றோர் வாக்கியப்படி, அவன் இறந்த வீட்டு வாயலில் விளக்குமாறு, சாணிச்சட்டி, கொள்ளியோடு, செருப்பு முதலியவைகளை வைக்கின்றார்கள். இறந்தவனுடைய ஆவி திரும்ப வீட்டிற்கு வருமென்றும், அங்ஙனம் வந்தால் வழியில் தாமதமேற்பட்டுப் பொழுது விடிந்துவிட வேண்டுமென்றும் எண்ணி, வழியில் நெற்பொறி, எள் முதலானவைகளைத் தெளிக்கிறார்கள்; அதனால், அந்த ஆவியானது எள் முதலியவைகளைத் தாண்டிக்கொண்டு வாராதென்பது அவர்கள் கருத்து. இதையெல்லாம் நிதரிசனமாக ஒருவன் பார்த்தபின்னாவது இப்படித்தானே நமக்கும் நடக்கும் என்றுணர்ந்து பற்றறத் துறக்கவேண்டாமா?

துணங்குடியார்.

உற்றுற வின்முறை யார்சூழ்ந் திருந்தென்ன
ஊருடன் ஜனங்களெல் லாரும் பணிந்தென்ன
பெற்றாரும் பெண்டீரும் பிள்ளை யிருந்தென்ன
பேணும் பெருஞ்செல்வ ஆணவத் தாலென்ன
கத்தன் பிரிந்திடிற் செத்த சவமாச்சு
காணாது காணாது கண்டதெல் லாம்போச்சு
எத்தனை பேர்நின்று கூக்குர லிட்டாலும்
எட்டாமற் போய்விடும் கட்டையல் லோவிந்தச்
(சூத்திரப்பாவை)

கிடைத்தற் கரிதாகிய இந்தச் சரீரத்திற்கு, கேவலத்திலுங் கேவலமான ஒரு நெத்திலிக் கருவாட்டிற் குண்டான

யோக்கியதை கூடவில்லை. ஏனெனில், கேடுகெட்ட கருவாட்டுப் பொடியாயிருந்தாலும் அதைப் புசிப்பவர்கள் விலை கொடுத்து வாங்கிப் பூனை, எலி முதலானவைகள் தின்று விடாதபடி பானை, பேழைகளில் பத்திரப்படுத்தி வைப்பார்கள்; வேண்டியபோது அதைச் சமைத்து மிகப் பிரியமாயும் சாப்பிடுவார்கள். நெத்திலிக் கருவாட்டிற்குண்டான யோக்கியதையைச் சந்தைக் கடையிற் பார்த்தவர்க்கே நன்கு விளங்கும். அஃதப்படியிருக்க, இந்த பொய்க்கூடாகிய மானிட சரீரத்தைப் பருத்திப் பொதியைப் போலவும், பூரண கெர்ப்ப ஸ்திரீ வயிற்றைப்போலவும் நல்ல சோறு கறிகளால் வயிற்றை நிரப்பி, பஞ்சணை முதலியவைகளால் மிருதுவாகப் போஷித்து வளர்க்கின்றார்கள்.

துணங்குடியார்.

கோத்திரளான காயபொய்க் கூடு ஒருவருக்குஞ்
சாற்றுக்காகா நாற்றக்கரு வாடு சொறிமலமும்
மூத்திரமும் ஊற்றிவைத்த வோடு இடுமெடையர்
போற்றுவதற் கேற்றசண்டி மாடு உயிர்விடுக்கும்
கூற்றுவன்கை யாயுதத்திற் கிடு எங்கெந்தத்திக்கிற்
பார்த்தாலும் பீற்றலுள்ள வீடு சமைத்தெடுத்த
சோற்றூற் குவித்துவைத்த மேடு. ...

பட்டினத்துப்பிள்ளை.

ஊரிற் கிடக்க வொட்டா வுபாதி
சலமலப் பேழை யிருவினைப் பெட்டகம்
ஆசைக் கயிற்றில் ஆடும் பம்பரம்
வாதபித் தங்கோழை குடிபுகுஞ் சிறூர்.

ஔவையார்.

எல்லாப் படியாலும் எண்ணிஞ லிவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய் புன்குரம்பை

என்று இகழ்ந்துரைக்கப்பட்ட இச்சரீரம், உயிர் நீங்கிய பின், சவத்தைப் போட்டுவிட்டுச் சாப்பிடக்கூடாதென்று சுற்றத்தார் அருவருக்கத் தக்கதாயும், ஆலயங்களிற் பூசை-நைவேத்திய முதலானவைகள் நடக்கக் கூடாததாயும், மனிதனென்னும் பேர் மறைந்து, பிணமென்னும் பேர் தாங்கி சிதலை-மண்-நெருப்பு முதலியவைகளுக்கு இரையாகி விடுவதை ஆராய்ந்தாவது துறவடைய வேண்டாமா?

பட்டினத்துப்பிள்ளை.

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரு முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லாற்பொன்னி னம்பலவர்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி வாரில்லையே.

சில மனிதர்கள் தாய், தந்தை, மனைவி, மக்கள் முதலியவர்களுடன் சண்டையிட்டு அதனால் சன்னியாசம் பெற்றிருப்பார்கள். சிலர் குடும்ப பாரத்தை வகிக்கச் சக்தியும், அதற்கு வேண்டிய பொருளும் தனக்கில்லாததினாலும், சிலர் கடன் கொடுத்தவனை மோசஞ் செய்வதற்காகவும், சிலர் இராச ஆக்கினையிலிருந்து தப்பித்துக் கொள்ளவும், சிலர் புகழுக்காகவும், சிலர் சரீரத்தை வருத்தாமல் வீடுகள் தோறும் அண்ணாமலைக் கரோகரா! கோவிந்தா! கோவிந்தா!! என்று ஓலமிட்டு உபாதானம் வாங்கி வயிறு வளர்ப்பதற்காகவும், சிலர் குடும்பத்திலிருக்கும்போது தான் செய்த கொடிய பாதகங்கள் நீங்கும்பொருட்டு தல யாத்திரை செய்வதற்காகவும் சன்னியாசங் கொள்வார்கள். சிலர் கவலையே அலையாயுள்ள சம்சார சாகரத்திலுழன்று பார்த்ததனாலும், ஆன்ம விசாரத்தை யுண்டாக்கும் வேதாந்த சாஸ்திரங்களை நன்குணர்ந்ததனாலும், சாது சங்கப் பழக்கத்தினாலும், பல கல்வி-கேள்விகளினாலும் உலக வாழ்வு பிரயோசனமற்றதென உண்மையாகவே தெரிந்து

வெறுப்படைந்து, சகல பற்றுக்களையுந் தவிர்த்து நித்தியானந்தமாகிய மோட்ச சிந்தனை மேலிட்டு, சன்னியாசக் கோலங்கொண்டு சற்குருவைத் தேடி யலைவார்கள். மேற்சொல்லி வந்தவர்களிற் கடைசியாகச் சொல்லப்பட்டவரே ஆன்ம ஞானத்தை அடைவதற்கு யோக்கியதை யுள்ளவர்.

துணங்குடியார்–கீர்த்தனம்.

செட்டு செய்யவேண்டிய தில்லை பரதேசிகள்
சட்டி யெடுப்பதுவுந் தொல்லை பிச்சைக்கஞ்சிக்குத்
திட்ட முடன்வேணுமோ கல்லை யுறங்குதற்குக்
குட்டிச் சுவர்களிலுண் டெல்லை யீடுநமக்குப்
பட்டி னத்திலெவரு மில்லை அறிவுகெட்ட
மட்டி யறியானிந்தச் சொல்லை. ...

ஞானம்தியுள்ளான்.

நானடா பேயன்—அடண்ணே!
நானடா பித்தன்.

தன்னுசிக் குள்ளே சிவசிவ மானதைத்
தானுட மாட்டாமல் மானிடக் கூட்டங்கள்
சன்னுசி யென்று கிரிசுற்றிக் கோயிலில்
தானுடிப் பாடித் தவஞ்செய்வோன் பேயன் (நானடா)

ஞானத்தங்கம்.

குடியன் கடுவெறியன் குடும்பநிலை யில்லாதோன்
தடியன் மடையரெல்லாம்—ஞானத் தங்கமே
சன்னியாசி யானுரடி.

பெண்டுபிள்ளை யில்லாதோன் பிழைக்கவழி காணுதோன்
சண்டையினுல் வீட்டைவிட்டோன்—ஞானத் தங்கமே
சாமிகளாய்ப் போனுரடி.

சந்நியாச மென்றுற் சிலர் காவிவஸ்திரங்களையும், உருத்திராக்கங்களையும் கட்டிக்கொண்டு விபூதியை உத்

தூளனமாய்ப் பூசிக்கொண்டு, கையில் செபமாலையைத் தாங்கி வாயை முணுமுணுத்துக் கொண்டு திரிவதென்று எண்ணிக் கொள்கிருர்கள். சந்நியாசமென்பது, சம்—நியாசம், என்னும் வடசொற் பொருள். சம் = எல்லாம் ; நியாசம் = விடுதல் ; ஆகையால், சந்நியாசமென்னும் பதத்திற்கு பற்றறத் துறத்தல் என்பது பொருள். சந்நியாசம் பெறுவது மகா கஷ்டம். ஒருவன் சந்நியாசியாகி விட்டால் அவனுக்கு இவ்வுலகத்திலுள்ள பொருள் யாதொன்றிலும் ஆசையிருத்தல்கூடாது. அற்ப ஆகாரமே புசிக்கவேண்டும். கோபம் இலவலேசமுமில்லாமல் சாந்தசொரூபியா யிருக்கவேண்டும். பசி, தாகம் முதலியவைகளைப் பொறுக்கவேண்டும். பல நாள் வரையில் ஒரு ஊரிலேயே வசிக்கக்கூடாது. மனித சஞ்சாரமும், திரேகாபிமானமும் கூடாது. அப்படி யிருக்க அநேகம் பேர்கள்,

> எண்ணித் துணிவது கருமம் துணிந்தபின்
> எண்ணுவ மென்ப திழுக்கு

என்னுங் கருத்தை யுணராமலும், சந்நியாசம் கொள்ளும் ஆரம்பத்தில் அந்த ஆச்சிரமத்தின் விதி-விலக்குகளை அறியாமலும் சந்தோஷமாய்ப் புகுந்து விட்டு, பிறகு வீட்டையும், வாயலையும், மனைவி, மக்கள் முதலியவர்களையும் நினைந்து துக்கப்படுவார்கள்.

"தூரத்துப் பச்சை கண்ணுக்கழகு" என்று ஒரு பழமொழியுண்டு. கிட்ட நெருங்காமல் எட்ட விருந்து வெகு சனங்கள் சொல்வதை நிசமென் றெண்ணிக் கொண்டிருந்தால், பல மகான்க ளிருப்பதாய்ப் புலப்படும், உண்மையைக் கண்டு பிடிக்கும் எண்ணத்தோடு ஒவ்வொருவருடைய குணா குணங்களையும் ஆராய்ந்து பார்க்கின், இலட்சம் சனங்களில் ஒரு மகான் அகப்படுவது துர்லபம். இது பற்றியே,

"நல்லோர்கள் முக்கோடி நாற்கோடி தன்னிலொன்று"

என்றனர். சந்நியாசி யாசிரமம் வாங்கிக்கொள்வோர் நாளடைவிலேயே ஆசைகளை யொழிக்கும் சக்தியைப் பெற்றிருக்கவேண்டும். அப்படியின்றி தலையை முண்டனம் செய்துகொண்டு பின்னர், 'கேசமில்லையே' எனத் தடவிப் பார்ப்பதும், 'மனைவி மக்களைவிட்டுப் பிரிந்தோமே' என்று துக்கப்படுவதும், 'ஏன் சன்னியாசம் வாங்கிக் கொண்டோம்' என்று பச்சாத்தாபப்படுவதும், 'வெண்மையான வஸ்திரம், காவி வஸ்திரமாகப் போய்விட்டதே' என்று வருந்துவதும், பாவம்! பாவம்!! அப்போது அவர்கள் கதி இல்லற தருமத்தையும் செய்யாமல், துறவறத்தையும் பொருந்தாமல், இரண்டாட்டில் ஊட்டிய குட்டியைப்போற் பரிதபிப்பார்க ளல்லவா?

திருக்குறள்.

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

ஒரு காலத்தில் மிருகங்களுக்கும், பட்சிகளுக்கும் சண்டை யுண்டானதில் மிருகங்களுக்கு வெற்றியாயிற்று. அப்போது வௌவால் மிருகங்களிடத்திற்குப் போய், நான் தங்களைப்போலவே குட்டிபோட்டுப் பால் கொடுக்கிறேன், எனக்கும் வாயிற் பற்களிருக்கின்றன; ஆகையால் நானும் தங்களைச் சேர்ந்தவனே என்று கூடிக்கொண்டது. பின்னர் ஒரு காலத்தில் பட்சிகளுக்கு வெற்றியாயிற்று. அப்போது, வௌவால் பட்சிகளிடத்திற் போய், நான் தங்களைப் போலவே பறக்கிறேன்; ஆகையால் நான் தங்களைச் சேர்ந்தவனே என்று கூடிக்கொண்டது. மற்றொரு காலத்தில்

மிருகங்களுக்கும், பட்சிகளுக்கும் சமாதானமுண்டாயிற்று. அப்போது வௌவாலை அவைகள் சேர்த்துக்கொள்ளவில்லை. அதனாலேயே இப்போது வௌவால் மரங்களில் தொங்கிக் கொண்டிருக்கின்றது என்பதும் பொருந்தும். ஆகையாற் சமயோசிதம்போல் இல்லறத்தையும், துறவறத்தையும் பொருந்தியிருப்பவர்கள் முடிவில் வருந்துவார்கள்.

ஒரு நாள் ஒரு அரசன் வீட்டிற்கு ஒரு துறவி வந்தார். அவர் வரவைக் கண்ட அரசன் எதிர் சென்று, வந்தனை வழிபாடு செய்து, அழைத்து வந்து ஆசனத்திலமர்த்தி, பால்-பழ முதலியவைகளைக் கொண்டுவந்து வைத்து அவைகளைப் புசிக்கும்படி பிரார்த்தித்தான். பெரியவர் அதைப் புசிப்பதற்கு முன்னரே அரசனை நோக்கி, உனக்குப் புத்திர பாக்கிய மிருக்கின்றனவா? என்றார். அரசன், சுவாமிகளுடைய கிருபாநுகூலத்தினால் ஏழு புத்திரிகளிருக்கிறார்கள் என்றான். அவர்கட்குக் கலியாணமாகி விட்டதா என்றார் துறவி. ஏழு பேர்களும் புஷ்பவதியாகி யிருக்கின்றார்கள், ஆனால் இன்னும் விவாகமாகவில்லை என்றான் அரசன். உடனே பெரியவர் கோபாவேசத்துடன் எழுந்து, அடே! பாவி! புஷ்பவதியான பெண்ணைப் பாணிக்கிரகணஞ் செய்து கொடாமல் வீட்டில் வைத்திருப்பது முறையல்லவே! உன் வீட்டிற் சலபானம் பண்ணுவதும் மஹா பாப மாச்சே! என்று சொல்லிக்கொண்டே வெளியிற்போகப் புறப்பட்டார். உடனே அரசன் பெரியவரைப் பன்முறை வணங்கி, சுவாமி! இன்றையதினமே விவாகத்திற்குண்டான ஏற்பாடுகளைச் செய்து வெகு துரிதத்திற் காரியத்தை முடித்து விடுகிறேன்; தேவரீர் இங்கேயே இருந்தருளல் வேண்டும் என்று விண்ணப்பித்து நின்றான். அதற்குப் பெரியவர் உன் புத்திரிகளை மணம் செய்வித்த பின்னரே

யாம்வந்து நினது மனோபீஷ்டத்தை நிறைவேற்றுவோம், அதற்காக வருந்தாதே என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே திடீரென மறைந்து விட்டார்.

பெரியவர் மறைந்து போனதைக் குறித்து அரசன், பிரமை கொண்டவனாக மந்திரி, பிரதானி முதலியவர்களுடன் ஆலோசித்து, கடவுளே இந்த வடிவத்துடன் வந்து நம்மைப் பாவமென்னுஞ் சமுத்திரத்திலிருந்து மோட்சமென்னுங் கரை யேற்ற வந்தவரே யன்றிச் சாமானிய சந்நியாசியல்ல என்று நிதானித்து, அத்தாணி மண்டபத்தை விட்டெழுந்துபோய் நித்திய கர்மங்களை முடித்துக்கொண்டு, தன் அந்தப்புறத்திற்குச் சென்று சயனிக்கப்போகும்போது, தனது இராணியுடன் பெரியவர் வந்ததுமுதல் மறைந்தது வரையில் ஆதியோடந்தமாகக் கூறி, நாளையதினமே விவாகத்தை முடித்துவிட வேண்டுமென்றும், ஆனால் நமது புத்திரிகளை அரசர்களுக்குக்கொடுப்பதிலும் துறவிகளாகிய அடியார்களுக்குக் கொடுப்பதே மேன்மையென்றும், அரசர்கட்குக் கொடுப்பதானால் நாட் செல்லுமென்றும் பல திருட்டாந்த தாட்டாந்தங்களைத் தெளிவாய் எடுத்துச்சொல்லி இராணியினுடைய அபிப்பிராயத்தைக் கேட்டான். இராணியானவள் "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" என்னும் நீதிவாக்கியத்தை யுணர்ந்தவளாதலால், 'நாயகனுடைய திருவாக்குக் கெதிர்வாக்கின்றி' தேவரீருடைய விருப்பம் எப்படியோ அப்படியே என்றாள். ஆனால் நாளையதினமே நமது நகரத்தின் புறங்களில் வசிக்கும் எந்தத் துறவிகளையாவது இணங்கும்படிச் செய்து விவாகத்தை முடித்துவிடுவோம் என்று தீர்மானித்துச் சயனித்துக்கொண்டார்கள்.

அவர்கள் அவ்வாறு பேசிக்கொண்டிருந்ததை அன்றிரவு அரண்மனையிற் கன்னமிட்டுத் திருடவந்த கள்வர்களி

லொருவன் செவிசாய்த்துக் கேட்டுக்கொண்டிருந்தான். அவன் தன்னுடன் வந்த திருடர்கட்கெல்லாம் சொன்னதாவது :—அரசன் விழித்துக்கொண் டிருக்கிறான் ; இன்று நமது காரியம் பலிக்காது ; நமது பிராணனைத் தப்பித்துக் கொள்வதே தகுதியென்று கூறி அவரவர்களிடத்திற்குச் சென்றுவிடும்படி சொல்லிவிட்டு, தான் மாத்திரம் ஒரு சந்நியாசியைப்போல் வேடந்தரித்து ஊர்க்குப் புறத்தில் அமர்ந்திருந்தான்.

பொழுது புலர்வதற்கு முன்னமே அரசன் துயிலைவிட்டெழுந்து மந்திரியைத் தருவித்து, மந்திரீ! இன்று நமது புத்திரிகளுக்கு எந்தவிதத்திலும் விவாகம் முடிக்கவேண்டும்; அதற்குத் துறவிகளையே மணமகனாகக் குறித்திருப்பதால், அதற்கிணங்கும் துறவிகளைத் தெரிந்துவா எனக் கட்டளையிட்டான். அங்ஙனமே மந்திரி சென்று ஒவ்வொரு துறவிகளிடத்திலுங் கேட்டுப்பார்த்தான் ; ஒருவரும் இணங்கவேயில்லை. இறுதியில் திருடனாகிய போலிச்சந்நியாசியிடத்தில் வந்து கேட்டான் ; அவன் வெகு கடூரமாக உன்னிடத்திற் சொல்ல முடியாது, அரசனை வரச்சொல் என்றான்; அங்ஙனமே மந்திரி சென்று அரசனுக்கறிவித்தான். உடனே அரசன் சிவிகை கொண்டுபோய்த் தரிசித்து பிரதட்சணம் வந்து சாட்டாங்கமாக நமஸ்கரித்து, சுவாமி! அடியேனுடைய புத்திரிகளை விவாகஞ்செய்தருளல் வேண்டுமெனப் பிரார்த்தித்தான். உடனே போலிச்சந்நியாசி பல்லக்கிற் பிரயாணமாகிப் பாதி வழியில் வந்துகொண் டிருக்கும்போதே பின்வருமாறு யோசிக்கலானான் :—

கொடிய பஞ்சமா பாதகங்களையெல்லாம் மூட்டை மூட்டையாகக் கட்டிவைத்திருக்கும் பக்காத்திருடனாகிய நாம் இந்தப் போலிச் சந்நியாச வேடத்தைத் தரித்துக் கொண்டதற்கே மன்னாதி மன்னர்களெல்லாம் வணங்கா

27

நின்ற முடிவேந்தன் நமது காலில் விழுந்து வணங்கினனென்ருல், உண்மையான சந்நியாசியாக இருப்போமேயானல் எவ்வளவோ மகத்துவமிருக்கும்போ லிருக்கிறதே, ஆ! இந்தத் துறவிவேடத்திற்கு இவ்வளவு பேருமையா? இத்தகைய மாட்சிமைதங்கிய துறவாச்சிரமத்தையல்லவா நாம் அடையவேண்டுமென்று கருதி, பல்லக்கை விட்டுக் குதித்தோடிப்போய் மஹரிஷிகளை யடுத்துப் பணிபுரிந்து உண்மையான துறவியாகிவிட்டான்.

திருக்குறள்.

எண்ணிய எண்ணியாங் கெய்துவர் எண்ணியர்
திண்ணிய ராகப் பெறின்.

ஒருநாள் கும்பகர்னன் இராவணனை நோக்கி, அண்ணு! நீர் சீதையைக் கொண்டுவந்து அனேக காலமாகிவிட்டது. நாட்பட அவளை நம்மிடம் வைத்திருப்பது முறையல்ல. உமது மனோபீஷ்டத்தைச் சீக்கிரம் நிறைவேற்றிவிட்டு அவளை இராமனிடம் அனுப்பிவிடும். இராம—லட்சுமணர்கள் நரர்களா யிருந்தாலும் அதிக பலாஷ்டியர்கள். சீதையைத் தேடி யுத்தத்துக்கு வந்தாலும் வருவார்கள். அதனல் துன்பம் அனுபவிக்க நேரிடும் என்று புத்தி கூறினன். அதை இராவணன் கேட்டு, தம்பி! அவள் இன்னும் என் கருத்துக்கு முற்றிலும் இணங்காமல், இராமா! இராமா!! என்றே தியானஞ் செய்துகொண்டிருக்கிருள். காரியம் பூர்த்தியாகிவிட்டால் அவளை அனுப்பிவிடத் தடையில்லை என்ருன். அதற்கு கும்பகர்னன் சொல்வான்: அண்ணு! நீர் ஒரு காரியம் செய்யும், அதாவது, நீர் இராமனைப்போல் ஒரு ரூபம் எடுத்து சீதையிடம் செல்லும். காரியம் பூர்த்தியாகிவிடும் என்ருன். அதற்கு இராவணன் நான் அந்த இராமரூபம் எடுக்காமலில்லை. இராமரூப எடுத்தபோதெல்

லாம் இந்த காமக் குரோதமான குணங்கள் எனக்கு வரவே யில்லை. உலகத்திலுள்ள பெண் களெல்லாம் எனக்குத் தாயாகத் தெரிகிறது என்றானும்.

இந்தச் சரித்திரத்தினுல், நாடகத்தில் சன்னியாச வேடம், இராசவேடம் புனைபவனும் ஒருவித பாக்கிய சாலியேயாம்; கூத்தில் பெண்வேடம் நீசவேடம் தரிப்பவர் களும் ஒருவித அபாக்கியசாலிகளாம் என்பது புலனுகின்றது. துறவிபோல் வேடம் புனைந்தவனுக்கே ஒரு மகிமை ஏற்படும் போது, உண்மையான துறவிகளுக்கு எவ்வளவு மகிமை யிருக்குமென்பதை நாம் சொல்லவும் வேண்டுமா? ஒரு சாதா ரண மனிதன் ஒரு அரசனைப்போல் ஆகவேண்டுமென்று ஆசை கொண்டால் முடியுமா? ஆக முடியாது. ஆனுல் அரசனுக்கும் மேலான, அதாவது அரசனும் வணங்கத் தக்க ஒரு மகோன்னத பதவியை எளிதில் அடைந்துவிடலாம். அந்தப் பதவிதான் சத்திய சன்னியாசமென்னும் துறவிலக் கணம். " துறவிக்கு வேந்தன் துரும்பு " என்பதே போதிய சான்றாகும்.

ஆகையால், உண்மையான துறவிகளுக்குள்ள பதவி யும், கீர்த்தியும், புகழும் எந்தச் சக்கரவர்த்திகளாகிய மகு டாதிபதிகளுக்கும் கிடையாது. துறவிகளுக்குச் சமான மாக எவரையும் ஒப்பிட்டுச் சொல்லவும் முடியாது.

திருக்குறள்.

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட சகல விடங்களிலும், சகல சீவராசிகளிலும் துறவிகளுக்கு மேலானவர்க ளில்லவே யில்லை. இதையுணர்ந்தே பட்டினத்தடிகள் தனது திரண்ட செல்வங்களையும், பத்திரகிரியார் தமது இராசரீகத்தையும்

பொருட்பண்ணுமல் வெளியேறி மெய்ஞ்ஞானச் செல்வர்களானுர்கள். இதுபோலவே அநேக அரசர்களும், பிரபல தனவந்தர்களும் தங்கள் தங்கள் பதவிகளையும், செல்வங்களையும் துறந்து மெய்ஞ்ஞானச் செல்வர்களானுர்கள்.

தாயுமானவர்.

ஒட்டடன்பற் றின்றி யுலகைத் துறந்தசெல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ.

குணங்குடியார்.

மீசையுளாண் பிளைச்சிங்க மாவர்களோ முகத்தின்மயிர்
விரித்தோ ரெல்லாம்
மீசையுளாண் பிளைச்சிங்க மெவனெவன்காண் குணங்குடி
விரைந்து கொண்டோன் [பால்
மீசையுளாண் பிளைச்சிங்க மாகாதா னெவைக்காவான்
விசையோ டென்போல்
மீசையுளாண் பிளைச்சிங்க மென்கூட மூலைவிட்டு
வெளிவா ராளே.

கண்டனம், இராகம் அடாணு தாளம் சாப்பு.

பல்லவி.

மீசையுள் ளாண்பிள்ளைச் சிங்கங்க ளென்கூட
வெளியினில் வாருங்கள் காணும்.

அநுபல்லவி.

நாசி நிரம்பவு மயிர்தான் இரண்டுகால்
நடுவினு மொருகூடை மயிர்தான் ரோசங்
கெடுவார்க ளென்கடை மயிர்தான் குணங்
குடிகொண்டா லென்னுயிர்க் குயிர்தான் (மீசையுள்)

சரணம்.

படிக்கும் படிநடக்கப் படிக்கா லோபிகள் மோட்சப்
பதமற்றுப் போனாலும் போகட்டும் அவர்

முடிக்கு முடிதரித்து முடிய முடியவாழ்ந்து
முடிந்து முடிபோனுலும் போகட்டும் இன்னுங்
குடிக்கக் கஞ்சியுமற்றுக் குண்டிக்குத் துணியற்றுக்
குருடராய்ப் போனுலும் போகட்டும் என்னை
அடித்தாலும் எலும்பெல்லாம் ஒடித்தாலும் அவர்க்கஞ்சேன்
அடித்தா லடித்துக்கொண்டு போகட்டும்—அந்தக்
கெடுவார்க ளென்கடை மயிர்தான்—குணங்
குடிகொண்டா லென்னுயிர்க் குயிர்தான் (மீசையுள்)

வெண்பா.

மெத்தத் துணிபோர்க்க மெத்தமெத் தக்குளிருஞ்
சற்றுதுணி போர்த்துவரச் சற்றுகுளிர்—இற்றதுணி
யில்லைக் குளிருமில்லை யில்லையிது தானுளமே
செல்லக் குணங்குடியார் சீர்.

சூதசங்கிதை.

நடுங்கும்வெங் குடும்ப வனத்துழல் வோர்க்கு
நதியெனும் ஞானநீ ரன்றி
இடும்பைதீர்ப் பதுவே றிலைநிரு விகற்பத்
தேகமா யிலகுமெய்ஞ் ஞானி
குடம்பைநீத் தேகும் புள்ளெனச் சூழ்ந்த
கொடுஞ்சகம் வேறதாய் நிற்பன்
தொடங்கும்வல் வினையெவ் வகையிவர்க் கெய்தும்
துன்னுமோ துன்னிருள் சுடரை.

அவிரோதவுந்தியார்.

குடும்ப பாரந் தலைக்கொண் டவர்க்கல்லல்
விடும்பரி சின்மையா லுந்தீபற
மெய்த்துற வெங்ஙனு முந்தீபற

எல்லோர்க்குங் காலன் துறவுக ளீயாமுன்
நல்லோர் துறப்பரென் றுந்தீபற
நன்றறி வார்களென் றுந்தீபற

மனத் துறவின் மாட்சி.

வானப் பிரத்த ஆச்சிரமத்தை அனுட்டித்த ஒரு தம்பதிகள் உலகசஞ்சாரம் புரியநினைத்து ஒரு காட்டின் மார்க்கமாய்ச் செல்லும்போது, முன்னே சென்றகணவன் ஒரு வயிரமணியைக்கண்டு, இதை நமது மனைவி பார்த்தால் எங்கே ஆசைப்பட்டு விடுவாளோ என்று கருதி, அந்த வயிரத்தை தன் காலால் மண்ணில் தெரியாதபடி மூடினார். அதைப் பின்னால் வந்த மனைவி கண்டு, நாதா! தாங்கள் ஏதோ ஒரு வஸ்துவை காலால் மூடினீர்களே, அஃதென்ன வென்றாள். அதற்கு நாயகன் ஒன்றுமில்லை ஒரு வயிரத்தைக் கண்டேன். நீ அதைக் கண்டால் ஆசைப்படுவாய் என்று மூடினேன் என்றார். அதற்கவள், நாதா! நான் ஆசைப்படுவது அப்புற மிருக்கட்டும். எல்லா முணர்ந்த தங்களுக்கே வயிரமென்றும் கூழாங்கல்லென்றும் பேதமாக நினைக்கிற எண்ணம் நீங்கவில்லையே! என்று கூற, நாயகன் வெட்கி தலை குனிந்தாராம்.

அபாயசீதுல் பிஸ்தாமி கத்தசல்லாகு சிற்ரகு நாற்பது வருடகாலம் சரீரத்தைத் தண்டித்து வணங்கினார்கள். ஒரு நாள் மறைவாகிய சிர்ருடைய சூக்கும வாசல் அவர்களுக்குத் திறந்துவிட்டது. அவர்கள் சொல்லுகிறார்கள், நான் அந்த சிர்ருடைய வாசலுக்குள் நுழையலாமென் றெண்ணினேன். அப்பொழுது அதற்குள்ளிருந்து ஒரு சத்தமானது, "ஓ! அபாயசீதே! நீர் உள்ளே வரவேண்டாம். உமக்குப் பாதை கிடையாது. உம்மிடத்தில் பழைய தோலும், கூசாவும் இருக்கிற வரையில் இந்த வாசலில் உமக்குப் பாதை கிடையாது" என்று அசரீரி வாக்கியம் கேட்டது. அதனால் ஹஜாத்து அவர்கள் அந்தத் தோலையும் கூசாவையும் எறிந்துவிட்டு, அந்த வாசலில் நுழைந்து அவர்கள் நாடி

வணங்கிய தானத்திற் சேர்ந்தார்கள். பின்பு அல்லாவுடைய உத்திரவானது எனது தோழனாகிய அபாயசீதே ! நீர் சனங்களிடத்திற் சென்று, "நான் 40—வருடம் தண்டித்து கஷ்டப்பட்டு ஷாஹூது செய்து வணங்கியும், என் வசத்தில் ஒரு கூசாவும் ஒரு துண்டுத்தோலும் இருக்கிற வரையில் எனக்கு பாதை கிடைக்கவில்லை. அப்படி இருக்க, நீங்கள் எவ்வளவு வஸ்துக்களிலோ உங்கள் மனதை பந்தப்படுத்தி வைத்திருக்கிறீர்கள். நீங்கள் ஆண்டவனுடைய சமுகத்தை எப்படி பெற்றுக்கொள்வீர்கள்" என்று சொல்லும்படி எனக்கு ஆக்ஞாபிக்கப் பெற்றது என்றி கூறியிருக்கிறார்கள்.

துரௌபதையைத் துகிலுரியும்போது அவள் தன் ஆடையைக் காத்தாற் பற்றிக்கொண்டு கடவுளை நினைந்து கூப்பிட அவர் பிரத்தியட்சமாகாமல், கடைசியாக இனி ஒன்றும் செய்யமுடியாது என்று கையைவிட்டு அழைத்த தட்சணமே பிரத்தியட்சமானரென்ற பாரதக் கருத்தின்படி, பற்றுள்ள வரையிலும் பிரத்தியட்சமாகமாட்டார், பற்று நீங்கினல் பிரத்தியட்சமாவார் என்பது விளக்கமாகின்றது.

கி. பி. 1904-ம் வருடத்தில் நான் இரங்கூனுக்கு யாத்திரை சென்றிருந்தேன். என்னை சுதேசத்திற்கு அழைத்து வருவதற்காக எனது பிதா அவர்கள் இரங்கூனுக்கு வந்திருந்தார்கள். குபேரன் பட்டினத்தை நிகர்த்த அவ்வரங்கமா நகரத்தையும், அந்நகரின்கண் வசிக்கும் பிரபல தனவந்தர்களையும் கண்ணுற்ற தங்கள் மனமானது தானும் பணம் சம்பாதிக்க வேண்டுமென்று ஆசைகொண்டதாம். அவ்வாறு ஆசைகொண்ட மனதிற்கு சாந்தியாகவும், அந்த மனதை ஒருபெரிய தனவந்தனுக்கும் படியாகவும் பின்வருமாறு பொருளீட்ட முயன்றார்கள் :—

அழகான பட்டுத்துணியினால் ஒரு பை தைத்து இரங்கூன் 25 வது தெருவில் கண்ணாடி விளக்குகள் செய்கிற கடைக்குச்சென்று, துண்டுதுண்டாகக் கிடக்கிற பலநிறமான கண்ணாடி வில்லைகளைப் பொறுக்கி பையில்சேர்த்து, ஒரு சிறிய கணக்குப் புத்தகமும் எழுதுகோ ,(Pencil) லும் வாங்கி, அந்தக் கணக்குப் புத்தகத்தில் பின்வருமாறு கணக்கெழுதினார்கள்.

| நெ. | * நவரத்தினங்கள் | இத்தனை | மஞ்சாடி | மதிப்பு ரூபாய்கள் |
|---|---|---|---|---|
| 1 | கோமேதகம் | 73 | ... | 4246798 |
| 2 | நீலம் | 49 | ... | 1327342 |
| 3 | பவளம் | 26 | ... | 834316 |
| 4 | புட்பராகம் | 20 | ... | 536713 |
| 5 | மரகதம் | 37 | ... | 929027 |
| 6 | மாணிக்கம் | 31 | ... | 758900 |
| 7 | முத்து | 28 | ... | 645035 |
| 8 | வைடூரியம் | 89 | ... | 3734000 |
| 9 | வைரம் | 45 | ... | 237869 |
| | ஆக மொத்தம் ரூபாய்கள் ஒருகோடியே முப்பத்திரண்டு இலட்சத்து ஐம்பதினாயிரம். | | | 1,32,50,000 |

இவ்விதம் நீ ஒரு கோடீஸ்வரனாக இருந்துகொண்டு கேவலம் சாமானியர்களைப்போல் இன்னும் பணம் சம்பாதிக்க ஆசைப்படுகிறாயே! ஆனால் நீ இவைகளை வெறுங் கண்ணாடியென்று அலட்சியமாக நினைக்கிறாயோ! சிறு

* நவரத்தினங்களின் பிறப்பு, காலம், தேசம், பரீட்சை, குணம் முதலானவைகளை நமது ஞானக் களஞ்சியம் சீவன் முத்த ரிலக்கணத்திற் காண்க.

பிள்ளைத்தனமாக அப்படி நினையாதே! நவரத்தினங்களுக்கும், இதற்கும் பெரும்பாலும் வித்தியாசமேயில்லை. நவரத்தினங்களை வைத்துக்கொண் டிருப்பவனும் நாம் ஒரு பெரிய பிரபு என்று மனோராச்சியம் செய்து கொள்ளுகிறானேயன்றி வேறில்லை. அந்தப் பிரபுக்களுக்குமேல் நீயும் ஒரு பெரிய பிரபு என்று நினைத்துக்கொள். உன்னைத் தடுப்பவர் யார்? என்று தன்மனதிற்குச் சமாதானம் கூறி நிராசையோடு தவம் புரிந்து, பின்னர் மதுரைக்கு அடுத்த தேவதானப் பட்டிமலையில் வெகுகாலம் வசித்து யோக கைவல்லியம் பெற்றார்கள்.

ஆனால் நவரத்தினங்களை விற்றுச் செலவுசெய்து மனுஷ்டப்படி போக போக்கியங்களை அனுபவிக்கலாமே? கேவலம் இந்தக் கண்ணாடி பில்லைகளை நவரத்தினமென்று மதித்துக் கொள்வதால் யாது பிரயோசனமென்று சிலர் கேட்கலாம். பிரபஞ்சத்தவர்கள் ஆசைப் பசாசின் காத்தி லகப்பட்டு, அந்தப் பைசாசத்தின் சண்டமாருதக் காற்றினால் காட்டிலவம் பஞ்சு பறப்பதுபோல மனதைப் பறக்க விடுபவர்களாதலால், அவர்களுக்கு அந்த நவரத்தினந்தான் சிறந்தது. எவ்வித போக போக்கியங்களிலும் பற்றில்லாமல் நிராசையுடைய மகான்களுக்கு, கோமேதகமானாலென்ன? கூழாங்கல்லா யிருந்தாலென்ன? இரண்டும் ஒன்றுதான். ஆகையால் நவரத்தினமும், கண்ணாடி வில்லையும் ஒன்றே யாம்.

## போய்த்துறவும்—மெய்த்துறவும்.

ஒரு நாள் கிருட்டின பரமாத்மா தமது பக்தர்களுக்கு பொய்த்துறவு-மெய்த்துறவு என்னும் விஷயத்தைப் பற்றி பிரசங்கித்தார். இல்லற தருமங்களைப் புரிந்து கொண்டு அதோடு பரப்பிரம்மோபாசனை புரிபவன் எவனோ அவன்

தெப்பத்தின் மீதிருந்துகொண்டு கங்கா நதியைக் கடக்க முயன்றது போலாகும். அவனே முதலைகள் வாயிற் சிக்காமல் எளிதில் கரை சேர்வான். அவனே உண்மையான எனது பக்தன். அவ்வாறின்றி இல்லற கருமங்களை நீத்து வனசஞ்சாரம் ஒன்றையே விரும்பியவன் தெப்பத்தின் சகாயத்தை உதாசீனம் செய்து விட்டு தன் பலத்தினுல் கங்கா நதியை நீந்திய பாவனையை நிகர்க்கும். அவ்வாறு நீந்துபவன் சில சமயத்தில் கை யோய்ந்து நதியிலேயே அமிழ்ந்து இறப்பினும் இறப்பான். அல்லது, முதலை வாயில் சிக்கினுலும் சிக்குவான். இந்த அபாயங்களை யெல்லாம் விட்டு நீங்கி கரை சேருவான் என்பது அருமை. இல்லறத்தை நீத்து வனசஞ்சாரம் புரிந்துகொண்டு செய்யும் தவமுயற்சியானது ஒருக்கால் அவமுயற்சியாக ஆனுலும் ஆகும். ஆகையால் எனது உண்மையான பக்தன் என்னைப்போல் கிரியைகளைச் செய்து பதினுயிரம் மடந்தையர்கட்கு மத்தியில் சுகித்துக் கொண்டிருந்தாலும் அவன் எளிதில் முத்தியை அடைவான். இனசஞ்சாரத்தை விட்டு வனசஞ்சாரம் புரிபவர்கள் இல்லற தருமங்களைப் புரிய சக்தியில்லாமலும், இல்லறத்திற்குப் பயந்து வனத்திற்கு ஓடிப்போன பயங்கொள்ளிகளேயன்றி, வாஸ்தவத்தில் இல்லறத்தை வெற்றிகொண்ட செய சீலர்களுமல்லர், திண்ணியருமல்லர் என்று உபதேசித்தார்.

இதைச் செவி மடுத்திருந்த அவர் மனைவியாகிய சத்தியபாமா கிருஷ்ணனை நோக்கி, நாதா! இல்லறத்தை விசேடமாகவும், துறவறத்தை சேடமாகவும் கூறினீர்களே? அஃதெவ்வாறு பொருந்தும்? இல்லறத்தைப் புரிந்து கொண்டு செய்யும் தவமானது இரும்பிற்பதித்த இரத்தினம் போல் பிரகாசியாது. துறவறந்தாங்கிச் செய்யும் தவமுயற்சியானது தங்கத்தில் பதித்த இரத்தினம்போற் பிரகாசிக்கும்.

இதனுலே தான் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகளென்றும், பதினெண் சித்தர்களென்றும், நாரதர், வசிட்டர், விசுவாமித்திரர் என்றும் எத்தனையோ மஹரிஷிகள் அருட்பெருஞ் சித்தானுர்கள். இல்லறத்தினுல் ஆன்மலாபம் ஏற்படுவதாயிருந்தால் அவர்களெல்லாம் ஏன் சந்நியாசமடைய வேண்டும்? இதை விட்டுவிட்டு தங்கள் மாயா சக்தியால் நல்லதைக் கெட்டதென்றும், கெட்டதை நல்லதென்றும் மாற்றுகிறீர்களே! அதை நான் எவ்வாறு ஒப்புக்கொள்ள முடியும். ஆதலால் வனத்திலிருக்கும் மஹரிஷிகளாகிய துறவிகளே பரிசுத்தர். அவர்களே உண்மையான மஹான். அவர்களே எல்லா அருட் செல்வமும் வாய்ந்தவர்கள் என்று புகழ்ந்தாள்.

அதற்கு கிருஷ்ணன் அஃதல்ல கருத்து. 48,000 ரிஷிகளும் 18-சித்தர்களும் பிரமச்சரிய விரதத்தை யனுஷ்டித்தபடியே வானப்பிரத்த-சந்நியாச ஆச்சிரமங்களை வகித்துக்கொண்டார்களே யன்றி, குடும்பத்துக்குப் பயந்து காட்டுக்கு ஓடவில்லை. நாரதர், வசிட்டர் முதலிய மஹரிஷிகள் காட்டுக்கே ஓடிவிடவுமில்லை. விசுவாமித்திரர் புறத்துறவைக் கடுமையாகப் பூண்டதனுலேயே * மேனகையிடத்தில் சிக்கி, சகுந்தலையென்னும் பெண்மகவை யீன்று பந்தத்தைச் சகிக்க முடியாமல் தலையில் கையை வைத்து அழுதது இவ்வுலகம் அறியும். அன்றியும் சனகராஜன், திருவள்ளுவர் முதலிய எண்ணிறந்த மஹான்கள் குடும்பத்திலிருந்து கொண்டு பூரண ஞானம் அடையவில்லையா? சுகப் பிரம்மத்துக்கு உபதேசித்தது குடும்பத்திலிருந்து அரசாட்சியையும் வகித்த ஜனக வரோதயனல்லவா? என்றனர். அதைக் கேட்ட சத்தியபாமா கிருஷ்ணனை நோக்கி, நாதா! பல்லாயிரங்கோடி மக்கட் பிறப்பினர்கட்குள்

* இந்தச் சம்பவத்தை அனேக படங்களில் பார்க்கலாம்.

ஏதோ இரண்டொருவர்கள் ஆன்மஞானம் அடைந்ததை மட்டும் சிலாகித்துக் கூறினீர்களேயன்றி, எத்தனையோ ஆயிரம் மஹரிஷிகளைப் பற்றி தாங்கள் சிலாகித்துக் கூறாது விடுத்தீர்கள். இவ்வாறு தான் உலகத்தில் அனேகர் தாங் கொண்ட கருத்தை நிறைவேற்ற திருட்டாந்தங்களும் தாட்டாந்தங்களும் சேர்த்துவிடுகிறார்கள். பாழாய்ப்போன உவமான உபமேயங்கள் எங்கிருந்தோ வந்து சேர்ந்துவிடு கின்றன. மனிதனுக்குக் கோபம்வேண்டும் என்பதற்கும், கோபமே கூடாது, சாந்தமே வேண்டும் என்பதற்கும் திருட்டாந்தங்கள் எங்கிருந்தோ முளைத்துவிடுகின்றன. சாந்தமட்டும் கூடாது, அத்துடன் கோபமும் இருந்துதான் தீரவேண்டும், எப்படியென்றால் பயிருக்கு மழையும் வெயி லும் அவசியம்போல, மனிதனுக்குச் சாந்தமும், கோபமும் இருந்துதான் தீரவேண்டும் என்றும் கூறிவிடுகிறார்கள். ஆகையால் தாங்கள் கூறுவதும் பொருந்தத் தக்கதன்று என்றாள். அதற்கு கிருஷ்ணன் அப்படியல்ல, என் கண்ணே! "நல்லோர்கள் முக்கோடி நாற்கோடி தன்னில் ஒன்று" என்ற முதுமொழி போற்றத்தக்கது. நாற்பத்தெண்ணாயிரம் ரசோகுணத்தில் இரண்டு சத்துவகுணம் எத்துணைச் சிறப் புடையதென நீயே உணருதி என்றனர். பின்னரும் சத்திய பாமா சமாதானமடையாமல் என் மனதுக்குப் பொருந் தாததைத் தேவரீர் எத்தனை உதாரணத்துடன் கூறினும் யான் முழுமனதுடன் ஏற்றுக்கொள்ளேன் என்றனள்.*

---

* சன்னியாசி என்றால் திகம்பரராய் அல்லது ஒட்டுக் கோவ ணம் கட்டியவராயும், சோறு சாப்பிடாதவராயும், பெண்சாதி பிள்ளை இல்லாதவராயும், குப்பை மேட்டில் புரளுபவராயும், பிதற் றித் திரிபவராயும், தாடி மீசை தலைமயிருள்ளவராயும், இன்னும் இவை போன்ற கிரியைகளைச் செய்பவராயு மிருக்கவேண்டு மென்று பெரும்பாலும் கருதுகிறார்களே யன்றி உண்மையான துறவிகள்,

அதைக் கேட்ட கிருஷ்ணன் இவளுக்கு நாம் எவ்வளவு உவமான உவமேயங்களுடன் விளக்கினாலும் ஒப்புக்கொள்ளாள். இதனாலேயே, "பேதமை என்பது மாதர்க் கணிகலம்" என்ற முதுமொழி பிரத்தியட்சமாகிறது. இவளுக்கு நிதரிசனமாகக் காட்டினாலன்றி எதையும் ஒப்புக்கொள்ளாள் என்று கருதி, பெண்ணே! நான் ஒரு சூழ்ச்சி செய்கிறேன். அதற்கு நீ இணங்கி நடிப்பாயாயின் உண்மையான சந்நியாசம் இன்னதென உனக்குப் புலனாகும்படிச் செய்கிறேன், உன் சம்மதம் என்ன என்றனர். அதற்கு சத்தியபாமா, நாதா! அப்படியே செய்வோம் என்றனள். ஆனால் நீ ஒரு அபசிளங் குமரியாக நடித்துக்கொள். நான் ஒரு கிழவேடனாக நடிக்கிறேன். நாமிருவரும் ஒரு ரிஷியின் ஆச்சிரமத்திற்குச் செல்வோம். உன்னை அவ்வாச்சிரமத்தில் இராத் தங்கும்படி செய்யவேண்டுமென்றும், இவளைக் காப்பாற்றிக் கொடுக்கவேண்டு மென்றும் நான் சந்நியாசியைக் கேட்டுக்கொள்கிறேன். பின்னர் நடக்கிறதைத் தெரிந்து கொள்வோம் என்றனர். அதைச் சத்தியபாமாவும் ஒப்புக்கொண்டு தத்தம் வேடத்துடன் யாதவ தம்பதிகளிருவரும் வெளிப்போந்தனர்.

---

பாலரொடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே

என்ற தாயுமானவர் திருவாக்கின்படி துறவிகள் அவ்வப்போது உதயமாகும் சூணத்துக்குத் தக்கபடி நடப்பார்கள் என்று தெரிந்து கொண்டவர்கள் மிகச்சிலரே, பல மனைவிமார்களையும் அநேக விலைப் பெண்களையும் வகித்த நாயகம் முஹம்மது நபி (சல்) அவர்களையும் இராதா, ருக்குமணி, சத்தியபாமா முதலான மனைவியர்களையும், பதினாயிரம் கோபிகா ஸ்திரீகளையும் வகித்த கிருட்டின மூர்த்தியையும், சீதையுடன் இல்லறத்தை நடத்திய சக்கரவர்த்தி திருமகனையும் பெரியோர்கள் என்பார்களா? அல்லவென்பார்களா? என்று நாம் கேட்கிறோம்.

யமுனாநதிக் கரையில் சன சஞ்சாரமில்லாத ஓர் இடத்தில் ஒரு தபசியின் பர்ணசாலை யிருந்தது. துறவியின் வாசத்தானத்துக்கு எதிரே இருந்த உயர்ந்த மரங்களுக்கும் அழகிய பூஞ்செடிகளுக்கும் மத்தியில் மான்குட்டிகளும் அம்சபட்சிகளும் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தன. தேவதா சொரூபிகளான யாதவ தம்பதிகள் சந்நியாசியின் ஆச்சிரமத்தை அணுகும் சமயத்தில் பூரண சந்திரன் மகா காம்பீரியத்துடன் உதயமானது. ஆச்சிரமத்தின் வாசற் படியில் கற்பாறையாலாகிய அழகிய ஆசனத்தில், மஞ்சள் ஆடை உடுத்து சாந்த வசனத்துடன் சந்நியாசி வீற்றிருந் தார். இவரைக் கண்டவுடன் வேடனாகிய கிருட்டினனும், பெண்கள் திலகமாகிய சத்தியபாமாவும் அதிக வினயத் துடனும், மிக்க வணக்கத்தோடும் சாட்டாங்க நமஸ்காரம் செய்தார்கள். சந்நியாசி அவர்களை ஆசீர்வதித்து ஆசனங் களிலமர்த்தி, "நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கே போக வேண்டும்? உங்களுடைய இருப்பிடம் எது?" என்று அன்புடன் வினவினார்.

அதற்குக் கிருட்டின மாயவேடன், ஏ! சாந்த சொரூபி! யோகீந்திரா! பரிசுத்த மூர்த்தி! இதோ மகாதேசஸ்வியாக நிற்கும் இந்த சௌந்தரியவதி இவ் விராச்சியத்தின் அரசனின் அருந்தவப் புதல்வி. இவ ளுடைய தந்தை தன் சேனைகளுடன் இவளை யழைத்துக் கொண்டு இவ்வாரணியத்தில் வேட்டையாட வந்தார். வேட்டை மும்முரமா யிருக்கும்போது காட்டு யானைகள் அவர்கள் மீது பாய்ந்து துரத்திவந்து அவர்களை வெவ் வேருகப் பிரித்துச் சிதாடித்துவிட்டன. தகப்பனை விட்டுப் பிரிந்த ஏக்கத்தால் துக்கத்துடன் எங்குச் செல்வதென்று தெரியாமல் இவள் அலைந்துகொண் டிருக்கும்பொழுது, திடீ ரென்று குரூரமான ஒரு புலி இவளைப் பார்த்துவிட்டு மிக்க

ஆவேசத்துடன் தாக்கி வந்தது. அதனை கொஞ்சதூரத்தி லிருந்து கண்ட நான், உடனே என்னுடைய வில்லால் ஒரு கடுமையான அம்பை எய்து அப்புலியைக் கொன்றேன். அதன் பின் மகா விசனகரமான இவளுடைய சரித்திரத் தைக் கேட்டதும் நான் மிகவும் பரிதாபப்பட்டு, இவளை எப்படியாகிலும் இவளுடைய தந்தையினிடம் சேர்ப்பிக்க வேண்டுமென்று தீர்மானித்து, இவளுடன் இன்று மாலை யெல்லாம் அரசனின் நகரத்திற்குச் செல்லும் மார்க்கத்தைத் தேடினேன் புலப்படவில்லை. சூரியனோ அத்தமித்து விட் டது. இராக்காலமும் வந்து விட்டது. கொடிய சந்துக் களுக்கும், கொலைபாதகத் திருடர்களுக்கும் இருப்பிட மாகிய இவ்வனத்தில் தனிமையாகத் தங்குதற்கஞ்சி, தங்கள் ஆச்சிரமத்தில் இரவைக் கழிக்கலாமென்று இங்கு வந்தோம். மகா புண்ணிய மூர்த்தியாயும், சகலத்தையும் வெறுத்துத் தள்ளிய சந்நியாசியாயும் விளங்கும் தமது இருப்பிடத்தில் இந்த யுவதி இருந்தால் எனக்கு ஒருவிதக் கவலையுமில்லை. ஆகவே இருடீசுவரா! நாங்கள் இங்கு இன்றிர வைக் கழிப்பதில் தமக்கு யாதொரு ஆட்சேபனையுமிரா தென்றே நான் எண்ணுகிறேன் என்றான்.

துறவி மிகவும் அனுதாபப்பட்டு, வேடனுடைய தைரியத்தையும், பராக்கிரமத்தையும் பரோபகார குணத் தையும் வெகுவாகப் புகழ்ந்து, அவ்விருவருக்கும் தம்மிட மிருந்த உணவுகளில் சிலவற்றைக் கொடுத்து உபசரித்து, கிழவேடனுக்கு ஓர் இடத்தைக் காண்பித்து அவனைப் படுக்கச் செய்து, அரசிளங்குமரியை தன் ஆச்சிரமத்தில் சயனிக்கச் செய்தார். சத்தியபாமை மகரிஷியின் தன் மையை உணர்வதற்காக அயர்ந்து தூங்குவதுபோல் அபி நயித்தாள். மகரிஷிக்கும் தூக்கம் பிடிக்கவே இல்லை; வேறு முயற்சியும் செய்ய மனம் இணங்கவில்லை.

அரசிளங்குமரியின் அருகிற் சென்று, என் கண்ணே! தூக்கமா! என்றார். சுவாமி! தூக்கமில்லை, சரீர அயர்ச்சி தான் என்ற இனிய வசனத்துடன் எழுந்துட்கார்ந்தாள். மஹரிஷியும் மனோல்லாசத்துடன் பக்கத்தில் அமர்ந்தார். சத்தியபாமையின் முகத்தைப் பார்த்து, பெண்மணி! என்னை இன்னாரென்றறிவாயா? என்றார். தங்களை தவத்திற் சிறந்த மஹரிஷி யென்றறிவேன் என்றாள். என் கண்மணி! சென்ற சென்மத்தில் நான் ஒரு அரசகுமாரன்; நீ ஒரு அரசகுமாரி. நாமிருவரும் மிதுலாபுரிக்கருகிலுள்ள ஒரு பூஞ்சோலையில் காந்தருவ விவாகம் செய்துகொண்டு கூடிச் சுகித்திருந்தோம். உனது பிதாவின் கொடுங்கோலால் நீயும் நானும் பிரியும்படி நேர்ந்தது. உன்னைப் பிரிந்தது முதல் எந்தப் பெண்களையும் இனி ஏறெடுத்துப் பார்ப்பதில்லை யென்று சந்நியாசியாகி, அந்த சென்மத்தில் அது பூர்த்தியாகாமல் அதை அநுபவிப்பதற்காக, இந்த சென்மத்திலும் சந்நியாசியாகவே பிறந்து தவத்தைப் பூர்த்தி செய்து விட்டேன். நீயோ என்னைப் பிரிந்த வியாகுலத்தால் அரசன் மாளிகையிலேயே வெகு காலம் வியாதியாயிருந்து பிராணனை விட்டாய். பின்னர் இப்போதுள்ள உன் தகப்பனுக்குப் பெண்மகவாகப் பிறந்து வளர்ந்தாய். இன்றையதினம் நாமிருவரும் கலந்து, முன்விட்ட சுகபோகத்தை அனுபவிக்க வேண்டிய விட்ட குறை இன்றையதின மாகையால், நீ உன் தகப்பனோடு வேட்டைக்கு வரவும், உன் பிதாவைக் காட்டு யானைகள் துரத்தவும், உன் பிதா உன்னை விட்டு நீங்கவும், உன்னைப் புலி பாய முயலவும், வேடன் அந்தப் புலியைக் கொன்று உன்னை இவ்விடத்திற் கழைத்து வரவும் பிராரத்துவம் ஏற்பட்டது. விட்ட குறையில்லா விட்டால் அரசிளங் கன்னிகையாகிய யுவதிப் பருவமடைந்த பெண்ணை எங்கேனும் வேட்டைக்குச் செல்லுகையில்

அழைத்துப் போவதுண்டா? வேடன் என்னிடத்திற்கு அழைத்துவாராமல் தன்னிடத்திற்கு அழைத்துப்போகக் கூடாதா? இதுதான் விட்ட குறையென்பது என்று தெரிந்துகொள்.

அன்றியும், திருக்கைலாயத்தில் ஆலால சுந்தரமூர்த்தி நாயனார் பரமசிவனுக்கு அணிந்து, பக்தர்கள் உய்யும் பொருட்டு புஷ்பங் கொய்ய திருநந்தவனத்துக்குச் சென்றார். அங்கு பார்வதிதேவிக்கு அணியும்பொருட்டுப் புட்பங் கொய்யச் சென்ற (அம்மையின் சேடியர்களான) அனிந்திதை, கமலினி என்னும் பெண்ணிலக்கணத்திற் சிறந்த இரண்டு கன்னிகைகளைக் கண்டு மோகித்தார். பெண்களிருவரும் இவரைக் கண்டு மோகித்தார்கள். பின்னர் அவரவர்கள் கருத்தை யுணர்ந்த பரமசிவன், சுந்தரமூர்த்தியை நோக்கி நீ நமது பக்தனாக இருந்தும் பெண்கள் மீது ஆசை கொண்டபடியால் நீ பூமியிற் பிறந்து அந்தப் பெண்களோடு புணர்ந்து இன்பம் அனுபவித்து என் திருவடியை அடையக் கடவதென்று ஆக்ஞாபித்தார். அங்ஙனமே பார்வதி தேவியாரும் தம்முடைய சேடியர்களில் ஒருவராகிய கமலினி என்பவளை திருவாரூரில் பரவையார் என்னும் பெயருடனும், அனிந்திதையார் என்பவளை ஞாயிறு என்னும் ஊரில் சங்கிலியார் என்னும் பெயருடனும் பிறந்து வளரும்படிச் செய்ய, அவர்கள் மீண்டும் சுந்தரமூர்த்தி நாயனைக் கூடிப் புணர்ந்த சரிதம்போல் நம்முடைய சரித்திரமும் இருக்கிறது. ஆ! நான் உன்னைப் பிரிந்தது முதல் பட்டபாடு ஏட்டில் எழுதவும் இடந்தராதே. உன்னை இன்று கண்ட பிறகுதான் என்னுயிர் இருக்குமிடத்திலிருக்கிறது. நான் திரிகாலவர்த்தமான ஞானியாதலால் நமது பூர்வோத்தரம் எனக்கு நன்றாகத் தெரிகிறது. நீ பாவம்! பேதைப் பெண்ணாதலால் உனக்கு விளங்குவது

துர்லபம். இன்னும் சில காலம் போனல் என்னுடைய தபோ மகிமையினல், நான் உன் சொந்தக் கணவ னென்பது நன்ருய் விளங்கும். என்னை வேற்றுமை யாக நினையாதே, என் அருமந்தக் காதலி! நீ வேற்றுமை நினைப்பதாயிருந்தால் இதோ என் பிராணனை விட்டுவிடு வேன் இது சத்தியம். ஆ என் பிரிய சகி! என்று சத்திய பாமாவை ஆலிங்கனம் செய்து முத்தம் கொடுக்க முயன்ருர்.

காமாதுரனுன போலி மஹரிஷியின் கருத்தை யறிந்த அவள் தன் முகத்தைச் சற்று விலக்கிக் கொண்டு, சுவாமி! 'பதருத காரியம் சிதருது' இன்று பகல் நான் பட்ட கஷ்டத்தினல் என் தேகம் நல்ல நிலையிலில்லை. நாளைய தினம் தங்கள் மனேபீஷ்டம்போல் நடக்கிறேன் என்று புன் முறுவல் காட்டி அபிநயித்தாள். சந்நியாசியும் அவள் தேக அசௌக்கியத்தை யுணர்ந்து, என் கண்ணே! உனக்கு உடம்பு வலிக்கிறதா? ஔடதம் ஏதாவது தரட்டுமா? கால் பிடிக்கட்டுமா? வெந்நீர் போடட்டுமா? என்ன செய்ய வேண்டும்? உன் அபிப்பிராயத்தைத் தெரிவித்தால் அப் படியே செய்ய சித்தமாகக் காத்துக்கொண்டிருக்கிறேன், என் பிரிய சகி! என்று கெஞ்சினர். அதற்கு சத்திய பாமா: சுவாமி, தாங்கள் ஒன்றும் செய்ய வேண்டாம். இவ் வடியாள் மீது கருணை பாலித்து சும்மா இருந்தால் போதும் என்று இனிய வசனமாகச் சொன்னுள். சந்நியாசி சத்தியபாமாவை நோக்கி, என் ஆருயிர்க் காதலி! உன் பிதாவாவது, கிழவேடனுவது வேறு யாராவது வந்தால் அறியாத்தனமாக என் மீது எவ்வித துவேஷமும் சொல்லி விடாதே. அவர்கள் உன்னை அழைத்தால் நாளைப்போக லாம் என்று சொல்லிவிடு, என் கண்ணே! என் அன்பே! என்று பதினறு பல்லையும் காட்டினர். அவ்வாறு செய்து நீ என்னேடு சுகித்துக்கொண் டிருப்பாயாயின் இந்திர

போகம் உன் போகத்திற் கீடாகாது, இது சத்தியம்! என்று காமப்பிரசங்கம் செய்தார். குணங்குடி மஸ்தான்சாகிபு தமது திருப்பாடற்றிரட்டில் மனோன்மணிக் கண்ணியில் மனோன் மணியாகிய அருட் சத்தியை வருணித்திருப்பதுபோல் சத் தியபாமையை பன்மடங்கு வருணித்தார். இவை யனைத் தையும் செவி மடுத்த சத்தியபாமா (இப்படியும் ஒரு பைத் தியம் இருக்குமா? என்று மனதில் நினைந்து) அங்ஙனமே ஆகுக. தங்கள் திருச்சித்தம் யாதோ அதுவே என் சித்தம் என்றனள்.

இவ்விதம் சத்தியபாமா கபட எண்ணத்தோடு இனி மையாகச் சொன்னதை, இவள் நம்மீது அந்தரங்க விசு வாசம் வைத்துக்கொண்டு பரீட்சை செய்கிறாள். ஆனால் பெண்கள் வலிய அழைக்கமாட்டார்கள். அரை மனதுடை யவர்கள் போலேதானிருப்பார்கள். அந்த சாகசத்தை அறியாமல் காலந் தாழ்த்துவது நம்முடைய அறியாமை யேயாம் என்று துறவி மூடத் துணிவுகொண்டு பலாத் காரம் செய்ய ஆரம்பித்தார். சத்தியபாமை மருண்டு, பிராண நாதா! பிராண ரட்சகா! என்னை இது சமயம் வந்து ஆதரிக்க வேண்டும். பூனைவசம் சிக்கிய கிளியைப் போல் தத்தளிக்கிறேன் ஆபத்பாந்தவா! என்று ஓல மிட்டாள். இவை யனைத்தையும் தனது மாயாசத்தியா லுணர்ந்து கொண்டிருந்த கிருட்டின வேடன், இதோ வந்து விட்டேன். பயப்படாதே! இதோ அந்த பயலைக் கொன்று விடுகிறேன் பார்! என்று கர்ச்சித்து விசுவரூபத்துடன் சந்நியாசி முன் தோன்றினார். சந்நியாசி கண்டு பயந்து, சிந்தைகெட்டுத் தடுமாறி ஓடி ஒளித்தனன். மாயக் கிழ வேடன் சத்தியபாமாவை அழைத்துக்கொண்டு எதா ஸ்தானத்திற்கு வந்து சேர்ந்தான்.

மாயக் கிழவேடன் மறுபடியும் பழைய கிருட்டினனுக மாறி சத்தியபாமையின் தோளில் கையை வைத்துக் கொண்டு அவள் முகத்தை ஆனந்தத்துடன் நோக்கினர். அந்த நோக்கத்தின் கருத்தை ஊகித்துணர்ந்த சத்திய பாமா, கிருட்டினனுடைய அழகிய கைகளைத் தன் கண்ணில் ஒத்திக்கொண்டு, "பிராணவல்லபா! என்னுடைய புத்தி யீனந்தான் என்னே! நான் சுத்த நிர்மூடம்! வெளி டாம்பீகத்தையும் வெளிப் பகட்டையும் கண்டு மதிமோசம் போனேன். மனைவி மக்களைத் துறந்து வனத்தில் வசித்தால் மாத்திரமே ஒருவன் உண்மையான தபசி ஆகிவிட மாட்டான்" என்று சொல்லிக்கொண் டிருக்கும்போதே, கிருஷ்ணன் திடீரென்று, "என் அன்பே! சத்தியபாமா! என்னைப் பிடித்துக்கொள். கெட்டியாக, இறுகப் பிடித்துக் கொள். என்னை என்னமோ இழுக்கிறதே! என்னை விடாதே! சாக்கிரதையாகப் பற்றிக்கொள். ஏதோ அபார மான சத்தி என்னை இழுத்துச் செல்கிறதே! என்ன செய் வேன்? விடாதே! விடாதே!! என்றுமென்மேலும் சத்திய பாமையை இறுக்கிக் கட்டிக்கொண்டு கூவினர்.

### பார்வைக்குக் காமி—பத்தியுள்ள சாமி

கண்ணபிரான் இருந்தாப்போலிருந்து திடீரென்று இப்படி சொல்லவே சத்தியபாமா ஆச்சரியத்துடன் திக் பிரமை கொண்டாள்; கிருஷ்ணனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ! என்று சந்தேகம் கொண்டாள்; ஆனாலும், தன்னுடைய பிராணகாந்தன் வார்த்தையை நிறைவேற்ற வேண்டி அவரைத் தன் கைகளால் இறுகப் பற்றிக் கொண்டாள். அங்ஙனம் செய்ததுதான் தாமதம், உடனே மின்சார சத்தியின் ஆவேசம்போல் இவர்களிரு வரும் ஒருங்கே இழுக்கப்பட்டார்கள். சத்தியபாமைக்கு

ஒன்றும் விளங்கவில்லை. எந்தச் சத்தி தங்களை இழுக்கிறது? எங்கு இழுத்துச் செல்கிறது? என்பது ஒன்றும் சத்தியபாமைக்குப் புலப்படவில்லை; கிருஷ்ணனை வினயத்துடன் கெஞ்சினாள். அதற்கு அவர், "அது என்னமோ! எனக்கே தெரியவில்லை. சத்தியின் முன் எதிர்த்து நிற்க எனக்குக் கொஞ்சமும் சத்தியில்லை. ஒருவேளை யாரோ ஒரு பத்தன் தன் அன்பு என்னும் பாசத்தால் என்னைத் தன்னிடம் இழுக்கிறான் போலிருக்கிறது. என் உயிர்க்குயிரான சத்தியபாமா! பார்த்தாயா என் கஷ்டத்தை? சத்தாக இருப்பதால் எவ்வளவு துன்பத்தை அனுபவிக்க வேண்டியிருக்கின்றது பார்!" என்று சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது, இவர்களிருவரும் ஒரு அதிக அற்புதமான அரண்மனைக்குச் சமீபத்தில் வந்து சேர்ந்தார்கள். அரண்மனையின் முன்புறத்தின் நந்தவனத்தில் மிக்க பிரகாசத்தைத் தரும் நவரத்தினமயமான விளக்குகள் பிரகாசித்துக் கொண்டிருக்க விசித்திரமாகச் சிங்காரிக்கப்பட்ட கட்டிலில், தேகத்தில் எவ்வித உடையுமின்றி ஒரு யௌவன சௌந்தரிய புருடன் பட்டுத் தலையணைகளின் மீது சாய்ந்திருந்தான். அவனைச் சுற்றிலும் இருபது வயதுக்கு மேற்படாத அழகிய ரூபவதிகளான ஆறுயுவதிகள் நிருவாணமாய் மனோரம்மியத்துடன் சிங்கார ரசம் ததும்பிய பாடல்களைப் பாடிக்கொண்டே "ரசமண்டலம்" என்று கூறப்படும் ஒரு திவ்வியமான நடனத்தை நிருத்தனம்புரிந்து, அவனுக்கு மகா ஆனந்தத்தை விளைவித்துக் கொண்டிருந்தனர்.

இந்த விநோதக் காட்சியைக் கண்டதும் சத்தியபாமா மிக்க பரிகாசத்துடன் கிருஷ்ணனை நோக்கி, "இந்த மகா புருடன்தானா உம்முடைய பக்த சிரோமணி?" என்று ஏளனமாகக் கேட்டாள். கிருஷ்ணன் சாந்தத்தோடு, "கண்ணே அவசரப்படாதே! முற்றிலும் பொறுமையுடன்

கவனித்துக் கொண்டிரு" என்று சொல்லிக்கொண்டே சென்றார். அவர்கள் வரவைக் கண்டதும், அழகிய மடவரல்கள் அறுவரும், நிருவாணமாய் இருந்ததனால் வெட்கத்துடன் பரபரப்போடு உள்ளே நுழைந்து ஒளிந்துகொண்டனர். யௌவன புருடன் மாத்திரம் தான்படுத்திருந்த கட்டிலை விட்டிறங்கி தன் ஆடையை உடுத்திக்கொண்டு, அவசரத்துடன் ஓடி வந்து, கிருஷ்ண மூர்த்தியின் பாத கமலங்களில் தன் சிரசை வைத்து, அதிக மரியாதையுடன் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, எம்பெருமானே! வரவேண்டும். புழுவை நிகர்த்த தமியேனிடம் இவ்வளவு கிருபையுடன் வந்ததற்கு சிறிதும் பாத்திரனல்லவே. அளவற்ற உமது தயாளகுணத்தின் முன் என்னுடைய தவமும் தருமமும் சூனியமல்லவா? எல்லையில்லாத உமது சத்தியையும் தயையையும் எனது அற்ப வார்த்தைகள் எங்ஙனம் புகழ்தல் கூடும்? பிரபஞ்ச முழுவதும் உமதாயும் நீராயுமிருக்க, நான் வேறென்றும் நீர் வேறென்றும் உண்டோ? பிரம்மமாகிய நீர் ரூபி, அரூபி; நாமமுடையவர், நாமமற்றவர். மனிதனைப்போல் இப்போது தோன்றும் நீர் கூர்மையாகப் பார்க்கும்போது அநிர்வசனீய சோதியாய் விளங்குகிறீர். நான் எப்படி உம்மை துதி செய்வேன்? நான் விரும்புவது எது? ஒன்றுமில்லையே! ஆனாலும் சச்சிதானந்த சொரூபியாக நீர் எப்படியிருக்கிறீரோ! அப்படியே நான் உம்மை அறியும்படி கிருபை புரியவேண்டும்" என்று ஆனந்தக் கண்ணீர் பெருக பலவாறு தோத்திரம் புரியலானான். கிருஷ்ணனும் அந்த உவ புருடனும் ஆலிங்கனஞ்செய்ய ஆரம்பித்தார்கள். உடனே சோதி ஒன்று தோன்றிற்று. சத்தியபாமாவுக்கு அவ்விடத்தில் அந்த சமயம் ஒன்றும் தோன்றவில்லை. தனது நாயகனாவது அந்த யௌவன புருடனாவது காணப்படவில்லை. சோதி

மயமும் ஆனந்த சொரூபமுமே திகழ்ந்தன. சத்திய பாமாவும் தன்னை மறந்தாள்.

இவ்வாறு ஒருசாமம் நேரம் கழிந்தது. சத்தியபாமா கனவு கண்டு விழித்தவள்போல் விளங்கினாள். முன் போலவே தான் கிருஷ்ணன்மீது சாய்ந்த வண்ணமாக இருக்கக் கண்டாள். ஏ மாயவேட சிகாமணி! மெய்யான சந்நியாசம் இத்தன்மைத் தென்பதை எனக்கு போதிப்பதற்காகவா இந்த வேடமெல்லாம் புனைந்தாய்? மனைவி மக்களை தேக மாத்திரத்தாலே விட்டு நீங்கி வனத்திற்கு ஓடுவது உண்மையான சந்நியாசமன்று. மனதினால் தியானிப்பது தான் உண்மையான துறவு. கோபம், ஆசை, பொறாமை முதலானவைகளைத் துறக்க வேண்டியதுதான் துறவு. பிரமத்தை உள்ளபடியே உணர்ந்து, உலக விடய சுகங்களிலுள்ள பந்தத்தை முற்றிலுந் தவிர்த்து, சமரசஞான கைவல்லியம் பெற்று பரிபூர்ணானந்தத்தை எவன் அனவரதமும் அனுபவிக்கின்றானோ அவனே, உண்மையான சந்நியாசி. தூலசொரூபத்தில் மாத்திரம் பெண்டு பிள்ளைகளை நீக்கி விட்டு வனத்தில் வசித்து வந்த போலி சந்நியாசி, காமக் குரோதங்களைக் கைவிடாமல் சத்தியபாமாவை பெண்டுக் கழைத்தானாகையால், அத்தகைய வேடதாரிகள் புலி பசு வேடம் போட்டுக் கொண்ட தன்மையை ஒக்கும்.

பாகம் செய்கிற சுயம்பாகிக்கு தான் சமைத்த கறி பதார்த்தங்களில் எப்படி அதிக அபேட்சையில்லையோ, அந்த கறிவகைகளை எப்படி மற்றவர்கள் அபேட்சை யுடன் புசிக்கிறார்களோ! அங்ஙனமே சதா பெண்கள் மத்தியில் வசிப்பவனுக்கு காமவெறியானது அதிகமாக வாதிக்காது. பெண்களை விட்டு நீங்கி இருப்பவனுக்கோ பெண்கள் ரூபலாவண்ணியங்களைப் பற்றி கேள்விப்

பட்டாலும் வெறி, படித்தாலும் வெறி, பார்த்தாலும் வெறி, அவனுக்கு எல்லாம் வெறி மயமாகவே தோன்றும். அதனுலேயே மேற் கூறிய சந்நியாசி சத்தியபாமாவைக் கண்டவுடன் வெறிகொண்டு விட்டான். பெண்கள் மத்தியில் நிருவாணத்துடனிருந்த யுவபுருடன் தன்னுடைய பக்தி பிரமையால் உன்னை தன்னிடம் மின்சார சத்திபோல் இழுத்தான். இது தான் உண்மை சந்நியாசத்தின் லட்சணம் இத்தன்மைத் தென்பதை உணர்ந்தேன் என்றனளாம். ஆகையால் அகத்துறவே துறவு. புறத்துறவு அத்துணைச் சிறப்புடையதன்றெனப் புலனுகின்றது. இதனுலேயே,

> அந்தக் கரணம் அடங்கத் துறப்பதுவே
> எந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே

என்ற தாயுமானவர் பாடலே மேலே கூறப்பெற்றுள்ளது. ஆகையால் இல்லறத்திலிருந்து கொண்டே அகத்துறவாகிய சத்திய சன்னியாச நிலையைப் பொருந்தி, சிவப்பிரம்மைக்கியம் (தௌஹீது) அடைவதே சாலச் சிறந்தமார்க்க மென்றும், அங்ஙனம்செய்ய முடியாதவர்கள் புறத்துறவைப் பெற்றுலும் இயம-நியமாதி மேற் கொண்டவர்களாய் பரிசுத்த நிலையில் நின்று தவஞ் செய்யவேண்டுமே யன்றி, செத்த நாயை இழுத்துக்கொண்டு போய் குப்பைக்காட்டில் எறிவதுபோல், சரீரத்தை மட்டும் காட்டில் கொண்டு போய் வைத்து, தகாத அக்கிரமங்களைப் புரிபவர்கள் தனக்கே அவஞ் செய்து கொள்கிறுர்கள்.

---

# பதினெட்டாவது அத்தியாயம்

## விந்து செயம்.

### விருத்தம்.

பூதல மதனிற் போந்த புற்கலன் களுக்கு விந்து
நாதமே அருமைச் சீவ ரத்தின மாகு மத்தை
நீதமாய்ச் செலவு செய்யு நெறியையும் நெறியை விட்டோர்
மாதுய ரடையுந் தாழ்வு மினமெதென வழுத்து வாமால்.

### சீவரத்தினம்.

விந்து என்பது ஆண் மக்கட்கு சீவரத்தினமாகிய அரும்பெரும் பொருள். யோகம் வேதாந்தம் முதலான உயரிய நிலைக்கும் விந்து தான் அடிப்படை. சுருக்கமாகக் கூறுமிடத்து விந்துதான் வேதாந்தம். விந்தை விட்டால் நொந்து போவாய் என்பது முதுமொழி. விந்தின் பலமில்லா விட்டால் நாம்பு தளர்ந்து போகும். அதனுல் சோதி தோன்றுவதில்லை. யோகமும் சித்திக்காது. யோகம் பலமில்லாவிட்டால் வேதாந்தமும் சித்தியாவதில்லை. யோகம் சித்தியாகி விட்டால் விந்து மணியாகக்கட்டிப் போகின்றது. அதன் பின் சையோகம் செய்தாலும் விந்து இறங்குவதில்லை, சரீரமும் தளர்வதில்லை. யோகம் கைவல்லியமாகி நாதங் கட்டிவிட்ட பின்னர் யோகிகள் அவசியமானுல் கலியாணம் செய்து கொள்ளலாம். இதை யுத்தேசித்தே முன்னுள்ள மகான்கள் யோக சித்தியைப் பெற்ற பின்னர் விவாகஞ் செய்து சுகித்திருக்கிறுர்கள். ஆதலால் விந்துசெயம் என்பது ஆண்மக்கட்குப் பிரதானமான சுக்கிலத்தை மாதர்களிடத்தில் அதிகம் செலவு செய்யாமற் காப்பாற்றுவதுதான். ஒருவன் விந்தைச் செலவு செய்து விட்டால் அவனுக்குள்ள

சரீரவலிமையும், தேசசும் குன்றிவிடும்; சோம்பலும், தூக்கமும் உண்டாகும்; அதனால் தவமுயற்சியும் ஏனையமுயற்சியும் அவலமாய்ப்போகும். கோபம், கடினவேலை முதலியவைகட்கெல்லாம் சொற்பமாகச் செலவாகாநின்ற பிராணவாயுவானது, மாதர் சையோகத்தில் அறுபத்து நான்கு சுவாசமிறங்கி இருபத்துநான்கு சுவாசமே உட்செல்லுகின்றன. அதனால் எத்தொழிலாலும் செலவாகாத பிராணவாயுவானது மடந்தையர் சரசலீலாவிநோதத்திலேயே நாற்பது சுவாசங்கள் வெளிச் சென்று நஷ்டமாகின்றது. மதனலீலையாற் சுக்கிலத்தை இழந்தபின் எவ்வளவு ஆயாசமும், மேகச்சூடும் உண்டாகுமென்பதை ஒவ்வொரு இல்லறவாசிகளும் தத்தம் அநுபவத்தில் நன்குணர்வார்கள். போகத்திற்குப் பின் உண்டாகும் தேக அயர்ச்சியால் பிணம்போற் பிரக்ஞையற்று நித்திரையும் செய்வார்கள்.

சிவவாக்கியர்.

வடிவுகண்டு கொண்டபெண்ணை மற்றொருவன் நத்தினால்
விடுவனோ அவனையின்னும் வெட்டவேணும் மென்பனே

என்பதற்கிணங்கத் தான் அப்படி நித்திரை செய்யும்போது தன் மனைவியை மற்றொருவன் அபகரித்துக்கொண்டாலும், வீட்டிலுள்ள பொருள்களைக் கொள்ளையிட்டாலும் தெரியாதிருக்கச் செய்வது இந்திரியத்தை இழந்ததினாலல்லவா? மாதர்களிடத்தில் அதிக சம்போகம் செய்வதின் காரணத்தினாலேயே மேகம், சூலை, குஷ்டம் முதலிய சர்வரோகங்களும் சம்பவிக்கின்றதென்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். அவ்வளவு கொடிய ரோகங்களைத் தரும் கடிதடத்தானமோ, "எருவாய்க் கிருவிரன்மேல் ஏறுண் டிருக்குங் கருவாய்" என்று ஆன்றோர்களால் இகழ்ந்துரைக்கப்பட்ட துர்க்கந்தமுடைய குருதியூற்றுக் கூவம். "விட்டிற் பூச்சி

யானது தீபத்தில் வந்து விழுந்து மாள்வதுபோல" முன் பின் யோசிக்காத சில இளைஞர்கள் அதையே சிந்தித்து மாதர்களையே பரமசுகமென்று கருதி, "மாதத் திரண்டு விசை மாதரைப் புல்குவது" என்னும் கருத்தை யுணராம லும், திருடர்களைப்போல இராக்காலம்எப்போதுவருமென்று எதிர்பார்த்து மருவி, அதனாற் பற்பல பிணிகள் சம்பவிக்க அதன்பின் நல்ல வைத்தியர்களைத் தேடிப்போய் அவர் களுக்குப் பாதகாணிக்கை வைக்கின்றார்கள். வைத்திய இலட்சணம் இன்னதென்றே அறியாத சில முரட்டு வைத்தி யர்களிடம், சுத்தி செய்யப்பெறாத வீரம் பூரமாதி பாஷாண ஔடதங்களை வாங்கிப் புசித்து, வயிரம்போன்ற தங்கள் பற்களைத் தொலைத்து பொக்கைவாய்க் கிழவனைப்போலக் காணப்படுகிறார்கள். சரீரத்தில் வியாதி சம்பவித்து மெலிந் திருக்கும்போதாவது கலவியைச் சிறிது மறந்திருப்பார் களோ, என்னவோ, தெரியவில்லை. வைத்தியரிடத்தில் மருந்து சாப்பிடும்போது வைத்தியர் சொல்லும் நிர்ப்பந்தத் திற்காகப் பல்லைக் கடித்துக்கொண்டு அதுவும் சிற்சில பேர் களே யிருப்பார்கள்போல் தெரிகிறது. சரீரத்தில் கொஞ்சம் இரத்தம் ஊறிவிட்டால்,

வெண்பா.

கன்னலின்றி வேம்புநுகர் காமத் துரோகிகள்போல்
பின்னையொரு தெய்வத்தைப் பேசோமே—என்னாளுஞ்
சாற்றுவதுங் காமகலை சாதிப்ப துங்காணம்
போற்றுவதுங் காமனடிப் போது

என்ற செய்யுட் கருத்தின்படி மன்மதனையே குலதெய்வ மாக வணங்கி, மன்மதனுக்கே அடிமையாவதுடன் "பழைய குப்பானே குப்பான்" என்ற பழமொழிக்கும் இலக்காகி றார்கள்.

பட்டினத்துப்பிள்ளை.

முப்போது மன்னம் புசிக்கவுந் தூங்கவு மோகத்திலே
செப்போ திளமுலை யாருடன் சேரவும் சீவன்விடும்
அப்போது கண்கலக் கப்பட வும்மமைத் தாயையனே
எப்போது காணவல் லேன்றிருக் காளத்தி யீச்சுரனே.

நாறுங் குருதிச் சலதாரை தோற்புரை நாடொறுஞ்சீ
யூறு மலக்குழி காமத் துவாரம் ஒளித்திடும்புண்
தேறுந் தசைப்பிளப் பந்தரங் கத்துள சிற்றின்பம்விட்
டேறும் பதந்தரு வாய்திருக் காளத்தி யீச்சுரனே.

துணங்குடியார்.

பெண்ணா லுலகமெல்லாம் பிணக்காட தாகியையோ!
மண்ணாய் மடிவதென்ன மாயம் நந்தீஸ்வரனே

என்று கூறியுள்ளார். அதனால் மாதர்களால் ஆடவர்கள் கெட்டுப் போகிறார்களென்பது மேற்கூறிய செய்யுளின் கருத்தல்ல. பெண்களை விரும்பி ஆண்கள் கெட்டுப் போகிறார்கள் என்பது தான் கருத்து. இதனால் ஆடவர்களா லேயே மாதர்கள் கெட்டுப் போகிறார்களென்பது விளங்கு கின்றது. ஏனெனில், பெண்களுக்குக் காம இச்சை அதிக மாக ஏற்பட்டிருப்பினும் அதை வெளிக்குக் காட்டிக்கொள் வதுமில்லை; அநேகமாய்த் தானே வலிய விரும்புகிறது மில்லை. சில ஆண்மக்களோ அவ்வாறின்றி விடக்கிருக்கு மிடத்தை யறிந்த ஞமலி சுழன்று திரிவதைப்போல, மட மகளிர்கள் இருக்குமிடத்தையே சதா உருகி நினைந்து கொண்டும், பெண் ஞமலியானது சள், சள் என்று உறுமிக் குலைக்க, ஆண் ஞமலியானது அதைச் சகித்துக்கொண்டு மெல்ல மெல்ல அதனிடம் நெருங்குவதுபோல, மாதர்கள் பிணங்கிக்கொண்டால் காலைப் பிடிப்பதும், அவர்கள் காலால் உதைத்தாலும் நீ உதைக்க நான் எண்ண புண்ணியஞ்

செய்தேனே! என்று புகழ்வதும், அவள் எவ்வளவு கடூர மான கெட்ட வார்த்தைகளைச் சொல்லி, வெட்கமற்ற நாயே! கழுதையே! குரங்கே! என்று திட்டினாலும்

ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன்

என்ற திருக்குறட்பாக் கருத்தின்படி, அவர்கள் வாயில் வந்த படி நிந்தித்தால் அத்தனையும் அமுதவாக்கென்று மகிழ்ந்து கெஞ்சி, எனக்கு நீதான் உயிர்ப்பிச்சை கொடுத்தருள வேண்டும் என்று மன்றாடிப் பல்லை இளிக்கிறார்கள். இவ் வாறு பல்லை இளிப்பது ஒருவகை நியாயமென்றும், சீவ இயற்கையென்றும் சில நூற்களும் ஓலமிடுகின்றன.

ஆதி பகவன் றனதுசட றணிப்பான் பணிய வவ்விறைவன்
பாத மிறைஞ்சு மதற்கு நெற்றிப் பகையுமல்குற் பகையுமாஞ்
சீத மதியு மரவும்விழுஞ் செயற்கு முவகை செயாமலலை
மாது பணியு மதற்குமன மகிழு முமையை வணங்குவாம்

என்ற பிரபுலிங்கலீலைக் கருத்தின்படி, பரமசிவன் தனது சடா டவியில் கங்கையென்னும் ஒரு பெண்ணை மறைவாக வைத் ததனால், அதை யறிந்த உமாதேவி பரமசிவனோடு பிணங்கிக் கொள்ள, அந்த மனஸ்தாபம் நீங்கும்படி உமாதேவி பாதத் தில் பரமசிவன் தலையால் விழுந்து வணங்க, முழுமுதற் கடவுளாகிய பரமசிவம் நமது காலில் விழுந்து வணங்கி விட்டால் பிணக்கை விட்டுவிடுவோம் என்று, கருதாமலும் தனது நெற்றிக்கும்-நிதம்பத்துக்கும் பகையாக அவரது சடாடவியிலுள்ள இளஞ்சந்திரனும் சர்ப்பமும் நமது காலில் விழுந்து விட்டதென்றும் மகிழாமல், தமது சக்களத்தியாகிய கங்கை என்பவள் வணங்கிவிட்டாள், ஆகையால் நமது நாத னுக்கும் நமக்கும் பிணக்கில்லை என்று உமாதேவி பரமசிவ னோடு நேசமாகிவிட்டாள் என்று சுருதிகள் கூறுகின்றன.

ஆகையால் பெண்கள் பிணங்குவதும் ஆண்கள் வணங்குவதும் சகசம் என்றும் கூறுகிறார்கள். அன்றியும்,

கதலி வீரர் களத்திடை வையினுங்
குதலை வாயிற் குளவிகள் வையினும்
மதன லீலையில் மங்கையர் வையினும்
இத முறச்செவிக் கின்பமுண் டாகுமே

என்றபடி சையோக காலத்தில் மாதர்கள் வைவது செவிக்கின்பமென்றும், உதைப்பதும், கடிப்பதும், காரித்துப்புவதும், உடலுக்கின்பமென்றும் அநேக கலவிப் பிரியர்கள் வருணித்திருக்கிறார்கள். இந்த வருணனையைப் படித்துணர்ந்த சில மூடங்கள் அதை ஒரு இன்பமென்றே கருதுகிறார்கள். அடடா! என்ன இன்பம்! என்ன ஆனந்தமோ! தெரியவில்லை. மாட்டுக்குடலைத் தின்பவன் அதை மாலையாகவும் போட்டுக்கொள்ளப் பிரியப்படுவானோ! அங்ஙனமாயின் கடிப்பதும் உதைப்பதும் உடற்கின்பமேயாம்.

திருப்புகழ்.

(1) கோமள வெற்பினை யொத்தத னத்தியர்
காமனை யொப்பவர் சித்தமு ருக்கியர்
கோவையி தழ்க்கனி நித்தமும் விற்பவர் மயில்காடை

கோகில நட்புற வொத்திடு புட்குர
லாரணி யப்புள்வ கைக்குரல் கற்றியர்
கோலவி ழிக்கடை யிட்டும ருட்டியர் விரகாலே

தூமம லர்ப்பளி மெத்தைப டுப்பவ
ராரையு மெத்திம னைக்கு ளழைப்பவர்
சோலைவ னக்கிளி யொத்தமொ ழிச்சியர் நெறிகூடா

தூசுநெ கிழ்த்தரை சுற்றியு டுப்பவர்
காசுப றிக்கம றித்துமு யக்கியர்
தோதக வித்தைப டித்துந டிப்பவ ருறவாமோ

(2) ஒருவரைத் தனிமனைச் சயனமெத் தையினில்வைத்
தொருவரைத் தமதலைக் கடையினிற் சுழலவிட்
டொருவரைப் பரபரப் பொடுதெருத் திரியவிட் டினிதாக

ஒருவரைத் தமதணைக் கருகுறப் புணரவிட்
டொருவரைப் பரவசப் படவுடற் றழுவலுற்
றுயிர்பிழைப் பதுகழுத் தளவுமுப் பசமெனச் செயுமாஞர்

தருமயற் ப்ரமைதனிற் றவநெறிக் கயலெனச்
சரியையிற் கிரியையிற் றவமுமற் றெனதுகைத்
தனமவத் தினிலிறைத் தெவருமுற் றிகழ்வுறத் திரிவேனைச்

சகலதுர்க் குணமறச் சகலசற் குணமுறத்
தரணியிற் புகழ்பெறக் கருணையுற் றுனதுபொற்
சரணமெப் பொழுதுநட் பொடுநினைத் திடவருட் டருளாயே.

சிற்றறிவுடைய நாய், நரி, ஆடு, மாடுமுதலிய விலங்கினங்களுக்காவது இன்னின்ன காலங்களிலேயே புணர்ச்சி செய்வதென்று ஒரு வரம்பேற்பட்டிருக்கின்றது; பெண் விலங்கு கெர்ப்பமாயிருந்தால் ஆண்விலங்கு மோப்பத்தாலறிந்து நீங்கிவிடுகின்றது. "ஆறு குளங்களுக்கு கரையேற்பட்டிருந்தும் சமுத்திரத்திற்குக் கரையில்லாததுபோல" பேரறிவுடைய மானிடர்கட்கோ வான் முறையும் கால நிருணயமும் கிடையாது. "எப்போது மோகவலை-எப்போதுமோ கவலை" என்ற ஆன்றோர் வாக்கியப்படி மாதர்கள் பூரணகெர்ப்பவதியாயிருக்குங் காலத்திலும், மாதாந்த காலத்திலுங் கூடச் சிலர் கலவியை விரும்புகிறார்கள். இவற்றைப் பிறரிடத்திற் சொல்ல வெட்கமாயிருப்பினும் "மனதை யொழித்தொரு வஞ்சகமில்லை" என்பதுபோல அவரவர்கட்குத் தானே தெரியாமற்போகாது. இச்சம்பவங்கள் பெண்களிடத்திற் காணப்படாமல் ஆடவர்களிடத்திலேயே மிகவும் காணப்படுவதாலும், அரிசியில்லை, பருப்

பில்லை, உப்பில்லை, மிளகாயில்லை என்று மனைவி சொன்ன வுடன் (*) ஊழியக்காரனிலும் கேவலமாய்த் தொண்டு செய் வதாலும், மாதர் கட்கு ஆடவர்கள் அடிமையே யன்றி, ஆடவர்கட்கு மாதர்கள் அடிமையென்று கருதுவது எவ் வளவு மதியீனம்! இதுகாரணம் பற்றியே குணங்குடியார்,

"மானுபி மான மடமையைப் போக்கவும்
மாதர்க் கடிமைப் படாதென்னைக் காக்கவும்"

எனத் திருவாய்மலர்ந்தருளி யுள்ளார்.

இங்ஙனம் ஆடவர்கள் சென்று மாதர்கட்கு அடிமையா யிருந்து, குற்றேவல் கிடைத்தால் போதுமென்றுசெய்து இழிவை யடைகிறார்கள். அங்ஙனமிருக்க சிலகவிவாணர்களும் யோகம் படித்தவர்களும், ஞானம் படித்தவர்களும், ஆடவர் களால் மாதர்கள் கெடுகிறார்களா? மாதர்களால் ஆடவர்கள் கெடுகிறார்களா? என்று ஊகித்துணரும் ஆற்ற லின்றி, ஒரு தலைப்பட்சமாக, பெண்களே கெட்டவர்கள்! பெண்களே கெட்டவர்கள்!! என்று சொல்லியிருக்கிறார்கள். இப்படித் தானிருக்கும் இவர்கள் யோகமும் ஞானமும். ஆகையால் நீங்கள் பெண்களுக்கு அடிமையாவதிலிருந்தும், பெண் களுக்குத் தோஷம் கற்பிப்பதிலிருந்தும் நீங்கி உண்மையான யோகஞான வழியிற்செல்ல ஆசைகொள்ளுங்கள்.

---

(*) ஊழியக்காரனிலுங் கேவலமென்றதானது:—ஊழியக்காரன் எசமான் கொடுக்கும் சம்பளத்திற்கே ஊழியஞ்செய்கிறான், ஆடவர் களோ! தனது பொருளையுஞ் செலவழித்துப் புழுக்கைவேலையுஞ் செய்கிறார்கள்.

விவேகசிந்தாமணி.

அன்னையை யனைய தோழி அறந்தனை வளர்க்கு மாதே
உன்னையோ ருண்மை கேட்பேன் உரைதெரிந் துரைத்தல் வேண்டும்
என்னையே புணரு வோர்கள் எனக்குமோ ரின்ப நல்கிப்
பொன்னையுங் கொடுத்துப் பாதப் போதினில் வீழ்வ தேனோ.

சிவஞானவள்ளல்.

மங்கையர்தம் யோனிமிசை வைத்திருக்கும் ஆசையினைப்
பங்குசெய்து நூறிலொரு பங்கெடுத்துக்—கங்கையணி
வேணியரன் பாதார விந்தத்தில் வைத்தக்கால்
காணலாம் காணுக் கதி.

அகஸ்தியர் ஞானம்.

விந்துவிட்டுப் போகாதே விந்தைக் கட்டு
விதரணையா யதோமுகத்தி லிருந்து பாரு
விந்தைவிட்டால் யோகிகட்குச் சலனம் விந்து
விடாமலே வேதாந்தக் கயிற்ருற் கட்டே.

அகஸ்தியர் ஏமதத்துவம்.

விளம்புவோஞ் சுந்தரமே நன்ருய்க் கேளு
விந்தொழிய வேதாந்தம் வேருென் றில்லை
விளம்பக்கேள் விந்தைவிட்டால் நொந்து போவாய்
விதிதவறும் மதியதனுல் நோய்தா னுச்சு.

வைராக்கியசதகம்.

பெறுவ தென்னைகொல் சுக்கிலங் கழித்தலாற் பெருந்தவ வலிகுன்
உறுவ தவ்வள வோபினை நீவிரும் புடற்குமா னியதுண்டால் [றும்
அறிவி யாமறி யாமைதோய்ந் துடற்றின வதைச்சுக மெனநின்ருய்
செறிது நெஞ்சமே நமதுசிற் சுகமினிச் சிவனையா தரிப்பாயே.

உருவத்திற் பெரிய யானைமுதலிய விலங்குகளும், உருவத்தில் அதனிலும் சிறிய சிங்க கர்ச்சனையைக் கேட்டமாத்திரத்தில் தன்வலி குன்றித் தன்னைத் தப்பித்துக்கொள்ள எத்தனிக்கும். எவற்றிற்கும் அஞ்சாத நெஞ்ச முடையவரும் சர்ப்பத்தைக் கண்டவுடன் பயம் செனித்து வெருண்டு ஓடிப்போவார்கள். அதுபோல, மனோலயமடைந்த தவவலிமை யுடையவர்களும், நூற்பகவைப் போன்ற மருங்குலாற் சிங்கத்தையும், படர்ந்த கடிதடத்

தாற் சர்ப்பத்தையும் நிகர்த்த மடமாதர்களது மொழிக்கு மொழி தித்திக்கும் இனியவஞ்சகமான வார்த்தைகளைக் காதிற்கேட்கும்போதே அஞ்சித் தன்னைத் தப்பித்துக் கொள்ள முயலவேண்டும். அங்ஙனமின்றி, “பாம்பொடு பழகேல்” என்னும் ஔவைப் பிராட்டியார் திருவாக்கியத்தை மறந்து ஒருவன் சர்ப்பத்துடன் பழகினால் ஒரு சமயமின்றி ஒருசமயம் அச் சர்ப்பத்தாற் கடியுண்டு விஷமேறிப் பிராணனை இழக்கநேரிடும். அதுபோல, ஸ்திரீகளாகிய பெண்ணரவுடன் பழகும் அப்பியாசிகள் ஒருசமயமில்லாவிட்டாலும் ஒரு சமயத்தில் அந்தப்பெண் பாம்பினாற் கடியுண்டு தவமென்னும் உயிரை இழப்பது நிச்சயம். ஏனெனிற் காமத்தைச் செயிப்பது எவர்க்கும் அரிது.

தாயுமானவர்.

கற்கண்டா லோடுகின்ற காக்கைபோற் பொய்ம்மாயச்
சொற்கண்டா லோடும்அன்பர் தோய்வறிவ தென்னாளோ.

விவேகசிந்தாமணி.

உணங்கி யொருகால் முடமாகி யொருகண் ணின்றிச் செவியிழந்து
வணங்கு நெடுவா லறுப்புண்டு மன்னு முதுகில் வயிறொட்டி
அணங்கு நலிய மூப்பெய்தி யகல்வா யோடு கழுத்தேந்திச்
சுணங்கன் முடுவல் பின்சென்றால் யாரைக் காமன் றுயர்செய்யான்.

காமமே குலத்தினையு நலத்தினையுங் கெடுக்கவந்த களங்க மாகும்
காமமே தரித்திரங்க ளனைத்தினையும் புகட்டிவைக்குங் கடார மாகும்
காமமே பரகதிக்குச் செல்லாமல் வழியடைக்குங் கபாட மாகும்
காமமே யனைவரையும் பகையாக்கிக் கழுத்தறுக்குங் கத்தி தானே.

சிவஞானவள்ளல்.

காமத்தால் இந்திரன் கலக்க மெய்தினன்
காமத்தால் இராவணன் கருத்த ழிந்தனன்
காமத்தாற் கீசகன் கவலை யுற்றனன்
காமத்தால் இறந்தவர் கணக்கி லார்களே.

திருமந்திரம்.

யோகியு ஞானியு முத்தம சித்தனும்
யோகியு ஞான புரந்தர னுவோனு
மோக முறினு முரையமிர் துண்போனு
மாகிய விந்து வழியாத வண்ணலே.

பிரபுலிங்கலீலை.

பாவமும் பழியு நல்கும் பல்வகைப் புகழ றங்கள்
யாவையு மழிக்கு மெய்து மின்பமு மதனு லெய்தும்
நோவுநன் மரபுஞ் செய்யும் நோன்புநல் லொழுக்கு மேன்மை
சாவுமெண் ணுரும னிற்குந் தயங்குபுன் காம மென்பார்.

காமத்தால் உடனே கிடைக்கும் சிற்றின்பமானது இரண்டு பைசாவுக்கு ஒருசேர் கத்தரிக்காய் வாங்கி மூன்று பைசாவுக்கு விற்கும் சிறிய வியாபாரத்தை நிகர்க்கும். மெய்ஞ்ஞான வைராக்கியங்கொண்டு ஊணுறக்கமின்றிப் பல நாள் முயன்று செய்யும் தவத்தின் பேரின்பமானது, ஓர் வித்வான் நெடுநாள் ஒரு சாஸ்திரத்தை எழுதி அரங்கேற்றி, அதனுற் பெருந்தொகையும் புகழும்பெற்று வாழ்வதை நிகர்க்கும். சிற்றின்ப சுகத்தினல் வெட்டை, மேகம் முதலிய வியாதிகள் சம்பவிக்கும்; மெய்ஞ்ஞானமாகிய பேரின்ப சுகத்தினுல் எவராலும் நீக்குவதற்கரிதாகிய ஜனன-மாண மென்னும் பிணி நீங்கி நித்தியானந்த வாழ்வுண்டாகும்.

திருமந்திரம்

பார்க்கின்ற மாதரைப் பாரா தகன்றுபோய்
ஓர்க்கின்ற வுள்ளம் உருக வனல்மூட்டிப்
பார்க்கின்ற கண்ணுசை பாழ்பட்ட மூலத்தே
சேர்க்கின்ற யோகி சிவயோகி தானே.

கள், சாராயம் முதலிய மதுபானங்களை நினைத்தாலும், கண்டாலும், தொட்டாலும், மிதமிஞ்சிப் பருகாவிட்டாலும், போதை யுண்டாகாது. மடந்தையர்களது காம

மானதோ அப்படியில்லை; சாஸ்திரங்களில் வருணிக்கும் போதும், பிறர் வருணித்துச் சொல்லும்போதும், முன் கண்ட மாதர்களை நினைக்கும்போதும், அழகிய மாதர்களைக் காணும்போதும், அவர்கள் பரிசமுண்டாகும்போதும் அளவிறந்த காமவெறியுண்டாகும். கள் முதலிய மதுபானங்களைச் சாப்பிட்டாற் கொஞ்சநோத்தில் வெறி நீங்கிவிடும்; காமத்தினுல் வந்த வெறியோ? அப்படி நீங்காது.

திருக்குறள்.

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

திருவிளையாடல்.

கள்ளுண்டல் காம மென்ப கருத்தறை போக்குச் செய்வ
தெள்ளுண்ட காமம் போல வெண்ணினிற் காணிற் கேட்கிற்
றள்ளுண்ட விடத்தி னஞ்சந் தலைக்கொண்டா லென்ன வாங்கே
யுள்ளுண்ட வுணர்வு போக்கா துண்டபோ தழிக்குங் கள்ளுண்.

காமமே கொலைகட் கெல்லாம் காரணங் கண்ணோ டாத
காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சும்
காமமே கள்ளுண் டற்குங் காரண மாத லாலே
காமமே நரக பூமி காணியாக் கொடுப்ப தென்றான்.

மகாமேருவின் உச்சியினின்றும் விழாநின்ற விரிந்த அலையையுடைய கங்காசலத்தைப்போல, முத்து மாலை பொருந்தி விளங்குகின்ற அழகிய ஆபாணத்தை யணிந்த மாதர்களுடைய தனங்களானவை ஊர்ப்புறத்திலுள்ள சுடுகாட்டிலடைந்த காலத்தில், அன்னத்தின் கவளத்தைப் போல வரிசைவரிசையாக வந்து *ஞாளிகளானவை புசிக்கும்.

சூடுள்ளதாயும், கூந்தலென்னுந் தூமமுள்ளதாயும், கண்ணென்னுந் தீக்கின்றதொழிலையுடைய தாயுமிருக்கின்ற

* ஞாளி, ஞமலி என்பன நாயின் மறுபெயர்கள்.

பாவமென்னும் அக்கினியில், மகளிரென்னுஞ் சுவாலையானது துரும்பைப்போல எவரைத்தானெரிக்காது. சேய்மையினுலெரிகின்ற நாகாக்கினிக்கு மடவாருடைய குளிர்ந்த தேகமானது உலர்ந்த விறகாம்.

கரிய விழிகளையுடைய மகளிர்கள், அறியாமை நிறைந்த மனதையுடைய மானிடராகிய பட்சியைப் பிடிக்கும் பொருட்டு, மன்மதனுகிற கிராதகன் எறியாநின்ற வலைக்குச் சமானமாவார்கள். கொடிய மனமென்கிற சேறு நிறைந்த பிறவியென்னுஞ் சிறு குளத்தில், மனிதராகிய மீனைக்கவர்தற்கு, காலவாதனையென்னும் பாசத்திற் பூட்டிய தூண்டின் முள்ளிலுள்ள இரையாகிய மாமிசத்துக் கிணையாவார்.

மிகுந்த துக்கத்தைப் பூட்டியிருக்கிற பூட்டாகவும், முடிவில்லாத இராகத் துவேஷங்களென்கிற இரத்தினங்கள் வைத்திருக்குஞ் சம்புடமாகவுமிருக்கின்ற மடமாதர்களது சுகத்தை விரும்பேன். இது மாமிசம், இது ரத்தம், இது எலும்பு, இது நரம்பென்று விசாரிக்கில், சந்திரவதனத்தையுடைய மகளிரது ஆசையானது சில தினத்தில் பகையாம்.

மனைவியை யுடையவன் எவனோ அவனுக்கே மோகத்திலாசையுண்டாம். மனைவியில்லாதவனுக்குப் புணர்ச்சியின்பமெவ்விடத் துண்டாகும். போகத்துக் கிடமான பெண்ணைவிட்டால் மனதின் கணுள்ள உலகபந்தம்போகும். நாமமாத்திரமான உலக வாசனை நீங்கினுல் நீங்காத பேரானந்த முதயமாகும்.

விசாரமின்றி வரும் சமயத்தில் இன்பமாகியும், வந்தபின் இசைபாடா நின்ற வண்டின் இறகைப்போல் எக்காலமும் சஞ்சலிப்பதாயும், நீக்குதற்கு அரிதாயுமிருக்கின்ற மகளிரது அனுபோகத்தை வியாதி, வயோதிகம், இறப்பு முதலான துன்பங்களுக்குப் பயந்து மனதில் இச்சிக்கேன்.

பெறுவதற்கரிய பிரமபதத்தை இனி எப்படி அடைவேன் என்று இராமபிரான் கூறியுள்ளனர்.

ஒருவன் சிற்றின்பத்தைச் சிறிதும் கைவிடாமற் பேரின்பத்தையும் அடைய விரும்புவது எத்தன்மையாகுமெனில், பஞ்சு மூட்டையைத் தலையிற்சுமந்து செல்லும் ஒரு பிரயாணி, ஆற்றிலிறங்கித் தண்ணீர் நிலைக்காமல் தத்தளிக்கும்போது தண்ணீரால் நனைந்த பஞ்சுமூட்டையைக் கைவிடாமல் தன்னுயிரைத்தப்பிக்க முயற்சிப்பதுபோலாகும்.

நமக்கெதிர்த்த வீட்டிற் கலியாணம் நடக்கும்போது நமக்கு மனோற்சாகமும், அவ்வீட்டில் ஒருவர் இறந்துவிட்டால் நமக்கும் இப்படித்தானே என்கிற மயான வைராக்கியமாகிய விசனமும் உண்டாகும். அதுபோல, மகான்களாகிய சாதுசங்கப் பழக்கத்தினால் ஆன்மஞானமும், மாதர்களாகிய மாதுசங்கப் பழக்கத்தினால் வெட்டை முதலிய ரோகங்களும் சம்பவிக்கும்.

காக்கைக்குப் பகற்காலத்திலேயே கண் நன்றாய்த் தெரியும்; அதன் பகையாகிய கூகைக்கு இராக்காலத்திலேயே தெளிவாய்க் கண் தெரியும். அதுபோல, நல்லோர்களுக்கு மகான்களது வரவும், அவர்களுக்கு ஊழியம்செய்வதும் விருப்பமாக இருக்கும். தீயோர்களுக்கு அதிக ரூபலாவண்யம் மிகுந்த மாதர்களது வரவும், அவர்களுக்குக் குற்றேவல் செய்வதும் பிரியமாக இருக்கும்.

பள்ளிக்கூடத்திற் கல்விகற்கும் சிறு மாணவர்களிற் சிலர் பள்ளிக்கூடத்திற்கு வாராமல் விளையாடிக்கொண்டிருந்தால், அதை உபாத்தியாயர் அறிந்து அப்பையன்களைப் பிடித்துக்கொண்டு வரும்படிச்செய்து, உன்னாலே நான்கெட்டேன்! என்னாலே நீ கெட்டாய்! என்று சொல்லித் தோப்புக்கரணம் போடும்படிச் செய்வார். அதுபோல், ஆடவரும்

மகளிரும் முத்தியடையவேண்டிய வழிகளிருக்க, ஆண் பிள்ளைகளாற் பெண் பிள்ளைகளும், பெண்பிள்ளைகளால் ஆண்பிள்ளைகளும் கலவிப் பிரியாகிக் கெட்டுப்போகின்றார் கள்.

ஒருவன் பெண்போகத்தை மட்டிலும் நிறுத்திவிட்டு யோக ஞானத்தை அநுஷ்டிக்காமல் தனக்கு ஞானோதயம் ஆகும்—ஆகும் என நினைந்துகொண்டிருப்பது எத்தன்மை யாகுமெனில்; தனது நிலத்தை உழவுமட்டிலும் செய்து பயிரிடாமல் வறிதேயிருந்துகொண்டு, நெல் முதலிய தானி யங்கள் தனக்கு விளையும் விளையும் என்று எண்ணிக் கொண் டிருந்ததுபோலாகும்.

தேள், பூரான், செய்யான் முதலிய செந்துக்களாற் கடி யுண்டு விஷம் ஏற்படினும், அவை சிறிய மந்திரங்களா லும் ஔடதங்களாலும் நிவர்த்தியாகிவிடும். நல்லபாம்பு, விரியன் முதலிய கொடிய சர்ப்பங்களாற் கடியுண்டு விஷம் ஏற்பட்டால், அவை மணி-மந்திர ஔடதங்களாலும் ஒருசமயம் நீங்குவது அருமை. அதுபோல, மண், பொன் முதலிய ஆசையில் ஒருவன் மயங்கினாலும், அவை சில சம யங்களிற் கல்வி, கேள்விகளால் நீங்கிவிடும். பெண்ணாசை யில் மூழ்கியவனுக்கோ எந்தச் சாஸ்திரங்களைப்போதித் தாலும் அந்த மாயை நீங்குவது மிக்க அருமை.

ஆகாயத்தில் மேகம் உண்டாவதற்கு வாயுவே காரண மாயிருப்பதுபோல, சகல ஆசைகளும் உண்டாவதற்கு மாதர்களே காரண பூதமாயிருக்கின்றார்கள். இவ்வுலகத்தில் மாதர்களுக்காகவே கட்டில், மெத்தை, வட்டில், செம்பு களைத் தயாரிக்கிறார்களேயன்றி கட்டில், மெத்தை, வீடு வாசல்களுக்காக மாதர்களைத் தயாரிப்பதில்லை. ஒருவன், ஒருபெண்ணைக் கலியாணம் செய்துகொள்ள விரும்பி

அதற்கு முதற்காரணமான மாங்கலியத்தைச் செய்வானே யல்லாமல், தாலி என்னும் மாங்கலியத்திற்காக ஒருபெண் ணைத் தேடி யலையமாட்டான். ஆகையால், சகல ஆசை களும் உண்டாவதற்குக் காரணமான மாதுசங்கத்தை நீங் கிச் சகல ஆசைகளையுந் தவிர்த்த சாதுசங்கத்தை யடைய வேண்டும்.

பட்டினத் தடிகள்.

காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டியென் கண்ணெதிரே
மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட
தூதென்றெண் ணுமல் சுகமென்று நாடமித் துர்ப்புத்திக்கு
ஏதென் றெடுத்துரைப்பே னிறை வாகச்சி யேகம்பனே.

தாயுமானவர்.

தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையிலே நடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற்கீற்றிலே
பொட்டிலே யவர்கட்டு பட்டிலே புனைகந்தப்
பொடியிலே யடியிலேமேற்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலே யலையாம லறிவிலே பொறையிலே
நின்னடியர் கூட்டத்திலே
நிலைபெற்ற அன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்திலே யுனிருதாள்
மட்டிலே மனதுசெல நினதருளு மருள்வையோ
வளமருவு தேவையரசே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெண் ணுமையே.

பராசத்தியின் பரிபாலனம்.

மாதாவாய் வந்து அமிர்தந்தந் தாள்மனை
யாட்டியாய் வந்து சுகங்கொடுத் தான்
ஆதர வாகிய தங்கையா னுள்நமக்
காசைக் கொழுந்தியும் மாமியா னுன்

என்ற ஆன்ருேர் வாக்கியத்தால் நம்மையீன்று பாலூட்டி வளர்த்த மாதாவும், மனைவியும், தங்கை முதலிய ஏனைய மகளிர்களும், ஒரே சத்தியினுடைய அமிசமென்றும், அதனுல் பெற்றதாயும், பெண்சாதியும் பொதுவாக ஒரே அமிசமென நன்ருய் விளங்குகின்றது.

பராசத்தியினது அமிசமாகிய நமது தாயானவள், நம்மைப்பெற்று நமது உடலும்-உயிரும் நிலைக்கும்படி மாயாவேசத்தால், தன்னிடத்திலுண்டாகும் அமிர்தமாகியபாலைத் தனது பயோதரத்தின் வழியாக நமக்கு 16 வருடத் தவணைக்குக் கடன்கொடுக்கிருள். நமக்கு 16 வயது வந்தவுடன் தவணை முடிந்துவிட்டதென்று சத்தியானவள், தான் முன் கொடுத்த பாற்கடன் தொகையை வசூலிக்க எண்ணி, மன்மதனென்னும் சேவகன் மூலமாய் நமக்குப் பல தடவைகளிலும் அறிவிக்கிருள். சிறிதுகாலஞ் சென்றபின் இப்போது நமது கடனைக் கொடுப்பதற்கு வட்டிமுதல் தொகையுடன் தயாராக இருப்பானென்றுணர்ந்து, ஒரே தடவையிற் கடன்காரன் மனம் வருந்தும்படியாகத் தொகையை வசூலிக்கப் படாதென்று, சர்வாடவர்ப் பிரீதியாயுள்ள தமது பிரதிநிதியாகிய பெண்களை, நாமேதேடி எதிர்சென்று அழைத்துவந்து, வேதியர்களால் ஆசிர்வதிக்கும்படி செய்து, நாமே வலிந்து கடனைப்பெற்றுக்கொள்ளும்படி பன்முறை அவளிடம் கெஞ்சிச் சொல்லும்படியாக நமக்கு மனைவியென்னும் பெயருடன் அனுப்பிவைக்கிருள்.

சத்தியினது பிரதிநிதியாகிய நமது மனைவியானவள், உலக வாழ்க்கையை அடையவிரும்பும் நமது சரீரமாகிய முதலை நன்றாயுணர்ந்து, நாம் ஒரேமுறையில் இவனிடத்தில் விந்தென்னும் கடன் தொகையைப்பெற எண்ணுவோமானால், இவன் சரீரமென்னும் முதல் அழிந்துபோவதுடன் நமது முழுத்தொகையும் வசூலாகாது. ஆதலால், இவனிடத்திற் சிலகாலமிருந்தாவது நமது எசமாட்டி கொடுத்த பாற்கடனை வசூலிப்போமென்று கருதி, "தோலிருக்கச் சுளையை விழுங்கினதுபோல்" நமது சரீரமாகிய முதலை, மனமென்னும் வணிகனைக்கொண்டு, உலக விவகாரமென்னும் வியாபாரத்தை நடத்தி, சரீரமென்னும் முதலினாலுண்டாகும் இந்திரியமென்னும் இலாபத்தை அப்போதைக்கப்போது வசூற்பண்ணிக் கொண்டிருக்கின்றாள்.

இந்த அந்தரங்கத்தையறிந்து, ஞானேஸ்வரியத்தில் பேராசைபிடித்த சில பக்காப்பேர்வழிகள் என்ன செய்கிறார்களென்றால், சத்தியானவள் முன் நாம் அறியாப்பருவத்தில் நாம் கேட்கு முன்னம் தாமே வலிந்துகொடுத்த பாற்கடன் தொகையை, இப்போது "வலியக் கூப்பிட்டுக் கள்ளூற்றி, மயிரைப் பிடித்துக்கோண்டு காசு கேட்பது போல்" கேட்க ஆரம்பிக்கிறாள்; நமது கையிலுள்ள பொருளைக்கொடுத்துவிட்டு எவ்வாறு சீவிக்கப்போகிறோம்; கொடுக்காவிட்டால் நம்மைப் பலவிதமான தொந்தரவுகள் செய்வாள்; ஆகையால், இவள் ஆளுகைக்குட்பட்ட நாடு, நகரங்களைக்கடந்து, சந்நியாசமென்னுங் காட்டுக்கு ஓடிப்போய் விடுவோம் என்று பலநாள் 'காலங் கருதி யிருப்பர் கலங்காது, ஞாலங் கருதுபவர்' என்னுங் திருக்குறள் வாக்கின்படி சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து, சமயம் நேர்ந்தவுடன் துறவுபூண்டு வனத்திற்கு ஓடிப்போகின்றார்கள்.

அதையுணர்ந்த சத்தியென்னும் இராணியானவள் சினங்கொண்டெழுந்து, "கடன்காரப் பயலுக்கு அவ்வளவு தைரியமா?" என்று ஆக்கிரமித்து, உடனே மன்மதனுக்கு அறிவிக்க, அந்த மன்மதன் துறவியாகிய கடன்காரனிருக்கு மிடத்தைக் தேடிக் கண்டுபிடித்து கடன் தொகையைக் கேட்க, பிரதிவாதி சரியான பதில் சொல்லாமல் சால்சாப் புச் சொல்வதை யறிந்து, பலவிதத் தந்திர வுபாயங்கள் செய்தும் பலிக்காமல் தனது எசமாட்டியிடம் தெரிவிக் கிறான். அதன்பின் சத்தியானவள் மாதர்கள் மூலமாய்ச் சையோகமென்னும் வாரண்டை யனுப்பிவைக்கிறாள். அதற் குந் தப்பித்துக்கொள்ள, சத்தியானவள் தான் அனுப்பிய வாரண்டுகளுக்கெல்லாம் பிரதிவாதியாகிய துறவி ஒளித்துக் கொள்வதை யுணர்ந்து, தானே நேரிற்சென்று கனவில் இந் திரிய ஸ்கலித பரிசோதனையென்னும் பிடிவாரண்டு பிறப்பிக் கிறாள். அப்போது, பிரதிவாதி இனிமேல் தப்பித்துக் கொள்ள முடியாதென்றெண்ணி, தனது முதலாளியாகிய பெருமாட்டியிடம் சாஷ்டாங்க தண்டஞ்சமர்ப்பித்து, கை கட்டி நின்று,

காணப்பட்டதெல்லாந் தனது அம்சமாகவுடைய பெரு மாட்டியே! சருவசீவராசிகளையுங் காத்திரட்சிக்கும் லோக மாதாவே! இப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாயுள்ள பிர ணவ சொரூபியே! ஏகசக்ரவர்த்தினியாகிய ஈஸ்வரியே! அடியேனுக்கு நீ கொடுத்த பாற்கடனை மன்னித்திரட்சிக்கத் தான் வேண்டும், அங்ஙனம் மன்னிப்புச் செய்வையாகில் உனது அழியாத கிருபாநிதிக்கு யாதேனுங் குறைவு ஏற் படுமா? ஏன் மன்னித்தாயென நின்னைக் கேட்பவரு முண்டா?

உற்றநோய் நீக்கி யுறுஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்

என்னுங் திருக்குறட் கருத்தின்படி பற்பலவாறு தோத்திரம்பண்ணிக் கெஞ்சிக்கேட்டு மன்றாடுகிறான். அவன் கெஞ்சுந் தன்மைக்கும், அவனுடைய திடச்சித்தத்துக்கும் இரக்கமும், வியப்புமடைந்து, தான் கொடுத்தகடனை மன்னித்து, அவனைத் தனக்கு உண்மையான ஊழியனாக இருக்கும்படி ஆக்ஞாபித்து, அவனுடைய உண்மையை முற்றிலுஞ் சோதித்து, அருளாகிய பெரும்பொருளை மேன்மேலுங் கொடுத்து மெய்ஞ்ஞானச் செல்வவந்தனாக்கி விடுகிறாள்.

சிலகாலம் எமன் விட்டதூதாகிய மாதர்களுடன் அவர்கள் மாயவலைக்குட் சிக்கியிருந்தாலும் 30, 40 வயதுக்குமேலாவது சகலபற்றுக்களையும், "சட்டிசுட்டது கைவிட்டது" என்பதுபோல் நீக்கி, ஆன்மவிசாரத்தில் அழுந்தி, தனது எதார்த்த சொரூபத்தைப் பாவனையாகவும், பாவனாதீதமாகவும் அநுஷ்டிக்கவேண்டுமேயன்றி எப்போதும் உயிர் நீங்குகிறவரையில், மூத்திரக்கேணியே சதமென்று மூன்றுவேளையும், (கூடுமானால்) அதற்கிடையிலும் பருத்திப்பொதியைப்போல வயிறுநிரம்பப் புசித்து விட்டு, பகற்காலத்திலும் கிறுபூறென்று குறட்டை விட்டுத் தூங்கவும், கடிதடத் தடாகத்தில் முழுகவும், அளவுக்கு மிஞ்சிப் புசித்து எமசாமங்களிலும் விரைந்து ஓடிப்போய் வயல், வாய்க்கால்களில் மலங்களைப் பிதுக்கவும், பிராணன் பிரியும்போது வருந்தவுங் கூடாதென்பதை ஒவ்வொருவரும் சொந்தக் காரியமாகக் கவனிக்கவேண்டும். ஆனால், "ஆராயும் வேளையில் பிரமாதியானாலும் ஐயவொரு செயலுமில்லை" என்றுதானிருக்கிறது.

சிவஞானவள்ளல்.

வரிக்கயலனைய கண்ணார் மாநலந் துய்த்த பின்னர்
விருத்தனாங் கால மேனும் விரத்தனா யாவு நீத்தே
இருக்குமந் நிலம கன்றோர் யோசனை யெய்தப் பெற்றால்
திருக்கண்மூன் றுடைய பெம்மான் சேவடி சேர்தல் திண்ணம்.

சூத்திர ராதி யாகத் தொழுகுலத் தவர் ருக
மூத்திரக் குழியி லாழ்ந்து மூழ்கிய பின்ன ரேனுங்
காத்திரத் தால்சே ரின்பங் கடையென விகர்து மூன்று
நேத்திரத் தானை நோக்கி நெடுவனம் புகுதல் வேண்டும்.

பத்திரகிரியார்.

வம்படிக்கும் மாதருடன் வாழ்ந்தாலு மன்னுபுளி
யம்பழமும் ஓடும்போ லாவதினி யெக்காலம்.

பட்டினத்துப்பிள்ளை.

எத்தனைபேர் நட்டகுழி எத்தனைபேர் தொட்டமுலை
எத்தனைபேர் பற்றி யிழுத்தவிதழ்—நித்தநித்தம்
பொய்யடா பேசும் புவியின்மட மாதரைவிட்
டுய்யடா வுய்யடா வுய்.

வாலிபர்கட்கு ஞானோபதேசம்.

ஏ! வாலிபர்களே! நீங்களோ இப்போது பாலத் தன்மை நீங்கி யெளவனத்தன்மை அடைந்திருக்கிறீர்கள்! உங்களின் வாழ்நாளின் முடிவைப்பற்றி முன் எச்சரிக்கை யோடு சிந்திக்கவேண்டிய சமயம் இதுவே. எந்தப் பொருள் உங்களிட மிருப்பதனால் தேகபலம், மனோபலம், வீரம், தேசசு, கம்பீரம், உற்சாகம், ஆரோக்கியம் முதலானவைகள் உங்களுக்கு உண்டாகின்றன? எந்தப் பொருள் உங்களிடமிருந்து வெளியேறி விட்டால் மேற் கூறியவைகளின் சொரூபமே யில்லாமல், சோம்பல்-தூக்கம்-துர்ப்பலம்-பிணி முதலானவைகள் சம்பவிக்கின்றன என்பதைச் சற்று ஆழ்ந்து சிந்தித்துப் பாருங்கள். உங்களுக்கு ஜீவரத்தினமாக விளங்கும் விந்து நாதத்தின் ஒரு துளியானது உங்கள் சரீரத்திலுள்ள சுமார் 80 துளி இரத்தத்தின் சத்தேயாம். அதாவது 80 துளி இரத்தம் ஒரு துளி விந்து நாதமாக மாறுகிறது. அத்தகைய மகிமை தங்கிய நித்திலமாகிய விந்து என்னும் சீவ ரசமானது அடிக்கடி

வெளியேறி விடுவதென்றால், மனிதனுடைய சீவியத்தில் இதைப் பார்க்கிலும் வேறொரு நட்டமுமுண்டா? சரீரத்திற்கு புறம்பாக ஏற்படும் நட்டத்தை மறுமிடத்தில் சம்பாதித்து விடலாம். சரீரத்திற்கு அகப்பொருளாகிய இந்திரியத்தைக் கலிதமாக்கி சரீரத்தைக் கெடுத்துவிட்டாலோ, அதைப் பழைய நிலைமைக்குக் கொண்டு வருவது சிரம சாத்தியமேயாம்.

ஏ! வாலிபர்களே! நீங்கள் நகரத்தின் வீதிகளில் நான்கு திசைகளிலும் கண்ணைச் செலுத்தாதீர்கள். அவ்விடங்களின் வசிக்கும் ஒய்யார நடை நடக்கும் பொய்யான மட மாதர்களை ஆசையோடு நோக்காதீர்கள். அவ்விடங்களில் அதிகமாக உலாவித் திரியாதீர்கள்.

பிறர்மனைக் கேகல் குற்றம் பெண்களைப் பார்த்தல் குற்றம்
முறைதப்பித் தைய லாரை மோகித்தல் பெரிய குற்றம்
இறைவரில் கன்னி மாரை யிச்சித்த விதன்மேற் குற்றம்
நிறையுல கத்தி லென்ற நீதிநீ யறிந்தி டாயே.

முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது

என்று பெரியோர்கள் சாங்கோபாங்கமாய்க் கூறிய நீதி வாக்கியமானது நமக்காக அவர்கள் திரட்டிவைத்த சேம நிதியேயன்றிச் சாமானிய மன்று.

நாணு மடவார்களைக் கண்ணினிற் காணுமுன்
நாணுண அருள் புரியவும்

என்ற குணங்குடியார் உயரிய நோக்கம்போல், நாணுகின்ற இளம்பெண்களைக் காணும்போது அவர்களை நோக்காமல் அந்தப் பெண்களை யௌவன திசை யடைந்த ஒரு வாலிபனாகவும் நீ ஒரு யுவதிப் பருவமடைந்த இளம்பெண்ணாகவும் கருதி, நீ நாணிக்கொண்டு உன் கண்களைத் திருப்பிக்கொள்.

இவற்றுள் எதைச் செய்ய உங்களுக்கு இஷ்டம் சொல்லுங்கள்!

ஏ! இளைஞர்களே! நீங்கள் அழகுடனும், ஆரோக திடகாத்திரத்துடனும், சிந்தித மனோரத சித்திகளைப் பெற்று நிகரில்லாத ஞானவீரர் என்று பெயர் தாங்கி ஆனந்த புருடராக விளங்குவதற்கு ஆசைப்படுகிறீர்களா? அல்லது உங்கள் சீவரத்தினமாகிய விந்து நாதத்தை அதிகமாக (பல மாதரிடத்தும்) செலவழித்து விட்டு பலவித கொடிய ரோகங்களுக்கு அடிமையாகி இஞ்சி தின்ற குரங்கைப்போல் பசபசவென்று விழிக்க ஆசைப்படுகிறீர்களா? இவ்விரண்டனுள்,

எதுவேணுங் கேள் மனமே—உனக்கு
எதுவேண்டாம் சொல் மனமே

என்று நீங்களே உங்கள் மனதினிடம் கேட்டுத் தெளிந்து கொள்ளுங்கள்.

## கலியாண காலம்.

ஆடவர்களுக்கு 23-வது வயது நடக்கும்போது, 19-வயதுள்ள ஒரு பெண்ணைத் தேடி வரிக்கவேண்டுமென்று ஆன்றோர்கள் கூறி யிருக்கின்றனர். அவ்வாறிருக்க இக்காலத்து மாதா பிதாக்களோ, தத்தம் குழந்தைகட்கு 16-ம் வயது வருவதற்கு முன்னரே 10 வயதிற்கு மேற்பட்ட பெண்ணைத் தேடி விவாகம் முடித்து விடுகின்றனர். அத்தகைய பாலிய விவாகத்தினால் வெள்ளெலி—மூஞ்சூறு—சுண்டான் முதலிய குஞ்சுகளைப் போல் மக்களைப் பெறுகிறார்கள். கோழியின் சந்ததிகள் பலசாலிகளா யிருக்க வேண்டுமென்று, நடுத்தர வயதும்-பலமும்-நல்ல வமிசமுமுடைய அழகிய சேவலுடன் கோழியைப் புணர விடு

கிறார்கள். பசுமாட்டிற்குச் சிறந்த ரிஷபத்தைத் தேடுகிறார்கள். குதிரை முதலான மிருகங்களுக்கும் அப்படியே செய்கிறார்கள். தென்னம்பிள்ளைகளை உண்டாக்குவதற்கு இளமையும், முதுமையுமில்லாத நடுத்தர வயதுள்ள நெற்றை அதி சாக்கிரதையாகக் கீழே விழாதபடி பறித்துப் பயிரிடுகிறார்கள். அஃறிணையான மரங்கள், செடிகள், கொடிகள் முதலிய தாவரவர்க்கங்களுக்கும், மிருகங்கள், பட்சிகள் முதலான பிராணிகளுக்கும் காலத்தையும் பருவத்தையும் பிரமாதமாக எதிர்பார்க்கும் அறிவுள்ளவர்கள், "கலியாண சந்தடியில் தாலிகட்ட மறந்ததுபோல," உயிர்திணையும் பகுத்தறிவுமுடைய அருமையான மக்கட் பிறப்பிற்கு, காலத்தையும் பருவத்தையும் கருதாத காரணம் யாதோ தெரியவில்லை. அன்றியும், "கண்டதே காட்சி கொண்டதே கோலம்" என்று பாவிய விவாகம் செய்வதினால் பிறக்கும் குழவிகள் "கீரைத்தண்டைப் பிடுங்க ஏலப்பாட்டு பாடுகிறார்கள்." தக்க பருவத்தில் கலியாணம் செய்து நீதி நெறிப்படி நடந்ததினாலேயே முற்காலத்தவர்கள் அரோக திடகாத்திரர்களாயும், பலசாலிகளாயு மிருந்தார்களென்பது நாம் சொல்லாமலே கரதலாமலகம்போல் விளங்கும்.

மனிதன் வேறு எவ்வித துர்க்கிருத்தியங்களைப் புரிந்தாலும், அவைகள் சரீரத்திற்குப்புறம்பாகவே யிருக்கின்றன. பல விடங்களிலும் அளவுக்கு மிஞ்சி மதனலீலா வினோதஞ்செய்கின்ற துர்க்கிருத்தியமோ, அங்ஙனமில்லை. காமாதுரர்களுடையுங் கஷ்டநஷ்டங்களுக்கு அவரவர்கள் சரீரமே போதிய சான்றாக இருப்பதால் நாம் அதிகமாக விவரிப்பது அனாவசியம். வீரன், காட்டேரி முதலிய தேவதைகளுக்கு ஆடு, கோழி, இரத்தம், கள், சாராயம் முதலியவைகள் படைத்து உற்சவம் நடத்துவதுபோல, ஈ-எறும்பு-கொசு முதலியவற்றிற்கு விருந்தளிக்கும் பாவனை

## விசுவாமித்திரர்–மேனகை–சகுந்தலை.

... ... “பெண்தான் வந்தே.
வந்துதான் மருவிடவே விந்து வீழும்
மகத்தான தவமெல்லாம் அழிந்து போகும்”

“ விந்தொழிய வேதாந்தம் வேறொன் றில்லை ”




“ விந்தை விட்டால் நொந்து போவாய் ”

என்ற அமிர்த வசனங்கட்கு இப்படமானது சிறந்த ஞாபகார்த்தமாகுமென்றே இவ்விடத்தில் அமைத்துள்ளனம்.

(427–469–ஆம் பக்கங்களிற் பார்க்க.)

யாக, 18 வகை குட்டங்கள், தொடைவாழை, சிழ்ப்புண்கள், பலவகைக் கிரந்திகள், சிரங்குகள் தோன்ற, அவைகளில் ஈ முதலியவைகள் உட்கார்ந்து வருத்த, அதைச் சகிக்கமுடியாமல் வேப்பிலையுங் கையுமாய்த் திரியநேரிடும்.

மேகங்களெல்லாம் ஆகாயத்தில் இரை கிடைக்கவில்லையென்று பூமியிலிறங்கி, வேசியர்களுடைய சரீரத்திலேயே மேகமென்னும் வியாதிப்பெயருடன் அதிகமாக வசிக்கின்றது. அதனாலே தான் ஆகாயத்தில் மேகமில்லாமல் இக்காலத்தில் அதிக மழை பெய்யவில்லை. அந்த மேகங்கள் காமுகர்கள் சரீரத்தில் சிழ்க்கட்டி முதலிய பலவித இரணங்கள் வழியாக இரத்தம் சீழ் என்னும் மழையை வருஷிக்கின்றது போலும்! என்னுங் கருத்தை யடக்கி,

மேகங்கள் யாவுமுயர் விண்ணீங்கி வேசையர்தந்
தேகங்க ளில்வாசஞ் செய்கைபால்—மாகமிசை
ஆசைக்குங் கார்காணும் அவ்வேசையார்கொடுப்பர்
காசைக் கொடுப்பவர்க்குக் காண்

எனப் பெரியார் வாக்கியம் கூறுகிறது.

## திருப்புகழ்

கூந்த லவிழ்த்து முடிக்கி மினுக்கிகள்
பாய்ந்த விழிக்குமை யிட்டு மிரட்டிகள்
கோண்பு படைத்த மொழிச்சி பரத்தையர் புயமீதே

கோங்கு படைத்த தனத்தை யழுத்தியர்
வாஞ்சை யுறத்தழு விச்சிலு கிட்டவர்
கூன்பிறை யொத்த நகக்குறி வைப்பவர் பலநாளும்

ஈந்த பொருட்பெற விச்சை யுரைப்பவர்
ஆந்துணை யுற்றழு கைக்குர விட்டவர்
ஈங்கிசை யற்றவ லக்குண மட்டையர் பொருள்தீரில்

எங்கி யிடைக்கடை யிற்றளி வைப்பவர்
பாங்கக லக்கரு ணைக்கழல் பெற்றிட
ஈந்திலை யெப்படி நற்கதி யுற்றிட வருள்வாயே.

ஆரம்பத்தில் காமத்தைப் பார்க்கிலும் மேலான இன்பமும், பிரியமும்வேறில்லை யெனத்தோன்றும். நாட்செல்ல நாட்செல்ல அதைப்போல் அருவருக்கத்தக்க காரியம் வேறில்லை யென்று—அதுவும் விவேகிகளுக்குத்தான் தோன்றும். ஒருதடவை மோகமென்னும் வலையிலகப்பட்டு, நாணமென்னும் போர்வையைக் கிழித்து விட்டால், அதிலிருந்துவிடுவித்துக்கொள்வது மகா அருமை. சருவசீவன்களும் இன்பத்தின்மீது விருப்பும், துன்பத்தின்மீது வெறுப்பும் அடைவது சகசம். அதனால் பரிபூரணானந்த பேரின்பம் எங்கே யுளது ? எத்தன்மைத் தாயது ? என்றறிந்தவர்கள் பெரும்பாலும் இல்லையென்றே சொல்லவேண்டியதாயிருக்கிறது.

விட்டிற்பூச்சிகள், ஈசல்கள் நெருப்பு மயமாகிய தீபத்தைப் பார்த்து, அதன் சமீபத்தில் போயிருந்தால் எவ்வளவு ஆனந்தமா யிருக்குமோ ! வென்றெண்ணி நெருப்பில் விழுந்து மாள்கின்றன. பட்சிகள் வேடன் வைத்த கண்ணிகளிலும், மச்சங்கள் தூண்டில் முதலியவைகளிலும் தங்களைப் பிடிப்பதற்காக வைத்த இரையின்மேல் ஆவல் கொண்டுபோய் மாள்கின்றன. அதுபோற் கண்களுக்கு மை தீட்டி, கொண்டைக்குப் பூச்சூடி, அழகிய பட்டாடையை உடுத்தி, பட்டுக் கச்சிட்டுத் திகழும் இளந்தன பாரங்களை பாதி தெரியும்படி யமைத்து, மயில்போன்ற சாயலுடன், சிலம்பு, பாடகம், தண்டை முதலானவைகள் கலீர் ! கலீர் !! என்று தொனிக்க, அன்னம்போல் ஒய்யாரமாய் நடை பகட்டி, முகமினுக்கி, நகை நகைத்து, கண்க

ளால் மருட்டி, வலை வீசும் முலைஞர்களாகிய கொலைஞர்க ளிடத்து இன்பங் குடிகொண் டிருப்பதாக காமுகர்கள் நினைந்து, மயங்கி, அந்தோ! பற்பல கொடிய ரோகங் களுக்கு ஆளாகிறார்கள். இக்காரணம் பற்றியே நமது குணங்குடி வள்ளல் பின்வருமாறு கூறியுள்ளனர்.

1 வேசைய ராசையை வேரோ டறுக்கவும்
வெற்றிக் கொடிகட்டி மீசை முறுக்கவும்,

2 வலைவீசு முலைஞரைக் கொலைஞரென் றெண்ணுமோர்
வல்லபம் அருள் புரியவும்.

அரிச்சந்திர புராணம்.

நச்சுக் கட்டியும் நல்லமு தும்மிக
வச்சுக் கட்டிய மாமுலை யாலுல
கக்சுக் கெட்டழி யும்அழி யும்எனக்
கச்சுக் கட்டி மறைத்தனர் கண்ணையே.

இளம்பெண்களுடன் தனித்து உரையாடுவது எப் போதும் ஆபத்துக் கிடமேயாம். இதுபற்றியே திருவள் ளுவ நாயனார் "கண்டாலும் பேசாதே" என்றனர். நாம் ஆரம்பத்தில் மடந்தையர்களுடன் நிட்காமியமாக உரை யாடினாலும் சிற்சில குறிப்புகளால் மனதைக் கெடுத்து காமாக்கினியை மூட்டும். இது போலவே மாதரிடத்தில் சங்கீதங் கேட்பதிலும் (விஷமாகிய காமிய சத்து கலந் திருப்பதால்) ஒருவித விரக வேதனையும் சேர்ந்துண்டாகும். ஆடவர்கள் மனம் பஞ்சைப் போலவும், மடந்தையர்க ளுடைய ரூபாலாவண்ணியம் அக்கினியைப் போலவு மிருக் கிறது. மாதர்களுடைய இனிய வார்த்தையானது ஆபத் திற்கு ஒரு கருவியாகும். யோகம்-ஞானம் முதலியவைகள் மாதர்களுடைய கலவியினால் கெடுவதுபோல் வேறு எவ் வித கிருத்தியங்களாலும் அப்படிக் கெடுவதில்லை.

ஸ்ரீ இராகவனுக்கு முடிசூட்ட நியமனம் செய்த தினத்திற்கு முதல் நாளிரவு, தசரத சக்கரவர்த்தி புளகாங்கிதமுற்று, சுகானந்தக் கடலில் திளைத்து வாலாமென்று கைகேசியின் அந்தப்புரத்திற்குச் சென்றார். மந்தரையென்னுங் கூனியின் தூண்டுதலால், கைகேசி தசரதரிடம் ஏற்கனவே பெற்றிருந்த வரத்தைப் பூர்த்தி பண்ண நினைந்து, தன் மகனாகிய பரதனுக்கே முடிசூட்டவும், இராமன் பதினான்கு வருடம் வனவாசஞ் செய்யவும் வேண்டுமென்று கேட்டழுதாள். அது கேட்ட தசரதன் மனம் பதை பதைத்து,

இராமாயணம்.

தூம கேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வருங்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனு
நாம மில்லை நரகமு மில்லையே

என்று சொல்லிப் பிரலாபித்தார். அன்றியும், அவள் கேட்ட வரத்தைக் கொடுத்துவிட்டதி னிமித்தம் இராமர் காட்டிற் கேகினார். இதைக் கேள்வியுற்ற தசரதர்,

முனிமொழி கேட்டு மன்னன் முகூர்த்தமொன் றயர்ந்து சோர்ந்து
தனியொரு சிறுவன் மூவைம் பருவத்தன் சமர்கண் டில்லான்
பனிசெய்வல் லரக்கர்க் காற்றான் பகைஞர்கோ ளறிதரேறு
னனிகமோ டேகியானே யவரொடு மரும்போர் செய்வேன்.

முன்னவ னீங்கின் மற்ற மூவரும் வாழா ரியானு
மின்னுயிர் வாழே னின்று விராவண னெழிந்தோ ரியாவ
ரன்னவர்க் கஞ்சேன் முன்ன மிராவண னமர்க்கு மஞ்சேன்
வென்னிடப் பொருதும் வீரர் வீரங்க ணிலைமைத் தாமோ

என்னும் செய்யுட்களின் கருத்துக் கிணங்க, தன் உயிர்க்குயிராக அருமையாய் நேசித்திருந்த தன் மூத்த குமார

ஹுடைய பிரிவாற்ருமையால் தசாதர் பிராணனே விட்டார். இதை யறிந்த அயோத்தியாபுரி அரசாங்கமே துக்கக் கடலி லாழ்ந்தது. இவ்வளவும் ஏற்பட்டதற்குக் காரணம் ஒரு பெண்பால் என்பது உலகமறிந்த உண்மை.

இமயமலைச் சாரலில் தனக்கு எவரும் நிகரல்லர் என்று உலகமெங்கும் ஆச்சரியப்படத்தக்க விதமாக அகோர தவம் புரிந்துகொண்டிருந்த விசுவாமித்திர மஹ ரிஷியின் தவத்தை அழிக்கக் கருதி, பெண்ணிலக்கணத்திற் சிறந்த தெய்வப் பெண்ணுகிய மேனகையை அனுப்ப, அவள் மஹ ரிஷியின் அருகில் நிருவாண கோலத்துடன் வந்து எதிரில் நின்று, அவரது பார்வை பட்டவுடன் தனது கண்ணுல் வெருட்டி, முலையால் மயக்கி, கடிதடத்துப் புண்ணுங் குழியிடை தள்ளி, அவரது போதமென்னும் பொருளைப் பறித்து, சகுந்தலை யென்னும் வனப்பிற் சிறந்த குழந் தையை அவதரிக்கச் செய்து, விசுவாமித்திரர் தலையில் கையை வைத்து தன் கண்களை மறைத்துக்கொண்டு அழும் படி செய்துவிட்டாள் என்பதும் உலகமறிந்ததோருண்மை.

இராமாயணம்.

அன்னவள் மேனி காணு வனங்கவேள் சரங்கள் பாயத்
தன்னுணர் வழிந்து காதற் சலதியி னழுந்தி வேந்தன்
பன்னரும் பகல்தீர் வுற்றுப் பரிணிதர் தெரிந்த நூலின்
நன்னய முணர்ந்தோ ஞகி நஞ்செனக் கனன்று நக்கான்.

ஆங்கில பாஷையில் Man (மான்) என்ருல், 'மனிதன்' என்று பொருள். Woman (உமன்) என்ருல், 'ஸ்திரீ' என்று பொருள். ஒரு ஆங்கில அகராதி நிபுணரிடம் சந் தேகி ஒருவர் சென்று, ஐயா! மனிதனுக்குத் தான், Man என்று சொல்லப்படுகிறது. ஸ்திரீக்கு Woman என்று சொல்லியிருப்பதை ஆய்ந்து பார்த்தால், இரண்டு

வார்த்தைகளுக்கும் ஏதோ ஒரு சம்பந்த மிருப்பதாகவே ஏற்படுகிறது. இந்த சம்பந்தம் நேர்ந்திருப்பதின் காரணத்தை விளக்கவேண்டுமென்று கேட்டான். நிபுணர் சந்தோஷித்து, நல்ல கேள்வி கேட்டீர்! உமது சந்தேகத்தை நிவர்த்திக்கிறேனென்று சொல்ல ஆரம்பித்தார்.

Man (மான்) என்றால் தான் மனிதனுயிற்று. மனிதன் விவாகம் செய்து கொள்ளாதிருக்கும் வரையில் சுகந்தான். விவாகமாகி, குடும்பம் ஏற்பட்டது முதலே அவனுக்குக் கஷ்டமும் ஏற்பட்டு விடுகிறது. இதை ஆங்கிலத்தில் 'Woe to man' (வோ ட்டு மான்) என்று சொல்லுவார்கள். 'வோ' என்றால் கஷ்டம், துன்பம், துக்கம் என்று பொருள். 'டு மான்' என்றால் மனிதனுக்கு என்று பொருள். இந்த Woe to man என்ற 3 சிறு வார்த்தைகளோடு கூடிய கூட்டு வார்த்தைதான், Woman என்று மருவி வந்திருக்கிறது, என்று நிபுணர் கூறினர்.

குடும்பி யனுபவிக்க வேண்டியது கஷ்டந்தானென்னும் நமது வேதாந்த சாரத்தை ஆங்கிலேயரும், பல்லாண்டுகளுக்கு முன்னரே—அதாவது, அவர்களுடைய ஆங்கில பாஷை ஏற்பட்ட காலத்திலேயே, அறிந்திருக்கிறார்கள், என்பது தெளிவாகிறது. இதனால் மேதாவிகள் எத்தேயத்தார், எம்மதத்தார், எக்கொள்கையினரா யிருப்பினும், ஒரு விஷயத்தைப்பற்றி ஒரேவித கருத்துடையவர்களா யிருப்பார்களென்னும் பொருள்படும் "Great men think alike" என்னும் ஆங்கிலப் பழமொழிக்கும் இது சிறந்த சான்றாகும்.

ஒரு தனவந்தருக்கு வெகுகாலம் புத்திரபாக்கியமில்லாதிருந்து, ஒரு மகானின் அநுக்கிரகத்தால் ஒரு பெண் குழந்தை பிறந்தது. குழந்தை பெண்ணிலக்கண முழுதும் அமையப்பெற்றிருந்தும், பிறந்தது முதல் ஊமையாகவே

யிருந்தது. வயதும் 15 பூரணமாயிற்று. மடந்தைப் பருவ மடைந்தும் பேதைப் பருவம்போல் விளங்கினாள். அக் காலத்தில் ஒரு மகான் அவ்வில்லத்திற்கு வந்தனர். அவ ரிடம் குழந்தை பிறந்த விதத்தையும், ஊமையாயிருக்கும் குறையையும் கூறி விசனப்பட்டார்கள். மகான் மந்தகாசத் துடன் அந்தப் பெண் எங்கே என்றார். அதற்குள் ஊமைப் பெண் வந்து பெரியவருக்கு சாஷ்டாங்கம் சமர்ப்பித்து வணங்கி நின்றாள். மகான் அவளை உற்று நோக்கி, என்னடி! வேணும் என்றார். அதற்கவள், உன்னடி வேணும் என்றாள். என்னடி வேண்டில் பொன்னடி கிடைக்கும் என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே மகான் மறைந்துவிட்டார். பெரிய வரைக் காணாமல் எல்லோரும், இது கனவோ! நனவோ! என்று திகைத்தார்கள். பெரியவரைக் காணாவிட்டாலும் தன் பெண் பேசிவிட்டதற்காக ஆனந்தம் அடைந்தார்கள். அது முதல் அந்தப் பெண் பிரமை கொண்டவளாய் வீட்டை விட்டு வெளியேறி ஒரு காட்டுமார்க்கத்தில் வரும் போது துஷ்டர்கள் கையில் சிக்கிக்கொண்டாள். "பேரின்ப முத்தி யிப்பூமியிலிருந்து காண எத்தனை விகாதம் வரும்" என்ற அமிர்தவாசகத்தை உள்ளபடி சிந்தித்த ஒரு அரச குமாரன் இவ்வுலகம் அநித்தியமானது என்று துறந்து பரதேசி போல் அவ்வழியே வரும்போது, அந்தப் பெண் துஷ்டர்கள் கரத்தில் அகப்பட்டு வருந்துவதைக் கண்டு, அவளை அவர்கள் கையிலிருந்து விடுவித்து அழைத்துப் போய் ஒரு சத்திரத்திலிருக்கும்படி செய்து, இவள் தன்னந் தனியளாயிருக்கிறாளே! இவளை விட்டு எப்படிப் பிரிவது! என்று ஆலோசித்தவனாக சிலநாள் சத்திரத்திலேயே தங்கி விட்டான். அவளும் இவனை விட்டு நீங்க முடியாமலிருந் தாள். இருவரும் யௌவன பருவத்தை அடைந்திருந்த தால் காதல் என்னும் அக்கினி முற்ற ஆரம்பித்து, அது

முதிர்வடையுந் தருணத்தில் ஒரு மகான் அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தார். இருவரும் அவருக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்தார்கள்.

பெரியவர் அவர்களுடைய பிரதிபந்தத்தை நீக்க வேண்டுமென்று கருதி, இராசகுமாரனை அருகிலழைத்து, மகனே! இவள் மேல் நீ காதல் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. நீ இன்னவூர் இராசகுமாரன், இன்னான் அல்லவா? நீ ஆன்மலாபம் அடைவதற்காக இராச்சியபாரத்தை வேண்டாமென்று வெளியேறி விட்டு, இப்போது இவள் மேல் காதல் கொள்வது முறையாகுமா? இவள் போன சென்மத்தில் நாய்ச்சென்மம். நீ படுத்துறங்கிய பின் இவள் உன்னை நக்குகிறாள். இன்றிரவு நீ கவனித்தாயானால் தெரிய வரும் என்றார். அங்ஙனமே அன்றிரவு கவனிப்பதாக இராசகுமாரன் சொன்னான். அவள் வெளியிற் சென்ற சமயம் பார்த்து, அந்தப் பெண்ணை அழைத்து, அம்மணீ! நீ இவன் மேற் காதல் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. நீ இன்னவூர், இன்னார் மகள், இன்னாள் அல்லவா? நீ உனது குருநாதனைத் தேடி வெளியேறி வந்து விட்டு, இப்போது வழியில் வந்த ஒருவன் மேற் காதல் கொள்வது முறையா? இவன் போன சென்மத்தில் உப்புக் குறவன். இவனை நீ நக்கிப் பார்த்தாயானால் தெரியும் என்றார். அப்படியா! என்று வியப்படைந்து, இன்றிரவு கவனித்து பார்க்கிறேன் என்று ஒத்துக்கொண்டாள்.

அன்றிரவு இதைச் சோதிப்பதற்காக முன்னதாகவே அரசகுமாரன் தூங்கும் பாவனையாகப் படுத்துக்கொண்டான். அவன் தூங்கி விட்டானென்று நினைத்து இவள் நக்கவே, சீ! நாயே, என்னைத் தொடாதே என்றான். அதற்கவள், போடா உப்புக் குறப்பயலே! என்றாள். இருவரும் பிணங்கிக்கொண்டார்கள், பொழுதும் விடிந்தது. பெரியவர்

அவர்களை அழைத்து நான் சொன்னது சரிதானு! என்றார். சுவாமி! தாங்கள் சொல்லாவிட்டால் கெட்டே போயிருப் பேன் என்று தனித்தனி கூறி மகிழ்ந்தார்கள். அவர்க ளிருவரையும் பிரித்து ஞானேபதேசஞ் செய்து ஆன்ம லாபம் அடையச்செய்தார் என்பது ஒரு கதை. அது போல் குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் இந்த அத்தி யாயத்தில்,

பெண்கொண்ட பேர்பட்ட பாட்டையுங் கேட்டையும்
பேசுவமோ நெஞ்சமே

என்று அடியிற் காட்டியுள்ள கீர்த்தனையின்படி பெண்களை இழிவுபடுத்திக் கூறியுள்ளார். பின்னர் பெண்களுக்குப் புத்தி கற்பிக்க ஆரம்பித்து, பெண் ஞான அத்தியாயத்தில் விவரித்துள்ளபடி,

தாய்மார்களே பாவி சொல்வதைத் தான்சற்றுந்
தள்ளாமல் கேட்டுக் கொள்வீர்

என்று ஆண்பிள்ளைகளுடைய அக்கிரமங்களைப் பற்றி சாங்கோபாங்கமாகக் கூறியுள்ளனர். இவ்வாறு சந்தர்ப்பம் போல இழிவுதோன்றக் கூறியதானது, ஆண்-பெண் இரு வகுப்பினரும் ஆன்மலாபம் அடையாமல், மாயாசம்பந்த விலங்கைப் பூட்டிக்கொண்டு, தீராத துக்கத்தை அடை யாதபடி எச்சரிக்கை செய்கின்றனரே யன்றி வேறில்லை.

துணங்குடியார்.

இராகம், பந்துவராளி. தாளம், சாப்பு.

பல்லவி.

பெண்கொண்ட பேர்பட்ட பாட்டையுங் கேட்டையும்
பேசுவமோ நெஞ்சமே.

அநுபல்லவி.

சங்கையும் போக்கிச் சதிமான மாகச்
சகசண்டி யாக்குவித் திடுவாள் வெகு
பங்கப் படுத்திவிட் டிடுவாள் அந்த
மங்கைய ராசைவைத் தையயோ வையத்திற் (பெண்)

சரணங்கள்.

தங்க நகையு முகப்பணிச் சேலையுந்
  தாவென வேகுரங் காட்டுவாள் — என்றன்
செங்கை வளையுந் தலைக்கெண்ணெய் சீப்புஞ்
  சிறப்பொடு தாவென மாட்டுவாள் — வன்னக்
கொங்கைக் கிசைந்த ரவிக்கையுங் கோலப்
  பணியுங் கொடுவென மூட்டுவாள் — அடே
வெங்கம் பயல்நீ யெனுமக்க னேவென்று
  வீட்டில் வராதேயென் றோட்டுவாள் — வெகு
  பங்கப் பழிப்பினில் நாட்டுவாள் — அந்த
  மங்கைய ராசைவைத் தையையோ வையத்திற் (பெண்)

நாடிக் குருவடி தேடி நடக்கின்ற
  நற்செய லைக்கசப் பாக்குவாள் — எங்கும்
ஓடித் திரிந்தே யலைந்து பணங்கள்
  ஒருக்காலே தேடென்று தாக்குவாள் — அவன்
தேடும் பொருள்தன்னைக் காணி லுமக்கெதிர்
  தேசத்தி லாரென்று தூக்குவாள் — இன்னும்
ஆடென்றும் மாடென்றும் வீடென்றுந் தேடென்றும்
  ஆண்டவ னைமறப் பாக்குவாள் — பின்பு
  ஈடோன் றிலாஙினை வாக்குவாள் — அந்தக்
  கேடிக ளாசைவைத் தையையோ வையத்திற் (பெண்)

போக இச்சையை அடக்கி வெற்றி பெற்றவர்களில் யூசுபு அலைகிஸ்ஸலாம் அவர்களே முதன்மையானவர்களாக விளங்கினார்கள். சுலைமா னுபுனுல் புஷார் றஹ்மகுல்லா அவர்கள் மிக்க அழகுள்ளவர்களாயிருந்தார்கள். ஒரு பெண் அவர்கள்பேரில் ஆசைகொண்டு தனது கருத்தை அவர்களிடம் வெளியிட்டாள். இதைக் கேட்டவுடன் அவர்கள் ஓட்டம் பிடித்தார்கள். அவர்கள் சொல்லுகிறதாவது :—“ நான் அந்தத் தினத்தில் யூசுபு அலைகிஸ் ஸலா

மவர்களை கனவில் கண்டு, தாங்கள் யூசுபு அலைகிஸ்ஸலாமா?" என்று கேட்டேன். அதற்கவர்கள் "ஆம் நான் பாவத்தை நாடினேனே அந்த யூசுபாயிருக்கின்றேன்; நீரோ அதை நாடாத சுலைமானு யிருக்கிறீர்" என்று சொன்னார்கள் என்பதே. இதானது வலகத் ஹம்மத் பிஹி வஹம்ம பிஹா என்ற ஆயத்தைச் சுட்டிய பொருளாயிருக்கிறது. (இந்த ஆயத்தில், சுலைகாவும் யூசுபும் ஒருவர் மேல் ஒருவர் நாட்டங் கொண்டார்கள் எனக் கண்டிருக்கிறது.)

சுலைமா னுபுனுல் புஷார் றஹ்மதுல்லா அவர்கள் சொல்லுகிறதாவது:—நான் ஹஜ்ஜுக்காகப் புறப்பட்டு வருகையில், மதீனத்துக்கு வெளியே அபவா என்னும் இடத்தில் இறங்கினேன். என்னுடன் வந்த துணைவர் உணவுக்கு வேண்டிய வஸ்துக்களை வாங்கிக்கொண்டு வரப் போனார். அந்தச் சமயத்தில் சந்திரனுக்கு ஒப்பான அழகிய முகத்தையுடைய ஓர் அறபிப்பெண் முகத்தைத் திறந்தவளாக என்னிடம் வந்து "ஹீன்" (துரிதப்படுத்து) என்று சொன்னாள். அவள் தனக்கு உணவு கேட்கிறாள் என்று நான் எண்ணங் கொண்டு "சுபுராவைப் பிடி" என்றேன். அதற்கவள், "நான் இதைக் கேட்கவில்லை; ஆண்பிள்ளைகளிடத்தில் பெண்பிள்ளைகள் எதை இச்சிப் பார்களோ அதைக் கேட்கிறேன்" என்று சொன்னாள். இச்சொல்லைக் கேட்டவுடனே நான் தலை குனிந்து அழுது கொண்டே எழுந்து நின்று, மேலும் மேலும் அதிகமாக அழத் தொடங்கினேன். நான் அழுகிறதைக் கண்டு அவள் போய்விட்டாள். எனது துணைவர் திரும்பி வந்தபோது என்னிடத்தில் அழுகையின் அடையாளத்தைக் கண்டு, "இஃதென்ன?" என்று வினவினார். அதற்கு நான் "குழந்தைகளுடைய தேட்டம் என் மனதுக்குள் வந்து அவர்களுடைய கவலையினால் அழுதேன்" என்று சொன்

னேன். அதற்கவர், "அல்ல, அல்ல கொஞ்ச நேரத்துக்கு முன்னே நீர் அந்த நினைவே இல்லாமலிருந்தீர்; உமக்கு ஏதோ சம்பவித்திருக்கிறது. அதை எனக்குச் சொல்ல வேண்டும்" என்று ஒரே பிடியாய் வாதித்தார். நான் நடந்த சங்கதியைச் சொன்னேன். அதைக் கேட்டு அவரும் அழுதார். "நீர் எதற்காக அழுகிறீர்?" என்றேன். அதற்கவர், நான் இங்கு இருந்திருப்பேனாகில் இப்படிச் செய்ய என்னால் முடியாது என்று பயந்து அழுகிறேன்" என்று சொன்னார். பின்பு மக்கத்துக்குப்போய்ச் சேர்ந்து * தவ்வாபும் † சகியும் செய்துகொண்டு ஓர் இடத்தில் உட்கார்ந்து நித்திரை போய்விட்டேன். என் சொப்பனத்தில் வெகு அழகும், விசாலித்த முகமும், மிக்க மணமும், தக்க உயரமும் பொருந்திய ஒரு மனிதரைக் கண்டு, "தாங்கள் யார்?" என்று கேட்டேன். அதற்கவர்கள், "நான் யூசுபு என்று சொன்னார்கள்." "தாங்கள் யூசுபு சித்தீகா?" என்று நான் கேட்டேன், "ஆம்" என்றார்கள். அப்போது நான், "தாங்கள் அஸீஸுடைய மனையாட்டியோடு நடந்து கொண்ட தங்கள் சரித்திரம் மிகப் புதுமையானது" என்று சொன்னேன். அதற்கவர்கள், "நீர் அறபிப் பெண்ணுடன் நடந்து கொண்ட உம்முடைய சரித்திரம் அதினும் மிகப் புதுமையானது" என்று சொன்னார்கள் என்பதே.

ரசூல் சல்லல்லாகு அலைகிவசல்ல மவர்கள் திருவுளமானதாக இபுனுல் உமர் றலியல்லாகு அன்குமா அவர்கள் சொல்லுகிறதாவது :—

முற்காலத்தில் மூன்று பேர் சபர் போனார்கள். வழியில் பொழுதுபோய் இரவாய் விட்டபடியால் அச்சமற்றிருப்பதற்கு அங்கு ஒரு மலைக்கெவியில் போய்த் தங்கினர்

* தவ்வாபு=கஃபாவை 7-முறை சுற்றுதல். † சகி=சபா மலைக்கும், மர்வாமலைக்கும் 7-முறை தொங்கோட்டம் ஓடுதல்.

கள். மலையிலிருந்து ஒரு பெரிய கல் உருண்டு விழுந்து அந்தக் கெவியின் வாயில் கொஞ்சமும் வழியில்லாதபடி அடைத்துக் கொண்டது. அந்தக் கல்லை அசைக்கவும் முடியவில்லை. அப்போதவர்கள் நாம் இதிலிருந்து வெளிப் படுவதற்கு வேறு தந்திரம் ஒன்றுமில்லை. ஆனால் நாம் ஒவ்வொருவரும் செய்திருக்கிற நன்மையை எடுத்துக் காட்டி துஆ கேட்டால், அல்லாகுதஆலா அந்த அமலின் பொருட்டால் ஒரு சமயம் நமக்கு வழிவிடக் கூடும்" என்று பேசிக் கொண்டார்கள். பின்பு அந்த மூவரில் ஒருவர், "என் ஆண்டவனே, நீ அறிந்திருக்கிறாய்! என் தாய் தந்தையர் உண்பதற்கு முன்னே நானும் உண்கிற தில்லை; என் மனைவி பிள்ளைகளுக்கும் உண்ணக் கொடுக்கிறதில்லை. ஒருநாள் ஒரு வேலையினால் வீட்டுக்குத் திரும்பிவர இரவு வெகுநேரம் சென்றுவிட்டது. அப் போது என் தாய் தந்தையர் நித்திரை போய்விட்டார்கள். நான் ஒரு பாத்திரத்தில் கொஞ்சம் பால் கொண்டு வந் திருந்தேன். அவர்கள் விழித்த பின் அதை அவர்களுக்கு கொடுக்கலாமென்று கையில் வைத்துக் கொண்டே எதிர் பார்த்துக் காத்திருந்தேன். குழந்தைகள் பசியினால் வருந்தி அழுதுகொண் டிருந்தார்கள். "இவர்கள் குடிப்பதற்கு முன்னே உங்களுக்குக் கொடுக்கமாட்டேன்" என்று அக் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொண்டிருந்தேன். அவர் கள் சுபுஹு வரையில் விழிக்கவில்லை. நான் அந்தப் பாலை கையில் வைத்தபடியே நானும் என் பிள்ளைகளும் பட்டினி யாகவே இருந்தோம். என் ஆண்டவனே! உன்னுடைய பொருத்தத்தை நாடியே நான் அதைச் செய்தேன் என்று நீ அறிந்திருந்தால் எங்களுக்கு வழி விடு" என்று சொன் னார். உடனே கல் அசைந்து கொஞ்சம் சந்து கொடுத் தது. ஆயினும் வெளியே வர இடமாகவில்லை.

மற்றொருவர், "என் ஆண்டவனே! நீ அறிந்திருக்கிறாய். எனக்கு ஒரு சிற்றப்பன் மகளிருந்தாள். அவள் பேரில் நான் மையல் கொண்டிருந்தேன். அவள் எனக்கு வசப்படவில்லை. ஒரு வருடம் பஞ்சமுண்டாயிற்று. அப்போது அவள் கொஞ்சம் தளர்ச்சி யடைந்து என்னோடு சரச வார்த்தைகள் பேசினாள். நான் அவளுக்கு நூற்று இருபது *தீனார் கொடுத்து, 'நீ எனக்கு வழிபட வேண்டும்' என்றேன். பின்பு அந்த காரியத்துக்காக நான் அவளிடம் நெருங்கினபோது, அவள் என்னை விளித்து, அல்லாகுத ஆலா வைத்த முத்திரையை அவனுடைய உத்திரவில்லாமல் உடைக்க நீர் பயப்படுவதில்லையா?" என்று சொன்னாள். அப்போது எனக்குள் அச்சம் பிறந்து நான் அவளை விட்டு விட்டேன். அவள்மேல் எனக்கிருந்த ஆசை உலகம் முழுவதிலும் வேறு எந்த வஸ்துவின் மேலும் இருந்ததில்லை. அப்படியிருந்தும் பின்பு நான் அவளை நாடவில்லை. என் ஆண்டவனே! உன்னுடைய பொருத்தத்துக்காகவே நான் அதை விட்டுவிட்டேன் என்று நீ அறிந்திருந்தால் எங்களுக்கு வழிவிடு" என்று சொன்னார். கல் அசைந்து இன்னும் கொஞ்சம் சந்து கொடுத்தது. அப்போதும் வெளியே வர இடமாகவில்லை.

மற்றொருவர், "என் ஆண்டவனே! நீ அறிந்திருக்கிறாய். நான் ஒருதரம் கூலிக்காரர்களை வைத்து வேலை வாங்கினேன். எல்லாருக்கும் கூலி கொடுத்தேன். ஒருவன் மாத்திரம் கூலி வாங்காமற் போய்விட்டான். நான் அவனுடைய கூலிப் பணத்துக்கு ஒரு ஆட்டை வாங்கி வியாபாரத்துக்கென்று விட்டேன். அது மிகவும் பலுகிப் பெரிய முதலாய்விட்டது. வெகுநாள் சென்ற பிறகு

* தீனார்-தங்கநாணயம்.

அவன் வந்து தனக்குச் சேரவேண்டிய கூலியைக் கேட்டான். நான் ஒரு மந்தை நிறைந்த மாடுகளையும், ஒட்டகங்களையும், ஆடுகளையும், அவைகளை மேய்க்கும் அடிமைகளையுங் காட்டி, "இவை யாவும் உன் கூலி" என்று சொன்னேன். அப்போதவன் "நீர் என்னை கேலி பண்ணுகிறீரோ?" என்றான். அதற்கு நான், "அல்ல, அல்ல, இவை யெல்லாம் உன் கூலிக் காசிலிருந்து விருத்தியான முதலாயிருக்கிறது" என்று சொல்லி எல்லாவற்றையும் அவன் வசம் கொடுத்து விட்டேன். அவற்றுள் நான் ஒன்றையும் வைத்துக் கொள்ளவில்லை. என் ஆண்டவனே! உனக்காக நான் இதைச் செய்தேன்" என்று நீ அறிந்திருந்தால் எங்களுக்கு வழிவிடு என்று சொன்னார். உடனே கல் நகர்ந்து விசாலமான வழி விட்டது. அவர்கள் அக்கெவியிலிருந்து வெளியே வந்தார்கள்" என்பதே.

பகருபுனு அப்துல்லா ஹில்முஸ்னி றக்மத் துல்லாகி அலைகி யவர்கள் சொல்லுகிறதாவது :—

கசாயித் தொழில் செய்யும் ஒரு மனிதன் தன் அண்டைவீட்டுக்காரனுடைய அடிமைப் பெண்ணின்மேல் மோகங்கொண் டிருந்தான். ஒருநாள் அந்த அடிமைப் பெண்ணை ஒரு கிராமத்திற்கு அனுப்பி யிருந்தார்கள். அவன் அவளைப் பின் தொடர்ந்து சென்று தனக்கு வழி படும்படி இலைச்சைப் படுத்தினான். அவள் அவனை நோக்கி, "ஓ வாலிபரே! நான் உமதுபேரில் அதிகமாக ஆசைகொண்டிருக்கிறேன். ஆயினும், நான் அல்லாகுத ஆலாவுக்குப் பயப்படுகிறேன்" என்றாள். இதைக் கேட்ட கசாயிக்காரன், "நீ கடவுளுக்காகப் பயப்படும்போது நான் ஏன் பயப்படாமலிருப்பேன்?" என்று சொல்லி உடனே தவுபாச் செய்து அவளை விட்டுத் திரும்பிவிட்டான். வழியில்

அவனுக்குத் தாகம் மேலிட்டது. அதனால் அவன் இறந்து போவான் என்று அச்சமிருந்தது. அந்தச் சமயத்தில் ஒருவர் அங்கு வந்தார். அவர் அக்காலத்து நபியின் தூதரில் ஒருவர். அவர் அவனை நோக்கி, "உனக்கு என்ன சம்பவித்திருக்கிறது?" என்று கேட்டார். "எனக்குத் தாகம் மேலிட்டிருக்கிறது" என்றார். அப்போதவர் அவனை நோக்கி "வா! நாமிருவரும் அல்லாகுத ஆலாவை வேண்டி, அவன் நமக்கு மேகத்தை அனுப்பும்படிக்கும், நாம் பட்டணத்திற்குப்போய்ச் சேருகிறவரையில் அந்த மேகம் நமது தலைக்கு மேல் நின்று நிழலைக் கொடுக்கும்படிக்கும் துஆ கேட்போம்" என்றார். அதற்கவன், "நான் ஒரு வணக்கமும் இல்லாத நிர்ப்பாக்கியனாயிருக்கிறேன்; நீரே துஆ செய்யும்; நான் ஆமீன் கூறுகிறேன்" என்றான். அப்படியே துஆ செய்தார்கள். அந்த மேகமும் அவர்களுக்கு மேலாக நிழலிட்டுக் கொண்டே சென்றது. பின்பு அவர்கள் ஒருவரை யொருவர் விட்டுப் பிரிந்தபோது, அந்த மேகம் கசாயிக்காரனுடன் சென்றது. அந்தத் தூதர் வெயிலில் இருந்தார். அவர் அந்த கசாயிக்காரனைப் பார்த்து, "ஓ வாலிபனே! நீ ஒரு வணக்கமும் இல்லாத நிர்ப்பாக்கியன் என்றாயே; இப்போது மேகம் உனக்குத் தானே நிழலைக் கொடுக்கிறது. உன்னுடைய ஹாலைப் பற்றி நீ எனக்குச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார். அதற்கந்த கசாயிக்காரன், நான் ஒன்றையும் அறியேன். ஆனால் ஒரு அடிமைப் பெண்ணினுடைய சொல்லினால் அவள் மேல் மோகிக்காமல் தவுபாச் செய்தேன் என்றான் என்பதாக இமாம்ஹஸ்ஸாலி றஹ்மக்குல்லா அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

---

# பத்தொன்பதாவது அத்தியாயம்.

## குணத்திரயம்.

அறுசீரடிவிருத்தம்.

*சத்துவமி ராசதந்தா மதமெனுமுக் குணங்களதின்*
*தன்மை யான*
*உத்தமமத் திமவதமம் வெண்மைசெம்மை கருமையினால்*
*ஒருநா ளைக்கு*
*ளித்தனைசத் துவமிரா சதந்தமசென் றறிந்துதய*
*ரிரிந்து ஆன்ம*
*முத்திபெறக் கடிகைகணித் தோமறிந்தோர் மெய்த்தவத்தின்*
*முயன்றுய் வாரே.*

மனிதர்கட்கு இயற்கையாயுள்ள மனோகுணம் மூன்று வகைப்படும். அவை சத்துவகுணம், இராசதகுணம், தாமத குணம் என்பன.

### சக சீவ பர உற்பத்தி.

அநாதியாயுள்ள சித்து ரூபமான சீவகோடிகளெல்லாம், சாதாரண அநுபவமான சுழுத்தியைப்போல யாவருக்கும் சூனியமாயுள்ள மூலப்பிரகிருதியாகிய மாயையின்கண் சினையைப் பெற்று, கெர்ப்பமுண்டாகி சகல யோனிகளையும் சிருட்டிக்கின்றது. சத்துவ குணமாகிய அந்த மாயையானது கால தத்துவமென்னும் நாமம் பொருந்திய கடவுளது திருஷ்டியினாலே முன்னிருந்த காரணத் தன்மை நீங்கி, சத்துவம்-இராசதம்-தாமதம் என்னும் மூன்று குணங்களாக விகசிதமாகும். இம்மூன்று குணங்களும் ஒத்திருப்பவைகளாகினும் நெருஞ்சிமுள்ளைப் போலவும், முக்கோணத்தைப் போலவும் இரண்டு குணங்கள் அடங்கி ஒரு குணம் விசேடித்து மேலோங்கி நிற்கும்.

சிவஞான சித்தியார்.

வருங்குண வடிவாய் மூலப் பிரகிருதி கலையிற் றோன்றித்
தருங்குண மூன்று மொன்றிற் றுன்மூன்றாய் மும்மூன் றாகு
மிருங்குண ரூப மாகி யிசைந்திடு மெங்கு மான்மா
பெருங்குண வடிவாய்ப் போக சாதனப் பெத்த மாமே.

முக்குணங்களிற் சத்துவகுணமானது மேலிட்டிருக்கும் பொழுது, எஞ்சிய இராசத-தாமத குணங்கள் தோன்றுமல் மறைந்து நிற்கும். இராசதகுணம் மேலிட்டபொழுது, சத்துவ-தாமத குணங்கள் மறைந்து நிற்கும். தாமதகுணம் மேலிட்டபொழுது, சத்துவ-இராசத குணங்கள் தோன்று திருக்கும்.

கைவல்லிய நவநீதம்.

கருதுமனே குணமூன்று மூன்றி லொன்று
கதித்தெழுந்தால் மற்றிரண்டுங் கரந்து நிற்கும்
தருமமிகு சத்துவமே லான போது
சன்மார்க்க மானதெய்வ சம்பத் துண்டாம்
மருவுமிரா சதமாகி லுலக தேக
வாதனையாஞ் சாத்திரவா தனையு மாகும்
அருமகனே தாமதமே லான போதி
லசுரசம்பத் துண்டாகும் அறிந்து கொள்ளே.

மாட்சிமையான பிரதம சத்துவகுணம் மேலானபோது, ஞானம் பிரகாசித்தல், கிருபை யுண்டாதல், தவம் செய்தல், பொறுமையோடிருத்தல், சத்தியம தவறுதிருத்தல், மேன்மையை விரும்புதல், மௌன விரதம் அநுட்டித்தல், பஞ்சேந்திரியம் அடங்குதல் முதலான மேன்மையான சன்மார்க்க குணங்கள் உண்டாகும்.

பகவற்கீதை.

ஈன மற்ற துறவற மில்லறம்
ஞானம் பற்றொடு நல்வினை தீவினை
யான தஞ்சுவ தஞ்சத் தகாதெனத்
தான றிந்தது சாத்விக புத்தியே.

அகங்காரம் பொருந்திய இராசதகுணம் மேலான பொழுது, வீரம் பேசுதல், தருமம் செய்தல், தானம் புரிதல், கல்வி-கேள்வி வாசனை, உலக விவகாரத்தில் மனம் செல்லுதலாகிய லோக வாசனை, சரீரத்தை ஆராய்தல் இவைகள் உதயமாகும்.

பகவற்கீதை.

தருமம் பாவந் தனக்குச் செயத்தகுங்
கருமஞ் செய்யத் தகாத கருமங்கள்
அருமை யாலறி யாத வறிவரோ
இருமை யாய இராசத புத்தியே.

அவலமான தாமதகுணம் மேலானபோது, அதிக வுணவு புசித்தல், நெடுந்தூக்கம் தூங்குதல், சோம்ப லுண்டாதல், நீதிவழுவுதல், ஒழுக்கமின்மை, வஞ்சகத் தன்மை, மறதி, கோபம், கொலை, களவு, கள், காமம், பொய், கலகப்பிரியம் முதலான மகா பாதக குணங்களுண் டாகும்.

பகவற்கீதை.

மனமொ ருக்கலும் வான்கலை நூற்களைத்
தனமொ ருக்கொடு கற்றலுந் தக்கவ
ரினம கிழ்த்தலு மின்றியுண் டாக்கிய
சினம்வி டுக்கிலார் தாமதஞ் சேர்ந்துளார்.

பாவ மாகத் தருமத்தைப் பார்க்கலு
மாவ தாமென் றடாதது நோக்கலுந்
தீமை செய்கின்ற சிந்தனை தீங்கிலே
போவ தாமது தாமத புத்தியே.

### குணத்தால் உதிப்பவைகள்.

சத்துவகுணமானது சுகத்தை அனுபவிக்கச் செய்யும். இராசதம், கருமத்துடனே அறிவைத் தரும். தாமதம், பல குற்றங் குறைகளைச் செய்து அஞ்ஞானப் போர்வையால் மூடும். சத்துவகுணமானது ஆசையென்னும் களங்கமில்லாததனாலே நின்மலமான ஞானத்தையுண்டாக்கும். துக்கம் வந்து பொருந்தினாலும் அதைச் சுகமாகவே காட்டும். இராசதமானது ஆசையையே பிறப்பிடமாகப் பொருந்தியுள்ளது ; சுக துக்கங்களிரண்டையும் வருவிக்கக் கூடியது. தாமதகுணமானது ஞானத்தை அழிக்கும். குற்றமே குடியாயிருக்கின்ற மார்க்கங்களை நடத்தும். நித்திராதேவிக்கு அடிமையாக்கும். சத்துவகுணம் உதயமாகி நடக்கும்பொழுது மரணமானவர்கள் தெய்வீக (மலக்கு) அம்சங்களிலும் ; இராசதகுணம் நடக்கும்பொழுது மரணமானவர்கள் மனித (இன்சான்) அம்சத்திலும் ; தாமதகுணம் நடக்கும்பொழுது மரித்தவர்கள் மிருக (ஹைவான்) அம்சத்திலும் வந்து பொருந்துவார்கள். சத்துவகுணம் மேலானவர்கள் கடவுளுலகத்திலும் ; இராசதகுண மேலானவர்கள் மத்தியலோகத்திலும் ; தமோகுண மேலானவர்கள் கீழுலகத்திலும் பொருந்துவார்கள். சாத்துவிக குணமுடையவர்கள் பரப்பிரம்ம சொரூபத்தை வழிபடுவார்கள். இராசதகுணமுடையவர்கள் பேயையும்-பசாசையுமே குல தெய்வமென்று கருதி வழி படுவார்கள். தாமதகுணமுடையவர்கள் அரக்கர்களாகிய துஷ்டர்களையே தெய்வ

மென்று கருதி வேறு தெய்வம் உளதா? இல்லையா? என் றுணரும் ஆற்றலின்றி மூடத்தன்மையால் வணங்குவார்கள்.

குணத்தின் உணவுகள்.

சாத்துவிக குணமுடையவர்கள் - மதுரமானதாகவும், சத்துவகுணத்துக்கே ஏதுவானதாகவும், தேகத்துக்கு நன்மை பயக்கத்தக்கதாகவுமான ஆகாரத்தை மிதமாக இரண்டு வேளை புசிப்பார்கள். இராசதகுணமுடையவர்கள் அதிக கசப்பு, அதிக புளிப்பு, அதிக உறைப்பு, அதிக உப்பு, நெருப்புப்போற் சுடுவதாகிய சூட்டுடன் மூன்று வேளையும் அமிதமாகப் புசிப்பார்கள். தாமதகுணமுடையவர்கள் பழைய சோறு, பழைய கறி, ஊசற்பதார்த்தங்கள், பழுக்காததும் அழுகியதுமான கனிகள், வேகாத காய் கறிகள் இவைகளை அதிகமாக முப்போதும் புசித்தல், அல்லது நாலைந்து போது பெருண்டியாகப் புசித்தல் முதலான மடமையான காரியங்களைச் செய்வார்கள்.

குணத்தின் நிறங்கள்.

சத்துவகுணமானது, ஆசையாகிய களங்கமில்லாததனால் நிர்மலமான பளிங்குபோன்ற வெண்ணிறமுடையது. இராசதகுணம் ஆசையும் நிராசையுங் கலந்திருப்பதனால் செந்நிறமுடையது. தாமதகுணம் காமமாகிய ஆசையையே இனிய தொழிலாகவுடையதாதலால் கருமைநிறமுடையது. இவை முறையே சுத்தம்-மலினம்-இருள் என்று சொல்லத்தகும். மனமானது சத்துவாம்ச வடிவு. அப்படி இருந்தும் இராசத-தாமத குணங்கள் கலந்து மனதினுடைய சத்துவாம்சத்தைக் கெடுக்கின்றது. சன்மார்க்க நடையை விடாதிருந்தால், எஞ்சிய இரண்டு குணங்களும் நசித்துப்போகும். அங்ஙனம் நசித்தபின் பேதமாய்க்

காணப்படும் சருவ கிரியைகளும் உடனே நசிக்கும். அவை நசித்தபின், களங்கரகிதமான ஆகாயம் எப்படியோ அப்படி மனம் பரிசுத்தமாகிப் பிரம்மத்தை நோக்கி, நிருவிகற்ப சமாதியிற் சலனமின்றி அசையாது நிற்கும்.

இந்தச் சத்துவ, இராசத, தாமத குணங்கள் ஒவ்வொன்றிற்கும் மும்மூன்று குணங்கள் உண்டு. அவை சாத்து விகத்தில் : பிரகாசம், சுகம், தைரியம் என 3. இராசதத்தில் : பிரவிர்த்தி, துக்கம், சௌரியம், என 3. தாமதத்தில் : அநியமம், மோகம், ஆலசியம் என 3. ஆக பகுக்கப் பெற்ற குணங்கள் 9.

முக்குணமும்-மும்மூர்த்தியும்.

சத்துவகுணம் மாயையினிடத்திலே, சத்துவத்தில் சத்துவம், சத்துவத்தில் இராசதம், சத்துவத்தில் தாமதம் என மூன்று குணங்கள் உண்டு. இவைகளில் சத்துவத்தில் சத்துவம் பிரதானமாகும் போது. அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தை இரட்சிக்கையினால் விஷ்ணு என்றும், சத்துவத்தில் இராசதம் மேலிட்டிருக்கும் போது அதில் பிரதி விம்பித்த ஈசுரன் சகத்தைச் சிருட்டிக்கையினால் பிரம்மா என்றும், சத்துவத்தில் தாமதம் மேலிட்டிருக்கும் போது அதில் பிரதி விம்பித்த ஈசுரன் சகத்தை உபசம்மாரம் பண்ணுகையினால் உருத்திரன் என்றுஞ் சொல்லப்படுவன். குல் அஹூது பிறப்பின்னாஸ், மலிக்கின்னாஸ், இலாஹின்னாஸ் என்ற ஆயத்தின் கருத்தும் சிந்திக்கத்தக்கதே. இப்படி மூலப் பிரகிருதியின் சத்துவகுண கற்பனை சொல்லப்பட்டது.

மூலப் பிரகிருதியின் இராசதகுணம் அனேக ரூபமாய்ப் பிரிந்து அவித்தைகள் என்றும், சீவ-காரண சரீரங்கள் என்றும், ஒன்றற் கொன்று தார தம்மியமாகச் சொல்லப் படும். இந்த அவித்தைகளிடத்திலும் மலின சலம் பிரதி

விம்பம் போலப் பிரம்மசைதன்னியம் பிரதிவிம்பிக்கும். இந்தப் பிரதிவிம்ப சைதன்னியங்களைக் *கிஞ்சிக்ஞ ரென்றும், † சீவசிதாபாச ரென்றும், ‡ பிராக்ஞ ரென்றுஞ் சொல்லப் படும். இந்த அவித்தைகளிடத்திலேயும் இராசதத்தில்-சத்துவம், இராசதத்தில்-இராசதம், இராசதத்தில்-தாமதம் என மூன்று குணங்கள் உண்டு. இராசதத்தில் சத்துவம் மேலிட்டிருக்கும் போது அதில் பிரதிவிம்பித்த சிதாபாசன் தத்துவஞான நிட்டாபரனாவான். இராசதத்தில் இராசதம் பிரதானமாகும் போது அதில் பிரதிவிம்பித்த சிதாபாசன் காமக்குரோத பரனாய்க் கர்ம நிஷ்டனாவன். இராசதத்தில்-தாமதம் மேலிட்டிருக்கும் போது அதில் பிரதிவிம்பித்த சிதாபாசன் சோம்பல்-நித்திரை-மயக்கம் ஆகிய இவைகளை யுடையவனாகப் பொருந்துவான். சத்துவகுணத்தில் ஈசுவராதிகளும், இராசத குணத்தில் சீவர்களும், தாமத குணத்தில் ஆவரண விட்சேப சத்திகளும், அபஞ்சீகிருத பஞ்சதன் மாத்திரைகளும், சூக்கும சரீரங்களும், பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களும், தூலசரீரப் பிரபஞ்சங்களு முண் டாயின.

இராசதத்தில்-சத்துவம் பிரதானமாகும்போது, அதிற் பிரதிபலித்த சீவர்களுக்கு ஞான நிஷ்டாபர ரென்றும், இராசதத்தில்-இராசதப்பிரதானமாகும் போது அதிற் பிரதி பலித்த சீவர்களுக்கு கர்ம நிஷ்டாபர ரென்றும், இராச தத்தில் தாமதம் பிரதானமாகும் போது அதிற் பிரதிபலித்த சீவர்களுக்குச் சோம்பல்-நித்திரை-மயக்க முடையவர்கள் என்றும் பெயர். இதுவே அஞ்ஞானம், இதுவே சீவ காரண சரீரம், இதுவே சீவனுக்குச் சுழுத்தியவஸ்தை, இதையபிமானித்த சீவனுக்குப் பிராஜ்ஞ னென்று பெயர்.

---

* கிஞ்சிக்ஞன் = சிற்றறிவுடையவன் † சிதாபாசன் = சீவன்
‡ பிராக்கியன் = அறிவுள்ளவன்.

தாமதத்தில்-சத்துவம் பிரதானமாகும் போது, அதிற் பிரதிபலித்த விட்சேப சத்தியினுல் அபஞ்சீகிருத பஞ்ச தன்மாத்திரைகள் பிறக்கும். இந்த அபஞ்சீகிருத பஞ்சதன் மாத்திரைகளும், சீவர்களது வியட்டி சூக்கும சரீரமுங் கூடி ஈசுவரனுக்குச் சமட்டி சூக்கும சரீரமாம். இதுவே ஈசுவர னுக்குச் சொப்பனுவஸ்தை. இதையபிமானித்த ஈசுரனுக்கு இரணியகர்ப்பனென்று பெயர். தாமதத்தில்-தாமதம் பிரதானமாகும்போது அபஞ்சீகிருத பஞ்ச பூதத்தினின்று பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்கள் பிறக்கும். இந்தப் பஞ்ச கிருத பஞ்சமகா பூதங்களும், சீவர்களது சமட்டி தூல சரீரங்களுங் கூடி ஈசுரனுக்கு சாக்கிராவஸ்தை. இதை யபிமானித்த ஈசுரனுக்கு விராட்டென்று பெயர்.

சுத்த சைதன்னியமான தன்னை எதிரிட்டறிய உதய மான அறிவுக்கு முன்புண்டான மறதியே அவ்வியத்தமான பிரகிருதி எனவும், அவ்வறிவு பகிர்முக உண்முகமான இடமே மகதத்துவமெனவும், அஃது தன்னிடத்துப் பிரதி பலனமான ஆரோபத்தை நான் என்பதே அகங்காரதத்து வம் எனவும், அதநிர்ச் சலனமே சத்துவம் எனவும், அதன் சலனமே ரசசு எனவும், அதன் மக்கினமே தமசு எனவும் பெயர் பெறும்.

இந்த மூன்று குணங்களில் ஆகாயம்போ லிராநின்ற சிற்சாயை பிரதிபலிக்கும். சுத்துவகுணத்திற் பிரதிபலித்த பிரமச் சாயையே அந்தரியாமியாம். மாயாசம்பந்தமான குணங்கள் பற்றுதவனே பூதபௌதிக சிருட்டிக்கு நிமித்த காரணமாகிய கடவுளாகும்.

மாயையை விளையாட்டாகவுடைய கடவுளது கருணை பெற்ற சீவகோடிகளுக்கு, அனுபோக சாதனம் உண்டாகும்

பொருட்டு தமோ குணமானது பயங்கரமான * ஆவரண மெனவும், நாநாவிதமாகும் † விட்சேப மெனவும் இரண்டு சத்திகளாகப் பிரிந்து தோன்றும்.

இவ்விரண்டில் ஆவரண சத்தியானது தத்துவ ஞானியையும், ஈசுரனையுந் தவிர மற்றைச் சீவர்களுக்கெல்லாம் சரீரத்திரயம், சிதாபாசன், சாட்சி சைதன்னியம் என்னுமிவைகளின் ஒன்றற்கொன்றுள்ள பேதம் தெரிய வொட்டாமல் மறைக்கும். இதனுல் மறைக்கப்பட்ட சீவர் இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாக நானென்றபிமானிப்பர். இந்த அபிமானத்தை அகங்காரக்கிரந்தியென்றும், சம்சாரபந்த மென்றுஞ் சொல்லப்படும். சற்குரு கடாட்சத்தினுலே இந்த ஆவரணம் நீங்கி இருபத்தொன்பது தத்துவங்களின் ஒன்றிற் கொன்றுள்ள பேதம் தெரிகின்றதே முத்தி.

## விட்சேப தன் மாத்திரையின் சூக்கும பூத உற்பத்தி விளக்கம்.

தோற்றமாத்திரமாகிய விட்சேப சத்தியில் சத்த தன்மாத்திரையான ஆகாயமுண்டாகும். அவ்வாகாயத்தில் பரிச தன்மாத்திரையான வாயுவுண்டாகும்; அவ்வாயுவில் ரூப தன்மாத்திரையான அக்கினி யுண்டாகும்; அவ்வக்கினியில் ரச தன்மாத்திரையான அப்புவுண்டாகும்; அவ்வப்புவில் கந்த தன்மாத்திரையான பிருதிவியுண்டாகும்; இந்தத் தன்மாத்திரைகளைந்தும் சூக்கும பூதங்க

* ஆவரணம் என்பது சத்தாவத்தையினென்று. அஃது இருபத்தைந்து தத்துவங்களையும் ஒன்றற்கொன்று பேதந்தெரிய வொட்டாமல் மறைந்திருப்பது.

† விட்சேபம் ஒன்றைச் சொல்லத் தொடங்கி வேறு ஞாபகத்தால் சொல்லாமல் விட்டு விடுதல்.

ளென்று பெயர் பெறும். இத் தன்மாத்திரைகளில் அனு போகத்துக்குச் சாதனமான சூக்கும சரீரந் தோன்றும். அந்த மூன்று குணங்களும் இந்த பஞ்ச தன்மாத்திரை களில் கூடியிருக்கும் சத்துவ குணத்தில் ஒருமை யென்னும் வியட்டியான ஐந்து பங்கும், ஞானேந்திரியங்கள் ஐந்து பங்கும், பன்மை யென்னும் சமட்டியான ஐந்து பங்கும், மனம், புத்தி என்னும் இரண்டும் ஆக இந்தப் பதினேழும் சத்துவ குண அம்சமாகிய அறி கருவிகள்.

இரசோகுணத்தில் எடுத்து ஒன்றாக வைத்த பங்கு ஐந்தும் பிராணாதி பஞ்ச வாயுக்களெனவும், தனித்தனியே எடுத்த பங்கு ஐந்தும் பெரிய கிரியையைச் செய்யுங் கன் மேந்திரியங்களெனவும் நாமங்களாம். இப்பதினேழு தத் துவங்களும் தேவர்களும்-அவுணர்களும் - மனிதர்களும் - மிருகங்களுமாகி உண்டான சீவர்களனைவர்க்கும் சூக்கும சரீரங்களாம்.

தமோகுணப் பங்காகிய சூக்கும பஞ்ச பூதங்களைப் பத்துப் பங்கு செய்து, அவற்றிற் பகுத்த பாதியை ஒவ் வொன்றை நன்னான்காகச் செய்து, தன் அம்சமான பாதியை நீக்கி, மற்றை நான்கோடு நான்கையுஞ் சேர்க்கத் தூலபூதமும் உண்டாயின.

சத்துவ ராசத தாமதமாகிய திரிகுணங்களால் உண் டான விருத்திகள் திரிவிதமாம்; அம்மூன்றும் சாந்த விருத்தி, கோரவிருத்தி, மூடவிருத்தி எனப் பெயர். படிக மணியின் சமீபத்தில் செம்பருத்தியின் புட்பத்தை வைத்தால் அதன் நிறம் அம்மணியில் தோன்றுவது போல, யோகியின் மனமும் நிகழுமாதலால் விருத்திகள், சாத்வீகம், இராசதம், தாமதம் என மூன்று விதங்கள். இராச, தாமத விருத்தி கள் மாத்திரம் நாசத்தை அடைகின்றன. சாத்வீக விருத்தி

இருக்கின்றது. சாத்வீக விருத்தி நிகழ்தலைத்தான் மனம் அந்தர்முகப்படுகிறதென்று சொல்லுகிறது. மற்ற கோர விருத்தி, மூடவிருத்தி என்று இரண்டு (இராசத, தாமத) விருத்திகள் பகிர்முக மானவை. முதன்மையில் இவ்விரண்டு வித விருத்திகள் அடங்கி மனம் அந்தர் முகப்படும். சாத்வீக விருத்தி மாத்திரம் நிகழும். பின்பு இவ்விருத்தியும் ஒடுங்கும். இராசத தாமத விருத்திகள் நிகழுங் காலத்தில் மனம் மலினமாக விருக்கும். இவை நீங்கி சாத்வீகவிருத்தி அதிகப்படவே, மனம் படிகம்போல நின்மலமாயிருக்கும். அப்போது எந்த வஸ்துவுடன் மனம் சம்பந்தப்படுகிறதோ! அந்த வஸ்துவின் தன்மையாக ஆகிவிடுகிறது. இது ஓர் நிலை. இதற்கு வடமொழியில் கிராஹ்ய ஸமாபத்தி என்று பெயர். மனம் விடயங்களுடன் சம்பந்திக்காமல், இந்திரியங்களுடன் மாத்திரம் சம்பந்தித்து, இந்திரியங்களை விடயமாகக் கொள்ளுதல் இரண்டாவது நிலை. இதற்கு கிரஹண ஸமாபத்தி என்று பெயர். கிரஹணம் என்றால் இந்திரியம் என்று பெயர். மனம் ஆன்மாவுடன் சம்பந்தித்தல் மூன்றாம் நிலை. இதற்கு வடமொழியில் கிரஹீதிரு ஸமாபத்தி என்று பெயர். கிரஹீதிரு என்றால் கிரகிக்கிறவன், அதாவது ஆன்மா என்றர்த்தம். ஸமாபத்தி = தன் மயமான பரிணாமம். தன்னிடத்தில் உள்ள ஆன்மாவினிடம் தன் மயப்படுதலைத் தவிர, முத்தர்களான சுகர், பிரகலாதர் முதலானவர்களிடம் மனத்தை ஒரே பிடியாய் நிறுத்தலும் இந்த சமாபத்தியிலடங்கும். ஆதலால் கோர-மூட விருத்திகளை யடக்கி சாந்த விருத்தியை நிகழும்படிச் செய்யவேண்டும்.

சச்சிதானந்தமானவைகள் ஏகமானாலும் அவை சொரூபபேதங்களாய்த் திகழ்கின்றன. சாந்த விருத்தியில் சத்து சித்து ஆனந்தம் ஆகிய மூன்றும் வெளிப்படும். விஷரூபமான கர்மம் முதலான கோர விருத்தியில் ஆனந்தம்

உதியாது. சத்து சித்து தோன்றும் சடமாகிய மண்-கல்-மரங்களின் மூடவிருத்தியில் சத்து மாத்திரம் தோன்றும். சத்தென்பது யாது? சித்தென்பது யாது? ஆனந்த மென்பது யாது? என்று கேட்கப் பெறுமாயின், திரிகாலங்களிலும் நசியாதிருப்பது சத்து. சிற்சட பேதங்களை அறிதல் சித்து. காமத்தை அனுபவிக்கும் போது உண்டாகும் இன்பம் போன்ற சுவானுபூதி சுகமே ஆனந்தம். இந்த ஆனந்தத்தைப் பெறுவதற்கு சத்துவ குணம் அவசியமாகிறது. அந்தச் சத்துவகுணம் எப்போது உதயமாகிறதென்பதை அடியில் வரும் அட்டவணையில் பார்த்துணர்ந்து, அந்த நேரத்தில் சும்மா இருக்கச் சுகம் என்பதைக் குருபிரான் திருவருளாலுணர்ந்து மேற்கூறிய ஆனந்தம் அடைவார்களாக.

## குணத்திரய கால நிருணயம்.

| காலை முதல் மறுநாள் காலை மணி முதல் மணி வரை. | சத்துவகுணம் உதயமாகும் வாரங்கள் : திங்கள் வியாழன். | இராசதகுணம் உதயமாகும் வாரங்கள் : செவ்வாய் வெள்ளி. | தாமதகுணம் உதயமாகும் வாரங்கள் : ஞாயிறு புதன், சனி. |
|---|---|---|---|
| காலை 6—7-30. | சத்துவம் | இராசதம் | தாமதம் |
| 7-30—9 | இராசதம் | தாமதம் | சத்துவம் |
| 9—10-30 | தாமதம் | சத்துவம் | இராசதம் |
| 10-30—12 | சத்துவம் | இராசதம் | தாமதம் |

| காலை முதல் மறு நாள் காலை மணி முதல் மணி வரை. | சத்துவகுணம் உதயமாகும் வாரங்கள் : திங்கள் வியாழன். | இராசதகுணம் உதயமாகும் வாரங்கள் : செவ்வாய் வெள்ளி. | தாமதகுணம் உதயமாகும் வாரங்கள் : ஞாயிறு புதன், சனி. |
|---|---|---|---|
| பகல் 12—1-30 | இராசதம் | தாமதம் | சத்துவம் |
| 1-30—3 | தாமதம் | சத்துவம் | இராசதம் |
| 3—4-30 | சத்துவம் | இராசதம் | தாமதம் |
| மாலை 4-30—6 | இராசதம் | தாமதம் | சத்துவம் |
| 6—7-30 | தாமதம் | சத்துவம் | இராசதம் |
| 7-30—9 | சத்துவம் | இராசதம் | தாமதம் |
| இரவு 9—10-30 | இராசதம் | தாமதம் | சத்துவம் |
| 10-30—12 | தாமதம் | சத்துவம் | இராசதம் |
| 12—1-30 | சத்துவம் | இராசதம் | தாமதம் |
| 1-30—3 | இராசதம் | தாமதம் | சத்துவம் |
| 3—4-30 | தாமதம் | சத்துவம் | இராசதம் |
| 4-30—6 | சத்துவம் | இராசதம் | தாமதம் |

இந்த குணத்திரய அட்டவணையை வெளியிடாமல் இரகசியமாக முன்னோர்கள் வைத்திருந்தனர். பரோபகாரமாகும் பொருட்டு மற்றவைகளைப்போல் இதையும் வெளியிட்டனம். 'இந்த அட்டவணையில் ஒன்றின் பின் ஒன்றாக வரிசைக் கிரமமாக எந்த வசத்திற் பார்த்தாலும் பிறழாமல் முறையே குணங்கள் வருவதும், அந்தந்த வாரத்தில், முன் வாரத்தின் இறுதியில் எந்தக் குணம் முடிவானதோ அதற்கு அடுத்த குணம் உதயமாவதும் மிக்க பொருத்த மாயிருக்கிறது. அதாவது ஞாயிற்றுக்கிழமை காலை 6-மணி வரையில் தாமத குணத்தின் அதிகாரமிருந் திருக்கிற தென்றால், திங்கட்கிழமை காலை 6-மணி முதல் சத்துவகுணம் ஆரம்பிக்கிறது. அங்ஙனமே மற்ற வாரங்களிலும் அந்தந்த முறைப்படி குணோதயமாவதும் நன்கு கவனித்தற்பாலது.

இந்தக் குணத் திரயத்தின் பிரயோசனத்தை நன்குணர்ந்தவர்கள், அந்தந்த நேரத்தின் குண குணத்துக்குத் தக்கபடி நடந்து வருவார்களேயானால், அவர்கள் தத்தம் இஷ்ட பூர்த்தியும் ஆன்மலாபப் பெருவாழ்வும் வந்தெய்தப் பெறுவார்கள்.

சத்துவகுணம் நிகழ்ந்துகொண் டிருக்கும்போது ஒருவர் நம்மைத் நிந்தித்தாலும் சகிக்கும் பொறுமையுண்டாகும். இராசதகுண நேரத்தில் அற்பக் குற்றமும் மலையளவாகத் தோன்றி அளவற்ற கோபாக்கினியை வருவிக்கும். தாமத குணம் நிகழும்போது சாந்தமும் சுருசுருப்பு மில்லாமல், எருமையைப்போன்ற மந்தகுணத்தை யுண்டாக்கும். இவைகளை மேலே விரிவாகக் கூறியிருப்பதால் இங்கு விவரிக்கவில்லை.

சத்துவகுணம் நிகழும்போது செய்யும் தவ முயற்சியால், பள்ளத்திற்குச் செல்லும் நீரைப்போல் சிறிய

பிரயத்தினத்தினுலேயே பெரிய (ஆதாரங்) மக்காம் களுக்கு ஏறி விடலாம். இராச தாமதகுண நேரத்தை யறிந்து முரண்படுவதைத் தடுத்துக்கொள்ளலாம். நன்மையான காரியங்களெல்லாம் சத்துவகுணத்திலேயே எளிதில் கைகூடும்.

சுவானுபவ விளக்கம்.

திங்கள் வியாழன் சத்துவமாம்
செவ்வாய் வெள்ளி இராசதமாம்
தங்கு புந்தி சனியிரவி
தமசென் றுரைத்தார் சார்ந்துய்யே.

ஒவ்வொரு குணத்திற்கும் 1½ மணி நேரம் காலவரையரையாகும். அதாவது சத்துவகுணம் உதயமானுல் முன் அரைமணி நேரம் சத்துவத்தில் சத்துவம். நடு அரைமணி நேரம் சத்துவத்தில் இராசதம், பின் அரைமணி நேரம் சத்துவத்தில் தாமதம். இங்ஙனமே மற்றக் குணங்களேயும் மூன்றுகப் பிரித்து அமைத்துக்கொள்க. புத்தியின் சத்துவத்தை இராசத தாமத குணங்கள் தனக்கு மேல் போக விடாமல் தடுக்கின்றன. அவை யிரண்டையும் விலக்கி, சத்துவகுணம் மாத்திரம் மேலிடும்படி செய்தால், புத்தியானது புருட சாட்சாத் காரத்தைப் பெறுகிறது.

சத்துவம் (ரசோகுணம், தமோகுணமில்லாத நிலைமையில் புத்தியானது சுத்த சத்துவகுண சம்பந்தியாக இருக்கிற புத்தி தத்துவம்) புருடன் இவை யிரண்டும் அவிவேகத்தினுல் சாதாரண சனங்களுக்கு அபேதமாகக் காணப்படுகின்றன. இவை யிரண்டை யும் வேறென்று யோகியர் அறிவார்.

எல்லா வத்துக்களேயும் சுவாதீனமாக வைத்துக்கொள்ளும் தகைமையும், (ஆதிபத்யமும்) சர்வஞான

சத்தியும் உண்டாகின்றன. இந்த சித்திக்கு "விசோகம்" என்று வடமொழியிற் பெயர். எப்போதும் எந்நிலையிலும் விசன மற்ற நிலைமையையுடையவராக ஆகிறார். விருப்பு வெறுப்பற்றவராக இருக்கின்றார். இதுவே சத்துவகுணத்தின் மாட்சிமையாலுண்டான முழுப் பிரயோசனம். ஆதலால் இராசத-தாமதகுண நோத்தையறிந்து, அந்தந்த நோத்தில் அவைகளை யடக்கி, சத்துவகுண நோத்தில் சத்துவகுணத்தின் மாண்பினால் ஆன்மலாபம் அடைந்துய்வார்களாக.

---

## இருபதாவது அத்தியாயம்.

---

### மெய்ஞ்ஞான நிட்டை.

எழுசீர் விருத்தம்.

அகம்புற மாய்ந்து தன்னிலை யுணர்ந்து
அவத்தையைக் கடந்தமே லோர்கள்
திகழ்தரு யோக நிலையெலா முடிந்த
செல்வர்கள் ஏனையோர் யோக
வகையுண ராமற் கண்விடா நாய்போல்
மருண்டுளம் பிதற்றுவ ரவர்கள்
சுகமுறச் சும்மா விருப்பதின் மாண்பைத்
துரிசற வுணர்விதஞ் சொல்வாம்.

#### யோகியர்க்கே ஞானம் ஒழுங்கு.

மெய்ஞ்ஞான நிட்டையானது யோக கைவல்லியம் அடைந்தவர்கட்கே எளிதிற் கைகூடும். யோகத்தையே சிறிதும் அப்பியாசியாதவர்களும், யோகசித்தி பெறாதவர்களும் ஞானத்தை அநுட்டிப்பதானது, அஸ்தி

வார பலமில்லாமல் மாடி வீடு கட்ட முயன்றவரது முயற்சி போல் நிர்ப் பிரயோசனமேயாகும். சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு பெரும்படிகள் அமைத்து, அந்தப் பெரும்படிகளை ஞான வீரர்களாகிய அப்பியாசிகள் அதிக சாக்கிரதையுடனும், தன் முழுப் பலத்துடனும், மகான்கள் ஆசிர்வாதத்துடனும், கடவுள் கிருபையுடனும் அந்தப் படிகளில் ஏறிச் சென்று, அந்தப் படிகட்கு அதீத மான முத்தி வீட்டில் அருட் பெருஞ் சோதியைத் தரிசித்து இரண்டறக் கலப்பதுதான் அரும் பெரும் பிரயோசனம். அவ்வாறு அமைக்கப் பெற்ற நான்கு படிகளில் ஏறிச் செல்லும்போதே, ஒரு படியிலிருந்து மற்றொரு படிக்கு கால் எட்டி வைக்க முடியாமல் தவறி விழுந்து மாண்டவர்கள் கோடானு கோடியாகும். தவறாமல் ஒவ்வொரு படியாக, அதாவது பிராணயாமம் முதலான யோக சித்தியை நன்கு பெற்று ஞானப்படியில் ஏற ஆசித்தல் வேண்டுமேயன்றி, யோகம் நாம் செய்யவேண்டியதில்லை! ஞானத்தை அப்பியாசித்தால் போதும்! என்று கருதுவது அறியாமையே யாகும். சில சோம்பேறிகள்,

யோகியர்க்கே ஞானம் ஒழுங்காம்பே ரன்பான
தாகியரும் யோகமுன்னே சார்ந்தோர் பராபரமே

என்ற' தாயுமான வள்ளல் செய்யுளையும், ஒழிவிலொடுக்கத்தில், சரியைக் கழற்றி—கிரியைக் கழற்றி—யோகக் கழற்றி— என்ற தலையங்கத்தையும், அவ்வங்கங்களுள் கூறப் பெறும் பெரும் பதவிகளையும் பார்த்து பாடமாக வரப் பண்ணிக் கொண்டு, யோக அஸ்திவார பலமில்லாமல்,

... ... பேரன்பான
தாகியரும் யோகமுன்னே சார்ந்தோர்

என்று பெரியோர்கள் கூறப்பெற்றிருப்பதால் நாங்கள் யோகத்தை அநுட்டிக்க வேண்டியதே யில்லை. யோகமெல்

லாம், கேவலம்! கீழ் நிலையிலுள்ளவர்கள் தான் அநுட்டிக்க வேண்டியது! நாங்களோ பேரன்பான தாகியர்! என்றுகூறி, மூலைவீட்டிலும், மடங்களிலும் கஞ்சா—அபின்—கள் சாராயம் முதலானவைகளை உபயோகித்துவிட்டு வாய்ஞானம் பேசி முடித்து, பகலும் இரவும் தூங்குகிறார்களே யன்றி, யோகியர்க்கே ஞானம் ஒழுங்கு என்று கூறப் பெற்றிருக்கிறதே? யோகத்தை நாம் வேண்டாமென்றால் யோக கைவல்யம் பெற்று விட்டோமா?, என்று தானேயுணரவேண்டும்.

அன்றியும், ஷை செய்யுளில் அன்பு என்று கூறாமல் பேரன்பு என்று கூறப்பெற்றிருக்கிறதே? அன்பு என்பது எந்த நிலை? பேரன்பு என்பது எந்த நிலை? அதனுடைய இலட்சணங்களென்ன? என்று நன்குணர்ந்து, அந்தப் பேரன்பின் வழியில் நடக்கிறோமா? அந்தப் பேரன்பு நம்மிடத்தில் வந்து பொருந்தி யிருக்கிறதா? பேரன்பினுடைய தாகம் நமக்கு ஏற்பட்டிருக்கிறதா? தாகம் என்பது எந்த நிலை? தாகவிடாய் கொண்டவன் தண்ணீரை யன்றி வேறொன்றையும் விரும்பாததுபோல, நாம் கடவுளிடத்தில் சிவப்பிரம்மைக்கியம் பெறும் பேரன்பான தாகத்திலே தைல தாரைபோல இடையறாது அன்பு செலுத்துகிறோமா? அவ்வன்பு செலுத்துவதைத் தவிர இதர விஷயங்களில் நமக்குப்பற்றில்லையா? பற்றிருந்தால் நாம் எப்படிப் பேரன்பான தாகியர் என்ற வசனத்திற் கிலக்காவோம்? என்பதை உள்ளபடி அறிந்துணரவேண்டும்.

"சும்மா இருக்கச் சுகம்" என்னும் மேலான மகோன்னத பதத்தில் பூரணமாய்த் திளைத்துப் பிரகாசிப்பவர்கட்கு யோகம், ஞானம் அவசியமில்லையே யன்றி, மற்றவர்கள் யோகம் வேண்டியதில்லை யென்று சொன்னால் ஒருவேளை யோகத்தின் இலட்சணங்கள் தெரியாமலாவது, யோகத்தின் பிரயோசனம் இன்னதென்றுணராமலாவது சொல்ல

லாம். தனக்கு யோக சித்திபெற்ற குருமார்கள் கிடைக்காத தனுல் சொல்லலாம். சரியான யோக மார்க்கத்திற் செல்லாமல் கஷ்டப்பட்டதனுற் சொல்லலாம். ஒரு வேளை யோக விதியின் பத்திய பாகங்களிலிருந்து தவறிப் போனவர்கள், இனி அந்த நிலையைப் பொருந்த முடியாதென்று தீர்மானித்து, "திராட்சைக் குலையைக் கண்டு குதித்துக் குதித்துக் குட்டிக் கரணங்கள் போட்டும் அது எட்டாததால், சிச்சி! இந்தப் பழம் புளிக்கும்" என்று இகழ்ந்து சென்ற நரியைப்போல் இவர்களும் யோகத்தைப் பழித்துச் சொல்லலாமேயன்றி, வாஸ்தவத்தில் இவர்கள் யோகத்தைப் பழிப்பதற்கு எந்த முகாந்தரமுமில்லை. சரியை-கிரியை-யோகமென்னும் படிகளில் ஒவ்வொரு படியையுமே தாண்டுவது சிரமமாயிருக்கும்போது, மூன்று படிகளிலும் சரியானபடி கால்வைத்து ஊன்றுமல், அவைகளை ஒரே தாண்டாய்த் தாண்டிவிட முயல்பவன் கதி எவ்வாறுகும்? என்பதை அநுட்டானிகள் உணர்ந்து கொள்ள வேண்டியதே யன்றி, அநுட்டானம் சிறிது மில்லாமல் வாய் ஞானம் பேசுபவர்களுக்கு என்ன விளங்கும்? அவர்கள் வாய்க்கு வந்தபடி பேசுவார்கள். இதுதான் அவர்கள் கண்ட பலன்.

தாம் வேறு - சரீரம் வேறு என்று பிரித்தறிந்த மகான்கள்; தம் சரீரத்தில் வந்த வியாதியைத் தாமுணராத சீவன் முத்தர்கள்; தம் சரீரத்தைப்பற்றியே நினைப்பில்லாமல் சமாதியில் திகழும் பிரம்ம நிட்டாபரர்கள்; நினைப்பு மறப்பற்று இருவினையில்லாத அத்துவிதிகளுக்குத்தான் யோகம் வேண்டியதில்லையே யன்றி, அவ்வாறில்லாதவர்களும், யோகத்திற் பயிலாதவர்களும், இரண்டொரு நூலில் நாலைந்து வரிகளைப் படித்து, அதன் பாகியார்த்தத்தை மட்டும் தெரிந்து கொண்டவர்கள் யோகத்தை வேண்டாமென்பது முட்டாள்த்தனமேயாம்.

சிலர் கைவல்லியம், ரிபுகீதை, பகவற்கீதை, பிரமகீதை முதலான உயரிய நூற்களில் பேருக்குமாத்திரம் நாலேந்து வரிகளுக்குமட்டும் பாடங்கேட்டுவிட்டு, சர்வம் பிரம்மமயம்! எல்லாம்பிரம்மமயம்! நானும் பிரம்மம்! நீயும்பிரம்மம்! உன் பெண்சாதியும் பிரம்மம்! என் பெண்சாதியும் பிரம்மம்! உன் தங்கையும் பிரம்மம்! உன் தமைக்கையாரும் பிரம்மம்! உன் தாயும் பிரம்மம்! உன் மகளும் பிரம்மம்! சகலமும் பிரம்மம்! எல்லாம் பிரம்மம்! ஆதலால் பிரம்மம் பிரம்மத்தில் கலக்கும். உன் தாயும் - மகளும்-தங்கையும் - தமைக்கையாரும் - நீயும் பிரம்மமா யிருப்பதால் யாரையும் புணரலாம். பிரம்மம் பிரம்மத்தில் கலக்கிறது. அதனல் தோஷமில்லை யென்று அனேகர் அனேக அருவருப்பான காரியங்களைச் செய்ய முயல்கிறார்கள். ஆனல் பாம்பும்—தேளும்—பிறவும் பிரம்மந் தானே? அவைகளைக் கண்டு என் பயப்படுகிறார்களோ! தெரியவில்லை. பெரியோர்கள் எல்லாம் பிரம்மமயம் என்று கூறிய கருத்தை நன்குணராமலும், அந்த நிலையைப் பொருந்தாமலும், அந்நூலின் பாட்டை மட்டிலும் வரப் பண்ணிக் கொண்டு, நானும் பிரம்மம்! நீயும் பிரம்மம்! என்று சொல்விக் கொண்டு, சில அட்டூழியங்கள் செய்வதைத் தான் சரியல்லவென்று கூறுகிறோம்.

## இமையாத நாட்டம்—அமையாத ஆனந்தம்.

மனோகரமான ஏகாந்த விடத்தில் புலித்தோல், மான் தோல், சித்திராசனம் என்னும் இரத்தினக்கம்பளம், வெண்மையாகிய வஸ்திரம் இவைகளில் ஒன்றைப் பூமியின்மேல் விரித்து, முன் ஆசனபேதத்திற் கூறியிருக்கும் விபரப்படி பதுமாசனம் என்னும் அங்காசனத்திலிருந்து, சின்முத்திரையிட்டு, தலை-கழுத்து-இடை-கண் ஆகிய நான்கையும் தம்பத்தைப்போல் அசையாமல் நிறுத்தி, மனதைச் சத்துவ

குணத்திற் பொருத்தி, பசுமரத்தாணியைப்போற் பிறழா மல் நிறுத்தி, சாம்பவி என்னும் சிதாகாசத்தில் இரண்டு கண் களையும் இமைகொட்டாமல் நோக்கி, குருபிரான் ஆக்ஞா பித்தபடி சாதனம் புரிந்து தூங்காமல் தூங்கவேண்டும்.

கந்தாலங்காரம்.

ஆங்கா ரமுமடங் காரொடுங் கார்பர மானந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பும ருர் தினைப் போதளவும்
ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங்கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென்செய் வார்யம தூதருக்கே.

தாயுமானசுவாமிகள்.

தூங்கிவிழித் தென்னபலன் தூங்காமற் றூங்கிநிற்கும்
பாங்குகண்டா லன்றோ பலன்காண்பேன் பைங்கிளியே.

தூங்காமற் றூங்கிச் சுகப்பெருமா னின்னிறைவில்
நீங்காமல் நிற்கும் நிலைபெறவுங் காண்பேனோ.

அவிரோதவுந்தியார்.

ஆங்கறி யாமையுஞ் சாரா தறிவோடுந்
தூங்குவாய் நாளுமென் றுந்தீபற
தோன்றும் பரம்பொரு ளுந்தீபற.

பட்டினத்துப்பிள்ளை.

சினந்தனை யற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று
நினைந்தது மற்று நினையா மையுமற்று நிர்ச்சிந்தனாய்த்
தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற
அனந்தலி லென்றிருப் பேனத்த னேகயி லாயத்தனே.

பத்திரகிரியார்.

ஆங்கா ரமுமடக்கி யைம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமற் றூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம்.

மோகவதைப்பரணி

ஆங்குணரா மையுமுணர்வு மாகியகோ ளறவிருந்து
தூங்கினர்காண் சுகமடைவார்.

கடவுளந்தாதி.

கண்டுகொண் டானந்தக் கூத்தாட்டை நேசக் கருணையினாற்
கொண்டுநின் முன்பர வீதியி லேகுரு பாதமென்று
தொண்டுசெய் தந்தத் திருவாடு மூசலிற் றாங்கிக்கொண்டாற்
பண்டுமுன் சோதிப் பழம்பொருள் தோன்றும் பணிந்தவர்க்கே.

நிஷ்டாபரர்கள் புருவமத்தியாகிய சிதாகாயத்திற் பொருந்தி, இரண்டு நேத்திரங்களையும் மேல் நோக்கிய பார்வையுடன் கண்களை இமைக்காமற் சொக்கி நின்று, உதயமாகா நின்ற கருத்தை அகத்தினிடத்தே யடக்கி, சஞ்சரிக்கும் மனத்தின் ஓட்டத்தைத் தொலைத்துச் சாதனஞ்செய்ய வேண்டுமென்பதற்குப் பின்வருஞ்செய்யுட்கள் சான்று பகர்ந்து நிற்கின்றது.

பீர்முகம்மது அவுலியா-ஆனந்தக்களிப்பு.

உச்சிக்கு நேரே கிழக்கு—நம்ம
ளூருக்கு மேலே பெருவெளி தன்னிற்
பச்சைப் புறுவந்து மேயும்—அதைப்
பாங்குடன் மெல்லப் பழக்கிப் பிடித்துக்
கச்சைக் கயிற்றாலே கட்டிக்—கலி
மாவுடன் தேனைக் கலந்து புகட்டி
அச்சமில் லாக்கூட்டி லடைத்து—நம்மை
யாளும் றகுமானைக் கண்டுகொண் டேனே (தீன்தீன்)

ஔவைகுறள்.

இமையாத நாட்டத் திருந்துணர் வாருக்
கமையாத வானந்த மாம்.

சௌந்தரியந்தாதி.

உமையே மூலத் துறைந்தபொரு ளுணர்ந்தே சுழியின் முனைதிறந்து
இமையோ ரறிய வரிதாகு மெந்தா யுனது பதங்கருதி
நிமையா நாட்டத் துடன்காலை நீட்டி முடக்கி நிலைபுகுந்து
தமையே யுணருந் தரமருளுந் தாயே யமலன் றனிவாழ்வே.

கைவல்யநவநீதம்.

அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகின யம்மட்டும்
நிசத்தி லுள்விழிப் பார்வையா யிப்படி நிரந்தரப் பழக்கத்தால்
வசத்தி லுன்மன னின்றுசின் மாத்திர வடிவமா கிடில்மைந்தா
கசத்த தேகத்தி லிருக்கினும் ஆனந்தக் கடல்வடி வாவாயே.

கடவுளந்தாதி.

சுழிமுனை வட்டச் சுழுமுனை யுச்சித் துவாரத்திலே
வழிபய மென்று மலைப்பர்க ளோமடைக் கொக்கதுபோல்
தெளிவுறு பார்வை யசையாது சித்தடி தூக்கிநின்று
விழியிமை யாதொளி பார்த்தா டுறுவ வெளிப்படுமே.

சௌந்தரியலகரி.

இணைவிழி யிமையா நாட்டத் தெய்திய தலரத் தோன்றும்
பணைநெடும் புவன மிந்தப் பார்வைசற் றிமைக்கு மாயின்
றுணையிழந் தழிவ தெண்ணித் துணிந்தநின் கருணை யென்றாற்
கணையினுங் கொடிய தென்னக் கடவதோ கடவுண் மாதே.

மேற்கூறிய செய்யுட் கருத்துப்படி சாம்பவியென்னும் முத்திரையைப் பொருந்தி, சித்திரத்தில் சித்திரிக்கப்பெற்ற நிவாததீபம்போல் மனத்தை அசைவற நிறுத்தினால் அநாகத சக்கரத்தில் மணி, சமுத்திரம், மேகம், மத்தளம், பேரிகை, வீணை, சிலம்பு, சங்கு, வண்டு, கைத்தாளம் ஆகிய இவை களின் இனிய தொனியைப்போல் பத்துவிதப் பிரணவ நாதங்கள் கேட்கும்.

அகஸ்தியமுனிவர்.

வையஞ் சலமங்கி கால்வான் பலவுயிர் வான்முடியோ
டெய்யும் பரமுதற் சார்வதெல் லாமெம்பி ரான்முருகா
தெய்யன நின்றுநின் றூட்சிலம் போசைத் திருவிளையாட்
டையநின் னங்கம தென்னங்க மாய்நின்ற ஆனந்தமே.

ஞானிகள் நிலைமை.

கந்தமுத லைம்புலனை யடக்கி நாப்பண்
கருத்தமைத்துச் சாம்பவிநோக் கதனை மேவிச்
சிந்தையுறத் தான்சரிக்கு மிடங்கள் தன்னிற்
செறிந்திடையா திருந்திணையி னிட்டை கூட
வந்தெழும்பு மணிசலதி சிலம்பு சங்கு
வண்டிசையாங் குழல்பேரி முழக்கங் காண
இந்தவகை சிவயோகத் திருப்பான் ஞானி
இனியவர்க்குப் பிறவியுமுண் டென்ன லாமோ.

கடவுளந்தாதி.

அன்பருக் கன்பு தரும்பரஞ் சோதியை ஆத்துமத்தோ
டென்புரு கக்கலந் துள்ளே யுருகி யிரவுபகல்
தம்புரு வீணை சரமண் டலத்தொனி தாளந்தித்தி
மின்பெரு குங்கொலுச் சிங்காரங் கண்டிரு மெய்மகிழ்ந்தே.

சிலம்பொலி யப்புற மிப்பாற் சிலம்பொலி தேவர்சபை
யலம்பொலி யோசை யதுவெகு நாத மதற்குமப்பால்
வலம்புரி சுற்றிய வாசலு முச்சி வழிதெரிந்தாற்
புலம்பொலி யாடலும் பாடலு மாகிய பூரணமே.

இவ்விதமான சுகானுபவமும், எக்காலத்திலுங் கேட்டிராத தசவித நாதகீதங்கள் முழங்கிய பேரின்ப நிஷ்டையை பிரம்ம நிஷ்டாபரர்கள் செய்து, அவர்களிடத்துண்டாகும் மகாத்தியத்தைப் பிரபஞ்சத்தவர்கள் கண்டு ஆனந்தமடைந்து, அவர்கட்கு வேண்டிய தொண்டுகள் புரிந்து கைகூப்பி நின்று புகழப்படுவதையும், ஒவ்வொருவரும் பலர் வாயிலாய்ச் செவி குளிரக் கேட்டும், கண் குளிரப் பலகால் பார்த்திருந்தும், நாமும் அவ்வாறு மகான்களை யடுத்துத் தொண்டுபுரிந்து ஆன்ம லாபத்தை யடைய வேண்டுமெனச் சிறிதேனுஞ் சிந்திக்காமற் பிரபஞ்சத்தையே நித்தியமாகப் பல பெயர்கள் கருதி யிருப்பதும்,

சிலர்க்கு ஞானநெறி கிடைக்கப் பெற்றிருந்தும் கிடைக்காத வர்போல் வீண் காலங்கழித்து சோம்பேறிகளா யிருப்ப தும் என்ன அறியாமையோ! தெரியவில்லை.

திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி.

கிடைத்தபொருள் காத்திருக்கக் கிடைத்திலவென் றயர்வார்போற்
படைத்தநின தருள்பெற்றும் பெற்றிலன்போற் பரிவுற்றேன்.

திருவாசகம்.

செய்வ தறியாச் சிறுநாயேன் செம்பொற் பாத மலர்காணப்
பொய்யர் பெறும்பே றத்தனையும் பெறுதற் குரியேன் பொய்யிலா
மெய்யர் வெறியார் மலர்ப்பாத மேவக் கண்டுங் கேட்டிருந்தும்
பொய்ய ஞேனே னுண்டுடுத்திங் கிருப்ப தானேன் போரேறே.

நித்தியமான சாதன சதுட்டயத்தைப் பெற்ற முமூட் சுக்களான பரிபாகிகள் கனிந்த ஞானசிரியரிடத்திற் பொருந்தி, அவரால் ஆன்மசொரூப நிலையில் நின்று சாதிக் கப்பெற்று வந்தாலும், அவர்கள் எவ்வன பக்குவமானாலும், அளவுக்கு மிஞ்சி உட்கொள்ளும் அன்னபானாதிகளால் வியாதி, மயக்கம், சோம்பல், தூக்கம் முதலியவைக ளுண் டாகும். ஆதலால்,

திருக்குறள்.

அற்ற லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு.

மிகினுங் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்

என்னுங் கருத்துக் கிணங்கத் தானுண்ட போசனம் சீர ணித்ததை யறிந்து, அரைவயிறு போசனமும், கால்வயிறு

சலமும், கால்வயிறு வாயு சஞ்சரிப்பதற்கும் தியானமாகிய நிக்ஷ்டை செய்வதற்குமாகிய தினமொன்றுக்கு ஒருவேளை உச்சிப்போதில் அருந்தவேண்டியது. வேறெங்கே சஞ்சரித்தாலும், எங்கேயிருந்தாலும், ஆசை மேலிட்டு மாதர்களிடத்தில் வாழ்ந்தாலும், உண்மையாகிய சின்முத்திரைக் கடலில் மூழ்கிக்கொண் டிருப்பார்கள்.

பட்டினத்துப்பிள்ளை.

நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே.

தூங்காமல் தூங்குதல்.

இவ் வத்தியாயத்தின் பிரதமத்திற் சொல்லிய பலவித ஆதனங்களும், இதர விஷயங்களும் முதிராத அப்பியாசிகளுக் குரியதே யன்றி, முதிர்ச்சியடைந்த ஆன்மஞானிகளுக்கு அத்தியாவசியமானதன்று. தூங்காமல் தூங்குதலென்னும் சுகாதீத நிட்டையிலிருக்கும்போது சமீபத்தில் ஒருவன் மணியை அடித்தாலும், அதுபோன்ற பற்பல பெருந்தொனி யுண்டாகச் செய்தாலும் அவைகளெல்லாம் உண்மையான நிஷ்டையிற் கேட்காது. அங்ஙனங் கேட்கின் அஃது அநிட்டையென் றுணரவேண்டும். அவ்வித தொனிகள் கேட்காதிருக்க வேண்டுமென்று கருதி அறை முதலியவைகளுக்குள் இருப்பதென்று கருதக்கூடாது. எவ்வித வெட்ட வெளியிலிருந்தாலும், எவ்வளவு சனசமூகத்திலிருந்தாலும் அவர்களுடைய சம்பாஷணைகளையும், நடையுடை பாவனைகளையும் சிந்திக்காமல்,

பட்டினத்துப்பிள்ளை.

எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கு மோனத்தே—வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
தாதிமனம் நீர்க்குடத்தே தான்

என்பதுபோல், தனது உண்மை வடிவத்தில் ஐக்கியமாகித் தனது பிரக்ஞையற் றிருக்கவேண்டும். அவ்வித மிருந்தது தான் நிட்டையினது இலட்சணமே யன்றி, பதுமாசன முதலிய பற்பல ஆதனங்களிட்டுக் கண்களை மூடிக்கொண்டும், அயலில் சம்பாஷணைகள் போன்ற சத்தங்களைக் கேட்டுக்கொண்டு மிருப்பதினால் அஃது நிட்டையாகாது. எவ்வளவுநேரம் மனோலயமாகி யிருந்ததோ அவ்வளவு நேரமே நிஷ்டை புரிந்ததாகும். மாணவர்கள் ஞானாசிரியரிடத்தில் உபதேசங் கேட்டு அதனை அநுஷ்டிக்கும்போது மன மடங்கி ஏகாக்கிர சித்தமாயிருக்கின்றதா என்பதையே அவசியங் கவனிக்கவேண்டும். தன்வசமற்று நின்ற விடமே இராப்பகலற்ற விடமாகும்; அஃது சாமானியமானதல்ல.

கந்தாலங்காரம்

அராப்புனை வேணியன் சேயருள் வேண்டும் அவிழ்ந்த அன்பாற்
குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டுங் கொடிய ஐவர்
பராக்கறல் வேண்டும் மனமும் பதைப்பறல் வேண்டுமென்றால்
இராப்பக லற்ற விடத்தே யிருக்கை யெளிதல்லவே.

## இராப்பகலற்ற விடம்.

இரவு பகலற்ற விடத்தையே போக்கும், வரவும், இறப்பும், பிறப்பும், இன்பமும், துன்பமும் என்று சொல்லா நின்ற இருவினைகள் தணந்த நிரதிசயானந்த பதவியென்றும், அவ்விடத்தைப் பொருந்தி நிற்பதனாலேயே பஞ்சேந்திரிய முதலிய கருவி கரணங்களும், ஆகம-புராண இதிகாச முதலான சாஸ்திர வாசனைகளும், ஞானத்தை அடைவதற்கு உபகாரணமாகிய சரியை, கிரியை, யோகமென்னும் படிகளும், ஏனைய பிரபஞ்சக்கருமங்களும் நாசமாகும். இது பற்றியே "இராப்பகலற்ற விடத்தேயிருக்கை எளிதல்லவே" என்றனர் பெரியார். வாசாமகோசரமாகிய இரவுபகலற்ற

தலத்தில் நிருவிகற்ப சமாதிபுரிவதற்கும், மனோலயமாவதற்கும், சற்குருமூர்த்தியானவர் கிருபாநோக்கம் பாலித்து அநுக்கிரகஞ் செய்யப்பட்ட பிரணவோபதேசமே அருட்டுணையாகும். அந்தப் பிரணவம் (கலிமா) என்னும் நிரட்சர மஹாமந்திரத்திற்கே ஒருமொழி, ஒருசொல், ஓரெழுத்து, ஏகாட்சரம் எனப்பற்பல மர்மமான நாமங்களுடன் அறிஞர்களாலும் சுருதிகளாலும் முழங்கப் பெறுகின்றன.

தாயுமானவர்.

ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கு மந்த
வொருமொழியே மலமொழிக்கு மொழிக்குமென மொழிந்த
குருமொழியே மலையிலக்கு மற்றைமொழி யெல்லாங்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்.

குணங்குடியார்.

அல்லாகூ வென்ற அகண்டித கண்டமாய்
நல்லா யிருக்குது காணும்—ஒரு
சொல்லாலே யிப்படித் தோணும்—வெகு
உல்லாச மாலாயி லாக (இல்லல்லாகூ)

திருமந்திரம்

ஓமென்னும் ஓங்காரத் துள்ளே யொருமொழி
ஓமென்னும் ஓங்காரத் துள்ளே யுளபேதம்
ஓமென்னும் ஓங்காரத் துள்ளே யுருவரு
ஓமென்னும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே.

நிட்டானுபூதி.

ஒருமொழி யாலே சுருதியா கமநூ லுயர்புரா ணமுமெலாம் ஒழியும்
ஒருமொழி யாலே சரிதைநற் கிரியா யோகபா வனையெலாம் ஒழியும்
ஒருமொழியாலேஅண்டபூதங்களொடுங்கிடுந் தன்னிலைதோன்றும்
ஒருமொழி சும்மா விருத்தலா மதனல் ஒப்பிலாச் சிவபத மடைவார்.

இவ்வுலகத்திற் காணப்பெறும் மாயாமயக்கங்களோ மகாவலிமையையும், அதிசயானந்தத்தையு முடையது. அத்தகைய காட்சிகளைக் கட்புலன் வழியாய்ப் பார்த்தானந்திக்கும் இந்த மனமானது, அவைகளை ஏறெடுத்துக் கிஞ்சிற்றேனும் பார்க்காமல் அடங்கி இரவுபகலற்ற விடத்திற் சும்மாவிருப்பதென்றால், ஒப்பற்ற பிரணவ ஞானோபதேச சதாநடனசாலையில் எத்தகைய காட்சியும், எவ்வளவு பேரானந்தமு மிருந்திருக்கவேண்டும். இவ்வுலகத்தில் எப்போதேனும், எவ்விடங்களிலேனும் பார்த்ததும், பார்ப்பதும், பார்க்கப்போவதுமாகிய அற்புதத் திபக்காட்சி (Bioscope) முதலான சகல ஆனந்தக் காட்சிகளுக்கும் எத்தனையோ பல்லாயிரமடங்கு உன்னதமானதா யிருப்பதினாலன்றோ இம்மனமானது அவ்விடத்தில் அடங்கிச் சலனமற்று நிற்கின்றது. அங்ஙனமின்றேல் ஒரு கண்ணிமைப்பொழுதாவது சும்மாவிருக்குமா? ஆதலால் "பிரணவம்" என்னும் மந்திரமானது சாமானியமானதல்ல; அஃது எட்டில் எழுதவும் வாயினாற் சொல்லவுங்கூடிய தாத்ததன்று; ஆனதுபற்றியே,

வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்
கெட்டாத புட்பம் இறையாத தீர்த்தம் இனிமுடிந்து
கட்டாத லிங்கங் கருதாத நெஞ்சங் கருத்தி னுள்ளே
முட்டாத பூசையன் றோகுரு நாதன் மொழிந்ததுவே

எனப் பட்டினத்தடிகள் திருவாய்மலர்ந்துள்ளார். இதைச் சில ஆசிரியர்கள் ஆய்ந்தோய்ந்து பாராமல், ஓர் பிரதிப்பிரயோசனத்தைக் கருதி, தமது மாணவர்கட்கு அம்மந்திரத்தைச் செப்பேட்டில், "ஓம்" என்றும், இஃதே பஞ்சாட்சரமென, "நமசிவய, சிவயநம, வசியவசி, வசி, சி" என்றும், அறு கோணத்தைக் கீறி, அதில் "சரஅணபவ" என்றடைத்து இதே சடாட்சரமென்றும்,

சிதம்பர சக்கரந் தானறி வாரிந்தச்
சீமையி லுள்ள பெரியோர்கள்
சிதம்பர சக்கர மென்று லதற்குள்
தெய்வத்தை யல்லவோ காணவேணும்.

என்னும் வாலைக்கும்மியின் வாக்கியத்தைக் கவனிக்காமலும், சிதம்பரசக்கரம், நாற்பத்துமுக்கோண முதலானவைகளை வரைந்துகொடுத்து, மூலமந்திரத்தைத் தினமொன்றிற்குப் பதினாயிரம் உருச்செபித்து முடிக்கும்படி உபதேசிக்கின்றார்கள். அவ்வாசிரியர்கள் சொல்வதை சில பேதை மாணவர்கள் கேட்டுச் செபித்து, எவ்விதப் பிரயோசனத்தையும் பெறாமல், சரீரத்தில் உஷ்ணம் அதிகரித்து இஞ்சி தின்ற குரங்கைப்போல் விழிக்கிறார்கள். என்ன பரிதாபம்!

## சும்மா விருக்கச்சுகம்

ஒருமொழியாகிய "ஓம்" என்னும் பிரணவ மந்திரத்தின் சக்தியினாலேயே மனமானது பதைப்பற்றுச் சும்மா விருக்கும் என்பது, "ஒருமொழி சும்மா விருத்தலாம்" என்பதனால் இனிது விளங்குகின்றதுடன், "சும்மாவிருத்த லென்பது" வாயை மூடிக்கொண்டிருப்ப தல்லவென்றும், இரவு பகலற்றவிடத்திற் பிரணவ ஞானோபதேசத்தினாற் சொக்கி யிருப்பதென்றும் புலப்படுகிறது.

## தூணைங்குடியார்

சொற்கடங் காச்சுக ஞானம் தன்னிற்
சும்மா விருக்குஞ் சுகமதே மோனம்
எட்கிடை யாயினும் பானம் தன்னை
எடுத்துண் டிருப்பதற் கிச்சித்தே யானும் (இரக்கத்)

கந்தரனுபூதி

செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விருசொல் லறவென் றலுமே
அம்மா பொரு ளொன்று மறிந்திலனே.

தாயுமானசுவாமிகள்

சும்மா விருக்கச் சுகஞ்சுக மென்று சுருதி யெல்லாம்
அம்மா னிரந்தாஞ் சொல்லவுங் கேட்டும் அறிவின் றியே
பெம்மான் மவுனி மொழியையுந் தப்பியென் பேதமையால்
வெம்மாயக் காட்டி லலைந்தே னந்தோ! வென் விதிவசமே.

சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே
இம்மாயா யோகமினி யேனடா—தம்மறிவின்
சுட்டாலே யாகுமோ! சொல்லவேண் டாங்கன்ம
நிட்டா! சிறுபிள்ளாய் நீ.

சும்மா விருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மா லறிதற் கெளிதோ பராபரமே.

ஒழிவிலொடுக்கம்

சும்மா விருக்கவைத்த சூத்திரமாஞ் சாத்திரத்தை
விம்மாக் கதறுவதும் வேலைகளும்—தம்மறிவால்
நீட்டிப் பிடித்திருக்கும் நிட்டைகளும் ஞானிகள்முன்
காட்டும் பரியாச கம்.

ஞானசுகாதீத வெண்பா.

உன்னுதே யோடாதே யூன்றியொரு மந்திரத்தைப்
பன்னுதே சாத்திரங்கள் பாடாதே—என்னுணை
அப்பாலு மொப்புவமை யற்றசுகா தீதத்தில்
எப்போதுஞ் சும்மா விரு.

## இருபத்தோராவது அத்தியாயம்.

---

### பெண் ஞானம்.

விருத்தம்.

*சங்கையில் பரம ஞான தத்துவம் புருட ரன்றி*
*மங்கையர் பொருந்தாரென்னு மடமையைத் தவிர்த்துத்தத்தம்*
*அங்கையி னெல்வி மான அரிவையர் ஞான மெய்து*
*மிங்கிதந் தன்னைச் சான்றோ டிங்கிவ ணியம்பு தும்மால்.*

மோட்சமடைய விருப்பமுள்ளவர்களில் ஆண், பெண் என்கின்ற வித்தியாசமே யில்லை. ஆனால், ஆடவர்கள் எதேச்சையாய் எங்கும் போகவும், எவ்விடத்திலுந் தங்கவும், யாரிடத்திலுஞ் சந்தேகமின்றிச் சிநேகிக்கவும், சம்பாஷிக்கவும் கூடும். மாதர்களோ! அவ்வாறின்றி விவாகம் புரிவதற்குமுன் தாய் தந்தையர்களுடைய ஆக்கினைக்குள்ளும், விவாகம் முடிந்தபின் நாயகனுடைய ஆக்கினைக்குள்ளும் கட்டுப்பட்டு நடக்கவேண்டியதிருப்பதால், தன்னிஷ்டம்போல் எங்கும்போகவும், வரவு முடியாமலிருக்கின்றது. இதைத் தவிர, ஞானம் அடைவதற்கு வேறு பேதாபேதங் கிடையாது. ஆனால் குடும்பத்திற்கும், ஊரார் பழிச்சொற்களால் தூற்றுவதற்கும் பயப்படுகின்ற மாதர்களுக்கே மேற்சொல்லிய நிர்ப்பந்தங்களுண்டு; உண்மையில் ஞானாசிரியரைக் கண்டு இந்த ஜென்மத்திலேயே மோட்சம் அடைந்துவிட வேண்டும் என்றெண்ணி, இந்த வுலக வாழ்வு முழுவதும் மாயாரூபம், தாய், தந்தை முதலிய சர்வ வுறவினர்களும் காய சம்பந்தமாகிய மாயசம்பந்தமென வெறுத்து மெய்த் துறவடையும் மகளிர்களுக்கு அந்த நிர்ப்பந்தமேயில்லை. மானாபிமானம்

## ஆறுதாரங்களையும், ஆதாரமில்லாத பிரம்மரந்திரத்தையும் காண்பிக்கும் படம்.



இந்த மனித படத்தில் எந்தெந்தவிடத்தில் எந்தெந்தக் கோணம் சக்கரமாக அமைக்கப் பெற்றிருக்கிறதோ அந்த விடத்தில் அந்தந்த ஆதாரங்க ளிருப்பதாக பாவிக்கவும்.

நெற்றியில் பிரபையுடன் கூடிய கவிந்த வட்டமானது ஆக்ஞைத் தானம். அதற்கு மேலாக கர்ணும் வளைவையடுத்து நீளமாகப் பிரகாசிப்பது பிரம்ம ரந்திரம்

525-ஆம் பக்கமுதல் 535-ஆம் பக்கம் வரையில் பார்த்துணர்க.

என்னும் குப்பையைத் தலையில் வாரிப் போட்டுக் கொள்ளாதவர்களை யார், யார் எப்படிச் சொன்னால்தா னென்ன? பூரண சந்திரனைப் பார்த்து நாயானது இராமுழுவதும் "சள், சள்" என்று குலைத்துக்கொண் டிருந்ததானல், நாய்க்கு வாய் வலிக்குமேயன்றிச் சந்திரனுக்கு ஏதாவது கெடுதியுண்டா? ஒருபோதுமில்லை.

இந்த உலகத்தார்களோ சாமான்யத்தில் ஒருவரை ஈடேற விடமாட்டார்கள். ஏனென்றால், மாயாசத்தியான வள் அவர்கள் காதைப் பிடித்து முறுக்கி, பிறரை நல் வழிக்குப் போகாமல் தடுக்கும்படி சொல்லச் செய்கிறாள். அதனால் அப்படிச் சொல்கிறார்களே யன்றி, பாவம்! அவர்களது சுயேச்சையாய்ச் சொல்ல வாவில்லை. இதற்கோர் திருட்டாந்தமுண்டு, அஃது பின்வருமாறு:

ஆசிரியர் அவதாரம் (Birth)

ஹிஜிறி 1304ஹு றஜபுமீ பிறை 23 இங்கிலீஷ் 1887ஹு எப்ரல்மீ 18உ கலியுகாதி 4988-ல் சருவ சித்துஹு சித்திரைமீ 7உ சோமவாரம் பகல் நாழிகை 16, விநாடி 16, (மணி 12—30)-க்கு சனனம். சென்ம நட்சத்திரம் சதயம்; சென்ம லக்கினம் கடகம்; சென்ன காலத்தில் இராகு மஹா திசையில் குருபுத்தியில் இருப்பு, வருடம் 1, மாதம் 5, நாள் 23, நாழிகை 22, விநாடி 31.

இந்த சுபதினத்தில் இராமநாதபுரம் ஜில்லா கமுதியைச் சேர்ந்த பெருநாழிமாநகரில் சில அற்புதக் குறிப்புகளுடன் அவதரித்ததாகக் கணிககப் பெற்றிருக்கிறது.

## செனனக் குறிப்பு.

| | | | |
|---|---|---|---|
| புதன் | சூரியன் செவ்வாய் | சுக்கிரன் | சனி |
| கேது சந்திரன் | இராசி. | | இலக்னம் |
| | | | இராகு |
| | | வியாழன் | |

வயது 23 நடந்துகொண்டிருக்கும்போது சில மனிதர்கள் வெகு ஆத்திரமுடையவர்கள்போல் என்னிடம் வந்து, உமக்குச் சுமார் 20 வயதுக்கு மேற்பட்டிருக்கலாமே? இனிமேலுங் கல்யாண முடிக்காமலிருக்கலாமா ? தாய், தகப்பன் எத்தனை நாளைக்குத்தான் சமைத்துப் போடுவார்கள் ? அவர்களுக்கும் நாட்டுப்பெண்ணை (மருமகளைப்) பார்க்க ஆசையிருக்காதா ? நீர் செய்வது சரியல்ல ? என்ன சொல்லுகிறீர் ? என்று கேட்டார்கள். அப்போது நான், நீங்கள் சொல்வது நியாயந்தான் ; எனக்கும் விருப்பம் இல்லாமற் போய்விடவில்லை; ஆனால் 200 ரூபாய் எங்கேயாவது பார்த்து வாங்கிக் கொடுப்பீர்களேயானால் நீங்கள் சொன்னபடி நடந்துகொள்கிறேன் என்று பதில் சொன்னேன். அவர்கள் நாளையதினம் வந்து முடிவுசொல்கிறேன் என்று சொல்லிப்போனவர்கள் மறுபடி நானிருக்கிற திசையை

நாடிக் கனவிற்கூட வரவில்லை ; என்னைக் கண்டாலும் சாடையாய் வேறொரு வழியாய்ப் போய்விடுவார்கள்.

கப்பலில் பெண்வருகிறது, யார்—யாருக்குத் தேவையென்று கேட்டால், எனக்கு ஒன்று, என் அப்பனுக்கும் ஒன்று என்பார்கள். பெண் 1-க்கு ரூ. 100 கிரயம் என்றால், நான் சின்னப்பிள்ளை, எங்கப்பன் கிழவன் என்று சொல்லி விடுவார்கள். ஆதலால், எல்லோருக்கும் திருப்தியாய் நடந்துகொள்ள முடியவே முடியாது. இதைப்பற்றி, "எல்லாரோடும் இணங்க முயலுதல்" என்று ஒரு சிறிய கதையுண்டு ; அதன் சங்கிரகம் பின்வருமாறு :—

ஒரு கிழவனும், அவன் மகனும் தங்கள் குதிரையொன்றை விற்கவிரும்பிச் சந்தைக்கடைக்கு ஓட்டிக்கொண்டு போனார்கள். அதைப் பார்த்த ஒரு பாட்டைசாரி "இந்தக் கிழவனுக்குப் பைத்தியமா ! இந்தச் சிறுகுழந்தையைக் கால்கடுக்க நடத்திக்கொண்டு, குதிரையை விருதாவில் ஓட்டிக்கொண்டு போகிறானே !" என்றான்.

அதைக்கேட்ட கிழவன் தன் மகனைக் குதிரைமேலேற்றித் தான் அதன் பக்கத்தில் நடந்து சென்றான். மற்றொரு வழிப்போக்கன் இவர்களைப் பார்த்து, மதிகெட்ட பையா ! இவ்வளவு விருத்தாப்பியமான உன் தந்தை நடந்துவர நீ குதிரைமேலேறிப் போகிறாயா ? பேஷ் ! நன்றாயிருக்கிறது ! என்றான்.

அதைக்கேட்ட கிழவன் சிறுவனை இறக்கிவிட்டுத் தான் மாத்திரம் குதிரைமேலேறிச் சென்றான். அதைக்கண்ட வேறொருவன், " ஹா ! ஹா !! மஹாநேர்த்தி ! இரக்கமென்பது கிஞ்சிற்றுமில்லாத இக்கிழவனைப் பார்த்தீர்களா ? குதிரைமேல் தான் சுகமாயிருந்துகொண்டு இக்குழந்தையை நடத்திக்கொண்டு போகிறானே !" என்று பிரலாபித்தான் ;

## செனனக் குறிப்பு.

| | | | |
|---|---|---|---|
| புதன் | சூரியன் செவ்வாய் | சுக்கிரன் | சனி |
| கேது சந்திரன் | இராசி. | | இலக்னம் |
| | | | இராகு |
| | | வியாழன் | |

வயது 23 நடந்துகொண்டிருக்கும்போது சில மனிதர்கள் வெகு ஆத்திரமுடையவர்கள்போல் என்னிடம் வந்து, உமக்குச் சுமார் 20 வயதுக்கு மேற்பட்டிருக்கலாமே? இனிமேலுங் கல்யாண முடிக்காமலிருக்கலாமா? தாய், தகப்பன் எத்தனை நாளைக்குத்தான் சமைத்துப் போடுவார்கள்? அவர்களுக்கும் நாட்டுப்பெண்ணை (மருமகளைப்) பார்க்க ஆசையிருக்காதா? நீர் செய்வது சரியல்ல? என்ன சொல்லுகிறீர்? என்று கேட்டார்கள். அப்போது நான், நீங்கள் சொல்வது நியாயந்தான்; எனக்கும் விருப்பம் இல்லாமற் போய்விடவில்லை; ஆனால் 200 ரூபாய் எங்கேயாவது பார்த்து வாங்கிக் கொடுப்பீர்களேயானால் நீங்கள் சொன்னபடி நடந்துகொள்கிறேன் என்று பதில் சொன்னேன். அவர்கள் நாளையதினம் வந்து முடிவுசொல்கிறேன் என்று சொல்லிப்போனவர்கள் மறுபடி நானிருக்கிற திசையை

நாடிக் கனவிற்கூட வரவில்லை; என்னைக் கண்டாலும் சாடையாய் வேறொரு வழியாய்ப் போய்விடுவார்கள்.

கப்பலில் பெண்வருகிறது, யார்—யாருக்குத் தேவையென்று கேட்டால், எனக்கு ஒன்று, என் அப்பனுக்கும் ஒன்று என்பார்கள். பெண் 1-க்கு ரூ. 100 கிரையம் என்றால், நான் சின்னப்பிள்ளை, எங்கப்பன் கிழவன் என்று சொல்லி விடுவார்கள். ஆதலால், எல்லோருக்கும் திருப்தியாய் நடந்துகொள்ள முடியவே முடியாது. இதைப்பற்றி, "எல்லாரோடும் இணங்க முயலுதல்" என்று ஒரு சிறிய கதையுண்டு; அதன் சங்கிரகம் பின்வருமாறு:—

ஒரு கிழவனும், அவன் மகனும் தங்கள் குதிரையொன்றை விற்கவிரும்பிச் சந்தைக்கடைக்கு ஓட்டிக்கொண்டு போனார்கள். அதைப் பார்த்த ஒருபாட்டைசாரி "இந்தக்கிழவனுக்குப் பைத்தியமா! இந்தச் சிறுகுழந்தையைக் கால்கடுக்க நடத்திக்கொண்டு, குதிரையை விருதாவில் ஓட்டிக்கொண்டு போகிறானே!" என்றான்.

அதைக்கேட்ட கிழவன் தன் மகனைக் குதிரைமேலேற்றித் தான் அதன் பக்கத்தில் நடந்து சென்றான். மற்றொரு வழிப்போக்கன் இவர்களைப் பார்த்து, மதிகெட்ட பையா! இவ்வளவு விருத்தாப்பியமான உன்தந்தை நடந்துவர நீ குதிரைமேலேறிப் போகிறாயா? பேஷ்! நன்றாயிருக்கிறது! என்றான்.

அதைக்கேட்ட கிழவன் சிறுவனை இறக்கிவிட்டுத் தான் மாத்திரம் குதிரைமேலேறிச் சென்றான். அதைக்கண்ட வேறொருவன், "ஹா! ஹா!! மஹாநேர்த்தி! இரக்கமென்பது கிஞ்சிற்றுமில்லாத இக்கிழவனைப் பார்த்தீர்களா? குதிரைமேல் தான் சுகமாயிருந்துகொண்டு இக்குழந்தையை நடத்திக்கொண்டு போகிறானே!" என்று பிரலாபித்தான்;

அதைக்கேட்ட பிதா தன்மகனையும் பின்னால் ஏற்றிக் கொண்டு போனான்.

சிறிது தூரம் போய்க்கொண்டிருக்கும்போது மற்றொரு மனிதன் கண்டு, ஐயோபாவம்! இந்த அநியாயம் எங்கேனுமுண்டா? ஒரு சிறு குதிரைமேல் உலக்கைத் தடியன்போல் இரண்டுபேர் ஏறிக்கொண்டு செல்கிறார்களே? இவர்களை அது சுமப்பதிலும் அதை இவர்கள் சுமப்பதே தகுதியானது என்றான்.

இவ்வார்த்தையைக் கேட்டுக் கிழவனும், மகனும் வெட்கமுற்றுக் கீழேயிறங்கி, குதிரையின் கால்களைக் கட்டிக் குறுக்கே ஒரு பளுவான தடியை நுழைத்து, இருவரும் முன்னும் பின்னுமாகத் தோளின்மேல் தூக்கிக்கொண்டு, வழியில் இருந்த ஒரு மரப்பாலத்தின் மீது சென்றார்கள்.

அது சுத்தக்கோரணியாய் இருந்ததனால் சனங்கள் கும்பல் கூடிக் கைகொட்டிக் கேலிபண்ணிச் சிரித்துப் பின் தொடர்ந்தார்கள். அதனால் குதிரை வெருண்டு கால்களை யுதைத்து, கயிற்றை யறுத்து ஆற்றில் விழுந்து முழுகிப் போயிற்று. கிழவன் வயிறு எரிந்து, ஐயோ! "உலகம் பலவிதம்" என்பதை மறந்து எல்லாருக்கும் திருப்தியாய் நடக்க என்னாலியன்றவை யெல்லாஞ்செய்தும், கடைசியில் ஒருவருக்கும் திருப்தியாய் நடக்க முடியவில்லையே! என் குதிரையையும் இழந்தேனே! என்று புலம்பிக்கொண்டு வீட்டுக்குத் திரும்பிப்போனான். ஆதலால் உலகத்தார்கள் ஒருவரை முன்னேற விடாமல் கெடுக்க ஆரம்பிப்பார்கள். இதனையுணர்ந்து யார், யார் எதைச் சொன்னபோதிலும்,

குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்

என்னும் பொய்யாமொழிப் புலவர் உத்தரவேதக் கருத்தையும்,

ஆரா ரெனக்கென்ன போதித்து மென்னவென்
அறிவினை மயக்க வசமோ

என்னும் தாயுமானவர் கருத்தையும் நன்குணர்ந்து, அவர்கள் சொல்வதில் உசிதமானவைகளை ஒப்புக்கொண்டு அநுசித மானவைகளைத் தவிர்த்து மயங்காதிருக்கவேண்டும்.

பெண்கள், ஞானம் அடையலாம் என்பதற்கும், அடைந்திருக்கிறார்கள் என்பதற்கும் பல திருஷ்டாந்தங்க ளிருக்கின்றன. பெண்களுக்கு நாடி நரம்புகள் மெல்லியதா யிருப்பதாலும், வெளி விவகாரங்கள் அதிகமாயில்லாத தாலும் அவர்களுக்கு ஞானம் எளிதில் கைகூடும். பிரபுலிங்க லீலையில் அக்கமாதேவி துறவு கதியென்றே ஓர் படலமுமிருக்கின்றது. அந்த அக்கமாதேவியென்னும் பெண்மணி, தன்னை நாயகியாக்க விரும்பிய கௌசிகராசனை வாந்திபண்ணிய சோற்றைப்போல அருவருத்து நீக்கி விட்டு, தானணிந்திருந்த உயர்ந்த ஆடையையும், இரத் தினங்கள், பொன்னாபரணங்களையும் ஒழித்து, நெடிய கூந்தலை யவிழ்த்துத் தன் சரீரமுழுதும் மறையும்படி விரித்துத் தொங்கவிட்டு, பொற்பாவைபோல் திகம்பரி யாய்ச் செல்லும்போது, தாயும், தந்தையும் வந்து, மகளே! உனக்கு நேரிட்ட கெடுதி யாது? எங்களைவிட்டு எங்கே போகின்றாய்? என வருந்தியழும்போது அவர்களை நோக்கிச் சொல்கிறாள்: என்னை உங்கள் புதல்வியென்று மனமயங்கி வருந்துதல் தகாது; நான் என்னை யறிதற் பொருட்டு மெய்ஞ்ஞானத்தை உணர்த்தும் சற்குருநாதனைத் தேடிச்செல்கின்றேன் என்று சொல்லி, அவர்களைக் கண் ணெடுத்துப் பார்க்காமல் அயலார்போல நீங்கி, வெயிலின் வெப்பம் பொறாமல் நிழலைவிரும்பிச் செல்வார்போல, அல்லமதேவரை நகரங்களிலும், மலைகளிலும், வனங்களிலும் தேடியலைந்து, முடிவிற் கல்யாணபுரியிலிருப்பதாகக் கேள்வி

யுற்றுச்சென்று, வசவண்ணர் மடத்தில் அல்லமதேவரைக் கண்டு, நெருப்பிலிட்ட அரக்கைப்போலும், மெழுகைப் போலும் மனமானது நெகிழ்ந்துருக, சொற்கள் தடுமாற, உரோமஞ்சிலிர்க்க, கண்களிலிருந்து தாரை தாரையாய் ஆனந்த பாஷ்பஞ் சொரிய நின்று கைகூப்பி வணங்கி, சுவாமி! பிறவிப் பிணிக்கு அஞ்சித் தேவரீரது திருவடியை நாடியடைந்தேன். அடியாள்மீது கிருபாநோக்கம் பாலித்து அருள் செய்யவேணுமென்று தேம்பித் தேம்பியழுது சொல்லி நின்றாள். அதுகண்ட அல்லமதேவர், இவளைப் போல் அதிதீவிர பக்குவமடைந்தவர்கள் ஒருவருமேயில்லை ; இப்படிப் பக்குவப்பட்ட சீடர்கள் கிடைப்பது அரிதென்று தம் திருவுளத்திலெண்ணி, அவளை நோக்கி, நீ ஐம் பூதங்களல்லை? ஐம்பொறிகளல்லை? புத்தியுமல்லை? சோதி சொரூபமாகிய பிரமம் நீயேயாவாய்? மேலும், காண்பவனென்றும், காணுங்கருவியாகிய அறிவென்றும், காட்சிப் பொருளென்றும் வெவ்வேறு பேதங்களிருக்குமானால் அந்த நிலையானது, உலகமேயன்றி முத்திநிலையல்ல என்று நன்குணர்த்தி அது, இது என்னும் சுட்டொழிந்த மெய்ந் நிலையை அநுக்கிரகம் பண்ணினார்.

பிரபுலிங்கலீலை.

பூத நீயலை பொறிகளு மலையலை புந்தி
ஏது நீயலை யிவற்றினை மயங்கியா னென்னும்
போத நீயலை யென்றிவை யனைத்தையும் போக்கிச்
சோதி யாகிய பிரம்மமே நீயெனச் சொல்லி.

ஞேய ஞானஞா துருவென விவைபல நிற்கு
மாயின் வேறு முத்தியன் றதுசக மாமென்
றேயு மாறிது வதுவெனுஞ் சுட்டிலா வியல்பை
மாயை மாறிய தேவிபா லருளினன் வள்ளல்.

அதுவுமன்றி மேற்படி பிரபுலிங்கலீலையில் அசகண்ணனென்னு மகான் உயிர் நீங்கியதாகவெண்ணி வருந்திய அவர் தங்கை முத்தாயி அம்மைக்கு, அல்லமதேவர் அவள் மனச் சாஞ்சல்யத்தை நீக்கி, அவளெதிர் பாராத தத்துவஞானத்தையும் அவளுக் குபதேசித்திருக்கிறார். அதன் முழு விபரங்களை இங்கு எழுதினாற் புத்தகம் விரிவாகிவிடு மென்று சுருக்கமாக எழுதலானேன். அன்றியும், திருவள்ளுவ நாயனாரது தமக்கையாராகிய ஔவைப்பிராட்டியாரும் மெய்ஞ் ஞானச்செல்வி என்பதற்கு அவ்வம்மையார் திருவாய் மலர்ந்தருளிய "ஔவை குறள்" என்னும் மெய்ஞ்ஞான நூலே போதிய சான்றாகும். அன்றியும் சரசுவதி யென்னும் பெண்கள் திலதம் கலைகளுக்கே அதிபதியாக விளங்குகிறாள். காரைக்காலம்மையார் பெரிய ஞானேஸ்வரியென்பதும், அவ்வம்மைக்காக இன்றளவும் காரைக்காலில் மாங்கனி மகோற்சவம் நடை பெறுவதும் தமிழுலகம் நன்கறியும். நமது ஞானக்களஞ்சியம் சங்கீத அத்தியாயத்தில் கூறிய மாணிக்க வல்லியின் புத்திரிகள் ஞானம் அடைந்த சரித்திரத்தாலும், அப்பெண்மணிகள் கூறிய ஞானோபதேசத்தாலும் நன்கறியலாம். இன்னும் அனேக பெண் ஞானிகள் சரிதமும் உள்ளன. விரிவஞ்சி விடுத்தனம்.

## முஸ்லிம் ஞானேஸ்வரி.

ராபி அத்துல் பஸ்ரிய்யா அலைஹா என்று ஒரு பெண்கள் திலதத்துக்கு சிறுபிராயத்தில் தாயும் தகப்பனும் இறந்துவிட்டார்கள். பின்பு அவர்களுடைய ஊரில் பெரும் பஞ்சம் வந்தது. அதனால் மனிதருக்கு மிகுந்த கஷ்டம் உண்டாயிற்று. அக்காலத்தில் ஒரு துர்க்குணமுள்ளவன் அந்த அம்மாளை ஒருவனிடத்தில் கிரயத்திற்கு விற்றுவிட்டான். வாங்கினவன் தனக்குப் பணிவிடைசெய்வதற்காக தன்னிடத்தில்

வைத்துக்கொண்டான். அந்தம்மாள் பகல் முழுவதும் எச மானனுக்குப் பணிவிடை செய்வதுடன், ஆண்டவனை நாடி நோன்பும் வைப்பார்கள். இரவாகிவிட்டால் எசமானன் தூங்கினவுடன் பக்கத்திலிருந்த ஒரு காலியான வீட்டில் போய் துணியை விரித்து, அல்லாவுக்காக மிகுந்த மரியாதை யுடன் ஓர் மனமாகத் தொழுது கொள்வார்கள். இரா முழு தும் வணங்கிக் கொண்டிருப்பார்கள்.

பொழுது விடிந்துவிட்டால் கிரயத்துக்கு வாங்கின எசமானனிடத்தில் அவனுக்குப் பணிவிடை செய்வதற்காக வந்துவிடுவார்கள். இவ்விதமாக நடந்துவரும் காலத்தில், ஓர் இரவில் மனதுவருந்தி, அன்பும் அச்சமும் பொருந்தி வணங்கிக் கொண்டிருக்கும்போது, அவர்களுடைய எசமான் விழித்து வெளியில்வந்தார். அவருடைய பார்வையானது அந்த அம்மாள் வணங்கிக் கொண்டிருக்கிற வீட்டின் புறத் தில் நோக்கினது. அந்நேரத்தில் அந்த அம்மாள் தன் னுடைய சிரசைப் பூமியில் வைத்து, ஆண்டவனே! என் னுடைய நிலைமையை நீ அறிந்திருக்கிறாய். இன்னும் என் னுடைய மனம் உன்னை வணங்குவதில் எவ்வளவோ அபேட் சையா யிருக்கிறதென்று நீ அறிந்திருக்கிறாய். என்னுடைய மனதிற்கு சௌகரியமாகிறது உனக்கு வழிபடுகிறதாகும். உனக்கு வணக்கம் செய்கிறதானது என் கண்களுக்கு ஒளிவாகும். உன்னுடைய திருநாமமானது எனக்கு இன்பமான ஆகாரமாகும். உன்னை திக்று (தியானம்) செய்வது எனக்கு நித்திரையாகும் என்று புலம்பிக்கொண் டிருந்தார்கள். என்னுடைய தாயும் தகப்பனும் என்னை எத்திம் (அனாதை)யாக வைத்துவிட்டு மௌத்தாய்விட்டார் கள். ஆண்டவனே! உன்னைத்தவிர எனக்கு ஒருவரும் உதவி கிடையாது. எப்போதும் உன்னிடத்திலே என் மனதைச்

சாட்டிவிட்டேன். மனிதனுக்கு பணிவிடை செய்வதனால் எனக்கு யாதுபிரயோசனம்? ஆண்டவனே! நான் என்ன செய்வேன். ஒரு மனிதனுக்குப் பணிவிடை செய்யும்படி பணித்தாய். ஆனதால் உன்னை வணங்குவதில் குறைவாக இருக்கிறது. இல்லாவிட்டால் இராப்பகல் உன்னுடைய வணக்கத்தின் பேரிலேயே இருந்துகொண்டு, ஒரு மூச்சாகி லும் உன்னுடைய ஞாபகத்தை விட்டு நான் நீங்கி இருக்க மாட்டேன் என்று சொல்லிப் பிரலாபித்தார்கள்.

அந்தப் பாழ்வீட்டில் ஆண்டவன் வல்லமையினால் மிகுந்த பிரகாசமுள்ள ஒரு கிந்தில் (விளக்கு) அந்தரத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. அதனால் அந்த வீடு முழு தும் ஒரே பிரகாசமாக இருந்தது. இவைகளை அந்த எச மான் கண்டு தன் நிலைமையற்று, அச்சமடைந்து, இத்தகைய பெரியோர்களை நாம் புழுக்கை வேலை செய்ய வைத்துக் கொண்டோமே என்று கண்ணீர் வடிய அழுது, தன் படுக் கைக்கு வந்து கைசேதப்பட்டுக் கொண்டிருந்தார். சூரியன் உதயத்தில் அந்தம்மாள் தன்னுடைய தியான அறையை விட்டு வழக்கம்போல் எசமானனுக்குத் தொண்டுசெய்ய வந்தார்கள். எசமான் கண்ணீர்விட்டு அழுதுகொண்டிருந் தார். அவர் அந்தம்மாளைக் கண்டவுடன் எழுந்து மரியாதை செய்து கைகட்டி நின்று, ஆண்டவனுடைய தோழமையே! உங்களுடைய பெருமையை அறியாமல் எனக்குப் பணி விடை செய்யப் பொருந்தினேன். எனது குற்றத்தை மன் னிக்க வேண்டும். உங்களை அடிமைத்தனத்தை விட்டு உரி மைசெய்து விட்டேன். இனிமேல் தங்களுடைய இஷ்டம் போல் நடந்துகொள்ளுங்கள் என்றார்.

பின்னர் அந்தம்மாள் அவ்வீட்டை விட்டு வெளியில் வந்து, காட்டை நோக்கி நடந்து, ஒரு பாழ்வீட்டைக் கண்டு

அவ்வீட்டில் மறைந்து பகலெல்லாம் நோன்பு வைக்கிறதும், இரவெல்லாம் தொழுகிறதும் முஷாஹதா, முருக்கபா செய்வதுமாக வணங்கினார்கள். சிலநாள் சென்று அவர்களை ஒருவர் சந்தித்து என்ன காரணத்துக்காக இரவு முழுதும் தூங்காமலும், பகலில் மிகுந்த கஷ்டத்துடனும் சரீரத்தைத் தண்டித்து வணங்குகிறீர்கள் ? என்றார்.

அதற்கந்த அம்மாள் மறைவான சங்கதியைக் கேட்கிறவரே! நான் வணங்குகிறது கியாம நாளையில் கைசேதப்படாமலிருக்கவும், நபிகள் நாயகம் என் அமலுடைய பட்டோலையைப் பார்த்து சந்தோஷமாகி ஒப்புக்கொண்டு, உம்மத்துமார்களுக்கு அவர்கள் சொல்லவும், ஏ! மற்றவருடைய சனங்களே! இந்தப் பெண் இவ்விதம் கஷ்டப்பட்டு வணங்கியிருக்கிறாள். பாருங்கள்! என்று சொல்லுகிற வரையில் இவ்வளவு கஷ்டப்படுகிறேனென்று சொன்னார்கள். இவ்விதமாக அந்தம்மாள் கஷ்டப்பட்டு வணங்கி பரலோகத்தின் செல்வத்தைப் பெற்றுக் கொண்டார்கள் என்று கூறப்பெற்றிருக்கிறது.

மேலும், பிரம்மசொரூப கைவல்ய முத்திபெற்ற குணங்குடி மஸ்தான் சாஹிபு ஒலியுல்லா அவர்கள், பெண்களுக்கும் ஞானமுண்டென்பதைப் பின்வருங் கீர்த்தனையால் வெகு தெளிவாய்த் திருவாய்மலர்ந்தருளி யிருக்கின்றார்கள்.

## கீர்த்தனம்.

இராகம் சௌராஷ்டிரம் தாளம் சாப்பு.

பல்லவி.

தாய்மார்களேபாவி சொல்வதைத் தான்சற்றுந்
தள்ளாமற் கேட்டுக்கொள்வீர்

அநுபல்லவி.

பூமா தேவியாணை யாக நரகத்திற்
போகாம லும்பாது காக்கும் தீயில்
வேகாம லுங்கையைத் தூக்கும் பாவி
ஆகாம லுமுகம் பார்க்கும் (தாய்)

சரணங்கள்.

பொன்னுசை காட்டிப் புருட ருமையொரு
புண்யமுஞ் செய்யாமற் கெடுப்பார் பின்பு
சொர்னத்தை வாரி யிறைப்பார் கடைசியில்
தோட்டி கையிலுமை விடுப்பார் உங்கட்
கென்னத்தைச் சொன்னலுந் தெரியவில் லையினி
ஏதுப தேசத்தைப் படிப்பேன் ஐயோ
தன்னலே தான்கெட்டால் அண்ணவி யென்செய்வான்
தண்ணீரைக் கண்ணினல் வடிப்பன் அவன்
சொன்னதைக் கேட்கிற்கை பிடிப்பன் உமக்கு
முன்னே குணங்குடி கொடுப்பன் (தாய்)

பெண்ணலே கெட்டோமென் றுங்களைத் திட்டாத
பேரை யுலகத்திற் கண்டிலேன் எந்தன்
கண்ணலே யுங்களுக் கொத்தாசை சொல்லிக்
கருத்தி லுவப்பாரைக் கண்டிலேன் நாளும்
மண்ணுன ஆசை மயக்கங்கொண் டேபாவ
மண்ணை வாயிற்போட்டுக் கொள்கிறீர் இன்னும்
நண்ணருஞ் சொர்க்கப் பதத்தையும் விட்டு
நரகக் கனல்மூட்டிக் கொள்கிறீர் அதை
எண்ணமற் றுன்விட்டு நீக்கினல் உமக்
கண்ணல் குணங்குடி வாய்க்குமே (தாய்)

புதுப்பானை தன்னையுங் கரிப்பானை யாக்குவார்
பொன்னன மேனியும் போக்குவார் சோதி
மதிபோ லிவர்முகம் வரவோடு போலாக
வாலைப் பருவத்தைப் போக்குவார் இன்னும்

முதுகிற் கூனுமாக்கிக் கோலுங்கை கொடுத்துங்கள்
 மூர்க்கமெல் லாம்அறப் போக்குவார் இவள்
கதிகெட்ட கிழநாரி யென்று புறந்திண்ணையிற்
 கடத்திவைத் துயிரையும் போக்குவார் அந்தச்
சதிகேட ருறவைத்தான் நீக்கினல் பர
 கதிதருங் குணங்குடி வாய்க்குமே (தாய்)

தாங்காத மையலுந் தருகுவார் பின்பும்மைத்
 தளரும் நரையெருமை யாக்குவார் தூங்கித்
தூங்கி விழுந்தொத்த லாக நரம்பென்புந்
 தோலுந் துருத்தியு மாக்குவார் முகம்
வீங்கித் தலைநடுங்கிக் கையுங் காலுமுடங்கி
 வேடிக்கை யாங்கிழவி யாக்குவார் மூச்சை
வாங்கிக் கொக்குக்கொக்கென் றிருமி யிருமிக்கொண்டு
 வலிக்குங் கிடைபிணமு மாக்குவார் அந்தத்
 தீங்கர்க ளுறவைத்தான் நீக்கினல் அருள்
 ஓங்குங் குணங்குடி வாய்க்குமே. (தாய்)

---

## இருபத்திரண்டாவது அத்தியாயம்

### சட்சக்கர மேன்றும்—சத்தசக்கர மேன்றும் வழங்கிவரும் ஆருதார விளக்கம்.

---

சங்கட மான வாரு தாரமொவ் வொன்ருய்த் தாண்டி
பொங்குதண் மதிப்பா லுண்டு பூரணத் துவாத சாந்த
மங்கள வெளியிற் போந்து மௌனவைக் கியவாழ் வுற்று
எங்கணு மங்கிங் கென்னு திலகத ரிசைக்கு தும்மே.

ஞானயோகாப் பியாசிகள் ஒவ்வொரு ஆதாரங்களையும், அதன் அக்கரங்களையும், அத்துவா மூர்த்திகளையும் அறிந்து, அந்தந்த ஆதாரங்களிற் சென்று ஆரோகணமாகும்

சுவாசகதியை யுணர்ந்து, அதற்குத் தக்கவாறு உசிதாவுசி தங்களைச் செய்து கொள்ளவேண்டியது அத்தியாவசிய மாயிருக்கிறது.

மூலாதாரம் சுவாதிட்டானம், மணிபூரகம், அனுகதம், விசுத்தி, ஆக்கினை என யோகாதாரங்கள் அறுவகைத்தாகும். இது மேல் ஆதாரமென்றும் கீழ் ஆதாரமென்றும் இருவகையாம். அவற்றுள் மேலாதாரமானது, அண்ணாக்கின் கீழ் புருவ மத்தியத் தானத்திலிருந்து ஏற்படுகிறது. கீழ் ஆருதாரங்கள் இதன் பின் வருவனவாம்.

1-வது மூலாதாரம்.



மூலாதாரம் :—இஃது மலத்துவாரத்திற்கும், நீர்த்தாரைக்கும் மத்தியில் குண்டலிவட்டமும், அவ்வட்டத்திற்குள் முக்கோணசக்கர வடிவமும், கோணத்தின் நடுவில் ஓங்கார வட்டமும், அவ்வட்டத்திற்குள் மகாமந்திரமும்; ஏகாட்சரமுமாகிய ஓம் என்னும் பிரணவ அட்சரமும், ஓங்காரவட்டத்தைச் சுற்றிலும் நான்கு புட்பவிதழ்களும்

விளங்கும். ஓங்கார அட்சரத்திற்குட் பிரகாசிக்கும் அகார அட்சரத்தில் மாணிக்கவண்ணமுடைய * கணேசர் கொலு வீற்றிருப்பார். முக்கோணத்தின் முதற்கோணத்தில் பிரகாசிக்கும் உகார அட்சரத்தில் மாகதவண்ணமுள்ள வல்லபைசத்தி அமர்ந்திருப்பாள். கோணத்தின் முனையிற் *குண்டலிசத்தியானவள் வாழைப்பூவைப்போல் முகத்தைத் தலைகீழாக வைத்துப் பெண்சர்ப்பத்துக்கு நிகராகச் சீற்றத்துடன் தன்னுடலைச் சுருட்டிக்கொண்டு நந்தீஸ்வரரும், கோடிசூரியப் பிரகாசமும் தோற்றும்படி ஐந்து அவஸ்தையில் மேலவஸ்தை என்னும் துரியாதீதத்திற்கு முதற்காரணமாகிய சுழிமுனையோடு பொருந்தி நிற்பாள். கதலிப்பூ வடிவமாய்த் தலைகீழாகத்தொங்குவதில் எட்டிதழ்களுண்டு. ஒவ்வோரிதழுக்கும் ஒவ்வொரு சத்தியாக அட்டசத்திகளும் பிரகாசிப்பார்கள்.

யோகிகள் இரேசக, பூரக, கும்பகஞ்செய்து, மூலாதாரத்தைத் தெரிசித்து, நந்தீச்சுரரைக் கண்டு யோகத்தை நிலைக்க எத்தனிக்கும்போது, நந்தீச்சுரரைத் தரிசிக்கவிடாமல் எட்டுச் சத்திகளும் எட்டு மலர்களால் வழியை மூடிக்கொள்வார்கள். அப்போது வஸ்து தியானம் செய்து "வங்" என்னும் மந்திரத்தோடு கும்பித்தால் எட்டு வாசலையும் திறந்துவிடுவார்கள்.

---

* கணேசர் என்றால் யானை முகமுள்ள பிள்ளையார் உருவம் என்று எண்ணுவது மிகை. நாம் கூறப்பெற்ற கணேசரும் ஏனைய மூர்த்திகளும் எப்போதும் உருவமுடையதைக் குறிப்பிடாதென்பது கவனிக்கற்பாலன.

* இந்தக் குண்டலிசத்தியின் வடிவப் படம் நமது ஞானக்களஞ்சியத்தில் அமைக்கப் பெற்றிருக்கிறது.

## போகர்.

(1) காணவே மூலமது அண்டம்போலக்
காரணமாய்த் திரிகோண மாக நிற்கும்
பூணவே மூன்றின்மேல் வளைய மாகும்
புறம்பாக இதழதுதான் நாலு மாகும்
நாணவே கமலத்தட் சரத்தைக் கேளு
நலமான வயநமசி ரீரீ யாகும்
மூணவே முக்கோணத் தொளிவோங் காரம்
முயற்சியா யதற்குள்ளே அகார மாமே.

(2) அகாரத்தின் மேலாகக் கணேசன் நிற்பார்
ஆதியொரு கோணத்தில் உகாரம் நிற்கும்
உகாரத்தில் வல்லபையாள் சத்தி நிற்பாள்
ஒடுங்கியதோர் மூனையொன்றிற் கதலிப் பூவாய்
புகாரமாய் முகங்கீழ்குண் டலியாஞ் சத்தி
பெண்பாம்பு போற்சுருட்டிச் சீறிக் கொண்டு
சுகாரமாய்ச் சுழிமுனையோ டுருவி நிற்பாள்
துரியாதீ தம்மென்ற அவத்தை தானே.

(3) ஓங்கியே மாணிக்கத் தொளிபோல் தோன்றும்
உத்தமனே மூலத்தி னுண்மை காணும்
தேங்கியே வல்லபையாஞ் சத்தி தானும்
சிறந்திருந்தாள் பச்சைநிற மாகத் தானே.

(4) பச்சைநிறம் வல்லபையைப் பணிந்து போற்று
பாங்கான ஆறுக்கும் பருவஞ் சொல்வாள்
மொச்சையாய் மூலமது சித்தி யானல்
மூவுலகுஞ் சஞ்சரித்துத் திரிய லாமே.

## ஞானவெட்டி.

(1) பதியிருந்து விளையாடும் மூல வீடு
பத்திதருஞ் சித்திதரும் பரம வீடு
துதிபரவும் நாற்சதுர மேலு நின்று
துலங்குமெழிற் கணபதிவல் லபையைப் போற்றி.

(2) திருவிருந்து கனவிலெழுந் தாடும் வீடு
சிறந்தசத்தி வல்லபைதன் கணவ ஞன
மருவிருந்து கொஞ்சிதழோர் நாவில் மேவி
மகிழ்ந்தமத கரியினிரு தாளைப் போற்றி.

(3) தந்திரமாய் முக்கோணந் தன்னில் நின்ற
தந்திமுகன் கமலபதங் காப்புத் தானே.

திருமந்திரம்.

எருவிடு வாசற் கிருவிரன் மேலே
கருவிடும் வாசற் கிருவிரற் கீழே
உருவிடு சோதியை யுள்கவல் லார்க்குக்
கருவிடுஞ் சோதி கலந்துநின் றனே.

## 2-வது சுவாதிட்டானம்.



சுவாதிட்டானம்:—இஃது மூலாதாரத்திற்கு நான்கங் குலப் பிரமாணத்துக்குமேல் இலிங்கத்திற்கும், நாபிக்கும் நடு வில் இருக்கின்றது. இதைக் குய்யஸ்தான மென்பாருமுளர். இஃது நாற்சதுரவீடும், வீட்டின் பத்தியில் ஆறிதழ்களை யுடைய புட்பவட்டமும், அதன் நடுவில் நகார அட்சரமும்

## தினம் நடக்கும் 21,600 சுவாச நிகழ்ச்சி.



மனிதர்களுக்கு பிராணா தாரமான சுவாசமானது தினம் ஒன்றுக்கு (21,600) இருபத்தோராயிரத்துஅறு நூறாக நடக்கும். அது எவ்வாறு நடக்கிறதென்பதின் விபரத்தை கடிகாரங்களின் மூலமாக விளக்கப் பெற்ற

### மனித படம்.

இந்த ஏழு கடிகாரங்களில் அடியில் காட்டப் பெற்றிருப்பது மூலா தாரமாகிய கடிகாரம். அது மணி 6-40 என்று குறிப்பிடுகின்றது. அதிலிருந்து படத்தின் வல புறமாக மேல்நோக்கி சுற்றி எண்ணினால் சுவாதிட்டானம் மணிபூரகம் அனாகதம் விசுத்தி ஆக்கினை என்றும், நடுவிலிருப்பது பிரமாந்திரமென்றும் காட்டுகிறது.

537-538-ம் பக்கங்களிற் காண்க.

உடையது. அந்த நகாரவட்சரத்தின் மத்தியில் பொன் நிறத்தையுடைய பிரமதேவரும், சரஸ்வதி தேவியும் கொலு வீற்றிருப்பார்கள் என்று கூறப்பெற்றிருக்கிறது. இது பிரிதிவியின் கூறு; இங்கு தீபப் பிரகாசந் தோன்றும்.

போகர்

துதிசெய்து மூலத்தைத் தாண்டியப்பால்
துடியான வொருநாலங் குலமே தாண்டப்
பதிசெய்த பிரமனுட வீடு மாகும்
பகர்ந்தசுவா திட்டான மென்றும் பேரு
அதிசெய்த நாலுவட்டம் வளையஞ் சுத்தல்
ஆறிதழ்தான் அட்சரத்தை அறியக்கேளே.

ஞானவெட்டி.

கதிரொத்த விடந்தனிலே யிலகுஞ் சோதி
கனகரத்ன மிலகுதிரு மண்ட பத்தில்
மதியொத்து நின்றிலகுஞ் சுவாதிட் டானம்
வளர்ந்தவித ழிருமூன்று மங்கு லத்தில்
நிகரொத்த பிரமன்சரஸ் வதியின் பாதம்
நினைந்துருகித் தாளிணையைப் போற்றி செய்து
உதிரத்திற் சுக்கிலந்தான் வந்த வாறு
ஓரெழுத்தாம் நாதவிந்தா யமைத்த வாறே.

திருமந்திரம்.

நாவுக்கு நாயகி நன்மணி பூணாரம்
பூவுக்கு நாயகி பொன்முடி யாடையாம்
பாவுக்கு நாயகி பாலொத்த வண்ணத்தாள்
ஆவுக்கு நாயகி அங்கமர்ந் தாளே.

3-வது மணிபூரகம்.



மணிபூரகம்:- இது சுவாதிட்டானத்திற்கு ஆறங்குலப் பிரமாணத்தின் மேல் நாபி, அல்லது உந்தியென்று சொல்லப் படுமிடம். இது கோழி முட்டையைப்போன்ற வடிவமாய் 1008 நரம்பு, நாடிகள் சூழப்பெற்று, நாடிகட்கெல்லாம்மூலா தாரமாயுள்ளது; இது அப்புவியின் கூறுடையது; எட்டு நாட் பிறைபோன்ற வடிவமுடையது. இதன் நடுவிலே 10 இதழ்களையுடைய ஒரு கமலம் வட்டவடிவாயிருக்கும். அந்த மலரின் மத்தியில் மகார அட்சரமும், அந்த அட்சரத் தின் மத்தியில் மாகத வர்ணமுள்ள மகாவிஷ்ணுவும், மகா லட்சுமியும் கொலுவிருப்பார்கள் என்று கூறப்பெற்றிருக் கிறது. இதில் மின்னல்போன்ற பிரகாசந் தோன்றும்.

ஞானவெட்டி.

சொல்லரிது மந்திரத்துக் கெட்டா வீடு
சோதிமணி பூரகத்தி லமர்ந்த மூர்த்தி
வெல்லரிது நாபியதின் கமலத் துள்ளே
விரைந்தவித ழீரைந்து பத்து மேலும்
வல்லபமாய் நின்றிலங்கு மாலின் றேவி
வளர்ந்த சபைத் திருமாலை வணங்கிப் போற்றித்
தொல்லுலகி லுள்ளபெரி யோர்கள் பாதந்
துதித்திந் நூல் விளம்புகிறே னண்டே கேளீர்.

போகர்.

மாலினுட வீடதுதா னறுவி ரன்மேல்
மாசற்ற பிறைபோலே கோட்டை யாகும்
பாலினுட வளையம்போற் பத்தி தழ்தான்
பத்திதழி னட்சரத்தின் பயனைக் கேளு
தாலினுட சனகமகா முனியின் தாயார்
தயங்காத நரபர்ப்பர் தன்மை யாகும்
ஆலினுட மனநடுவிற் பூத மப்பு
அதின்பீசம் வங்கென்று அறிய லாமே.



4-வது அநாகதம்.

அநாகதம்:-இஃது மணிபூரகமாகிய உந்தித்தானத்துக்கு 8 அங்குலப் பிரமாணத்துக்குமேல் இருதயத்தானத்தில் முக்கோண வடிவமுடையது. அந்த முக்கோணத்தின் மத்தியில் 12 இதழ்களையுடைய ஓர் கமலம் வட்டமாக இருக்கும். அப்புட்பத்தின் நடுவிற் சிகார அட்சரந்தோன்றும். அவ்வட்சரத்தில் உருத்திரக் கடவுளும், பார்வதியும் கொலுவீற்றிருப்பதாகத் தோற்றம். அவ்விடத்தில் மின்மினி போன்ற பிரகாசந்தோன்றும். இதுதேயுவின் கூறு.

ஞானவெட்டி.

வட்டமிட்ட சதுஷ்கோண பாரின் மேலும்
வளர்ந்தவித ழீராறு மங்கு லத்தில்
திட்டமிட்ட வநாகதத்தில் வீற்றி ருந்த
சிறந்தருளும் ருத்திரன்ருத் திரியைப் போற்றி
வெட்டவெளி வேதமறை நான்கு மோதும்
வேதமெல்லாந் திருநீறு யான வாறும்
அட்டதிசை யறிந்துணர்ந்த பெரியோர் பாதம்
ஐம்பத்தோ ரட்சரமுங் காப்புத் தானே.

போகர்.

அறிவுக்கு மேலேயெட் டங்கு லத்துக்
கப்பால நாகதத்தின் வீட்டைக் கேளு
முறிவுக்கு முக்கோண மாகி நிற்கும்
முதிர்வளையம் பன்னிரண்டு இதழு மாகும்.



5-வது விசுத்தி.

விசுத்தி :—இது அநாகதத்துக்கு 12 அங்குலப் பிர மாணத்துக்குமேல் கண்டமென்னும் தானத்தில் அறு

கோண வடிவமாக இருக்கும். அக்கோணத்தின் நடுவில் பதினாறிதழ்களையுடைய ஓர் புட்பவட்டமும், அதன் மத்தியில் வகார அட்.சரமும் பிரகாசிக்கும். அந்த அட்சரத்தின் மத்தியில் மேகவர்னத்துடன் மகேஸ்வரனும், மகேஸ்வரியும் கொலு வீற்றிருப்பார்கள் என்று கூறப்பெற்றிருக்கிறது. இது வாயுவின்கூறு, அங்கு சூரியப்பிரகாசந் தோன்றும்.

ஞானவெட்டி.

ஆறுகொண்ட அம்பலத்தில் நின்ற சோதி
யம்பரமாந் தற்பரத்தை யேறி நித்தம்
வீசுகொண்ட அறுகோண வீட்டின் மேலும்
விளங்குமிதழ் பதினாறு மேவு பீடம்
பேறுபெற்ற மகேசன்மகேஸ் பரியு மங்கே
பேணியவ ரிருவர்பதக் கமலம் போற்றிப்
பாரிலுள்ள வேதமறி யாமல் நின்ற
பழம்பொருளைப் பாடுகிறே னுண்டே கேளே.

போகர்.

ஏறவே பன்னிரண்டங் குலமே தாண்டி
ஏற்றமாம் விசுத்தியென்ற தலமு மாகும்
மாறவே அறுகோண வளையம் ஒன்று
மகத்துவமாம் பதினாறு இதழுமாகும்:



6-வது ஆக்கினை.

ஆக்கினை :—இது விசுத்தி தானத்துக்குப் பதினாறங்குலப் பிரமாணத்துக்கு மேல், நெற்றித்தானத்தில் புருவ

மத்தியில் இரண்டிதழ்களையுடைய ஓர் கமல புட்பமிருக்கும். அப்புட்பத்தின் நடுவில் யகார அட்சரமும், அவ்வட்சரத்தின் மத்தியில் சதாசிவமும், மனோன்மணியும் கொலுவீற்றிருப்பார்கள். இது ஆகாயத்தின் கூறு. அங்கும் சூரியப்பிரகாசமே தோன்றும். இவ்வாறுதாரங்களும் பிரம்மாந்திரமும் மனிதன் உடலில் இன்னின்ன விடத்திலிருக்கிறதென்று படத்தில் பிரத்தியட்சமாகக் காண்பிக்கப் பெற்றிருக்கிறது.

ஞானவெட்டி.

காலைவட்ட மாலைவட்ட மாகி நின்ற
  கதிர்மனையிற் கருதிமுனை யாடுஞ் சோதி
நீலவட்டங் கொண்டெழுந்து கலையெண் ணொன்கும்
  நின்றிலகும் ஆக்கினையி லிதழி ரண்டு
ஞாலமதி லாதியந்த ரூப மான
  நற்கமல மாயிரத்தெட் டிதழின் மேலும்
ஆலவிட முண்டசதா சிவனைப் போற்றி
  அம்பிகையின் கமலபதம் அர்ச்சித் தேனே.

போகர்.

மேலேறி யிரண்டுபுரு வத்தி னூடே
  மிகையான அண்டம்போல் நிற்கு மப்ப
வாலேறி வட்டமாம் வீடு போலே
  வளையமொன்ற இரண்டிதழ்தான் எரஸ்ரீ யாகும்
ஆளேறி அங்கெனுமட் சரத்தி னூடே
  ஆகாச பூதமாம் பூத பீசம்
ஆலேறி மனோன்மணி சதா சிவன்றன்
  அவத்தைதான் சாக்கிரத்தின் வீடு மாமே.

பிரபுலிங்கலீலை.

இரண்டோ டிரண்டு மூவிரண்டை யிரண்டா றிரண்டு மீமிசையெண்ணிரண்டோ டிரண்டு கொண்டிருந்த இதழ்ப்பங் கயங்கள் கடந்து இருந்த குளத்தின் மேலோரா யிரந்தோட் டமல கமலமிசை [போய் யிருந்த சோதி தனைக்கண்டெம் எண்ண முடிப்பே மெனவெழுந்து.

திருமந்திரம்.

நாலு மிருமூன்று மீரைந்து மீராறுங்
கோலிமேல் நின்ற குறிகள் பதினாறு
மூலங்கண் டாங்கே முடிந்து முதலிரண்டுங்
காலங்கண் டானடி காணலு மாமே.

## 7-வது பிரம்மரந்திரம்.

பிரம்மரந்திரம்:—இது ஆக்கினை தானத்திற்கு எட்டங்குலத்துக்குமேல் சகத்திரதளமாகிய ஆயிரமென்றும்-ஆயிரத் தெட்டென்றும் சொல்லப்பட்ட இதழ்களையுடைய ஓர் கமலபுட்ப மிருக்கின்றது. அதன்மிசை, நாதவிந்துத் தானம் ஐங்கோண வடிவத்துடன் ஓரிதழ்க்கமல வடிவமாக இருக்கின்றது. அதையே பராகாயமென்றும், பிரம்மரந்திர மென்றுஞ் சொல்லப்படும். நிறம் படிகவர்னம் சுடர் வீசும்.

போகர்.

தானான மனோன்மணியைத் தாண்டி யப்பால்
தனித்ததோ ரெட்டுவிரல் மேலே கேளு
கோனான குருபதந்தான் கூட்டிப் பாரு
குறிப்பான இதழோரா யிரத்தெட் டாகும்
ஆனான நடுமையம் ஐங்கோ ணந்தான்
அகாரமாம் மகாரமொடு வகார மாகும்
நானான நாதமொடு விந்து அஞ்சும்
நலமுளவைங் கோணத்தில் நிற்கும் பாரே

ஞானக்கும்மி.

விந்து இருந்த விடந்தனிலே குரு
நந்தி யிருந்தார் கொலுவாகிச்
சிந்தை தெளிந்து மகாரம்வைத் தாலந்தச்
சீமானைக் காணலாம் ஞானப்பெண்ணே.

மூலாதாரத்திற்கு (இதழாகிய) அட்சாம் 4, சுவாதிட்டானத்திற்கு அட்சாம் 6, மணிபூரகத்திற்கு அட்சாம் 10, அநாகதத்திற்கு அட்சாம் 12, விசுத்திக்கு அட்சாம் 16, ஆக்கிஞக்கு அட்சாம் 2, சகத்திரதள புட்பகமலத்துக்கு மேற்பட்டிருக்கும் விந்துத்தானத்திற்கு அட்சாம் 1, ஆக அட்சரம் 51. இஃதிப்படியிருக்கச் சில சாத்திரங்களில் 51 அட்சரத்தைப் பூர்த்தியாக நிரூபிக்கும் பொருட்டோ! அல்லது எழுதச் சோம்பேறித்தனப்பட்டோ! ஆக்ஞையில் மூன்று அட்சாம் என்றும் ஆக 51 அட்சாம் என்றும் கணக்கிட்டு எழுதியிருக்கின்றதெவ்வாறு பொருந்தும். இதற்குச்சான்ருக அடியில் வருஞ் செய்யுட்களைக் கவனிக்கவும்.

ஞானவெட்டி.

முத்திதரு மூலத்தி லட்சரமே நாலு
முதலான சுவாதிட்டான மெழுத்தா ருகும்
பத்திதரும் பூரகத்தி லெழுத்தோ பத்து
பாங்கான அநாகதத்தி லெழுத்தீ ராருஞ்
சித்திரமாம் விசுத்திதனி லெழுத்தீ ரெட்டாம்
சிறந்தவாக் கினையிலெழுத் திரண்டு மாகும்
சத்தியெனு மம்பரத்தி லெழுத்தொன் ருச்சு
சார்வாமைம் பத்தோரட் சரங்கா ணுண்டே.

திருமந்திரம்.

ஆறந்த முங்கூடி யாகு முடம்பினிற்
கூறிய வாதார மற்றுங் குறிக்கொள்மின்
ஆறிய அக்கர மைம்பதின் மேலே
யூறிய வாதாரத் தோரெழுத் தாமே.

நான்கும், ஆறும், பத்தும், பன்னிரண்டும், பதினாறும், இரண்டும் ஒன்றுமாகிய இந்த இலக்கத்தை முறையேகொண்டிருக்கிற இதழ்களையுடைய மூலாதாரம், சுவாதிட்டானம்

மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்கிற ஆறுதார கமலங்களிலும், அதற்கு மேற்பட்டிருக்கிற விந்துத்தானத்திலும், ஆக எழு சக்கரங்களிலும் நமக்குள் நாளொன்றுக்கு இரேசக, பூரகமாக இயங்கிக் கொண்டிருப்பது இருபத்தோராயிரத்து அறுநூறு (21,600) சுவாசங்களெனக் கணக்கிடப்பட்டிருக்கிறது. அவை பின்வருமாறு:—

மூலாதாரத்தில் காலை 6-மணி முதல் 6–40 வரையில் ஒரு நிமிஷத்திற்குப் பதினைந்து சுவாசங்களாக 600 சுவாசங்கள் நடக்கும். அது நிறைந்தவுடன் ;

சுவாதிட்டானத்தில் காலை மணி 6–40 மூதல் பகல் மணி 1–20 வரையில் ஆறுயிரம் சுவாசங்கள் நடக்கும். அது நிறைந்தவுடன் ;

மணி பூரகத்தில் பகல் மணி 1–20 முதல் இரவு மணி 8 வரையில் ஆறுயிரம் (6000) சுவாசங்கள் நடக்கும். அது நிறைந்தவுடன் ;

அநாகதத்தில் இரவு மணி 8 முதல் மணி 2–40 வரையில் ஆறுயிரம் (6000) சுவாசங்கள் நடக்கும். அது நிறைந்தவுடன் ;

விசுத்தியில் இரவு மணி 2–40 முதல் 3–46 வரையில் ஆயிரம் (1000) சுவாசங்கள் நடக்கும். அது நிறைந்தவுடன்;

ஆக்ஞையில் இரவு மணி 3–46 முதல் 4–53 வரையில் ஆயிரம் (1000) சுவாசங்கள் நடக்கும். அது நிறைந்தவுடன்;

சகத்திரதளத்தில் இரவு மணி 4–53 முதல் காலை 6-மணி வரையில் ஆயிரம் (1000) சுவாசங்கள் நடக்கும். அது நிறைந்தவுடன் பழையபடி மூலாதாரத்திற் பிரவேசிக்கும். இது விளக்கமாகும் பொருட்டே மனிதபடத்தில் 7 கடிகாரம் போட்டுக் காட்டப் பெற்றிருக்கிறது.

சுவரில் மாட்டியிருக்கும் பெரிய கடிகாரத்திற் பெண்டுல மானது ஆடிக்கொண்டிருக்க முள்ளானது மணியைக் காட்டுவது போல, இந்தச் சுவாசமானது நிமிஷத்திற்கு 15 சுவாசங்களாக ஒரு நாள் 24-மணி நேரத்திற்குள் 21,600 சுவாசங்களும் நமது சரீரத்திற்குள் நடந்து நம்முடைய ஆயுள் அளவைக் காட்டுகின்றதைப் படத்தில் கவனிக்கவும்.

சுவானுபவ விளக்கம்.

அறையக்கே ளிருபத்தோ ராயி ரத்து
அறுநூறு சுவாசமதாந் தினமொன் றுக்குத்
துறையான மூலமதற் காறு நூறு
சுவாதிட்டா னம்மணிபூ ரகத்தி னோடு
முறையான வநாகதமா மிம்மூன் றிற்கும்
மூவிரண்டா யிரமூச்சு நடக்கும் மைந்தா
மறையான விசுத்திமுதற் பிரம்ம ரந்திரம்
வரையினிலா யிரமென்று வகையாய்க் காணே.

இந்தச் சுவாசங்கள் சத்தியினது பங்கு மூன்றும், சிவத்தினது பங்கு இரண்டுமாக நடக்கும். அதாவது, நிமிஷம் ஒன்றுக்குப் பதினைந்து சுவாசங்கள் நடப்பதில், சத்தியின் பங்குக்கு ஒன்பது சுவாசங்களும், சிவத்தின் பங்குக்கு ஆறு சுவாசங்களுமாக நடைபெறும். இதனாலேயே உலகத்தில், "அஞ்சுக்கிரண்டு பழுதில்லை" என்னும் பழமொழி வழங்கிவருகின்றது. இதனுண்மை பஞ்சபட்சி சாஸ்திரங்களை நன்குணர்ந்தவர்க்கே இனிது விளங்கும். ஆனால் இவ்விதம் குறைவாக யோகிகட்குச் சுவாசம் நடைபெறாமல் பூரணமாகவே நிகழும்.

தணங்குடியார்.

பாயுமீ ராறுகலை பாயாது பக்குவம்
பண்ணிவைப் பதுசமாதி
பழவினை யிறக்கவுஞ் சுழிமுனை திறக்கவும்
பழகிவரு வதுசமாதி.

மேற்கூறிவந்த சகத்திரதள புட்பத்தின் நடுவில் பிரகாசித்துக்கொண்டிருக்கிற * குண்டலிசத்தியாகிய கமல சத்தியினுடைய இரண்டு பாத கமலங்களிலும் உள்ளிருந்து ஊறிப் புறப்படும் மதியமுதமானது, உண்ணாக்கினது வழியே (நாவின் நுனியைச் செலுத்திப் பருகலால்) உடலிலே பரந்து எழுபத்தீராயிரம் நாடிகளையும் நனைப்ப, அதன் பின்புகும் பித்தவாயுவை இரேசிப்பதினுல் மீண்டும் அவ்விடங்களை விட்டுக் கிழிறங்கி, தான் முன்னிருந்த மூலாதாரத்திலே பிரகாசம்பொருந்திய சர்ப்பம்போல உடலை வளைத்து யோக நித்திரை செய்யும் சத்தியை தரிசித்துத் தவயோகிகள் மதியமிர்தமுண்டு ஆனந்த பரவசமடைவார்கள்.

தாயுமானசுவாமிகள்.

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகி யெழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி சகஸ்த்ரதள
புட்பமிசை வீற்றி ருக்கு
நாரணி மனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சத்தி யென்றுன்
நாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே
நானுச்ச ரிக்க வசமோ.

## ஞான விவசாயம்.

உலகத்தில் நெற்பயிர் விளைவிப்பது யாவருக்கும் கண்கூடாகத்தெரியு மாதலால், அந்த மேற் கோள்வழியாகவே ஞானத்தையும் புகட்டலாம் என்ற நோக்கத்துடன், இந்த தலையங்கத்திற்கு ஞான விவசாயம் என்று பெயர் சூட்டப் பெற்றது.

---

* குண்டலி சத்தியின் முழுவிபரம் நமது ஞானக்களஞ்சியம் என்னும் புத்தகத்திலும் படத்திலும் காண்க.

கோடரி முதலிய ஆயுதங்களால் வெட்டி வெட்டி எறிந்தாலும், மென்மேலும் தளிர்விட்டுக் குமுரி வளரும்படியான நீங்காத ஆசாபாசமென்னும் வனத்தில் ஓங்கி வளர்ந்த நல்வினை, தீவினையென்னும் பெரிய விருட்சங்களை யெல்லாம் அடியோடு நிர்மூலமாக வெட்டியெறிந்து; கோபமென்னும் கொடிய பரட்டு முட்கள் செறிந்த செடிகளை (மறுபடியும் தளிர்க்காமல்) வேரறப்பிடுங்கி, அந்தக் காட்டில் மனிதர் சஞ்சரிப்பதையறிந்து வாலை முறுக்கிக் கொண்டு ஆக்கிரஷத்துடன் பாயும்படியான கொடிய வேங்கைப் புலிகளை வேட்டையாடி, துண்டுதுண்டாய் விழும்படி வெட்டிக்கொன்று; மானம், அபிமானம், இன்பம், துன்பம். இராகத்துவேஷம் என்று சொல்லாநின்ற முட்பன்றி, காடிக் கூட்டங்களை ஒன்று போனதிசை ஒன்றறியாதபடி தூரத்தியடித்து, மாயையென்னும் பெரியமலைப் பாம்பை விவேகமென்னும் ஈட்டியினுற்குத்திக்கண்டங்கண்டமாய் துணித்து, ஆசையென்னும் பாம்புப்புதர்களை விசாரமென்னும் மண்வெட்டியால் வெட்டிச் சமநிலமாக்கி, எக்களிப்பென்னும் பல விருட்சங்களையும், முள்மாறுகளையும் ஒருங்கே சேர்த்துத் தவமென்னும் நெருப்பை மூட்டி, பரவெளியாகிய வாயுவைச் சம்பந்தப்படுத்திக் கொளுத்திப் பஸ்மீகாமாக்கி, அகந்தைக் குணமென்னுங் கற்பாறையை, சுழிமுனை யென்னும் உருக்கு உளியினல் வெட்டிப் பிளந்து, அவைகளை இடைகலை, பின்கலையென்னும் வண்டியிலேற்றி, அந்நியோந்நியமென்னுந் தோல்வடக் கயிற்றைப் பிடித்து, துட்டத்தனமென்னும் மூடர்களைக் கொண்டிழுக்கச் செய்து அம்மூடர்கள் வேலை செய்யச் சோம்பற்பட்டால் வைராக்கிய மென்னும் பிரம்பால் வேலை செய்யும்படி அடித்து, வண்டியிலேற்றிய பாறைக்கல்லை,

பட்டினத்துப்பிள்ளை

பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே.

ஔவை

ஒருநா ளுணவை யொழியென்று லொழியாய்
இருநாளைக் கேலென்று லேலாய்—ஒருநாளும்
என்னே வறியா இடும்பைகூ ரென்வயிறே
உன்னேடு வாழ்தலறி து

என்று வெறுத்துக் கூறும்படியான பசியென்னும் நித்தத் தரித்திரத்தையுடைய வயிறென்னும் தூராத ஆழமானகெபி யிற்போட்டு நிரப்பியபின், மனோவாக்குக் காயங்களுக்கெட் கெட்டாததும்,

துணங்குடியார்.

ஞானம் விளைவேற்றும் நல்லசமு சாரிகட்கு
மோன மழையூற்றும் முகிலோநந் தீஸ்வரனே

என்று புகழ்ந்துரைக்கப்பெற்ற மகத்துவ முடையதுமாகிய பிரணவ மந்திரமென்னும் சூல்கொண்ட சப்தமேகங்கள், அட்டதிக்குகளிலுஞ் சூழ்ந்து கவிந்துகொண்டு ஓயாமல் ஞானாநந்தமென்னு மழையை வருஷிக்க, உடனேமனமென் னும் பூமியைச் சுத்தப்படுத்தி, நான்கு வேதங்களையும், நான்கு வரப்புகளாக்கி, துறவறமென்னும் கிடைவைத்து, வேதங்களினது முடிவாகிய அறிவென்னும், சூத்திரக் கலப்பையில் இன்ப துன்ப மென்னும் இரண்டு மாட்டையும் பூட்டி, சோதி சொரூபமாகிய மெய்ஞ்ஞான மென்னும் பண்ணையால் இதயமென்னும் மேழியைப் பிடித்து, குண்டலிசத்தியாகிய சுழிமுனைத் தாற்றுக்கோலைக் கையில்

தாங்கி இடைதரி சில்லாமல் நன்ருக உழவுசெய்து, சாதி பேதமென்னும் அழற்றை ஒன்றுபடக் கலக்கி, நட்பு என்று சொல்லப்படும் மண்கட்டிகளை மிதித்து, மூலாதாரம், சுவாதிட்டானம், மணி பூரகம், அனுகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆருதாரங்களாகிய நன்செயிற் பரம்படித்து, மூன்று லோகங்களாலும் இத்தன்மைத்தென மதிக்க முடியாத சந்திரகலை, சூரியகலையாகிய இருநாடிகளுள் நடுநாடியாகிய சுழிமுனைச் சமாதியென்னும் மெய்ஞ்ஞான விதையை, "பருவத்தே பயிர் செய்" எனவும்,

> முப்பதாம் ஆண்டளவில் மூன்றற் றொருபொருளைத்
> தப்பாமல் தங்கப் படாணுகிற்—செப்புங்
> கலையளவே யாகுமாங் காரிகையார் தங்கள்
> முலையளவே யாகுமா மூப்பு

எனவும் ஔவைப் பிராட்டியார் கூறியனபோல் 16 வயது முதல் 30 வயதுக்குள் பருவகாலந் தவருமல் ஞான விதையைத் தெளித்து, பத்தி வைராக்யமென்னும் மடையைத் திறந்து தண்ணீர் பாய்ச்சி, பயிர் வளர்ந்துவருங் காலத்தில் 96 தத்துவங்க ளென்னும் கோரை, புல், பூண்டு முதலிய களைகளைச் சுத்தமாகப் பிடுங்கி அப்புறப்படுத்தி, மாதர்களென்னும் ஆடு, மாடுகள், ஞானமென்னும் பயிரைத் தின்று விடாமற் சாதுசங்கமென்னுங் காவலேற்படுத்தி,

> "ஆரு தாரமுந் தொல்லையடி அதற்
> கப்பால் யாதொன்று மில்லையடி"

என்பதுபோல, ஆதாரங்களினது முடிவாகிய தெரிசனமென்னும் கதிர்பரிந்து, பாலைப்பருவங் கடந்தபின், சகத்திரதளத்தின் மேற்பட்டிருக்கும் பிரம்மரந்திர முத்தியாகிய நெற்கதிர் மணிமுற்றியபின் அறுவடைசெய்து, அத்துவிதமென்னுங் களஞ்சியத்திற் சேர்த்து, நித்தியானந்தமென்னும்

...க்கையைப் பெறுவதுவே ஞானவிவசாயமென்று சொல்லத்தகும்.

தாயுமானசுவாமிகள்.

காராரு மாணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் காரமென்னும்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்திமேன்மேற்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சியது பயிராகு மட்டுமோ மாயவன்
பறவையணு காதவண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்டமெய்த
நினைவின் படிக்குநீ முன்னின்று காண்பதே
நின்னருட் பாரமென்றும்
ஆராரு மறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரியமயமே
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.




---

## ஞான பூபதிகள் யோக கீதம்.

ஞான தேசிகனே என்ற தெய்வப் புகழ் மெட்டு

பல்லவி.

சீல நாயகனே—தீதி லாத நாத நீத (சீல)

அநுபல்லவி.

மூலக்கொழுங் கனல் தன்னையே தாண்டி
மூலமுத லாறு வீட்டையுந் தாண்டி
மூக்கின் மேலே தாக்க நோக்கி
மோன ஞான மாக நீசெய் (சீல)

ஆயிரத் தெட்டிதழ்த் தாமரை நோக்கி
அம்பிகை வீட்டுக் கபாடத்தை நீக்கி
ஆவல் கொண்டு தேனை யுண்டு
ஐய னைக்கண் டுய்யச் செய்யும் (சீல)
நாசிக்கு மேலொரு ஊசித் துவாரம்
நாதமும் கீதமுங் கேட்கும் அபாரம்
நாச மேக வாசி யோக
நன்மை காண வன்மை செய்யும் (சீல)
நற்றமிழ் பாடும் அமிர்தப்ர வாக
ஞான கருணையா னந்தமெய் யோக
நம்பனே யென் துன்பம் நீக்கி
நாளுமுந்தன் தாளில் சேர்க்கும் (சீல)

---

மங்களம்.

இராகம்—ஆனந்தபைரவி, தாளம்—ஆதி.

பல்லவி.

கருணாநிதிக்கு மங்களம் தனையுணர்ந்த கனவான்களுக்கு மங்களம்

அநுபல்லவி.

வருணாச்சிரம மென்னும் வரம்பு தனைக்கடந்து
துரியமடைந்து தமிழ்ச் சொல்பவர்க்கு மங்களம் (கரு)

சரணம்.

இந்தத் தமிழை வாசிப்போர் மனமகிழ்ந்து இனிமையுடனே ஆசிப்
சிந்தை மகிழ்ந்திந் நூலை செப்பிய நாவலர்க்கும் [போர்
நிந்தையில்லா துலகில் நித்யசெய மங்களம் (கரு)

வேதாந்த பாஸ்கரன் சம்பூரணம்.

---

P. R. Rama Iyar & Co., Printers, Madras.

எப்போது கிடைக்கும்! எப்போது கிடைக்கும் என்று
வெகு காலமாகக் கேட்டுக் கேட்டு எதிர்பார்த்த
"வேதாந்த பாஸ்கரன்" இரண்டாவதாகிய

# ஞானக் களஞ்சியம்.

## ஏராளமான சித்திரப் படங்களுடன்

வெளியாகி விட்டது!




காலத்துக்கு தக்கவாறு திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களுடன் இனிய வசன நூல் எழுதுவதில் மாட்சிமை பொருந்திய மஹான் கருணையானந்த ஞானபூபதி அவர்களால் இந்நூல் எழுதப்பெற்று "அட்சரலட்சம்" என்று கலாநிபுணர்களால் புகழப்பெற்றது. கெம்பீரமும் சமரசமும் பொருந்திய நோக்கத்துடன், வாசிப்போர் உள்ளத்தைக்கவர்ந்து, பரமானந்த கைவல்யத்தை அடைவதற்கு இந்நூல் ஒருவழிகாட்டியாகும். இந்நூலைத் தொட்டாலும் கைமணக்கும் சொன்னாலும் வாய் மணக்கும் என்பது சாலவும் பொருந்தும்.

ஒரு மாதத்திலேயே அநேக பிரதிகள் செலவாகி விட்டபடியால் மறு பதிப்பு வரையில் காத்திராமல் முந்துங்கள்! முந்துங்கள்!! முந்திக்கொள்ளுங்கள்!!!

**600 பக்கமுள்ளது ரூ. 3.**

எம். ஏ. நாவலர் அண்ட் சன்ஸ்,
விஜயபுரம், தஞ்சாவூர் ஜில்லா.

குருவில்லாமல் நூலைப் பார்த்தே அப்பியாசிக்கக்
கூடியதும், அநேக அப்பியாசப் படங்கள்
அடங்கியதுமான

# யோக ரகசியம்

இந்நூலில் அடங்கியுள்ள விஷயங்களில் சிலவற்றை
மாதிரிக்காக இங்கு குறிப்பிடுகிறோம்.

இராஜயோகம், மனோலயம், பிராணாயாமயோகம், இதுவரையில் எந்த நூலிலும் வெளியிடாத பிராணாயாம யோகப்பிரிவு, எட்டுவகைப் பிராணாயாமம், அம்சகாயத்திரி, சோகப்பிரணவம், அப்பியாசம் செய்யுமிடம், அப்பியாசக்கணக்கு, அப்பியாச முறை, வமனம், (தௌதி) விசர்க்கம், (பஸ்தி) பிரமணம், நாசிபாவனம், குதக்கிரியை, உண்ணாக்கிரியை அப்பியாசகாலம், அப்பியாசக்குறிகள், சண்முகிமுத்திரை, மகா முத்திரை சாலந்தரபந்தம், உட்டியானபந்தம், மூலபந்தம், விபரீதகரணி, சாம்பவி முத்திரை. இலாஞ்சனை, கேசரி முத்திரை, வஜ்ரோலி முத்திரை கபசுத்தி (கரிசாலை நெய்,) மூலசுத்தி—(எரண்டநெய்) கபமல நிவாரணம், பஞ்சகற்பம், மூதண்டக்கியாழம், தாம்பூலச்சுண்ணம், உப்புக் கட்டு, சூரிய யோகம், சந்திர யோகம், காயகற்பம், மும்மூல அகக் கற்பம் கற்பம் உண்பதற்கங்கம், கற்பமுண்ணுங்காலம், பேரண்டகற்பம் கற்பமுண்ணுங்கால் அபத்தியம் நேரிட்டு வியாதிகண்டால் இலகுவான வைத்தியமுறைகள், போசன நியமங்கள், யோக விக்கினங்கள், யோகப் பரீட்சை, சயன விதி, கற்பசாதனைக்கிரமம். அநேக புறக்கற்பங்கள், அயக்காந்த செந்தூரம் கருப்புமூலிகைப் பயிர், கடுக்காய் கற்பம், காந்தக் கிண்ணம், பேய்த்தேற்றான் பாத்திரம். மிளகுகற்பம், தூதுவேளை கற்பம் சீந்திற்கற்பம், வேம்புக் கற்பம், கரிசாலைகற்பம், காரண்டக் கற்பம், கனை எருமைக்கற்பம், சர்க்கரைவேம்பு கற்பம், செங்கற்றாழைக் கற்பம் கிளி மூக்குமாங்காய் கற்பம், சாயாவிருட்ச கற்பம், கருங்கடலாடிக்கற்பம், காமஞ்சரிக்கற்பம். காயசித்திபால் விருட்சங்கள், காயசித்தி மூலிகைகள், சுந்தரானந்தர் கேசரிகற்பம் சுப்பிரமணியர் பிரம கற்பம், பரியங்கியோகத்திற்கு வேண்டிய பதுமினி, சித்தினி, சங்கினி, அத்தினி. ஆண் பெண் ஜாதி இலட்சணங்களும், சமரசமாதி நான்கு யோகங்களும், எழு பருவப்பெண்கள். சையோககால நிர்ணயம், அமிர்தநிலை முதலானவைகளும். அதற்குவேண்டிய சந்தனாதி தைலம் முதலானவைகளும் கடல் மடை திறந்தாற்போல் கூறப்பெற்றிருக்கிறது. **இந்நூலை வாசிக்கக் கொடுத்துவைக்காதவர்கள் வாஸ்தவத்தில் துர்பாக்கியர்களே.**

சீர்மை முழு காலிக்கோ பைண்டு ரூ. **2—8—0.**

**M. A.** நாவலர் அண்ட் சன்ஸ்,

(தற்சமயம் அச்சில்) விஜயபுரம்—தஞ்சாவூர் ஜில்லா.